UNIVERSITY OF TRAVANCORE
TAMIL SERIES No. IV.

# CERAVENDAR CEYYUTKOVAI

(with Notes and Comments)

VOL. II.

COMPILED BY
Rao Sahib
M. RAGHAVA AIYANGAR,
Professor of Tamil,
University of Travancore.

PUBLISHED BY
THE UNIVERSITY OF TRAVANCORE.

1951.

[Price Rs. 4-8 As.]

ஸ்ரீ:

# சேரவேந்தர் செய்யுட் கோவை.

(இரண்டாந்தொகுதி)



குறிப்புரை முதலியவற்றுடன்

திருவிதாங்கூர்ச் சருவகலாசாலைத் தமிழ்ப்பேராசிரியர்

ராவ் ஸாஹிப்

மு. இராகவையங்கார்

தொகுத்தது.




திருவிதாங்கூர்ச் சருவகலாசாலைத்

தமிழ்ப்பதிப்புத் தொடர் ௬.

1951

[விலை. ரூ. 4 - 8 - 0]



திருவனந்தபுரம்

பாஸ்கர அச்சுக்கூடத்தில்

நா. பத்மநாப ஐயங்காரால் அச்சிடப்பெற்றது.

1951.



பதிகளும், தேவாரத்துள் திருவஞ்சைக்களம் என்ற சிவதல மொன்றும் இப்பதிகங்களாற் சிறப்பிக்கப்பெற்றவை. இவை யாவும், சேரநாடான மலைமண்டலத்தின் தெய்விகப் பெருமை களையும் இயற்கைப் பெருவளங்களையும் எடுத்துரைப்பனவாம்.

நான்காம் பகுதி, சேரவேந்தர் வரலாறுகள் சிலவற்றை நன்கு விளக்குவது. இதனுட் சேக்கிழார் அருளிய திருத்தொண்டர் புராணத்துள், சேரமான் பெருமாள் நாயனார் வரலாறு கூறும் சருக்கமும், வெள்ளானைச் சருக்கமும் அடங்கியுள்ளன. ஆழ் வாராதியர் வைபவங்களைப் பிற்காலத்துப் பெரியாரான பாகவத ரொருவர் 'அரிசமய தீபம்' என்ற நூலாற் பாடியுள்ளார். குல சேகரச் சருக்கம் என்ற இதன்பகுதியுட் குலசேகரப்பெருமாள் வைபவம் கூறப்படுதலின், அப்பகுதி இறுதியிற் சேர்க்கப்பட லாயிற்று.

இனி, அநுபந்தங்களாக அமைந்தவற்றுள் முதலாவது, இந்நூலின் இரண்டு தொகுதிகளினும் விடுபட்ட பாடல்கள் சிலவும் குறிப்புக்களுங் கொண்டது.

இரண்டாவது, 'திருவனந்தைத் தலவிலாசம்' என்ற நூலாம். [திருவனந்தை - திருவனந்தபுரம்] இது, பாண்டிநாட்டு வேம் பத்தூரிலே பரம்பரைப் புலவர் மரபினராய்ச் சென்ற நூற் றாண்டில் வாழ்ந்த ஸ்ரீ சங்கர சுப்பிரமணிய கவிராஜசாஸ்திரிகள் என்பாராற் பாடப்பட்டது.* இவர் காலத்தே திருவிதாங்கூர் அரசராக விளங்கியவர், ஸ்ரீ ஸ்வாதித்திருநாள் என்று பிரசித்தி பெற்ற ஸ்ரீ ராமவர்ம குலசேகர மஹாராஜா (1829 - 47) ஆவர். இவ் வரசர்பிரானது அருங்குணம் பெருந்தகைமை பத்தித்

---

* இந்நூலும், இக்கவிராசர் பாடிய வேறுபாடல்களுஞ் சிலவாண்டுக்கு முன், இவர் மரபினரான வேம்பத்தூர் ஸ்ரீ அம்பிகாபதி கவிராசரிடமிருந்து பெற்று, இந்நகர்ச் சருவகலாசாலை நூல்நிலயத்தே சேமிக்கப்பெற்றுள்ளன.

திறங்களையும், இவரது இளமைப் பருவத்தில் அரசியலை ஏற்று நடத்திவந்த இவர்தம் சிற்றன்னையார் ஸ்ரீமதி பார்வதி பாய் அவர்களது (கி. பி. 1815 – 29) அன்பமைதிகளையும் இந்நூலுட் பலவிடங்களினும் ஆசிரியர் புகழுகின்றார். இக்கவிராஜ சாஸ்திரிகள் அவ்வரசராற் பெரிதும் அபிமானிக்கப்பெற்றவர் என்பது இத்தலவிலாசத்து 304- ஆம் கண்ணியாலும் விளங்கும். இசைப்புலமையிற் பெரும்புகழ் பெற்று விளங்கிய அவ்வேந்தர் வெளிநாட்டு இயற்றமிழ்ப் பாவாணரிடமும் அன்பும் ஆதரவுங் காட்டிவந்த செய்தி இந்நூலால் அறியப்படுதல் குறிப்பிடத் தகும். இந்நூலின் செய்யுணடையும், சொல்வழக்கு வடசொல் லாட்சி முதலியனவும் பலவிடங்களில் பிற்காலப் போக்குக் கேற்றபடி அமைந்துள்ளன. மற்றும், இந்நூலின் சிறப்பியல் புகளை இத்தொகுதி 407-8ஆம் பக்கங்களிற் கண்டுகொள்க.

மூன்றாவது, மேற்கூறிய கவிராஜசாஸ்திரிகள் ஸ்ரீ ஸ்வாதித் திருநாள் அரசர்மேற் பாடிய 'குணரத்னமாலை' என்பதாகும். 'குணரத்னமே' என்றதொடரை ஈற்றிலுடையன இதன் கவிகள். இவை, அவ்வரசரின் ஆதரவுபெற வேண்டி இக்கவி ராஜரால் முதன்முதற் பாடப்பட்டனவாகத் தோற்றுகின்றன.*

இறுதியான நான்காம் அநுபந்தம் என் நன்றியுரைகளாக யான் பாடிச் சேர்த்தவை. ஆகவே, சங்ககால முதல் இந்நாள் வரை அமைந்த சேரவேந்தர் செய்யுட்களை யெல்லாம் இந்நூற் றொகுதி இரண்டினுங் காணலாம்.

---

* கவிராஜரது இப்பாடல்களைக் கேட்ட அரசர், மூன்றேகால் இடங்கழி அரிசியோடு, உத்தேசம் 60 உணவுப்பண்டங்கள்கொண்ட 'கோப்பு'ம் நித்தம் இவர்க்கு அளித்துவரக் கற்பனையிட்டனர் என்று கூறுவர்.

இவ்விரண்டாந்தொகுதியுள் அடங்கிய நூல்கட்கும் தனிப் பாடல்கட்கும் குறிப்புரைகளை நீள எழுதிச் சேர்த்துள்ளேன். பொருள், வரலாறு முதலியன விளக்கமுற வேண்டிய விடங் களிலே விரிவாகவும், வேண்டாவிடங்களிற் சுருக்கமாகவும் இவ்வுரைக் குறிப்புக்கள் அமைக்கப்பட்டன. இவை, நல் லறிஞரின் நோக்கிற்கும் ஆராய்ச்சிக்கும் உரியனவாருக.

அரசர் புலவர் நூல் தலம் முதலியவற்றின் வரலாறுகளும் பிறகுறிப்புக்களும், உரியவிடங்களிலே வைத்து விளக்கப்பட்டு விட்டன. அதனால் அவைபற்றி முகப்பில் வேருக வைத்துக் கூறவில்லை.

திருவிதாங்கூர்ச் சருவகலாசாலையிலே Dr அழகப்ப செட்டியா ரது அருங்கொடைச்சார்பில் அமைந்த தமிழாசிரியத் தலைமையினை யான் ஆறுண்டுகட்குமேல் ஏற்றுப்புரிந்த தமிழ்ப்பணிகளுள் இந்நூற்றெருகுதியின் வெளியீடே இறுதியானது. இப்பதிப்பு இனிது முடிதற்கு வேண்டியவற்றை எனக்களித்துதவிய சருவகலாசாலைத் தலைவர்களின் பெருந்தகைமை என்ருல் என்றும் பாராட்டற்குரியது.

வழக்கம்போல, இப்பதிப்பின் சிறப்புக்கு உரியவற்றை யெல்லாம் செய்துதவிய பாஸ்கர அச்சுக்கூடத்தலைவர் ஸ்ரீ. நா. பத்மநாப ஐயங்கார் அவர்கட்கு என் நன்றி உரியதாகும்.

எல்லாவற்றுக்கும் மேலாக, என்முன் தோன்ருத்துணை யாக நின்றருளி, எளியேனும் இங்கே தமிழ்த்தொண்டு புரிந்து பெருமைபெறும்படி செய்தருளிய ஸ்ரீ பத்மநாபப் பெருமானது பேரருளை இடைவிடாது சிந்தித்து இறைஞ்சுகின்றேன்.

இங்ஙனம்,

திருவிதாங்கூர்ச்
சருவகலாசாலை,
திருவனந்தபுரம்,
5-2-1951.

மு. இராகவையங்கார்,
தமிழ்ப் பேராசிரியர்.

# மேற்கோள் நூற்குறிப்பு

அகநா, அகம் – அகநானூறு
அடியார்க் – அடியார்க்கு நல்லாருரை
அப். தேவா – அப்பர்தேவாரம்
அபிதானசிந் – அபிதானசிந்தாமணி
அரிச்சந். பு. – அரிச்சந்திரபுராணம்
அவதா – அவதாரிகை [யானம்
ஆறு, ஆறுயிரப் – ஆறுயிரப்படிவ்யாக்
இராமா – இராமாயணம்
இராமா.நூற் – இராமாநுசநூற்றந்தாதி
இருபத், இருபத்து – இருபத்துநாலாயிரப்படி வ்யாக்யானம்
இறை, களா – இறையனார்களவியல்
ஈடு – முப்பத்தாறுயிரப்படி வ்யாக்
எ–று – என்றவாறு [யானம்
ஒன்ப. ஒன்பதி – ஒன்பதினுயிரப்படி வ்யாக்யானம்
கந்தபு – கந்தபுராணம்
கம்பரா – கம்பராமாயணம்
கல்லா – கல்லாடம்
கலித் – கலித்தொகை [னுலா
குலோத். உலா – குலோத்துங்கசோழ
குலோத். பிள் – குலோத்துங்கசோழன்
குறுந் – குறுந்தொகை [பிள்ளைத்தமிழ்
சிலப் – சிலப்பதிகாரம்
சிறுபாண் – சிறுபாணாற்றுப்படை
சீவக – சீவகசிந்தாமணி
சூடா – சூடாமணிநிகண்டு
தஞ்சைவா – தஞ்சைவாணன்கோவை
தமிழ்நா – தமிழ்நாவலர்சரிதை
திருக்கோ – திருக்கோவையார்
திருவாச – திருவாசகம்
திருவாய் – திருவாய்மொழி
திவா – திவாகரம்
தேவா – தேவாரம்
தொல் – தொல்காப்பியம்
நன் – நன்னூல் [மொழி
நாச். திருமொழி – நாச்சியார் திரு
நான் – நான்முகன்திருவந்தாதி
நெடுநல் – நெடுநல்வாடை
பதினொராந் – பதினொராந்திருமுறை
பரிபா – பரிபாடல் [யிரப்படி
பன், பன்னீ, பன்னீரா – பன்னீரா
பிங் – பிங்கல நிகண்டு
புறத் – புறத்திரட்டு
புறநா, புறம் – புறநானூறு
பெரியபு – பெரியபுராணம்
பெரியவாச். வ்யாக் – பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யானம்
பெருங் – பெருங்கதை
பெரும்பாண் – பெரும்பாணாற்றுப்படை
பொருந – பொருநராற்றுப்படை
மணி, மணிமே – மணிமேகலை [யிரம்
முத்தொ, முத்தொள் – முத்தொளா
முதலா – முதலாயிரம்
யாப் வி – யாப்பருங்கலவிருத்தி
வ்யாக் – வ்யாக்யானம்
Ep. Ind. – Epigraphica Indica
I. M. P. – Inscriptions of Madras Presidency
S. I. I. – South Indian Inscriptions
T. A. S. – Travancore Archaelogical Series

# உள்ளுறை

முதலாவது

# சேரவேந்தர் இயற்றிய பாடல்கள்

ஸ்ரீ

# முகவுரை.

— 0—

திருவிதாங்கூர்ச் சருவகலாசாலையின் சார்பாக வெளிவந்த தமிழ்நூற் பதிப்புக்களுள், சேரவேந்தர் செய்யுட்கோவையும் ஒன்று. இதன் முதற்பெருகுதி 1947 – ஆம் ஆண்டில் வெளியிடப் பெற்றது. இதனுள், சங்ககாலத்துச் சேரர்தொடர்பான பாடல்கள் யாவும் என்னால் உரைக்குறிப்பிட்டுத் தொகுக்கப்பட்டன. அச் சங்ககாலைக்குப் பின், இடைக்காலத்தும் பிற்காலத்தும் அமைந்த சேரர்செய்யுட்களை ஒருங்கு கொண்டது, இவ்விரண்டாந்தொகுதி. முன்னதைப் பெரிதும் ஒத்தே, இது (1) பாடிய சேரவேந்தர், (2) பாடல்பெற்ற சேரவேந்தர், (3) சேரநாடு நகர் முதலியன, (4) சேரர்வரலாறு என்ற நான்கு பெரும் பிரிவுகள் உடையதாகும்.

இவற்றுள், முதலாவதான — பாடிய சேரவேந்தர் பகுதியுள் திருமாலடியாரான குலசேகரப்பெருமாள் அருளியதும் நாலாயிர திவ்யப் பிரபந்தங்களுள் அடங்கியதுமான பெருமாள் திருமொழியும், சிவனடியாராகிய சேரமான்பெருமாள் அருளியதும் பதினொராந் திருமுறையுள் அடங்கியதுமான பொன்வண்ணத் தந்தாதி, திருவாரூர் மும்மணிக்கோவை, ஆதியுலா என்ற மூன்று நூல்களும், திருவிதாங்கூர் அரசரிற் பழையோராகிய வேணாட்டடிகள் அருளியதும் திருவிசைப்பாவைச் சேர்ந்ததுமான தில்லைத் திருப்பதிகமுஞ் சிறப்புடையவை. இவையன்றி, பிற்காலத்தே தமிழ்ப்புலமை வாய்ந்திருந்த சேரவரசர் பாடிய தனிப் பாடல்கள் சிலவும் உண்டு.

இரண்டாவதான பாடல்பெற்ற சேரவேந்தர் பகுதியிலே, சிவபிரான் தம் அடியாரான பாணபத்திரர் பொருட்டுப் பாடிச் சேரமான் பெருமாளுக்கு விடுத்தருளிய திருமுகப்பாசுரம் தலை சிறந்தது. இப்பாசுரத்தை அடுத்துச் சங்க காலத்துச் சேர ரொருவற்கும் அதியமானுக்கும் நடந்த போர்ச்செய்திகள் கூறும் தகடூர்யாத்திரை என்ற நூலின் பாடல்கள் சில அமைக்கப்பட்டன. இப்போர்நூல் முழுதும் இப்போது கிடைக்கவில்லை. எனினும், இதன்பாடல்களில் ஐம்பதுவரை புறத்திரட்டு முதலிய மூன் னூல்களால் அறியப்படுகின்றன. இந்நூல், பழம்போர் நிகழ்ச்சி யொன்றைப் பொருளாகக்கொண்டு பின்னோர் பாடியதாகவே தோற்றுகிறது. கிடைத்த இதன்பாடல் பலவும் வீரத்திறங் களைப் பொதுவாகச் சிறப்பிப்பனவாதலால், அவற்றை விடுத்துச் சரித்திரக்குறிப்பு உடையனவும், முன்னோர் ஆண்டனவுமான ஏழு செய்யுட்களே இந்நூற்கு எடுத்துக்கொள்ளப்பட்டன.

இத் தகடூர்யாத்திரைபோலவே, பிற்சான்றோர் இயற்றிய முத்தொளாயிரம் என்ற பழைய நூலின் பாடல்சிலவும் புறத் திரட்டு முதலியவற்றால் அறியப்படுவனவாம். இந்நூலின் வெண் பாக்கள்யாவும் அருமை பெருமை வாய்ந்தவை. அவற்றுட் சேர வேந்தரைப்பற்றிய செய்யுட்களெல்லாம் இப்பகுதியுட் சேர்க் கப்படலாயின. இவையன்றி, பிற்காலத்துச் சேரர்களையும் அவர் கிளையினரையும் பற்றி இலக்கியங்கள் மூலமும் சாஸனங்கள் மூலமும் தெரியவந்த செய்யுட்கள் சிலவும் இப்பகுதியிறுதியிற் சேர்க்கப்பெற்றன.

சேர்நாடு நகர் முதலியவை பற்றிய இதன் மூன்றும்பகுதி பழைய தனிப்பாடல்கள் பல கொண்டது. இவற்றோடு, சேர மண்டலத்தைச் சார்ந்த பழைய தலங்களைப்பற்றி அடியார்கள் அருளிய திருப்பதிகங்களும் சேர்க்கப்பட்டன. திருவாய்மொழி முதலிய திவ்யப் பிரபந்தங்களில் பதின்மூன்று திருமால்திருப்

ஸ்ரீ

சேரவேந்தர்

# செய்யுட் கோவை

குலசேகரப்பெருமாள் அருளிச்செய்த

## பெருமாள் திருமொழி.

### தனியன்கள்*

வெண்பா

†இன்னமுதம் ஊட்டுகேன் இங்கேவா பைங்கிளியே
தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாள் — பொன்னஞ்
சிலைசேர் நுதலியர்வேள் சேரலர்கோன் எங்கள்
குலசேகரனென்றே கூறு. (௧)

---

*தனியன் — சிறப்புப்பாயிரம். இப்பாயிரங்களிரண்டும் ஸ்ரீராமானுஜ முனிவரர் (உடையவர்) அருளியவை என்றும், மணக்கால்நம்பிகள் அருளியவை என்றும் கூறுவர்.

† - சேரவேந்தரும் திருவரங்கமாநகர் எம்பெருமானைப் பாடவல்லவருமான ஸ்ரீகுலசேகர ஆழ்வாரது திருநாமத்தைத் தான்வளர்த்த கிளிக்குக் கற்பித்து, அதன்வாயிலாக அவர்திருநாமங் கேட்டுப் பிரிவாற்றியிருத்தலை விரும்பிய தலைவியின் கூற்று, இப்பாடல். பொன்னஞ்சிலை சேர் நுதலியர் — பொன்மயமான வில்லையொத்த நெற்றியையுடைய மகளிர். சேர் — உவமவுருபு; 'வில்லொக்கும் நுதலென்றாலும்' என்றார் கம்பரும். இனி, ஆகுபெயராற் புருவங்களாக்கி, அவை பொருந்திய நுதல் எனினுமாம். வேள் — காமன்.

கட்டளைக் கலித்துறை

*ஆரங் கெடப்பர னன்பர்கொள் ளாரென் றவர்களுக்கே
வாரங் கொடுகுடப் பாம்பிற்கை யிட்டவன் மாற்றலரை
வீரங் கெடுத்தசெங் கோற்கொல்லி காவலன் வில்லவர்கோன்
சேரன் குலசே கரன்முடி வேந்தர் சிகாமணியே (உ)



* திருமாலடியார்களான பாகவதர்களிடம் இவ்வாழ்வார் வைத்திருந்த பேரன்பிலும் ஆதரவிலும் அழுக்காறு கொண்ட அமைச்சர் சிலர்; அரண்மனையிற் களவுபோன அரதனமாலையைக் கவர்ந்தவரென்று அப்பாகவதர் மேற் பழிசுமத்தியபோது 'திருமாலடியார்கள் ஒருகாலும் அத்தீச்செயல் செய்யார்' என்றுகூறித் தாமே பாம்புக்குடத்துட் கையை இட்டுச் சபதஞ் செய்த வரலாறு இப்பாட்டின் முன்னிரண்டடிகளிற் கூறப்படுவதாம். குடப்பாம்பில்—பாம்புக் குடத்தில். மாற்றலர்—பகைவர். கொல்லி—சேரநாட்டு மலை; கொல்லி என்ற நகருமாம்; 'கொல்லி நகர்க்கிறை' என்று, இவ்வாழ்வாரே தம்மைப் பின்னர்க் கூறுதலும் காண்க. வில்லவர்—விற்கொடியினரான சேரர். குடப்பாம்பிற் கையிட்டவனென்று கூறப்படுபவன் குலசேகரனுவன் என்று முடிக்க.

ஸ்ரீ

# *பெருமாள் திருமொழி

## முதல் திருமொழி—'இருளிரிய' †

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

(1) இருளிரியச் சுடர்மணிகள் இமைக்கும் நெற்றி
இனத்துத்தி யணிபணமா யிரங்க ளார்ந்த
அரவரசப் பெருஞ்சோதி அனந்த னென்னும்
அணிவிளங்கும் உயர்வெள்ளை யணையை மேவித்
திருவரங்கப் பெருநகருட் டெண்ணீர்ப் பொன்னி
திரைக்கையா லடிவருடப் பள்ளி கொள்ளும்
கருமணியைக் கோமளத்தைக் கண்டு கொண்டென்
கண்ணிணைகள் என்றுகொலோ களிக்கும் நாளே (க)

---

* பெருமாள்—குலசேகரப்பெருமாள்; சேரவேந்தரைப் 'பெருமாள்' என்ற சிறப்புப் பெயரிட்டு வழங்குவர்.

† திருவரங்கம் பெரியகோயிலுட் பள்ளிகொண்டருளும் பெருமானைக் கண்ணாரக் கண்டும், வாயாரவாழ்த்தியும், அங்குள்ள அடியாரை அணுகியும், புஷ்பாஞ்சலி செய்தும், தலையார வணங்கியும், கண்ணீர்மல்க உள்ளமுருகியும், அவன் தொண்டரோடு கலந்து ஆடிப்பாடித் துள்ளியும் மகிழும் நன்னாள் எனக்கு என்றுகொல் வாய்ப்பது என்று ஆழ்வார் திருவுள்ளம் விரைகின்ற படியைக் கூறுவன, இத்திருமொழிப் (பதிகப்) பாசுரங்கள்.

1. இமைக்கும் - ஒளிரும். நெற்றி - உச்சி. துத்தி - பொறி. பணம் - படம். நெற்றியையும் பணமாயிரங்களையும் பொருந்தியவனும், அரவுகளுக்கு அரசனும், பெருஞ்சோதியுடையவனுமான அனந்தன் என்க. பொன்னி—காவிரிக்குப் பெயர். காவிரியின் அலைகளாற் குளிர்ச்சிபெற்றுள்ள தரையிடமாகப் பள்ளிகொள்ளும் என்பது கருத்து. கோமளம் - இளமையழகு.

(2) வாயோரீ ரைஞ்ஞூறு துதங்க ளார்ந்த
வளையுடம்பின் அழல்நாக முமிழ்ந்த செந்தீ
வீயாத மலர்ச்சென்னி விதான மேபோல்
மேன்மேலும் மிகவெங்கும் பரந்த தன்கீழ்க்
காயாம்பூ மலர்ப்பிறங்க லன்ன மாலைக்
கடியரங்கத் தரவணையிற் பள்ளி கொள்ளும்
மாயோனை மணத்தூணே பற்றி நின்றென்
வாயார என்றுகொலோ வாழ்த்தும் நாளே (உ)

(3) எம்மாண்பி னயன்நான்கு நாவி னாலும்
எடுத்தேத்தி யீரிரண்டு முகமுங் கொண்டு
எம்மாடு மெழிற்கண்க ளெட்டி னோடும்
தொழுதேத்தி யினிதிறைஞ்ச நின்ற செம்பொன்
அம்மான்றன் மலர்க்கமலக் கொப்பூழ் தோன்ற
அணியரங்கத் தரவணையிற் பள்ளி கொள்ளும்
அம்மான்ற னடியிணைக்கீ ழலர்க ளிட்டங்
கடியவரோ டென்றுகொலோ அணுகும் நாளே (ங)

---

2. ஓர் ஆயிரம் வாய்களிலும் பெருமானைப்பற்றித் துதிமொழிகள் நிரம்பியுள்ள நாகம் என்க. துதம்—துதி. 'ஸ்துத' என்ற வடசொல்லின் திரிபு. இனி, துதம் ஆட்டம் எனினும் ஆம். தலையாட்டத்தொடு கூடிய அபினயவகையைத் 'துதமுகம்' என்பர். இது, 'துத' என்ற வடசொற்றிரிபாம். அனந்தன் உமிழ்ந்த செந்தீயானது, மலரால் அமைத்த விதானம்போல மேலிடமெங்கும் பரக்க என்க. விதானம்—மேற்கட்டி. பரந்து, செயவெனெச் சத்திரிபு. மாலை—திருமாலை. திருவரங்கம் பெரியகோயிற் கருப்பக்கிருகத் தருகே உள்ள தம்பங்களிரண்டனையும் 'திருமணத்தூண்' என்பது வழக்கு; (பெருமாளது) "அழகிலே அகப்பட்ட ஹர்ஷத்தாலே தள்ளுண்ணுமே இரண்டு ஸ்தம்பங்களையும் பற்றிநின்று" என்ற ஸ்ரீ பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யான நயம் காண்க.

3. எம் மாண்பின் அயன்—எல்லாவகை மாண்புகளையுமுடைய பிரமன்; எம்மாண்பினும் ஏத்தி என இயைப்பினும் அமையும், செம்பொன்

(4) மாவினைவாய் பிளந்துகந்த மாலை வேலை
வண்ணனையென் கண்ணனைவன் குன்ற மேந்தி
ஆவினையன் றுயக்கொண்ட ஆய ரேற்றை
அமரர்கடந் தலைவனையந் தமிழி னின்பப்
பாவினையவ் வடமொழியைப் பற்றற் றூர்கள்
பயிலரங்கத் தரவணையிற் பள்ளி கொள்ளும்
கோவினைநா வுறவழுத்தி என்றன் கைகள்
கொய்ம்மலர்தூய் என்றுகொலோ கூப்பும் நாளே (௪)

(5) இணையில்லா யின்னிசையாழ் கெழுமி யின்பத்
தும்புருவும் நாரதனும் இறைஞ்சி யேத்தத்
துணையில்லாத் தொன்மறைநூற் றோத்தி ரத்தால்
தொன்மலர்க்கண் அயன்வணங்கி ஓவா தேத்த
மணிமாட மாளிகைகள் மல்கு செல்வ
மதிலரங்கத் தரவணையிற் பள்ளி கொள்ளும்
மணிவண்ணன் அம்மானைக் கண்டு கொண்டென்
மலர்ச்சென்னி என்றுகொலோ வணங்கும் நாளே (௫)

---

அம்மான்-பொன்னிறத்தவனான அம்மான். 'பொன்னப்பன்' என்றார் பெரியாரும். இனிச் செம்பொன் மலர்க் கமலம் என இயைத்துப் பொற்றாமரைமலர் எனினும் ஆம். அயன் தன் நான்குமுகங்களுங்கொண்டு அவற்றில் அமைந்த எட்டுக்கண்களாலும் கண்டுதொழுதேத்தவும் நான்கு நாவினாலும் இறைஞ்சியேத்தவும் நின்ற என்க.

4. மா – குதிரை வடிவினனான் கேசி என்ற அசுரன். இன்கவிகள் பாடும் பரமகவிகள் அருளிய தென்மொழி வடமொழிப் பாசுரங்களின் வடிவா யுள்ளவன்; 'செந்திறத்த தமிழோசை வடசொல்லாகி' என்றார் திருமங்கைமன்னனும்.

5. யாழ் இன்னிசை கெழுமி – யாழில் இனிய பண்கள் நிரம்ப. துணை – ஒப்பு. ஓவாது – இடைவிடாமல். மலர்ச்சென்னி–அரசுக்குரிய அடையாளப் பூவை யணிந்த முடி.

(6) அளிமலர்மே லயனரனிந் திரனோ டேனை
அமரர்கடம் குழுவுமரம் பையரு மற்றும்
தெளிமதிசேர் முனிவர்கடங் குழுவும் முந்தித்
திசைதிசையின் மலர்தூவிச் சென்று சேரும்
களிமலர்சேர் பொழிலரங்கத் துரக மேறிக்
கண்வளருங் கடல்வண்ணர் கமலக் கண்ணும்
ஒளிமதிசேர் திருமுகமுங் கண்டு கொண்டென்
உள்ளமிக என்றுகொலோ உருகும் நாளே (சு)

(7) மறந்திகழு மனமொழித்து வஞ்ச மாற்றி
வன்புலன்க ளடக்கியிடர்ப் பாரத் துன்பம்
துறந்திருமுப் பொழுதேத்தி எல்லை யில்லாத்
தொன்னெறிக்கண் நிலைநின்ற தொண்ட ரான
அறந்திகழு மனத்தவர்தங் கதியைப் பொன்னி
அணியரங்கத் தரவணையிற் பள்ளி கொள்ளும்
நிறந்திகழு மாயோனைக் கண்டென் கண்கள்
நீர்மல்க என்றுகொலோ நிற்கும் நாளே (எ)

(8) கோலார்ந்த நெடுஞ்சார்ங்கம் கூனற் சங்கம்
கொலையாழி கொடுந்தண்டு கொற்ற வொள்வாள்
காலார்ந்த கதிக்கருட னென்னும் வென்றிக்
கடும்பறவை யிவையனைத்தும் புறஞ்சூழ் காப்பச்

---

6. அளி—வண்டு. உரகம்—ஆதிசேடன்.

7. மறந்திகழும் மனம்—பாவசிந்தனை. புலன்கள்—பஞ்சேந்திரியங்கள்; ஐம்புலங்கள் என்றும் பாடம். இரு முப்பொழுதும் ஏத்தி – ஆறுகாலங்களிலும் துதித்துப்பூசித்து; இரண்டும் மூன்றுமான பொழுது என்று பொருள்கொண்டு 'பஞ்சகால பராயணர்களாய்' என்றும் உரைப்பர். கதி – புகலிடமானவன்.

8. கோல்—அம்பு. கால் ஆர்ந்த கதி—காற்றுப்போன்ற செலவு. சார்ங்கம்—(வில்), சங்கம்—(பாஞ்சசன்யம் என்ற சங்கு), ஆழி—(சக்கராயுதம்), தண்டு—(கௌமோதகி என்ற கதை), வாள்—(நாந்தகம்) என்ற பஞ்சாயுதங்களும் கருடனும் புறஞ்சூழ்ந்து காவல்புரிய என்பது முன்னிரண்டடிகளின் பொருள்.

சேலார்ந்த நெடுங்கழனி சோலை சூழ்ந்த
திருவரங்கத் தரவணையிற் பள்ளி கொள்ளும்
மாலோனைக் கண்டின்பக் கலவி யெய்தி
வல்வினையேன் என்றுகொலோ வாழும் நாளே (அ)

(9) தூராத மனக்காதற் றொண்டர் தங்கள்
குழாங்குழுமித் திருப்புகழ்கள் பலவும் பாடி
ஆராத மனக்களிப்போ டழுத கண்ணீர்
மழைசோர நினைந்துருகி யேத்தி நாளும்
சீரார்ந்த முழவோசை பரவை காட்டும்
திருவரங்கத் தரவணையிற் பள்ளி கொள்ளும்
போராழி யம்மானைக் கண்டு துள்ளிப்
பூதலத்தி லென்றுகொலோ புரளும் நாளே (கூ)

(10) வன்பெருவா னகமுய்ய அமர ருய்ய
மண்ணுய்ய மண்ணுலகில் மனிச ருய்யத்
துன்பமிகு துயரகல அயர்வொன் றில்லாச்
சுகம்வளர அகமகிழுந் தொண்டர் வாழ
அன்பொடுதென் றிசைநோக்கிப் பள்ளி கொள்ளும்
அணியரங்கன் றிருமுற்றத் தடியார் தங்கள்
இன்பமிகு பெருங்குழுவு கண்டு யானும்
இசைந்துடனே யென்றுகொலோ இருக்கும் நாளே (ய)

---

அளவிலாற்றலுடையனான இறைவனுக்குத் தீங்குநேர இடமில்லையேனும் பேரடியார்கள் அறிவுகலங்கிக் காப்பிடுவது, அப்பெருமானிடமுள்ள பிரேமை மிகுதியால் என்க; "உறக லுறக லுறக லொண்சுடராழியே சங்கே, அறவெறி நாந்தகவாளே அழகிய சார்ங்கமே தண்டே...பறவையரையா உறகல் பள்ளியறை குறிக்கொண்மின்" என்றார் பெரியாழ்வாரும். சேல் – மீன்வகை. மாலோன் – பெருமையுடையான்.

9. காதல் தூராத மனம்—ஆசை அடங்காத உள்ளம். பரவை காட்டும்—கடலோசை போல முழங்கும்.

10. தென்திசை—தெற்கிலுள்ள இலங்கை; 'தென்றிசை யிலங்கை நோக்கி' என்ப. திருமுற்றம்—சன்னிதிப் புறம்.

(11) திடர்விளங்கு கரைப்பொன்னி நடுவு பாட்டுத்
திருவரங்கத் தரவணையிற் பள்ளி கொள்ளும்
கடல்விளங்கு கருமேனி யம்மான் றன்னைக்
கண்ணாரக் கண்டுகக்குங் காதல் தன்னால்
குடைவிளங்கு விறற்றானைக் கொற்ற வொள்வாட்
கூடலர்கோன் கொடைக்குலசே கரன்சொற் செய்த
நடைவிளங்கு தமிழ்மாலை பத்தும் வல்லார்
நலந்திகழ்நா ரணனடிக்கீழ் நண்ணு வாரே. (௧௧)

---

11. நடுவுபாடு — இடைப்பட்ட நிலமான ஆற்றிடைக்குறை, அரங்கம் என்றபடி. ‘காவிரி நடுவுபாட்டு’ என்பது திருமாலைத் தொடர் (23). குடையையும் தானையையும் கொற்றவாளையும் கொடையையுமுடைய கூடலர்கோனான குலசேகரன் என்க. நடை—சொல் தொடைகளின் நடைநயங்கள்.

## இரண்டாம் திருமொழி
## தேட்டருந்திறல்*

*எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.*

**(12)** தேட்ட ருந்திறற் றேனி னைத்தென்
னரங்க னைத்திரு மாதுவாழ்
வாட்ட மில்வன மாலை மார்பனை
வாழ்த்தி மால்கொள்சிந் தையராய்
ஆட்ட மேவி யலர்ந்த ழைத்தயர்
வெய்து மெய்யடி யார்கடம்
ஈட்டங் கண்டிடக் கூடு மேலது
காணுங் கண்பய னாவதே. (க)

---

*முதற் குலோத்துங்க சோழனது [1070-1112] ஆட்சியின் 15-ம் ஆண்டில் அமைந்த சிலாசாஸனமொன்றில்—“ தீர்த்தம் பிரஸாதித்தருளின அன்றிரா, திருப்புன்னைக்கீழ் [ஸ்ரீரங்கநாதப் பெருமாள்] எழுந்தருளியிருந்து தேட்டருந்திறல் கேட்டருளும் போது ” என்று கூறப்பட்டுள்ளது (S. I. I. Vol, iii. to 150). ‘தேட்டருந்திறல்’ என்பது, இத்திருப்பதிகம் முழுதுமாகும். இதனால், இராமாநுஜமுனிவரர்காலத்திலும் அவர்காலத்துக்குமுன்பும் இத் திருப்பதிகத்துக்கு அதன் முதற்றொடரே பெயராக வழக்கிலிருந்து வந்தமை சாஸனத்தாலும் அறியப்படும். எனவே, பெருமாள் திருமொழியின் மற்றப் பதிகங்களும் அதனதன் முதற்றொடரே பெயராகக் கொண்டிருந்தமை பெறப்படுகின்றது. பதிற்றுப்பத்துப் பதிகங்களும் இவ்வாறே தொடராற் பெயர்பெற்றிருத்தல் இங்கு அறியத்தக்கது.

திருவரங்கப் பெருமானிடம் தாம் கொண்டுள்ள பத்திப் பெருக்கினை வெளியிட்ட ஆழ்வார், அப்பெருமானது மெய்யடியார்பால் தமக்குள்ள அளவுகடந்த பிரேமையை வெளியிடுவன, இத்திருமொழிப் பாசுரங்கள்.

12. தேடிப் பெறுதற்கரிய வலிமையை அளிக்கும் தேன்போல இனிமையானவனை. வனமாலை — திருமால் அணிந்துள்ள நீண்டுதொங்கும் மாலைவகை. மால் — மோகம். அலர்ந்தழைத்து — வாய்விட்டுக் கூப்பிட்டு. ‘அலர்ந்தழைந்து’ என்பது பாடமாயின், வருந்திக் கூப்பிட்டு என்க.

(13) தோடு லாமலர் மங்கை தோளிணை
தோய்ந்த தும்சுடர் வாளியால்
நீடு மாமரஞ் செற்ற துந்நிரை
மேய்த்த தும்மிவை யேநினைந்
தாடிப் பாடி யரங்க வோவென்
றழைக்குந் தொண்ட ரடிப்பொடி
ஆட நாம்பெறிற் கங்கை நீர்குடைந்
தாடும் வேட்கையென் னாவதே. (உ)

(14) ஏற டர்த்ததும் ஏன மாய்நிலங்
கீண்ட தும்முன் னிராமனாய்
மாற டர்த்ததும் மண்ணை ளந்ததுஞ்
சொல்லிப் பாடிவண் பொன்னிப்பே
ராறு போல்வருங் கண்ண நீர்கொண்
டரங்கன் கோயிற் றிருமுற்றம்
சேறு செய்தொண்டர் சேவ டிச்செழுஞ்
சேறென் சென்னிக் கணிவனே. (௩)

(15) தோய்த்த தண்டயிர் வெண்ணெய் பாலுட
னுண்ட தும்முடன் றாய்ச்சிகண்
டார்த்த தோளுடை யெம்பிரானென்
னரங்க னுக்கடி யார்களாய்

---

13. தோடு உலாம்—இதழ்கள் பொருந்திய. மலர்மங்கை—திருமகள், சீதாபிராட்டியுமாம். மாமரம் – மராமரங்கள் ஏழினையும். தொண்டரடிப் பொடி —அடியாரின் பாததூளிகளை. ஆடும் வேட்கை—ஆடுதற்குக் காரணமாகிய விருப்பம்.

14. ஏறு அடர்த்தது கண்ணபிரான் நப்பின்னைபொருட்டு இடபங்களேழினையும் அடக்கிய வரலாறு. ஏனம்—வராகம். மாறு—பகைவர். கண்ணநீர் – ஆனந்தபாஷ்பம். பொடியாட – தூளியிலே திளைக்க.

15. ஆர்த்த – கட்டப்பட்ட. உடன்று – கோபித்து. நாத்தழும்

நாத்த ழும்பெழ நார ணாவென்
றழைத்து மெய்தழும் பத்தொழு
தேத்தி யின்புறுந் தொண்டர் சேவடி
ஏத்தி வாழ்த்துமென் னெஞ்சமே. (ரு)

(16) பொய்சி லைக்குரல் ஏற்றெ ருத்த
மிறுத்துப் போரர வீர்த்தகோன்
செய்சி லைச்சுடர் சூழொளித் திண்ண
மாம திற்றென் னரங்கனாம்
மெய்சி லைக்கரு மேக மொன்றுதந்
நெஞ்சுள் நின்று திகழப்போய்
மெய்சி லிர்ப்பவர் தம்மை யேநினைந்
தென்ம னம்மெய் சிலிர்க்குமே. (சு)

(17) ஆதி யந்த மனந்த மற்புத
மான வானவர் தம்பிரான்
பாத மாமலர் சூடும்பத்தி
யிலாத பாவிக ளுய்ந்திடத்
தீதில் நன்னெறி காட்டி யெங்குந்
திரிந்த ரங்கனெம் மானுக்கே
காதல் செய்தொண்டர்க் கெப்பி றப்பினுங்
காதல் செய்யுமென் னெஞ்சமே. (எ)

---

பெழ—நாவானது தடிக்கும்படி. மெய் தழும்ப – மேனி காய்ப்பேற. அடியார்களாய் [அடிமைப்பட்டவர்களாய்] இன்புறுந் தொண்டர் என்க.

16. பொய் சிலைக்குரல் – பொய்க்கும் கனைப்புக்குரல். ஏற்றெருத்தம் இறுத்து – இடபங்கள் ஏழன் முசுப்புக்களையும் முறித்து. அரவு – காளியன் என்ற நாகம். சிலை செய் மதில் என்க. சிலை – கல். மெய்யில் சிலை தரித்த கருமேகம், சார்ங்கவில்லைத் தரித்த திருமாலுக் குவமை. சிலிர்த்தல் – புளகமெழுதல்.

17. ஆதியந்தம் – முதலும் முடிவும். தீதில் நல் நெறி – பிரபத்தி மார்க்கம்; 'தீதில் நன்னெறிநிற்க அல்லாத செய்' என்றார் பின்னரும்

(18) காரி னம்புரை மேனி நற்கதிர்
முத்த வெண்ணகைச் செய்யவாய்
ஆர மார்பன் அரங்க னென்னும்
அரும்பெ ருஞ்சுட ரொன்றினைச்
சேரும் நெஞ்சின ராகிச் சேர்ந்து
கசிந்தி ழிந்தகண் ணீர்களால்
வார நிற்பவர் தாளி ணைக்கொரு
வார மாகுமென் னெஞ்சமே. (எ)

(19) மாலை யுற்ற கடற்கி டந்தவன்
வண்டு கிண்டு நறுந்துழாய்
மாலை யுற்ற வரைப் பெருந்திரு
மார்ப னைமலர்க் கண்ணனை
மாலை யுற்றெழுந் தாடிப் பாடித்
திரிந்த ரங்கனெம் மானுக்கே
மாலை யுற்றிடுந் தொண்டர் வாழ்வுக்கு
மாலை யுற்றதென் னெஞ்சமே. (அ)

(20) மொய்த்துக் கண்பனி சோர மெய்கள்
சிலிர்ப்ப வேங்கியி ளைத்துநின்
றெய்த்துக் கும்பிடு நட்ட மிட்டெழுந்
தாடிப் பாடி யிறைஞ்சியென்

---

18. மேனியையும் வெண்ணகையையும் செய்யவாயையு முடைய அரங்கன்; ஆரமார்பனான அரங்கன் என்க. ஆரம் – மாலை. கசிந்து இழிந்த– ஊறி வழிந்த. வார – ஒழுகும்படி. ஒரு வாரம் – ஒப்பற்ற அன்பு.

19. மாலை – கருமை, பெருமையுமாம். கண்ணனை மாலையுற்று– கண்ணபிரானிடம் காதலுற்று. மாலையுற்றிடும் – பித்தேறியுள்ள. மாலையுற்றது – ஆசைப்பட்டது.

20. மொய்த்து – செறிந்து. கும்பிடு நட்டமிட்டு – கைகூப்பிக் கொண்டே நடனமாடி; 'கும்பிடு நட்டமிட்டாடி' என்பது திருவாய்மொழி.

அத்தன் அச்சன் அரங்க னுக்கடி
யார்க ளாகி யவனுக்கே
பித்த ராமவர் பித்த ரல்லர்கள்
மற்றை யார்முற்றும் பித்தரே. (௬)

(21) அல்லி மாமலர் மங்கை நாதன்
அரங்கன் மெய்யடி யார்கடம்
எல்லை யில்லடி மைத்தி றத்தினில்
என்று மேவு மனத்தனும்
கொல்லி காவலன் கூடல் நாயகன்
கோழிக் கோன்குல சேகரன்
சொல்லி னின்றமிழ் மாலை வல்லவர்
தொண்டர் தொண்டர்க ளாவரே. (௰)

---

அத்தன் – சுவாமி. அச்சன் – தந்தை; மலைநாட்டு வழக்கு. மற்றையார் முற்றும் பித்தரே – "இந்த பக்திகார்யமான பித்தில்லாதவர்கள் அடையப் பித்தர்; அக்கலக்கமில்லாதே தெளிந்திருக்குமவர், ஸனகாதிகளே யாகிலும் அவர்கள் பித்தர்" என்ற பழைய வியாக்யானங் காண்க.

21. அல்லி – அகவிதழ். கூடல் – மதுரை. கோழி – உறையூர். கூடல் கோழி எனத் தலைநகர்கள் கூறப்படுதலால், கொல்லி என்றது நகரை என்க; 'கொல்லிநகர்க் கிறை' என்பர் பின்னும். தமிழ்நாடு மூன்றுக்கும் அரசர் என்றபடி.

## மூன்றும் திருமொழி

### மெய்யில்வாழ்க்கை*

(22) மெய்யில் வாழ்க்கையை மெய்யெனக் கொள்ளுமிவ்
வையந் தன்னொடுங் கூடுவ தில்லையான்
ஐயனே அரங்கா என்றழைக் கின்றேன்
மையல் கொண்டொழிந் தேனென் றன் மாலுக்கே. (க)

(23) நூலி னேரிடை யார்திறத் தேநிற்கும்
ஞாலந் தன்னொடுங் கூடுவ தில்லையான்
ஆலியா அழையா அரங்கா என்று
மாலெ ழுந்தொழிந் தேனென் றன் மாலுக்கே. (உ)

(24) மார னார்வரி வெஞ்சிலைக் காட்செயும்
பாரி னாரொடுங் கூடுவ தில்லையான்
ஆர மார்பன் அரங்கன் அனந்தனல்
நார ணன்நர காந்தகன் பித்தனே. (ஈ)

---

* திருமலடியார் திறத்தில் அளவற்ற காதல்கொண்டிருந்த ஆழ்வார் அவரல்லாத உலகினரொடு தமக்குச் சிறிதுந் தொடர்பின்மையையும், ஈசன்பால் தமக்குள்ள பெரிய ஈடுபாட்டையும் கூறுவன, இத்திருமொழிப் பாசுரங்கள்.

22. மெய்யில் வாழ்க்கை – பொய்யான வாழ்வு. வையம்—உலகோர். "அவன் எனக்குப் பித்தேறினபடிகண்டு நானும் அவனுக்குப் பித்தனானேன்" என்பது ஈற்றடியின் வியாக்கியானம்.

23. நூலின் நேர் இடையார்—நூலினை ஒத்த இடையுடைய மகளிர்; நூலின் ஏருடைய இடையார் எனினும் ஆம். ஏர் – அழகு. ஆலியா அழையா – கூத்தாடியும் அழைத்தும்.

24. மாரன் சிலைக்கு ஆட்செய்தல் – காமவசப்பட்டுப் பெண்டிர் வயத்தராதல். அனந்தன் – அளவிட முடியாத குணங்குறிகளுடையவன். நரகாந்தகன் – நரகாசுரனைக் கொன்றவன். நரகாந்தகனிடம் பித்துக்கொண்டுளன் என்க.

(25) உண்டி யேயுடை யேயுகந் தோடுமிம்
மண்ட லத்தொடுங் கூடுவ தில்லையான்
அண்ட வாணன் அரங்கன்வன் பேய்முலை
உண்ட வாயன்றன் உன்மத்தன் காண்மினே. (௪)

(26) தீதில் நன்னெறி நிற்கவல் லாதசெய்
நீதி யாரொடுங் கூடுவ தில்லையான்
ஆதி ஆயன் அரங்கனந் தாமரைப்
பேதை மாமண வாளன்றன் பித்தனே. (௫)

(27) எம்ப ரத்தரல் லாரொடுங் கூடலன்
உம்பர் வாழ்வையொன் றாகக் கருதிலன்
தம்பி ரானம ரர்க்கரங் கநகர்
எம்பி ரானுக் கெழுமையும் பித்தனே. (௬)

(28) எத்தி றத்திலும் யாரொடுங் கூடுமச்
சித்தந் தன்னைத் தவிர்த்தனன் செங்கண்மால்
அத்த னேஅரங் காவென் றழைக்கின்றேன்
பித்த னாயொழிந் தேனெம் பிரானுக்கே. (௭)

---

26. அண்டவாணன் – எல்லா அண்டங்களிலும் வாழ்பவன். பேய்—பூதனை. உன்மத்தன்—பித்தன்.

26. நிற்க – இருப்பவும். அல்லாத – தீமை பயக்கும் செயல்கள். 'அல்லாது' என்பதும் பாடம். அல்லாதசெய்தலையே இயல்பாகவுடையவர். மா—பெருமை; திருமகள் என்றுமாம்.

27. எம் பரத்தர் – எம் சார்பானவர். உம்பர் – துறக்கம். தம்பிரான் – அரசன்; சுவாமி; மலைநாட்டுவழக்கு.

28. "கண்ணாலே குளிரநோக்கித் தன் வ்யாமோஹத்தைக் காட்டிப் பிறரோடு மனஸ்ஸு பொருந்ாதபடி பண்ணினான்" என்பது பழைய வ்யாக்யானம்.

(29 பேய ரேஎனக் கியாவரும் யானுமோர்
பேய னேயெவர்க் கும்மிது பேசியென்
ஆய னேஅரங் காவென் றழைக்கின்றேன்
பேய னாயொழிந் தேனெம் பிரானுக்கே. (அ)

(30) அங்கை ஆழி அரங்கன டியிணை
தங்கு சிந்தைத் தனிப்பெரும் பித்தனாய்க்
கொங்கர் கோன்குல சேகரன் சொன்னசொல்
இங்கு வல்லவர்க் கேதமொன் றில்லையே. (கூ)

---

29. "உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்து அலகையா வைக்கப் படும்"—என்பர், ஆதலால் உண்மையல்லாதன கூறும் உலகோர் என்னையும், என் கூற்றுக்கள் உண்மையல்லாதவை என நினைக்கும் உலகினரை யானும் 'பேயர்' என்று கூறும்படியுள்ளது நிலைமை என்க. பிறர் தம்மைப் பேயர் என்று கூறிக்கொள்ள இசையாரேனும் "பேயனாயொழிந்தே னெம் பிரானுக்கே" என்று யான் கூறிக்கொள்ள அமையும் என்பது கருத்து.

30. ஏதம் ஒன்றில்லை "அபாகவத ஸ்பர்சமாதல், பகவத்ப்ராவண்யத்தின் குறையால் வரும் துக்கமாதல்" ஒன்றுமில்லை என்பது பழைய வ்யாக்யானம்.

## நான்காம் திருமொழி

### ஊனேறு செல்வம்*

*தரவுகொச்சகக் கலிப்பா*

**(31)** ஊனேறு செல்வத் துடற்பிறவி யான்வேண்டேன்
ஆனேறேழ் வென்று னடிமைத் திறமல்லால்
கூனேறு சங்க மிடத்தான்றன் வேங்கடத்துக்
கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே. (க)

**(32)** ஆனாத செல்வத் தரம்பையர்கள் தற்சூழ
வானாளும் செல்வமும் மண்ணரசும் யான்வேண்டேன்
தேனார்பூஞ் சோலைத் திருவேங் கடச்சுனையில்
மீனாய்ப் பிறக்கும் விதியுடையே னாவேனே. (உ)

---

*திருவரங்கம் பெரியகோயிலிற் போலத் திருவேங்கடமலையில் இவ் வாழ்வார்க்குள்ள விருப்பமிகுதியையும், அத் திருமலையோடு தொடர்புடைய பிறப்பொன்றைத் தாம் வேண்டுதலையும் வெளியிடுவன, இத்திருமொழிப் பாசுரங்கள்.

31. — ஊன் ஏறு செல்வத்து உடற்பிறவி – ஊன் (மாமிசம்) பெருகி வளராநின்ற உடலுடன் செல்வத்தை நுகரும் பிறவி; ஆனேறு ஏழ் – ஏழு இடபங்கள்; இவற்றை வென்றது நப்பின்னை பொருட்டு. இடத்தான் — இடக்கையில் உடையவன். கோனேரி – திருமலைக் கோயிலருகில் உள்ள புஷ்கரிணி. "உடற்பிறவி யான்வேண்டேன் என்கிறார் 'குருகாய்ப்பிறப் பேனே' என்றார், பிறவியன்றுபோலே காணும் அங்கே பிறக்கை" என்ற பழைய வியாக்யானநயங் காண்க.

32. ஆனாத செல்வம் – எண்ணி ஙிரம்பாத ஐசுவரியம்; "கீழ்ச்சொன்ன குருகாய்ப் பிறக்கில் அதற்குச் சிறகுண்டாகையாலே, திருமலையிலே யல்ல னாய்க் கழியப் பறக்கைக்கு யோக்யதை உண்டிறே; அப்படியு மொன்று இன்றியே, உற்பத்தி ஸ்திதிலயங்களுக்குத் திருமலையிலேயாய மீனாய்ப் பிறப் பேன் என்கிறார்; பிறக்கும் விதியுடையேனாவேன் – இப்போது மீனாய்ப்

(33) பின்னிட்ட சடையானும் பிரமனும் இந்திரனும்
துன்னிட்டுப் புகலரிய வைகுந்த நீள்வாசல்
மின்வட்டச் சுடராழி வேங்கடக்கோன் தானுமிழும்
பொன்வட்டில் பிடித்துடனே புகப்பெறுவே னாவேனே. (௩)

(34) ஒண்பவள வேலை யுலவுதண் பாற்கடலுட்
கண்டுயிலும் மாயோன் கழலிணைகள் காண்பதற்குப்
பண்பகரும் வண்டினங்கள் பண்பாடும் வேங்கடத்துச்
செண்பகமாய் நிற்குந் திருவுடையே னாவேனே. (௪)

(35) கம்பமத யானைக் கழுத்தகத்தின் மேலிருந்
தின்பமருஞ் செல்வமும் இவ்வரசும் யான்வேண்டேன்
எம்பெருமான் ஈசன் எழில்வேங் கடமலைமேல்
தம்பகமாய் நிற்குந் தவமுடையே னாவேனே. (௫)

---

பிறக்கவும் வேண்டார்; ஒரு ஸாக்ருதத்தாலே அந்த ஜன்மம் மேல்வரும் என்ற திண்மை பெறவும் அமையும் என்கிறார்" என்ற பழைய வியாக்யான நயங்கள் அறியத்தக்கன.

33. பின் இட்ட — பின்னுதல் அமைந்த. திரித்துவிட்ட என்றபடி. துன்னிட்ட — நெருங்கியுள்ள. வைகுந்த நீள் வாசல் — வைகுந்தம் போலும் திருமலைக்கோயிலின் பெரிய வாயில். மின்வட்டம் — மின்னலின் வளைவு. உமிழும் பொன் வட்டில் — தம்பல முமிழும் காளாஞ்சி. "பிரமருத்ராதிகள் நெருக்கிப் புகப்பெறாதேயிற்க 'பணிக்குக் கடவன், இவனை உள்ளே புகுதவிடு' என்று உள்ளே அந்தரங்க வ்ருத்திக்குக் கடவர்களோடே நானும் ஸஜாதீயனாய்ப் புகவேணும்" என்பது வ்யாக்யானம்.

34. பவள வேலை — பவளக்கொடி படர்ந்த கரையிடம். காண்பதற்குச் செண்பகமாய் நிற்கும் என இயையும். திரு — பாக்கியம். செண்பகமரத்தின் மலர், மணமிகுதியும் காலையில் மலர்தலும் உடையதாதலிற் சிறந்ததாம்.

35. கம்பம்— நடுக்கஞ்செய்வது, தம்பமுமாம். இவ்வரசு—சேரநாடாட்சி. தம்பகம் — "மூத்தற்றுத் தீய்ந்து போவதொரு ஸ்தாவரமரம்" என்பது வியாக்யானம். தம்பம் (தூண்) எனினுமாம்.

(36) மின்னனைய நுண்ணிடையார் உருப்பசியும் மேனகையும்
அன்னவர்தம் பாடலொடும் ஆடலவை ஆதரியேன்
தென்னவென வண்டினங்கள் பண்பாடும் வேங்கடத்து
ளன்னனைய பொற்குவடாம் அருந்தவத்தெ னாவேனே (சு)

(37) வானாளும் மாமதிபோல் வெண்குடைக்கீழ் மன்னவர்தம்
கோனாகி வீற்றிருந்து கொண்டாடும் செல்வறியேன்
தேனார்பூஞ் சோலைத் திருவேங் கடமலைமேற்
கானாற்றுப் பாயும் கருத்துடையெ னாவேனே. (எ)

(38) பிறையேறு சடையானும் பிரமனும் இந்திரனும்
முறையாய பெருவேள்விக் குறைமுடிப்பான் மறையானான்
வெறியார்தண் சோலைத் திருவேங் கடமலைமேல்
நெறியாய்க் கிடக்கும் நிலையுடையெ னாவேனே. (அ)

---

36. 'உற்பசியும்' என்றும் பாடம். தென்ன என – ஆளத்திமுறை. அன்னனைய, அன்ன அனைய என்பதன் திரிபு. 'அப்படிப்பட்ட பொற்குவடு என்னு மத்தனை, வேறு உபமானமில்லை' என்பது வ்யாக்யானம். இனி, வேங்கடத்துளன் அனைய பொற்குவடு என்று பிரித்து, திருமலைப் பெருமானை ஒப்பான பொற்குவடு என்பதும் ஒரு முறை; 'பதுமபீடத், தன்னகரும்' என்ற கம்பர்வாக்கும் ஒப்பிடுக.

37. மன்னவர்தம் கோன் – சக்கரவர்த்தி. செல்வு – செல்வம்; 'நல் குரவும் செல்வும்' என்றார் நம்மாழ்வாரும். அறியேன் – மதித்தறியேன். கானாறு – காட்டாறு.

38. வேள்விக் குறை – பிரமாதியர்செய்யும் வேள்விகளின் பயனை வேண்டுகோள். குறை முடிப்பவனும், மறையானவனும் ஆகிய திருமாலு டைய மலை என்க. குறைமுடித்தற் பொருட்டுத் தானே வேதரூபி ஆனவன் எனினுமாம். வெறி – நறுமணம். (மேற்பாட்டிற் கூறியபடி) "ஆறானால் ஒருக்கால் பெருகினால் விநியோகப்பட்டு, வற்றினால் விநியோகப்படாதிறே; அங்ஙன்றியே எப்போதும் ஒக்க வைஷ்ணவர்கள் சஞ்சரிக்கையாலே அவர் கள் பாதரேணு படும்படி வழியாய்க் கிடக்கும் துணிவுடையனாவேன்; 'தொண்ட ரடிப்பொடி ஆட நாம்பெறில்' என்றிருக்குமவர் இறே" என்பது வியாக்யானம்.

(39) செடியாய வல்வினைகள் தீர்க்குந் திருமாலே
நெடியானே வேங்கடவா நின்கோ யிலின்வாயில்
அடியாரும் வானவரும் அரம்பையருங் கடந்தியங்கும்
படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே. (௯)

(40) உம்பர் உலகாண் டொருகுடைக்கீழ் உருப்பசிதன்
அம்பொற் கலையல்குல் பெற்றாலும் ஆதரியேன்
செம்பவள வாயான் திருவேங் கடமென்னும்
எம்பெருமான் பொன்மலைமே லேதேனு மாவேனே. (௰)

(41) மன்னியதண் சாரல் வடவேங் கடத்தான்றன்
பொன்னியலுஞ் சேவடிகள் காண்பான் புரிந்திறைஞ்சிக்
கொன்னவிலுங் கூர்வேற் குலசே கரன்சொன்ன
பன்னியநூற் றமிழ்வல்லார் பாங்காய பத்தர்களே. (௰௧)

---

39. செடி ஆய – பாவபலனான; துன்பம் விளைப்பனவாய என்றுமாம். நெடியான் – விலங்கடந்த நெடுமுடியண்ணல்; 'அன்று ஞாலமளந்த பிரான் பரன் சென்றுசேர் திருவேங்கடமாமலை' என்றார் பெரியாரும். "அநந்யப்ரயோஜனரும் (அடியாரும்), ப்ரயோஜநாந்தரபரரும் (வானவரும்), அந்யபரரும் (அரம்பையரும்)" என்பது வ்யாக்யானம். அரம்பையர் – தேவமகளிர். 'கிடந்தியங்கும்' என்றும் பாடம். இப்பாசுரப்பொருளடியாகவே, திருமால் கோயில்களின் உள்வாயிற்படிக்குக் "குலசேகரன் படி" என்ற பெயர் வழங்குவதாயிற்று.

40. மேலே உருப்பசியும் மேனகையும் அன்னமகளிரை வெறுத்துக் கூறியவர் உருப்பசியின்பந் தானேவந்தடையினும் ஆதரியேன் என்கிறார். உருப்பசி – ஊர்வசீ என்ற வடசொற்றிரிபு. ஏதேனும் – ஒருவராலும் அறிய வேண்டாத தொரு பதார்த்தமாகவும்.

41. சாரல் – பக்கமலை; 'வழையமை சாரல்' (கலித்தொகை, 53) என்ப. புரிதல் – விரும்புதல். கொல் நவிலும் வேல் – கொல்லுதற் றொழிலிற் பயின்ற வேல். நூற்றமிழ் – இலக்கியவளம் பெற்ற தமிழ். பாங்கு – அன்பு.

## ஐந்தாம் திருமொழி

### தருதுயரந் தடாயேல்*

(42) தருதுயரந் தடாயேலுன் சரணல்லாற் சரணில்லை
விரைகுழுவு மலர்ப்பொழில்சூழ் வித்துவக்கோட் டம்மானே
அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் மற்றவடன்
அருள்நினைந்தே யழுங்குழவி யதுவேபோன் றிருந்தேனே (க)

---

*ஆழ்வார் தமக்கு எம்பெருமானை யல்லது வேறு புகலிடம் இல்லாமையைத் திருட்டாந்தங்கள்மூலம் வெளியிடுவன, இத் திருமொழிப் பாசுரங்கள்.

42. தரு துயரம் தடாயேல் – நீயே தரும் துக்கத்தை நீயே மாற்றாயாகில் எ – று. “தன்னாலே தனக்கு விரோதி வந்ததென்றும், தானே ஸாதநாநுஷ்டானத்தாலே அது போக்கிக் கொள்வனென்றும் சாஸ்திரங்கள் சொல்லிக்கிடக்கச் செய்தே, இவர், அவனே துயர்தந்தான் என்பதென் என்னில், ப்ராப்தாப்ராப்த விவேசனம் பண்ணியிருப்பா ரொருவராகையாலே சொல்லுகிறார். ‘தானே கர்மம் பண்ணினவன் தானே ஸாதநாநுஷ்டானம் பண்ணித் தவிர்த்துக் கொள்ளுகிறான்’ என்று நம்மைப் பழியிட்டுத் தள்ள நினைத்தானாகிலும், நானும் தன்னைக் குறித்து(–நோக்கப்) பரதந்திரன், நான் செய்த கர்மங்களும் பரதந்திரம், நான் பண்ணும் ஸாதநாநுஷ்டானத்துக்குப் பலப்ரதன் தானாகையாலே அதுவும் தன்னைக்குறித்து(–நோக்க)ப் பரதந்திரம் ஆகையாலே ‘தருதுயரம்’ என்கிறார்” என்ற வியாக்கியான நயம் அறியத்தக்கது.

தடாயேல் – தடுக்காமலொழிந்தால். அரி சினம் – அரிந்துவிடுவது போலும் சினம். அரிதல் – அறுத்தல். வித்துவக்கோடு – பாடல்பெற்ற திருமால் திருப்பதிகளுள் ஒன்று. [இது மலைநாட்டில் ‘பட்டாம்பி’ என்ற ஊரின் பக்கத்தோடும் பாரதப்புழையின் தென்கரையில் உள்ளதும் ‘திருமிற்றக்கோடு’ என வழங்குவதுமான திருமால் தலம் என்பர். திருமிற்றம் – திருமுற்றம் என்பதன் திரிபு. திருமுற்றம்– சந்நிதி, கோயிற்புறம். இவ்வாறு வேறான பெயர்வழக்குள்ள தலத்தை வித்துவக்கோட்டுடன் பொருத்துவது பொருத்தமன்று. சேரரது பழைய தலைநகரமான கருவூரில் ஆமிராவதிநதிப் பக்கத்துள்ள திருமால்கோயிற்பகுதி இன்றும் வித்துவக்கோடு என்ற வழக்கு உடையதாயிருத்தலால், அதனையே கொங்கர்கோனான ஆழ்வார் குறிப்பிட்டவர் எனல் பொருந்தும் என்க. (யான் எழுதிய ‘ஆழ்வார்கள் காலநிலை’ 167–8–ம் பக்கம் பார்க்க]

(43) கண்டா ரிகழ்வனவே காதலன்றான் செய்திடினும்
கொண்டானை யல்லா லறியாக் குலமகள்போல்
விண்டோய் மதில்புடைசூழ் வித்துவக்கோட் டம்மானீ
கொண்டாளா யாகிலுமுன் குரைகழலே கூறுவனே. (உ)

(44) மீன்நோக்கும் நீள்வயல்சூழ் வித்துவக்கோட் டம்மானென்
பால்நோக்கா யாகிலுமுன் பற்றல்லாற் பற்றிலேன்
தான்நோக்கா தெத்துயரஞ் செய்திடினுந் தார்வேந்தன்
கோல்நோக்கி வாழுங் குடிபோன் றிருந்தேனே. (ஈ)

(45) வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன்பால்
மாளாத காதல்நோ யாளன்போல் மாயத்தால்
மீளாத் துயர்தரினும் வித்துவக்கோட் டம்மானீ
ஆளா உனதருளே பார்ப்பன் அடியேனே. (ச)

(46) வெங்கட்டிண் களிறடர்த்தாய் வித்துவக்கோட் டம்மானே
எங்குப்போய் உய்கேனுன் னிணையடியே அடையலல்லால்
எங்கும்போய்க் கரைகாணா தெறிகடல்வாய் மீண்டேயும்
வங்கத்தின் கூம்பேறு மாப்பறவை போன்றேனே. (ரு)

---

43. காதலன் – காதல் செய்தற்குரிய கணவன். கொண்டான் – அக்கினிசான்றாகத் தன்னைக் கைக்கொண்டவன்; இஃது, 'அவன்' என்ற சுட்டுப் பெயர்மாத்திரையாய் நின்றது. கூறுதல் – அடைக்கலங் கூறுதல்.

44. நோக்கும் – குறிக்கொண்டு வாழும். பற்று – சரணம். நோக்காமல் – நீதி யாராயாது.

45. வாள் – சத்திரக்கருவி. அறுத்தலும் சுடுதலும் இரணசிகிற்சை முறைகள். "மருத்துவனாய் நின்ற மாமணிவண்ணா" என்ற பெரியாழ்வார் பாசுரத்துடன் வைத்து இவ்வுவமை நயம் அறியத்தகும். ஆளா – உனக்கே அடிமையாக.

45. வெம் கண் – தறுகண், கடுஞ்சினம். களிறடர்த்தாய் – குவலாபீடம் என்ற மதயானையைக் கொன்றவனே! அலை எறியும் நடுக்கடலிற் செல்லும் மரக்கலத்தின் கூம்பிலே தங்கிய பறவையொன்று, அதனினின்று நீங்கி

(47) செந்தழலே வந்தழலைச் செய்திடினுஞ் செங்கமலம்
அந்தரஞ்சேர் வெங்கதிரோற் கல்லால் அலராவால்
வெந்துயர்வீட் டாவிடினும் வித்துவக்கோட் டம்மாஉன்
அந்தமில்சீர்க் கல்லால் அகங்குழைய மாட்டேனே. (௬)

(48) எத்தனையும் வான் மறந்த காலத்தும் பைங்கூழ்கள்
மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும் மற்றவைபோல்
மெய்த்துயர்வீட்டாவிடினும்வித்துவக்கோட்டம்மாஎன்
சித்தமிக உன்பாலே வைப்பன் அடியேனே. (௭)

(49) தொக்கிலங்கி யாறெல்லாம் பரந்தோடித் தொடுகடலே
புக்கன்றிப் புறநிற்க மாட்டாத மற்றவைபோல்
மிக்கிலங்கு முகில்நிறத்தாய் வித்துவக்கோட் டம்மாஉன்
புக்கிலங்கு சீரல்லாற் புக்கிலன்காண் புண்ணியனே. (௮)

---

வேறு போக்கிடந்தேடிப் பறந்தால், கரைகாண வொண்ணுமல் அது மீண்டும் அக்கூம்பிடமே வந்து ஏறுவதுபோல, பிறவிப்பெருங்கடலிடையே குடும்பக் கப்பலிற் செல்லும் யானும் உன்னடிகளை அடைவதன்றி வேறு புகல் காண் கிலேன் என்றபடி.

47. செந்தீயே அணுகவந்து, அலர்தற்கேற்ற வெப்பத்தைச் செய்யு மாயினும், தாமரைமலர்கள், சேணெடுந் தூரத்துள்ள சூரியனுக்கல்லாமல் அலரா; அதுபோல் என்க; எடுத்துக்காட்டுவமை. "வெந்தழலைச் செய் திடினும்" என்றும் பாடமோதுவர்; இது பழைமையும் நயமும் உடையதன்று. வீட்டுதல் – நீக்குதல், ஒழித்தல்; வீடுதல் என்பதன் பிறவினை; "வீடுமின் முற்றவும்" என்ற இடங் காண்க.

48. வான் மறந்த – மேகம் பெய்தலை மறுத்த. 'வான்வறந்த' என்றும் பாடம். பைங்கூழ் – பயிர். மைத்து – கறுத்து.

49. தொக்கு – நீர் ஒருங்குதிரண்டு. இலங்குதல் – விளங்குதல். தொடுகடல் – சகரரால் தோண்டப்பட்ட கீழ்க்கடல். புக்கன்றி – புக்காலன்றி. மாட்டாத – வினைமுற்று. (நதிகள்) "புக்கால் கடல் நிறைவதும் இல்லையாகில் குறைபடுகிறதும் அன்றிறே; இவற்றுக்குப் புறம்பு தரிப்பதரிதாயிறே புகுகி றன" என்பது வியாக்யானம். புக்கு இலங்கு சீர் – அடியாருள்ளங்களிற்

(50) நின்னையே தான்வேண்டி நீள்செல்வம் வேண்டாதான்
தன்னையே தான்வேண்டுஞ் செல்வம்போல் மாயத்தால்
மின்னையே சேர்திகிரி வித்துவக்கோட் டம்மானே
நின்னையே தான்வேண்டி நிற்பன் அடியேனே. (௯)

(51) வித்துவக்கோட் டம்மானீ வேண்டாயே யாயிடினும்
மற்றாரும் பற்றிலே னென்றவனைத் தாள்நயந்து
கொற்றவேற் றானைக் குலசே கரன்சொன்ன
நற்றமிழ்பத் தும்வல்லார் நண்ணார் நரகமே. (௰)

---

புகுந்து விளங்கும் குணங்களாகிய கடல் என்க. புண்ணியன் – புண்ணிய உருவமானவன்.

50. இறைவனிடமே அன்பைச் செலுத்தி, அதனால் செல்வத்தை வெறுத்துவிட்டவன் எவனோ அவனையே விடாதுபற்றும் அச்செல்வம் போல, உன் உடைமையான என்னை நீ வேண்டாதுவிடினும், யான் உன்னை விடேன் என்பது கருத்து. மாயத்தால் – யான் உன்னை விடாது பற்றுவதும் உன் அருள் காரணமாக நிகழ்தலின், அதுவும் உன் மாயமே என்றவாறு. மாயத்தால் வேண்டி நிற்பன் என இயைக்க. தான் என்பன அசைநிலைகள்.

51. 'தாள் நயந்த' என்பதும் பாடம். நண்ணார் நரகமே – முத்தி பெறுவர் என்றபடி. பத்தும் வல்லார் – பதிகமுடிவுப்பாட்டான இதனுடன்கூடிய பத்தும் என்க. இப்பாசுரங்களில் வரும் எதுகைகள் கொண்டு 'விற்றுவக் கோடு' என்று இத்திருமொழி முழுதும் பாடம் வழங்குவாருமுண்டு.

## ஆறும் திருமொழி

### ஏர்மலர்ப்பூங்குழல்*

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

(52) ஏர்மலர்ப் பூங்குழல் ஆயர் மாதர்
எனைப்பல ருள்ளவிவ் வூரி லுன்றன்
மார்பு தழுவுதற் காசை யின்மை
அறிந்தறிந்தே உன்றன் பொய்யைக் கேட்டுக்
கூர்மழை போற்பனிக் கூத லெய்திக்
கூசி நடுங்கி யமுனை யாற்றில்
வார்மணற் குன்றிற் புலர நின்றேன்
வாசுதே வாவுன் வரவு பார்த்தே. (க)

---

* கண்ணபிரானிடம் காதல்மிக்க ஆயர்குலமகளிர் அப்பெருமானுடன் ஊடல்கொண்டு உரைத்தவற்றைக் கொண்டுமொழிவன, இத்திருமொழிப் பாசுரங்கள்.

52. கண்ணபிரான் ஒருநாள் மாலை ஆய்மகள் ஒருத்தியிடம் 'யமுனை யாற்றின் மணற்குன்றிடமாக நீசென்று நிற்பாயாக; அங்கு யான் வருவேன்' என்று கூறி விடுக்க, அதனை நம்பி அக்குறியிடஞ் சென்றவள் விடிவளவும் நின்று அவன்வரக் காணாமையால் மீண்டுவந்து மறுநாள் கண்ணனைக் கண்டு புலந்து கூறியது, இப்பாடல், "உன்னைத் தழுவும் ஆசை என்னிடமில்லை; அதன்காரணம், நீ அன்புசெலுத்தும் ஆயமகளிர் பலர் இவ்வூரில் உள்ளமையே; இதனை நன்கறிந்தும் உன்மொழியை நம்பிச் சென்று உன் வரவுபார்த்து ஏமாந்து வருந்தினேன்" என்று தன் ஆற்றாமை தோற்றக்கூறி ஊடினள் என்க. எனைப்பலர் – எத்தனையோ பலர். கூர் மழை போல் பனிக்கூதல் – மிக்கமழைபோலப் பெய்யும் பனியால் உண்டாம் குளிர். கூசி – எவரேனும் காண்பர்கொல் என்று கூச்சமுற்று. நடுங்கி – அச்சத்தாலும் குளிராலும் மெய்ந்நடுங்கி. மெய்யன்றி வேறறியாதவன் மகனென்று உன்னை நம்பினேன் காண் என்பாள் 'வாசுதேவா' என்று அழைத்தாள்.

(53) கெண்டையொண் கண்மட வாளொ ருத்தி
கீழை யகத்துத் தயிர்கடையக்
கண்டொல்லை நானுங் கடைவ னென்று
கள்ள விழியை விழித்துப் புக்கு
வண்டமர் பூங்குழல் தாழ்ந்து லாவ
வாண்முகம் வேர்ப்பச்செவ் வாய்து டிப்பத்
தண்டயிர் நீகடைந் திட்ட வண்ணம்
தாமோ தராமெய் யறிவன் நானே. (உ)

(54) கருமலர்க் கூந்த லொருத்தி தன்னைக்
கடைக்கணித் தாங்கே யொருத்தி தன்பால்
மருவி மனம்வைத்து மற்றொருத்திக்
குரைத்தொரு பேதைக்குப் பொய்கு றித்துப்
புரிகுழல் மங்கை யொருத்தி தன்னைப்
புணர்தி அவளுக்கும் மெய்ய னல்லை
மருதிறுத் தாயுன் வளர்த்தி யூடே
வளர்கின்ற தாலுன்றன் மாயை தானே. (ங)

---

53. கெண்டை – கயல். மடவாள் ஒருத்தி – "சொல்லிற்றெல்லாம் மெய்யென்றிருக்கும் பருவத்தாளொருத்தி". கீழை அகம் – சேயதன்றி என்மனைக்கு அடுத்துள்ள கீழை வீடு. ஒல்லை – விரைவாக. கள்ளவிழி – திருட்டுப்பார்வை. பின்னிரண்டடிகள், கலவியியல்பு தோன்றவும் சிற்றல் காண்க. தாமோதரன்: யசோதையின் தாம்பாற் கட்டுண்ட உதரமுடையான் என்பது இதன் உறுப்புப் பொருள். "உன் உடம்பிற் றழும்பை மறைக்கலாமாகிலன்றோ உன் செயல்களை மறைக்கலாவது" என்பது வியாக்கியானம்.

54. வேறோர் ஆய்க்குலமகளின் கூற்று:— எங்களுள் கூந்தலழகியாள் ஒருத்தியைக் காமக்குறிப்போடு கடைக்கணித்தாய்; கடைக்கணித்தபடியே மற்றொருத்தியிடம் உள்ளம் வைத்தனை; வைத்தவாறே, வேறொருத்திக்கு ஏதோ காதல்மொழி உரைத்தாய்; உரைத்த பின்னும் ஒருபேதைக்குக் குறியிடங்காட்டினாய்; அது பொய்யென்று அவள் கருத வேறொருத்தியுடன் கலவிபுரிந்தனை.

(55) தாய்முலைப் பாலில் அமுதி ருக்கத்
 தவழ்ந்து தளர்நடை யிட்டுச் சென்று
பேய்முலை வாய்வைத்து நஞ்சை யுண்டு
 பித்தனென் றேபிற ரேச நின்றாய்
ஆய்மிகு காதலொ டியானி ருப்ப
 யான்விட வந்தவென் தூதி யோடே
நீமிகு போகத்தை நன்கு கந்தாய்
 அதுவுநின் கோரம்புக் கேற்கு மன்றே. (ச)

(56) மின்னொத்த நுண்ணிடை யாளைக் கொண்டு
 வீங்கிருள் வாயென்றன் வீதி யூடே
பொன்னொத்த ஆடைகுக் கூட லிட்டுப்
 போகின்ற போதுநான் கண்டு நின்றேன்

---

இவ்வாறு கலந்தவட்குத்தான் நீ மெய்யனோ எனின் அல்லை. உன் வளர்ச்சியோடு மாயமும் நாளொரு மேனியாக உடன்வளர்வது காண்' என்று கூறிப் புலந்தனள் என்க. மருது இறுத்தது — கண்ணனது களவுத் தண்டனையாக யசோதையார் கட்டிவைத்த உரல், அங்குள்ள இரட்டை மருதமரங்கட்கு இடையே அவனால் இழுக்கப்பட, அதனால் அவை முறிந்து வீழ்ந்த வரலாறாகும். மாயை — கள்ளத்தனம்.

55. முலையில் பாலமுது என்க. தளர்நடை — தடுமாறி நடக்கும் நடை. 'தளர்நடை நடவானோ' என்றார் பெரியாழ்வாரும். தூதி — தூதாகச் சென்ற வேறுகுலத்தவ ளொருத்தி. கோரம்பு — தீம்பு. ஆய்மிகு காதல் — ஆய்க்குலப் பெண்ணுக்கு இயல்பான மிக்க காதல். ஆய் — துயர் எனினும் ஆம். தாயைவிட்டுப் பேயைப்பற்றியதுபோன்றதே இத்தீம்புச்செயலும் என்றபடி.

56. வீங்கு — செறிந்த. பொன்னொத்த ஆடை — பீதாம்பரம். குக் கூடல் — முட்டாக்கு. கண்ணுற்றவளை — கண்ட வேறொருத்தியை. கண்ணால் இட்டு — கண்ணுற் குறியிட்டு. கைவிளித்தல் — கையால் வாவென்றழைத்தல். என்னுக்கு — எதற்காக. "என்றன் வீதியூடே — வேறொரு தெருவன்றே கொண்டுபோவது; இது ஆர் தெரு என்றிருந்தாய்? இது என்ன அஞ்

கண்ணுற் றவளைநீ கண்ணு விட்டுக்
கைவிளிக் கின்றதுங் கண்டே நின்றேன்
என்னுக் கவளைவிட் டிங்கு வந்தாய்
இன்னுமங் கேகாடா நம்பி நீயே. (ரு)

(57) மற்பொரு தோளுடை வாசு தேவா
வல்வினை யேன்றுயில் கொண்ட வாறே
இற்றை யிரவிடை ஏமத் தென்னை
இன்னணை மேலிட் டகன்று நீபோய்
அற்றை யிரவுமோர் பிற்றை நாளும்
அரிவைய ரோடு மணைந்து வந்தாய்
எற்றுக்கு நீயென் மருங்கு வந்தாய்
எம்பெரு மான்நீ யெழுந்தருளே. (சு)

(58) பையர வின்னணைப் பள்ளியினாய்
பண்டையோ மல்லோம் நாம் நீயுகக்கும்
மையரி யொண்கண்ணி னாரு மல்லோம்
வைகியெஞ் சேரி வரவொழிநீ

---

சாமைதான்" "பொன்னெத்த ஆடை – மறைத்துக் கொண்டு போகிறதுதான் இருளுக்குப் பிரகாசத்தையிட்டன்றே கொண்டுபோகிறது" என்பன வ்யாக்யானத் தொடர்கள்.

57. மல் – மல்லர். மற்பொருதோள் என்ற அடையால், அணைத்து இன்பந்துய்க்குஞ் சுவையறியாமை புலப்படும். வல்வினையேன் – உறக்கத்தால் கலவியின்பமிழந்த தீவினையேன். அற்றையிரவு– அன்று ஒருநாளிரவு. ஏமம்– யாமம். இன் அணை – படுக்கைவாய்ப்பு உறக்கத்துக்குக் காரணமாயிற்று என்றபடி. எற்றுக்கு – எதற்காக. எம்பெருமான் நீ எழுந்தருளே – 'நீர் மிகப் பெரியவர், அப்பால் எழுந்தருளும்' என்று அசதியாடியவாறு. 'இற்றை யிரவிடை' என்று ஓதும்பாடம் பொருட்பொருத்த முடையதன்று. பிற்றை நாள் – மறுநாள் ; மலைநாட்டு வழக்கு.

58. பை – படம். பண்டையோம் அல்லோம் – உன் வஞ்சகச் செயலுக்கு முன்போல ஏமாந்தவர்கள் அல்லோம். சேரி – ஆய்ச்சியர் தெரு. புன்னுவம் – வஞ்சகம்.

செய்ய உடையுந் திருமுகமுஞ்
செங்கனி வாயுங் குழலுங் கண்டு
பொய்யொரு நாள்பட்ட தேயமையும்
புள்ளுவம் பேசாதே போகு நம்பீ. (எ)

(59) என்னை வருக வெனக்கு றித்திட்
டினமலர் முல்லையின் பந்தர் நீழல்
மன்னி யவளைப் புணரப் புக்கு
மற்றென்னைக் கண்டுழரு நெகிழ்ந்தாய்
பொன்னிற ஆடையைக் கையிற் றுங்கிப்
பொய்யச்சங் காட்டிநீ போதி யேலும்
இன்னுமென் கையகத் திங்கொருநாள்
வருதியேல் என்சினந் தீர்வன் யானே. (அ)

(60) மங்கல நல்வன மாலை மார்பில்
இலங்க மயிற்றழைப் பீலி சூடிப்
பொங்கிள வாடை யரையிற் சாத்திப்
பூங்கொத்துக் காதிற் புணரப் பெய்து

---

59. குறித்திட்டு – கலவியிடங் குறிப்பிட்டு. மன்னியவளை –முன்னமே காட்டிய குறியிடத்தில் நெடும்போது தாழ்த்த வேறொருத்தியை. மற்றென்னை – அச் செயலைக்காண உன் அடியொற்றிச் சென்ற என்னை என்றபடி. உழறுதல் – மனங் குழம்புதல், பொய்யச்சங்காட்டல் – அஞ்சியது போன்ற நடிப்பு. கையகத்து – கைவளைப்பில்.

60. வனமாலை – திருமாலணியும் மாலைவகை. மயிலின் தழைத்த பீலியை முடியிற் சூடி ; "பீலித் தழையைப் பிணைத்துப் பிறகிட்டு", 'மயிற் பீலியணிந்து' என்றார் பெரியாரும். பொங்கு இள ஆடை –அழகுபொலியும் மெல்லிய ஆடை. குழைந்து – மனமிளகிக் கலந்து. "குழலோசை என்றும் ஸம்ச்லேஷம் என்றும் பர்யாயமிறே" என்பது வ்யாக்யானம். 'அக்குழலோசை எங்களிடமும் ஒருநாள் வாராதோ' என்று தன் வருத்தந்தோன்றக் கூறிய வாறு.

கொங்கு நறுங்குழ லார்க ளோடு
குழைந்து குழலினி தூதி வந்தாய்
எங்களுக் கேயொரு நாள்வந் தூத
உன்குழ லின்னிசை போத ராதே. (௯)

(61) அல்லி மலர்த்திரு மங்கை கேள்வன்
தன்னை நயந்திள வாய்ச்சி மார்கள்
எல்லிப் பொழுதினி லேமத் தூடி
எள்கி யுரைத்த வுரையதனைக்
கொல்லி நகர்க்கிறை கூடற் கோமான்
குலசே கரனின் னிசையின் மேவிச்
சொல்லிய வின்றமிழ் மாலை பத்தும்
சொல்லவல் லார்க்கில்லை துன்பந் தானே. (௰)



---

61. அல்லிமலர் – அகவிதழுடைய தாமரை. எல்லி – இரவு. ஏமம் – நடுச்சாமம். எள்கி – மனமிளகி. கொல்லிநகர் – சேரர் தலைநகர்.

## ஏழாம் திருமொழி

### ஆலைநீள்கரும்பு *

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

(62) ஆலை நீள்கரும் பன்னவன் தாலோ
அம்பு யத்தடங் கண்ணினன் தாலோ
வேலை நீர்நிறத் தன்னவன் தாலோ
வேழப் போதக மன்னவன் தாலோ
ஏல வார்குழ லென்மகன் தாலோ
என்றென் றுன்னையென் வாயிடை நிறையத்
தாலொ லித்திடுந் திருவினை யில்லாத்
தாய ரிற்கடை யாயின தாயே. (க)

(63) வடிக்கொ ளஞ்சன மெழுதுசெம் மலர்க்கண்
மருவி மேலினி தொன்றினை நோக்கி
முடக்கிச் சேவடி மலர்ச்சிறு கருந்தாள்
பொலியும் நீர்முகிற் குழவியே போல

---

* கண்ணபிரானது பிள்ளைத் திருவிளையாடல்களைக் கண்டுகளிக்கும் பேறு, யசோதையார்க்கு வாய்த்ததுபோலத் தனக்கு வாய்க்காமையை நினைத்து, பெற்ற தாயான தேவகியார் அப்பெருமானைக் கண்டபோது புலம்பியவாற்றைக் கொண்டுமொழிவன, இத்திருமொழிப் பாசுரங்கள்.

62. ஆலைக் கரும்பு – இன்சுவையுடைமைக்கு உவமை. 'அமுதம் பொதி யின்சுவைக் கரும்பினை' என்றார் ஆலிநாடரும். வேழப் போதகம் – யானைக் கன்று. ஏலம் – மயிர்ச் சாந்து; நறுமணமுமாம். தால் ஒலித்தல் – தாலோ தாலேலோ என நாவால் ஒலித்தல்.

63. வடிக் கொள் – கசடுபோக வடித்துக்கொள்ளப்பட்ட. வடி – கூர்மை எனின், அது கண்ணுடன் இயையும். கண் மருவி–மலரவிழித்து. மேல் இனிதொன்று – தொட்டிலின் மேலிடமாகக் கட்டும் காட்சிக்கினிய கிளிச்சட்

அடக்கி யாரச்செஞ் சிறுவிர லனைத்தும்
அங்கை யோடணைந் தானையிற் கிடந்த
கிடக்கை கண்டிடப் பெற்றில னந்தோ
கேச வாகெடு வேன்கெடு வேனே. (௨)

(64) முந்தை நன்முறை யன்புடை மகளிர்
முறைமுறை தந்தங் குறங்கிடை யிருத்தி
எந்தையே என்றன் குலப்பெருஞ் சுடரே
எழுமு கிற்கணத் தெழில்கவர் ஏறே
உந்தை யாவனென் றுரைப்பநின் செங்கேழ்
விரலி னுங்கடைக் கண்ணினுங் காட்ட
நந்தன் பெற்றனன் நல்வினை யில்லா
நங்கள் கோன்வசு தேவன்பெற் றிலனே. (௩)

---

டம் போல்வதொன்று. சேவடிமலர்ச் சிறு கருந்தாள்— தாமரைபோன்ற உள்ளங் காலை உடையதும் புறவாய் கறுத்ததுமான சிறுதாள். முகிற்குழவி— இளமேகம். ஆர – ஒருசேர. முகிற்குழவி போலவும் யானைக்கன்று போலவும் கிடந்த என்க. தொட்டிலில் இளங்குழவி கிடக்கும் இயல்புகள் கூறப்பட்டன. அவ்வியல்புகளைக் காணப்பெறாமையால், மலடு நீங்கியதும் பெற்றுவைத்தது மன்றி அவற்றால் உண்டாம் இன்பநுகர்ச்சியை இழந்தேன் என்று இரங்கியவாறு.

64. முந்தை நன்முறை மகளிர்- தாயர், அவரைப்பெற்ற பாட்டிமார் முதலிய மூத்தபெண்டிர். குறங்கு – தொடை. மகளிர் இருத்தி உரைப்ப என இயையும். தன் தந்தை இன்னான் என்று காட்டும் பேற்றை வளர்த்தவன் பெற்றான், பெற்றவன் பெற்றிலன் என்றிரங்கியபடி. நந்தன் என்பது ஆனந்த முடையவன் என்றும், வசுதேவன் என்பது செல்வமுடையவன் என்றும் உறுப்புப்பொருள் உடையனவாதலால், செல்வப்பேறு ஒருவற்கும், அதனைத் துய்க்கும்பேறு வேறொருவற்கும் வாய்த்தவாறென்னே என்பது இதனுட் பொருள்.

(65) களிநி லாவெழில் மதிபுரை முகமும்
கண்ண னேதிண்கை மார்புந்திண் டோளும்
தளிர்ம லர்க்கருங் குழற்பிறை யதுவும்
தடங்கொள் தாமரைக் கண்களும் பொலிந்த
இளமை யின்பத்தை யின்றென் றன் கண்ணாற்
பருகு வேற்கிவள் தாயென நினைந்த
அளவில் பிள்ளைமை யின்பத்தை யிழந்த
பாவி யேனென தாவிநில் லாதே. (௪)

(66) மருவும் நின்திரு நெற்றியிற் சுட்டி
அசைத ரமணி வாயிடை முத்தம்
தருத லுமுன்றன் தாதையைப் போலும்
வடிவு கண்டுகொண் டுள்ளமுள் குளிர
விரலைச் செஞ்சிறு வாயிடைச் சேர்த்து
வெகுளி யாய்நின் றுரைக்கும்வ் வுரையும்
திருவி லேனொன்றும் பெற்றிலேன் எல்லாம்
தெய்வ நங்கை யசோதைபெற் றாளே. (௫)

---

65. களி நிலா – களித்தற்குரிய நிலவு. குழற் பிறை – திருக்குழற் கீழ் அமைந்த பிறைபோலும் நெற்றி. இவள்தாய் என நினைந்த பிள்ளைமை யின்பம் – தாயொருத்தியையன்றி வேறொருத்தியையும் அறியாத குழவித் தன்மையைக் கண்டு நுகரும் இன்பம். அளவில் இன்பம் என இயையும், உன் இளமைப் பருவத்தின் அழகை இப்போது கண்டுகளிக்கின்றே ஞயினும் குழவிப்பருவத்தின் பேரழகையும் நுசரப்பெற்றிலேன் என்றிரங் கியவாறு

66. சுட்டி – நெற்றியணி. வெகுளி – சிறுசீற்றம், உள்குளிர உரைக்கும் என இயையும். முத்தந்தருதலும், உரைக்குமவ் வுரையும் என் உம்மைகள் வந்தன. "இழக்கைக்கு நானொருத்தி உண்டானாற்போலே அனு பவிக்கைக்கு இட்டுப்பிறந்த யசோதைப்பிராட்டி எல்லாம் பெற்றாளிறே" என்பது வியாக்கியானம்.

(67) தண்ணந் தாமரைக் கண்ணனே கண்ணு
தவழ்ந் தெழுந்து தளர்ந்ததோர் நடையால்
மண்ணிற் செம்பொடி யாடிவந் தென்றன்
மார்பில் மன்னிடப் பெற்றிலன் அந்தோ
வண்ணச் செஞ்சிறு கைவிர லனைத்தும்
வாரி வாய்க்கொண்ட அடிசிலின் மிச்சில்
உண்ணப் பெற்றிலன் ஓகொடு வினையேன்
என்னை என்செய்யப் பெற்றதெம் மோயே. (சு)

(68) குழகனே என்றன் கோமளப் பிள்ளாய்
கோவிந் தாவென் குடங்கையின் மன்னி
ஒழுகு பேரெழி லிளஞ்சிறு தளிர்போல்
ஒருகை யாலொரு முலைமுகம் நெருடா
மழலை மென்னகை இடையிடை யருளா
வாயி லேமுலை யிருக்கவென் முகத்தே
எழில்கொள் நின்றிருக் கண்ணிணை நோக்கந்
தன்னை யும்இழந் தேனிழந் தேனே. (எ)

---

67. கண்ணு – கருநிறத்தவனே ! செம்மண்பொடியில் என மாறுக அனைத்தும் – அனைத்தாலும். மிச்சில் – சேடம். மோய் – தாய். "மக்கள் மெய் தீண்டல் உடற்கின்பம்", "அமுதினு மாற்ற வினிதேதம் மக்கள், சிறுகை யளாவிய கூழ்" என்ப (குறள்).

68. குழகன் – குழந்தை. குடங்கை – வளைந்தகரம். தளிர்போல்– தளிரைப் போலும். நெருடா – விரலால் நெருடி. குழவிகளின் இளநகையினைக் காணுந் தாய்க்குப் பால்சுரக்கும் என்ப. "ஒரு முலையை வாய்மடுத்து ஒருமுலையை நெருடிக்கொண்டு, இருமுலையு முறைமுறையா யேங்கி யேங்கி யிருந்துணுயே" என்ற பெரியாழ்வார் பாசுரப்படி, யசோதையார் பெற்ற அனுபவங்களைத் தான் பெறாமையால் இரங்கியவாறு.

(69) முழுதும் வெண்ணெ யளைந்துதொட் டுண்ணும்
முகிழி ளஞ்சிறுத் தாமரைக் கையும்
எழில்கொள் தாம்புகொண் டடிப்பதற் கெள்கு
நிலையும் வெண்டயிர் தோய்ந்தசெவ் வாயும்
அழுகை யும்அஞ்சி நோக்குமந் நோக்கும்
அணிகொள் செஞ்சிறு வாய்நெளிப் பதுவும்
தொழுகை யும்இவை கண்ட வசோதை
தொல்லை யின்பத் திறுதிகண் டாளே. (௮)

(70) குன்றி னாற்குடை கவித்ததுங் கோலக்
குரவை கோத்த துங்குட மாட்டும்
கன்றி னால்விள வெறிந்ததுங் காலாற்
காளி யன்தலை மிதித்தது முதலா
வென்றி சேர்பிள்ளை நல்விளை யாட்ட
மனைத்தி லுமங்கென் னுள்ளமுள் குளிர
ஒன்றுங் கண்டிடப் பெற்றிலன் அடியேன்
காணு மாறினி யுண்டெனி லருளே. (௯)

---

69. முகிழ் – தளிர், மொட்டுமாம். எழில்கொள் எள்கு நிலை என்க. தாம்பு கொண்டு அடித்தது வெண்ணெய்க் களவினில்; சிறுவாய் நெளித்தது, குற்றம் பொறுக்கக் கெஞ்சும் நிலையில்; தொழுதது, அதற்கு மிணங்காது தாய் ஒறுத்தபோது வேறு போக்கற்ற நிலையில். தொல்லை யின்பம் – வீடுபேற்றின்பம்.

70. இப்பாசுரத்தின் முதலிரண்டு அடிகளும் கண்ணனது பிள்ளைத் திருவிளையாடல்களைக் கூறுவன. குன்று – கோவர்த்தனகிரி. குன்றினாற் குடை கவித்தது, தனக்குப் படைத்த பேருணவுகளை அக் கிரிக்குங் கண்ணன் படைத்ததனால் சினங்கொண்டு இந்திரன் பெய்வித்த பெருமழையை, அக் கோவர்த்தனத்தையே குடையாகப் பிடித்துத் தடுத்து ஆனிரைகளையும் ஆயரையுங் காத்த வரலாறு. குரவை கோத்தது, ஒவ்வோர் ஆய்ப்பெண்ணுக்கும் ஒவ்வொரு கண்ணனாக நின்று குரவைக்கூத்து நிகழ்த்திக் களிப்பித்த விளையாடல்,

(71) வஞ்ச மேவிய நெஞ்சுடைப் பேய்ச்சி
வறண்டு நார்நரம் பெழக்கரிந் துக்க
நஞ்ச மார்தரு சுழிமுலை அந்தோ
சுவைத்து நீயருள் செய்து வளர்ந்தாய்
கஞ்சன் நாள்கவர் கருமுகில் எந்தாய்
கடைப்பட் டேன்வறி தேமுலை சுமந்து
தஞ்ச மேலொன் றிலேனுய்ந் திருந்தேன்
தக்க தேநல்ல தாயைப்பெற் றாயே. (ம)

(72) மல்லை மாநகர்க் கிறையவன் றன்னை
வான்செ லுத்திவந் தீங்கணை மாயத்
தெல்லை யில்பிள்ளை செய்வன காணாத்
தெய்வத் தேவகி புலம்பிய புலம்பல்

---

கன்றினால் விளவெறிந்தது, கன்றுருக்கொண்டு எதிர்த்த அசுரனைக் கரத்தாற் பிடித்து, வேறோர் அசுரவுருக்கொண்டுநின்ற விளாமரத்தின் கனிகள் உதிர எறிந்து அவ்விருவரையும் முடித்த சரிதத்தை. காளியன்தலை மிதித்தது, "நஞ்சுமிழ் நாகங்கிடந்த நச்சுப் பொய்கைபுக்கு, அஞ்சப் பணத்தின்மேற் பாய்ந்திட் டருள்செய்த" வரலாறு. 'இவற்றைக் கேட்டவளவே மகிழ்ந்த நான் காணுமாறும் செய்தருளாயோ' என்று இரங்கியபடி.

71. பேய்ச்சி – பேயான பூதனை; இவள், உதிரம் வற்றவும், நார்போல நரம்பு வெளிப்படவும், உடல்கருகி உயிருகவும் முலை சுவைத்து என்க. சுழி – வட்டமான. அருள்செய்தது யசோதையார்க்கு. கஞ்சன் – மாமனான அசுரன். ஒருத்தி நஞ்சூட்டிய முலைத்தாயாக வந்து ஒழிந்தாள்; நானொருத்தி பெற்றுவைத்தும் வெற்றுமுலையுடன் வாழ்கின்றேன்; இருவரும் தாயராகார்; முலைபெற்ற பயனைப் பெற்ற யசோதையே நற்றாய் என்றவாறு.

72. மல்லை – வளம்; 'மல்லைமாமுந்நீர்' என்றார் கலியரும். இனி மல்லை (– மல்லரையும்), மாநகர்க்கு இறையவன்றன்னை(– அம்மல்லரை ஏவிய) மதுரைக் கரசனான கஞ்சனையும் என்று செவ்வெண் தொக்கதாக்கிப் பொருள் கொள்ளினுமாம். ஈங்கு – தன்பால். எல்லையில் மாயத்துப்பிள்ளை என்க. செய்வன–செய்த செயல்கள், கஞ்சவதத்தின் பின்பே கண்ணபிரான் தன்பெற்

கொல்லி காவலன் மாலடி முடிமேற்
கோல மாங்குல சேகரன் சொன்ன
நல்லி சைத்தமிழ் மாலைவல் லார்கள்
நண்ணு வாரொல்லை நாரண னுலகே. (௰௧)

---

## எட்டாம் திருமொழி

### மன்னுபுகழ் *

தரவுகொச்சகக் கலிப்பா.

(73) மன்னுபுகழ்க் கோசலைதன்
மணிவயிறு வாய்த்தவனே
தென்னிலங்கைக் கோன்முடிகள்
சிந்துவித்தாய் செம்பொன்சேர்
கன்னிநன்மா மதில்புடைசூழ்
கணபுரத்தென் கருமணியே
என்னுடைய இன்னமுதே
இராகவனே தாலேலோ. (௧)

---

ரோரைக் கண்டனன் என்பது சரிதம். மாலடி முடிமேல் கோலமாங் குலசேகரன் – விஷ்ணுபாத சேகரனை சேர குலசேகரன் என்றவாறு. மாலை – திருப்பதிகம்.

* கண்ணபிரானது பிள்ளைமைத் திருவிளையாடல்களில் ஈடுபட்ட ஆழ்வார், இராமாவதாரத்தில், நற்றாயான கோசலையார் பெற்ற பேற்றையும் மற்ற வீரச்செயல்களையும் நினைந்து அவ் இராமபிரானது இளமைப் பருவத்தைத் தாலாட்டு முகத்தாற் கொண்டாடுவன, இத் திருமொழிப் பாசுரங்கள்.

73. வயிறு வாய்த்தல் – கருவிற்றங்கி அவதரித்தல். முதலடியால் இராமபிரானது அவதாரமும், இரண்டாமடியால் அவ் வவதாரப்பயனும்

(74) புண்டரிக மலரதன்மேற்
புவனியெல்லாம் படைத்தவனே
திண்டிறலாள் தாடகைதன்
உரமுருவச் சிலைவளைத்தாய்
கண்டவர்தம் மனம்வழங்குங்
கணபுரத்தென் கருமணியே
எண்டிசையும் ஆளுடையாய்
இராகவனே தாலேலோ. (உ)

(75) கொங்குமலி கருங்குழலாள்
கோசலைதன் குலமதலாய்
தங்குபெரும் புகழ்ச்சனகன்
திருமருகா தாசரதீ
கங்கையினும் தீர்த்தமலி
கணபுரத்தென் கருமணியே
எங்கள்குலத் தின்னமுதே
இராகவனே தாலேலோ. (௩)

---

கூறப்பட்டன. கணபுரம் — திருக்கண்ணபுரம் என்ற சோணாட்டுத் திருப்பதி.

74. புண்டரிக மலரதன்மேல் — திருவுந்தித் தாமரைமூலமாக. தாடகை—இயக்கியாயிருந்து அகத்திய சாபத்தால் அரக்கியாய்க்கொடுமையிழைத்துவந்தவள். இராமவதாரத்தில் நிகழ்ந்த முதல் வீரச்செயல் இவள்வதமாகும். 'தாடகைதன் னுரமுருவி' என்றார் கம்பரும். மனம் வழங்கும் — வேறிடத்துச் செல்லாது உள்ளம் ஈடுபடும்.

75. கொங்கு — நறுமணம். திருமருகன் — அழகிய மணாளப்பிள்ளை: தாசரதி — தசரதபுத்திரன். இராகவன் — இரகுவின் வழித்தோன்றல். கங்கையினும் புனிதமலிந்த தீர்த்தங்களுடைய கண்ணபுரம் என்க. எங்கள் குலம் — க்ஷத்திரியகுலம்; சூரியவமிச மெனினுமாம். சேரவேந்தரைச் சூரிய குலத்தவராகவும் கூறுவர். (தொல் பொரு, பேராசிரியர் உரை, சாஸனம்)

(76) தாமரைமேல் அயனவனைப்
படைத்தவனே தயரதன்றன்
மாமதலாய் மைதிலிதன்
மணவாளா வண்டினங்கள்
காமரங்கள் இசைபாடும்
கணபுரத்தென் கருமணியே
ஏமருவும் சிலைவலவா
இராகவனே தாலேலோ. (௪)

(77) பாராளும் படர்செல்வம்
பரதநம்பிக் கேயருளி
ஆராவன் பிளையவனோ
டருங்கானம் அடைந்தவனே
சீராளும் வரைமார்பா
திருக்கண்ண புரத்தரசே
தாராரும் நீண்முடியென்
தாசரதீ தாலேலோ. (௫)

(78) சுற்றமெலாம் பின்தொடரத்
தொல்கானம் அடைந்தவனே
அற்றவர்கட் கருமருந்தே
அயோத்திநகர்க் கதிபதியே

---

76. அயனவன், அவன் உலகறிசுட்டு; அயனாகிய பெரியோன் என்க. மைதிலி – மிதிலையரசன் திருமகளான பிராட்டி. காமரங்கள் – பண்வகை.

77. 'பரதநம்பி' – நம்பி என்பது உத்தமகுணங்கள் நிறைந்தோன் என்னும் பொருளது. யாவரும் விரும்பத்தக்கோன் எனினும் அமையும்; 'நம்பு நசையாகும்' என்பது தொல்காப்பியம்; வீடணநம்பி, குகநம்பி என்பனவும் இப்பொருள. இளையவன் – இலக்குமணர்.

78. இராமபிரானது பிரிவுக்காற்றாமல் அயோத்திமக்கள் ஒருசேர அவன்பின் வனந்தொடர்ந்த வரலாறு முதலடியிற் கூறப்பட்டது; "அருங்

கற்றவர்கள் தாம்வாழும்
கணபுரத்தென் கருமணியே
சிற்றவைதன் சொற்கொண்ட
சீராமா தாலேலோ. (௬)

(79) ஆலினிலைப் பாலகனாய்
அன்றுலகம் உண்டவனே
வாலியைக்கொன் றரசிளைய
வானரத்துக் களித்தவனே
காலின்மணி கரையலைக்கும்
கணபுரத்தென் கருமணியே
ஆலிநகர்க் கதிபதியே
அயோத்திமனே தாலேலோ. (௭)

(80) மலையதனால் அணைகட்டி
மதிளிலங்கை அழித்தவனே
அலைகடலைக் கடைந்தமரர்க்
கமுதருளிச் செய்தவனே
கலைவலவர் தாம்வாழும்
கணபுரத்தென் கருமணியே
சிலைவலவா சேவகனே
சீராமா தாலேலோ. (௮)

---

கானடைந்த அருந்திறல் பிரிந்த அயோத்திபோல" என்றார் இளங்கோவடிகளும். அற்றவர் — பற்றற்றோர். சிற்றவை — சிறிய தாயான கைகேயி.

79. அன்று — உலகமுடிவான பேரூழிக் காலத்தில். இளைய வானரம் — சுக்கிரீவன். கால் — காவிரிக்கால்; காற்றுமாம். காலால் மணி அலைக்கும் என்பது செல்வமிகுதி குறித்தபடி; சாடு. ஆலிநகர் — திருவாலி திருநகரி.

80. ஒரு கடலை மலையிட்டுக் கடந்து இலங்கை யழித்தான்; ஒரு கடலை மலையிட்டுக் கடைந்து அமுதருளினான் — என எம்பெருமானது நிக்கிரகானுக்கிரகங்கள் கூறப்பட்டன. சேவகன் — பெரு வீரன்.

(81) தளையவிழும் நறுங்குஞ்சித்
தயரதன்றன் குலமதலாய்
வளையவொரு சிலையதனால்
மதிலிலங்கை அழித்தவனே
களைகழுநீர் மருங்கலரும்
கணபுரத்தென் கருமணியே
இளையவர்கட் கருளுடையாய்
இராகவனே தாலேலோ.

(82) தேவரையும் அசுரரையும்
திசைகளையும் படைத்தவனே
யாவரும்வந் தடிவணங்க
அரங்கநகர்த் துயின்றவனே
காவிரிநன் னதிபாயும்
கணபுரத்தென் கருமணியே
ஏவரிவெஞ் சிலைவலவா
இராகவனே தாலேலோ. (ம)

(83) கன்னிநன்மா மதில்புடைசூழ்
கணபுரத்தென் காகுத்தன்
தன்னடிமேல் தாலேலோ
என்றுரைத்த தமிழ்மாலை

---

81. தளை – கட்டு; குஞ்சியின் மிகுதியால் அவிழுமென்க. மணமிகுதியால் அவிழும் எனினுமாம். களை கழுநீர் மருங்கு அலரும் – உழவர் களையாகக் களைந்தெறிந்த செங்கழுநீரின் மலர் வயலருகே அலரும் என்று வளமிகுதி கூறியபடி. இளையவர்கட்கு – பரதநம்பி, சுக்கிரீவன், வீடணன் போன்ற தம்பியர்கட்கு; வலியற்று மெலிந்தவர்க்கு என்றும் கூறுவர்.

82. ஏ – அம்பு. வரி – வரிந்துகட்டப்பெற்ற. சிலைவலவன் – வல்வில்லி என்றபடி.

கொன்னவிலும் வேல்வலவன்
குடைக்குலசே கரன்சொன்ன
பன்னியநூல் பத்தும்வலார்
பாங்காய பத்தர்களே. (௮௩)

---

## ஒன்பதாம் திருமொழி

### வன்றாளினிணை *

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

(84) வன்றாளி னிணைவணங்கி வளநகரந்
தொழுதேத்த மன்ன னுவான்
நின்றாயை அரியணைமே லிருந்தாயை
நெடுங்கானம் படரப் போகு

---

83. கன்னி மதில் — அழிவில்லா மதிலரண். கொல் நவிலும் — கொலைத்தொழில் பயின்ற. வேல்வலவன் குடைக் குலசேகரன் —வீரம் நியாயம் தியாகம் என்ற அரசியல்புகள் மூன்றுமுடையான் என்றவாறு.

* மேற்கூறியவாறு இராமாவதாரத்தில் ஈடுப்பட்ட ஆழ்வார், கண்ணனது குழவித் திருவிளையாடல்களைக் காணும்பேறு தேவகியார்க்கு வாய்க்காததுபோல, இராமனது இளமைச் செயல்களைக் காணும்பேறு தசரதற்கு வாய்க்காமையை நினைந்து, தன் திருமகன் காடுநோக்கிச் சென்றபிரிவாற்றாமல் அச் சக்கரவர்த்தி புலம்பியவாற்றைக் கொண்டுமொழிவன, இத் திருமொழிப் பாசுரங்கள்.

84. வன்றாள் — தாளுக்கு வன்மையாவது அடைந்தாரை எந்நிலையினும் காத்தலாம், 'வண்புகழ் நாரணன் திண்கழல்' என்ப (திருவாய்மொழி). வளநகரம்— முடிசூட்டுக் கென்று சமைத்த அலங்காரவளங்கொண்ட அயோத்தி.

வென்றாளெம் இராமாவோ உனைப்பயந்த
கைகேயி தன்சொற் கேட்டு
நன்றாக நானிலத்தை யாள்வித்தேன்
நன்மகனே யுன்னை நானே. (க)

(85) வெவ்வாயேன் வெவ்வுரைகேட் டிருநிலத்தை
வேண்டாதே விரைந்து வென்றி
மைவாய களிறொழிந்து தேரொழிந்து
மாவொழிந்து வனமே மேவி
நெய்வாய வேனெடுங்கண் நேரிழையும்
இளங்கோவும் பின்பு போக
எவ்வாறு நடந்தனையெம் இராமாவோ
எம்பெருமான் என்செய் கேனே. (உ)

---

மன்னன் ஆவான் நின்றாயை — முடியளவே சூடவேண்டிய நிலையிற் காப்பு நாணும் பூண்டு நின்ற உன்னை என்றபடி. ஆவான் — ஆதற்கு. அரியணை — சிங்காதனம். அரியணைமேல் இருப்பாயை என்னவேண்டியதை 'இருந்தாயை' என்றதனால், 'சிங்காதனமேறியாயிற்று' என்று யாவரும் சொல்லும் படியிருந்த நிலைமை தோற்றும்; விரைவுபற்றி வந்த காலவழுவமைதி. நெடுங்கானம் என்பது கைகேயியின் கொடுமை தோன்றநின்றது. போகு — போகுக. 'போகுவென்றாள்' என உடம்படுமெய் பெற்றது, செய்யுளோசை நிறைத்தற்கு. உனைப் பயந்த கைகேயி — 'இராமனைப் பயந்த வெற்கு இடருண்டோ' என்று கூனியிடம் அன்பு காட்டிக் கூறியவள் என்றபடி. தன் சொல் — அவ்வாறு தாயென நின்றவளே கூற்றெனக் கூறிய கொடுஞ்சொல். நன்றாக ஆள்வித்தேன், எதிர்மறைப் பொருளில் வந்த குறிப்பெச்சம்.

85. வெவ்வாயேன் வெவ்வுரை கேட்டு — கொடிய வாக்கையுடையேனது கொடுஞ்சொற்களைக்கேட்டு. சம்பராசுரனுடன் தானடத்திய போரில் அரும்பணி யாற்றியுதவிய கைகேயிக்குத் தான் வரையறுக்காமல் அளித்த வாக்கினாற் கொடுமை விளைந்தமையின் 'வெவ்வாயேன்' என்றும், அவ்வரங்களைக் கொடுமையவாக்கிக் கைகேயி இராமனிடங் கூறியவை, அவன்முன் தான் நேரிற் கூறியவையல்லவாயினும் மறுக்கவியலாமையால், தன்னுரையாகவே கொண்டு என் 'வெவ்வுரை' என்றும் தசரதன் கூறினன் என்க.

(86) கொல்லணைவேல் வரிநெடுங்கட் கோசலைதன்
குலமதலாய் குனிவில் லேந்தும்
மல்லணைந்த வரைத்தோளா வல்வினையேன்
மனமுருக்கும் வகையே கற்றாய்
மெல்லணைமேல் முன் துயின்றாய் இன்றினிப்போய்
வியன்கான மரத்தின் நீழற்
கல்லணைமேற் கண்டுயிலக் கற்றனையோ
காகுத்தா கரிய கோவே. (௩)

(87) வாபோகு வாவின்னும் வந்தொருகாற்
கண்டுபோ மலராள் கூந்தல்
வேய்போலு மெழிற்றோளி தன்பொருட்டா
விடையோன்றன் வில்லைச் செற்றாய்
மாபோகு நெடுங்கானம் வல்வினையேன்
மனமுருக்கு மகனே யின்று
நீபோக வென்னெஞ்ச மிருபிளவாய்ப்
போகாதே நிற்கு மாறே. (௪)

---

சிறிது தாழினின்றாலும் 'அரசில் விருப்பம் போலும்' என்று கைகேயி கருதக் கூடு மாதலின் 'விரைந்து' எனப்பட்டது. "இப்பணி தலைமேற்கொண்டேன் மின்னொளிர் கானம் இன்னே போகின்றேன் விடையுங் கொண்டேன்" என்றார் கம்பரும். மா — குதிரை. நேரிழை — பிராட்டி. இளங்கோ — இலக்குமணர்.

86. கொல் — கொல்லன்தொழில்; கொல்லுதல் எனினுமாம்' மல் — வலிமை. கற்றனையோ — பழகியிருந்தனைபோலும். "குனிவில்... கற்றாய் — ஆயுதவழகாலும் தோளழகாலும் என்னெஞ்சை அழிக்கவே கற்றவனே', என்பது வியாக்கியானம்.

87. வா போகு...கண்டுபோ — சக்கரவர்த்தி பிரிவாற்றாது புலம்பி நின்றபோது உருவெளித் தோற்றமாக இராமனைக்கண்டு கூறியன. விடையோன் வில் — சிவதனுசு. மலர் ஆள் — மலர் சூடிய. வேய் — மூங்கில். மா — யானைமுதலிய விலங்கு. நிற்குமாறே — நிலைத்துள்ளது வியப்பே என்றபடி.

(88) பொருந்தார்கை வேனுதிபோற் பரல்பாய
மெல்லடிகள் குருதி சோர
விரும்பாத கான்விரும்பி வெயிலுறைப்ப
வெம்பசிநோய் கூர வின்று
பெரும்பாவி யேன்மகனே போகின்றாய்
கேகயர்கோன் மகளாய்ப் பெற்ற
அரும்பாவி சொற்கேட்ட அருவினையேன்
என்செய்கேன் அந்தோ யானே. (ஒ)

(89) அம்மானென் றுகந்தழைக்கு மார்வச்சொற்
கேளாதே யணிசேர் மார்வம்
என்மார்வத் திடையழுந்தத் தழுவாதே
முழுசாதே மோவா துச்சி
கைம்மாவின் நடையன்ன மென்னடையுங்
கமலம்போல் முகமுங் காணா
தெம்மானை என்மகனை யிழந்திட்ட
இழிதகையேன் இருக்கின் றேனே. (க)

(90) பூமருவு நறுங்குஞ்சி புன்சடையாப்
புனைந்துபூந் துகில்சே ரல்குற்
காமரெழில் விழலுடுத்துக் கலனணியா
தங்கங்க ளழகு மாறி

---

இனி நிற்குமாறு என் என்று இயைப்பினுமாம்; இங்கு ஏ – அசைநிலை.

88. பொருந்தார் – பகைவர். பரல் – கூரிய சிறுகற்கள். கூர – மிக. கேகயர்கோன் பெற்றது மகளுருவன்று, அரும்பாவியுருவே; அப்பாவி சொற்கேட்ட யானோ மாபெரும்பாவி என்றபடி.

89. அம்மான் – தந்தையே; அண்மைவிளி. அம்மா என்று பாடம். முழுசுதல் – இன்பத்துமூழ்குதல்; இழிதகையேன் – இழிந்த தன்மைகளையுடையேன்.

90. புன் சடையா – பேணாது விட்டமையால் பொலிவிழந்த சடையாக. அல்குல் – அரையிடம்; 'அணியல்குல் புடை பெயர' என்றார் பெரி

ஏமருதோ வென்புதல்வன் யானின்று
செலத்தக்க வனந்தான் சேர்தல்
தூமறையீர் இதுதகவோ சுமந்திரனே
வசிட்டனே சொல்லீர் நீரே. (எ)

(91) பொன்பெற்ரு ரெழில்வேதப் புதல்வனையுந்
தம்பியையும் பூவை போலும்
மின்பற்ரு நுண்மருங்குல் மெல்லியலென்
மருகியையும் வனத்திற் போக்கி
நின்பற்ருல் நின்மகன்மேற் பழிவிளைத்திட்
டென்னையுநீள் வானிற் போக்க
என்பெற்ருய் கைகேயி யிருநிலத்தி
லினிதாக விருக்கின் ருயே. (அ)

(92) முன்ஞெருநாள் மழுவாளி சிலைவாங்கி
அவன்தவத்தை முற்றுஞ் செற்ருய்
உன்னையுமுன் னருமையையும் உன்மோயின்
வருத்தமுமொன் ருகக் கொள்ளா

---

யாழ்வாரும். விழல் – ஒருவகைப் புல்; விசுவாமித்திரம் என்ப. வேருென்றற்கும் உதவாத அப்புல்லைக் காமரெழில் என்றது விபரீத இலக்கணையாம். ஏமரு – ஏமம் மருவு; ஏமம் – காத்தளிக்கை. மூப்புற்ற நிலையில் யான் தவம் புரியச் செல்லற்குரிய காட்டில் என் அருமைத் திருமகன் புகும்படி, தருமமூர்த்திகளான உங்கள் காலத்தில் நடப்பது விபரீதமே என்றபடி.

91. பொன்பெற்ருர் –'தன்யர்'என்று எல்லாரும் சொல்லும்படியுள்ள அந்தணரது வேதம் என்பது வியாக்யானம். இனி, பொன்போற் புதல்வனைப் பெற்ருர் என்று பிறர் கொண்டாடும் பொலிவைப் பெற்றிருந்த என்னுடைய வேதமகனையும் என்றும் ஆம்; "பொன்போற் புதல்வற் பெருஅ தீரும்" என்ப (புறம்). பூவை – நாகணவாய்ப்புள்; பேச்சினிமையுடையது. பற்ரு – ஒப்பாகாத. நின்பற்ருல் – உன் பேராசையால். ஒருபாவமுமறியாத பரதன்மேல் அவனே இவ்விளைவிற்குக் காரணமானவன் என்ற பழியை விளைத்து. என் பெற்ருய் – எப்பயனை அடையப் போகின்ருய்.

தென்னையுமென் மெய்யுரையு மெய்யாகக்
கொண்டுவனம் புக்க எந்தாய்
நின்னையே மகனாகப் பெறப்பெறுவேன்
ஏழ்பிறப்பும் நெடுந்தோள் வேந்தே. (௬)

(93) தேனகுமா மலர்க்கூந்தற் கோசலையுஞ்
சுமித்திரையுஞ் சிந்தை நோவக்
கூனுருவிற் கொடுந்தொழுத்தை சொற்கேட்ட
கொடியவடன் சொற்கொண் டின்று
கானகமே மிகவிரும்பி நீதுறந்த
வளநகரைத் துறந்து நானும்
வானகமே மிகவிரும்பிப் போகின்றேன்
மனுகுலத்தார் தங்கள் கோவே. (௰)

(94) ஏரார்ந்த கருநெடுமா லிராமனாய்
வனம்புக்க வதனுக் காற்றாத்
தாரார்ந்த தடவரைத்தோள் தயரதன்றான்
புலம்பியவப் புலம்பல் தன்னைக்
கூரார்ந்த வேல்வலவன் கோழியர்கோன்
குடைக்குலசே கரன்சொற் செய்த
சீரார்ந்த தமிழ்மாலை யிவைவல்லார்
தீநெறிக்கட் செல்லார் தாமே. (௰௧)

---

92. மழுவாளி—பரசுராமன். தவத்தை – தவத்தின் பயனை. மோய்—தாய். மெய்யாகக் கொண்டு – பொருளாகக் கருதி.

93. தேன் நகு – தேன் வெளித்தோன்றும். தொழுத்தை – பணி செய்வோள்; கூனி. கொடியவள் சொற்கோடல், நகர்துறத்தல், வேற்றிடஞ் செல்லல் என்ற மூன்றும் உனக்கும் எனக்கும் ஒவ்வுமாறு, நீ கானகஞ் செல்ல யான் வானகஞ் செல்வேன் என்றவாறு.

94. கோழியர் கோன் – உறந்தை நகரார்க்கு வேந்தன்.

## பத்தாம் திருமொழி

### அங்கணெடுமதில்

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

(95) அங்கணெடு மதில்புடைசூழ் அயோத்தி யென்னும்
அணிநகரத் துலகனைத்தும் விளக்குஞ் சோதி
வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்த் தோன்றி
விண்முழுதும் உயக்கொண்ட வீரன் றன்னைச்
செங்கணெடுங் கருமுகிலை இராமன் றன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்
எங்கடனி முதல்வனையெம் பெருமான் றன்னை
என்றுகொலோ கண்குளிரக் காணும் நாளே. (க)

---

* இராமபிரானிடம் ஈடுபாடு பெரிதுமுடைய ஆழ்வார், அப் பெருமான் அவதரித்தது தொடங்கித் தன் பரந்தாமம் எழுந்தருளிய வளவும் நிகழ்ந்த அருஞ்செயல்களை நினைந்து அவற்றைத் தில்லைத் திருச்சித்திரகூடத் துத் திருமால்பரமாக்கிக் கூறியவை, இத் திருமொழிப்பாசுரங்கள்.

95. உலகனைத்தும் விளக்குஞ் சோதி அணிநகரத்து விளக்காய்த் தோன்றி என்று இயையும். உலகிருள் நீக்கும் சந்திராதித்தர்க்கும் விளக்கந் தரும் பரஞ்சோதி என்பார், உலகனைத்தும் விளக்குஞ் சோதி என்றும், அப் பரஞ்சோதி தன் ஏகதேச அமிசங்கொண்டு அவதரித்த தென்பார், 'ஓர் விளக்காய்த் தோன்றி' என்றும், அவ்வாறு அவதரித்தது தீயோரழிவும் நல்லோர் வாழ்வும் கருதியென்பார், 'விண்முழுது முயக்கொண்ட' என்றும், அவ் வுய்யக்கொண்டதும், தன் சங்கற்பத்தாலன்றி வீரத்தால் என்பார், 'வீரன் றன்னை' என்றுங் கூறினர். இங்ஙனம் வீரமூர்த்தியாய் அவதரித்தவன் நீல மேகவண்ணனான இராமபிரான் என்க. எங்கள் தனிமுதல்வன் – யாங்கள் வழிபடும் பரம்பொருள் ; எங்கள் சூரியகுலத்துக்கு ஆதிமுன்னோன் எனினும் ஆம் ; 'எங்கள்குலத் தின்னமுதே' என்றார் முன்னும். தில்லை நகர் – தில்லை என்ற மரத்தாற் பேர்வாய்ந்த நகர். சித்திரகூடம்–தெற்றியிடமாக

(96) வந்தெதிர்ந்த தாடகைதன் உரத்தைக் கீறி
வருகுருதி பொழிதரவன் கணையொன் றேவி
மந்திரங்கொள் மறைமுனிவன் வேள்வி காத்து
வல்லரக்க ருயிருண்ட மைந்தன் காண்மின்
செந்தளிர்வாய் மலர்நகைசேர் செழுந்தண் சோலைத்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்
அந்தணர்க ளொருமூவா யிரவ ரேத்த
அணிமணியா தனத்திருந்த வம்மான் றானே. (உ)

---

அமைந்த கோயில்; "சித்திரகூடந் தெற்றியம்பலம்" என்பது திவாகரம். [தெற்றி—திண்ணை, மேட்டிடம்] திருத் தெற்றியம்பலம் என்றுள்ள வேறு திருப்பதியும் இங்கு ஒப்பிடத்தகும். மேட்டிட்மாக உள்ள இச் சித்திரகூடத்துக்குக் கீழிடமாக அமைந்தது சிற்றம்பலமாகும்; இதனைச் சிதம்பரம் என்பர். 'விளங்குஞ்சோதி' என்றும் பாடம். செய்யுளோசைபற்றிச் 'சித்ரகூடம்' என வடமொழிக் கூட்டெழுத்துருவில் நின்றது.

96. "ராக்ஷஸவதத்துக் கெல்லாம் அடியாகவும், ரிஷியுடைய (விசுவாமித்திரரது) அபிமதம் தலைக்கட்டுகைக்கும், தாடகா தாடகேயரை நிரஸித்தபடி சொல்லுகிறது" என்பது இப்பாசுர வியாக்கியான அவதாரிகை. [தாடகேயர் — தாடகை மக்கள்] "தாடகை தலைகடோறு, முடியுடை யரக்கற் கந்நாள் முந்தியுற்பாத மாகிப், படியிடை யிற்றுவீழ்ந்த வெற்றியம் பதாகை யொத்தாள்" என்ற கம்பர் வாக்கும் இங்கு ஒப்பிடத்தகும்.

உரம் — மார்பு. முனிவன் — விசுவாமித்திரர். வல்லரக்கர் — தாடகை புதல்வர்கள். மைந்தன் — வலியோன், இளைஞன். செந்தளிரிடையே பூ மலர்தலுடைய சோலை என்க; செந்தளிராகிய வாயையும் பூவாகிய நகையையுமுடையசோலை(ஆகியபெண்)என ஏகதேச உருவகமாக்கினுமாம். 'அந்தணர்கள் ஒரு மூவாயிரவர் — தில்லை மூவாயிரவர். "மூவாயிர நான்மறையாளர் நாளும் முறையால் வணங்க" என்றார் ஆலிநாடரும். திருமாற்கடியரான இவர்கள் போலவே, திருச் செங்குன்றூர்த் திருச்சிற்றாற்றிலும் "அமர்ந்தசீர் மூவாயிரவர் வேதியர்" அத் திருப்பதிப்பெருமானை வழிபட்டு வந்தமை ஒப்பிடத்தகும் (திருவாய்மொழி).

(97) செவ்வரிநற் கருநெடுங்கட் சீதைக் காகிச்
சினவிடையோன் சிலையிறுத்து மழுவா ளேந்தி
வெவ்வரிநற் சிலைவாங்கி வென்றி கொண்டு
வேல்வேந்தர் பகைதடிந்த வீரன் றன்னைத்
தெவ்வரஞ்சு நெடும்புரிசை யுயர்ந்த பாங்கர்த்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்
எவ்வருவெஞ் சிலைத்தடக்கை இராமன் றன்னை
இறைஞ்சுவா ரிணையடியே இறைஞ்சி னேனே. (௩)

(98) தொத்தலர்பூஞ் சுரிகுழற்கை கேயி சொல்லால்
தொன்னகரந் துறந்துதுறைக் கங்கை தன்னைப்
பத்தியுடைக் குகன்கடத்த வனம்போய்ப் புக்குப்
பரதனுக்குப் பாதுகமு மரசு மீந்து
சித்திரகூ டத்திருந்தான் றன்னை யின்று
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்
எத்தனையுங் கண்குளிரக் காணப் பெற்ற
இருநிலத்தார்க் கிமையவர்நே ரொவ்வார் தாமே (௪)

---

97. செவ்வரி—செந்நிறமான இரேகை. நற்கண்— கருணைநலம் வாய்ந்த கண்கள். விடையோன் — சிவபிரான். மழுவாளேந்தி — பரசுராமன்; பெயர். நற்சிலை — முன்பொருகால் திருமால் பெற்றிருந்த வில். அவ்வில்லைப் பரம் பரையிற் பெற்றுச் செருக்கிவந்த பரசுராமனை வென்று. "அவன் கைவில்லை வாங்கித் தான் திருவவதாரம்பண்ணின க்ஷத்திரிய குலத்துக்குப் பகைதீர்த்த வீரத்தையுடை யவனை" என்க. தெவ்வர் — பகைவர். புரிசை — மதில். எவ்வு அரு — அம்பிட்டு எய்தற்கு அரிய; எவ்வுதல் — பிரயோகித்தல், செலுத்துதல்; "தீக்கணை மேருவைக் கால்வளைத்து எவ்வினன்" (கம்பரா. ஊர்தேடு. 177). என்ப. எவ்வரி என்றும் பாடம். எ (— அம்புடன்கூடிய) வரி (— வரிந்துகட்டப் பெற்ற) என்பது இதன் பொருள்; முதல் குறுகியது.

98. தொத்து — பூங்கொத்து, கங்கைத்துறை என மாற்றுக. பாதுகம் — மரவடி. வனம்புக்க போது, சித்திரகூடமலை இடைத்தங்கிய

(99) வலிவணக்கு வரைநெடுந்தோள் விராதைக் கொன்று
வண்டமிழ்மா முனிகொடுத்த வரிவில் வாங்கிக்
கலைவணக்கு நோக்கரக்கி மூக்கை நீக்கிக்
கரனோடு தூடணன்றன் னுயிரை வாங்கிச்
சிலைவணக்கி மான்மறிய வெய்தான் றன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்
தலைவணக்கிக் கைகூப்பி யேத்த வல்லார்
திரிதலால் தவமுடைத்தித் தரணி தானே. (௫)

(100) தனமருவு வைதேகி பிரிய லுற்றுத்
தளர்வெய்திச் சடாயுவைவை குந்தத் தேற்றி
வனமருவு கவியரசன் காதல் கொண்டு
வாலியைக்கொன் றிலங்கைநக ரரக்கர் கோமான்

---

இடமேயாதலின், என்றும் காணும்படி அமர்ந்தசிலை இத் திருச்சித்திர கூடத்துக்குரியதாயிற்று என்பது மூன்றாமடியின் கருத்து. எத்தனையும் ஒவ்வார் என இயையும்.

99. வலிவணக்கும் தோள் – பிறர்வலியைத் தோற்பிக்கும் தோள் வலிமை. விராது – விராதன்; வடசொற்றிரிபு. வண்தமிழ்மாமுனி – அகத்தியர்; "தழற்புரை சுடர்க்கடவுள் தந்ததமிழ் தந்தான்" என்றார் கம்பர். அம்முனிவர் கொடுத்தது, பரசுராமனை வென்றுபெற்ற வில்லாம். கலைவணக்கு நோக்கரக்கி – கலைமானின் பார்வையைத் தோற்பிக்கும் கண்ணழகுடைய சூர்ப்பணகை; 'மானின்விழி பெற்றுமயில் வந்ததென வந்தாள்' என்றார் கம்பரும். சிலைவணக்கி – வில்லை வளைத்து. மான் மறிய – மாயமானான மாரீசன் மறிந்துவீழ.

100. "வீரன் செங்கணுந் தாக்கணங் கனையவள் தனத்திற் றைத்தவே" என்றபடி, தன்னை முதன்முதலாகப் பிணித்தவையாதலின், 'தனமருவு வைதேகி' எனப் பட்டது. "விஷ்ணோ: ஸ்ரீ" என்கிறபடியே பெருமானுக்குத்

சினமடங்க மாருதியாற் சுடுவித் தானைத்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்
இனிதமர்ந்த அம்மானை இராமன் றன்னை
ஏத்துவா ரிணையடியே ஏத்தி னேனே. (சா)

(101) குரைகடலை யடலம்பால் மறுக வெய்து
குலைகட்டி மறுகரையை யதனு லேறி
எரிநெடுவே லரக்கரொடு மிலங்கை வேந்தன்
இன்னுயிர்கொண் டவன்தம்பிக் கரசு மீந்து
திருமகளோ டினிதமர்ந்த செல்வன் றன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்
அரசமர்ந்தா னடிசூடு மரசை யல்லால்
அரசாக எண்ணேன்மற் றரசு தானே. (எ)

(102) அம்பொனெடு மணிமாட வயோத்தி யெய்தி
அரசெய்தி யகத்தியன்வாய்த் தான்முன் கொன்றான்
றன்பெருந்தொல் கதைகேட்டு மிதிலைச் செல்வி
உலகுய்யத் திருவயிறு வாய்த்த மக்கள்
செம்பவளத் திரள்வாய்த்தன் சரிதை கேட்டான்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்
எம்பெருமான் றன்சரிதை செவியாற் கண்ணாற்
பருகுவோ மின்னமுத மதியோ மன்றே. (அ)

---

தனமான பிராட்டி என்பதுமாம்" (வியாக்). வைதேகி – விதேகராசன் மகள். ஐவியரசன் – சுக்ரீவன். காதல் – நட்பு. சினம் – சீற்றம்.

101. குரை கடல் – முழங்கும் கடல். மறுக – சுழல. குலை – அணை. தம்பி – வீடணன். அரசமர்தல் – வீற்றிருத்தல். அடிசூடும் அரசு – பரதநம்பி போலப் பாதுகையைச் சூடும் அரசாட்சி.

102. தான் முன்கொன்றான் – தன்னால் முன்பு கொல்லுண்ட இராவணன். திருவயிறு வாய்த்த மக்கள் – பெற்றெடுத்த பிள்ளைகள்; குசலவர்கள்.

(103) செறிதவச்சம் புகன்றன்னைச் சென்று கொன்று
செழுமறையோ னுயிர்மீட்டுத் தவத்தோ னீந்த
நிறைமணிப்பூ ணணியுங்கொண் டிலவணன் றன்னைத்
தம்பியால் வானேற்றி முனிவன் வேண்டத்
திறல்விளங்கு மிலக்குமனைப் பிரிந்தான் றன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்
உறைவானை மறவாத உள்ளந் தன்னை
உடையோமற் றுறுதுயர மடையோ மன்றே. (௯)

(104) அன்றுசரா சரங்களைவை குந்தத் தேற்றி
அடலரவப் பகையேறி யசுரர் தம்மை
வென்றிலங்கு மணிநெடுந்தோள் நான்குந் தோன்ற
விண்முழுது மெதிர்வரத்தன் தாம மேவிச்
சென்றினிது வீற்றிருந்த அம்மான் றன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்
என்றுநின்ற னவனிவனென் றேத்தி நாளும்
இறைஞ்சுமினோ எப்பொழுதுந் தொண்டீர் நீரே. (௰)

---

103. சம்புகன்— நான்காம் வருணத்தவனாய்க் கடுந்தவம் புரிந்தவன். மறையோன் — அந்தணன் மகன். தவத்தோன் — அகத்தியன். இலவணன் — ஓர் அசுரன். முனிவன் — காலருத்திர மூர்த்தி என்ப.

104. சராசரங்களை — இயங்குதிணையும் நிலைத்திணையுமான்வற்றை இவை எல்லாவற்றையும், வைகுந்த மேற்றியதை— "புற்பா முதலாப் புல்லெறும்பாதியொன் றின்றியே, நற்பாலுக் குய்த்தனன்" என்று பெரியாருங்கூறுவர். அரவப்பகை — பெரிய திருவடி. தன் தாமம் — பரமபதம்; வைகுண்டம்.

(105) தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்
திறல்விளங்கு மாருதியோ டமர்ந்தான் றன்னை
எல்லையில்சீர்த் தயரதன்றன் மகனாய்த் தோன்றிற்
றதுமுதலாத் தன்னுலகம் புக்க தீறாக்
கொல்லியலும் படைத்தானைக் கொற்ற வொள்வாட்
கோழியர்கோன் குடைக்குலசே கரன்சொற் செய்த
நல்லியலின் றமிழ்மாலை பத்தும் வல்லார்
நலந்திகழ்நா ரணனடிக்கீழ் நண்ணு வாரே. (௰௧)

பெருமாள் திருமொழி முற்றும்.

---

105. மாருதி – அநுமான். தோன்றிற்று – அவதரித்தது; தொழிற் பெயர். பத்தும் – இப்பதிகப் பாடல் நீங்கப் பத்தும் என்க. எட்டுமுதல் பத்துவரையுள்ள பாடல்களிற் கண்ட வரலாறுகள், இராமாயண உத்தரகாண்டத்துக் கண்டவை.

உ

## சேரமான்பெருமாள் நாயனார்
## அருளிச்செய்த
# பொன்வண்ணத்தந்தாதி*

---

### கட்டளைக் கலித்துறை

(106) பொன்வண்ண மெவ்வண்ணம் அவ்வண்ண
மேனி பொலிந்திலங்கும்
மின்வண்ண மெவ்வண்ணம் அவ்வண்ணம்
வீழ்சடை வெள்ளிக்குன்றந்
தன்வண்ண மெவ்வண்ணம் அவ்வண்ண
மால்விடை தன்னைக்கண்ட
என்வண்ண மெவ்வண்ணம் அவ்வண்ண
மாகிய வீசனுக்கே. (க)

---

* பொன்வண்ணத் தந்தாதி என்பது 'பொன்வண்ணம்' என்ற தொடரை முதற்பாட்டின் முதற்சீராகக் கொண்டு அந்தாதித்தொடையாகச் சேரமான்பெருமாள் நாயனாரால் கட்டளைக்கலித்துறையில் அருளிச்செய்யப் பட்ட பிரபந்தமாகும். இந் நாயனார் தில்லைத் திருச்சிற்றம்பலஞ்சென்று, சிவ பெருமானைத் தரிசிக்க நேர்ந்தபோது, இவ் வந்தாதி பாடியருளினர் என்பர் சேக்கிழார். ஆத்திசூடி, கொன்றை வேய்ந்தோன் என்பனபோல, இப்பிர பந்தமும் நூன்முதற் றொடரால் பெயர்பெற்றதாகும்.

1. பொன், என்பது மங்கலமொழியாதலின் முன் வைக்கப் பெற்றது. 'பொன்னார் மேனியனே' என்பவாகலின், பொன்வண்ணம் என்றார். வீழ் சடை மின்னல்போல் ஒளிமயமான தென்றபடி. மால் விடை — பெரிய இடபம்; திருமாலாகிய இடபமெனினுமாம். மெய்யுணர்ந்த அடியாரது உள்ளங்களில் அவர்நினைந்த வடிவோடு விரைந்துசேறலின், தன்னைக்கண்ட என் வண்ணமே ஈசனுக்கும் உரியதென்றார். என்வண்ணம் என்றது என் மனம் நினைந்த வடிவமென்றபடி. ஈசனுக்கு மேனி பொன்வண்ணமாம், சடை மின்

(107) ஈசனைக் காணப் பலிகொடு
செல்லவெற் றேயிவளோர்
பேயனைக் காமுறு பிச்சிகொ
லாமென்று பேதையர்முன்
தாயெனை யீர்ப்பத் தமியேன்
தளரவத் தாழ்சடையோன்
வாவெனைப் புல்லவென் றுனிமை
விண்டன வாட்கண்களே. (உ)

(108) கண்களங் கஞ்செய்யக் கைவளை
சோரக் கலையுஞ்செல்ல
ஒண்களங் கண்ணுதல் வேர்ப்பவொண்
கொன்றையந் தாருருவப்
பெண்களங் கம்மிவள் பேதுறு
மென்பதோர் பேதைநெஞ்சம்
பண்களங் கம்மிசை பாடநின்
றுடும் பரமனையே. (௩)

---

வண்ணமாம்; விடை வெள்ளிக்குன்றவண்ணமாம் என வினைமுடிவுகொள்க. 'எவ்வண்ண மவ்வண்ணம்' என்ற நான்கு தொடரும் தேற்றங்குறித்து அணிபெற நின்றன.

2. "பிட்சாடனரான ஈசனைக் காணும்விருப்புடன் உணவாகிய பலியைக் கையிற்கொண்டு வெளிச் செல்ல இவள் துணிந்தது என்னே! பேயனொருவனைக் காமுறும் பித்துப் பிடித்தவள்போலும் இவள்' என்று தாய் என்னை உள்ளே இழுக்க யான் தளர்ந்து நின்றபோது, அவ்வீசன் என்னைத் தழுவுதற்கு வருவாயாக என்றான்; இந்நிலையிற் கண்கள் இமைதிறந்து விட்டன"— எனத் தான் கண்ட கனவுநிகழ்ச்சியைத் தோழி கேட்பத் தலைவி கூறியவாறு. இமை விள்ளுதல் – துயில்நீங்கிக் கண்விழித்தல். இது கனு நிலையுரைத்தல் என்னும் துறையாம்.

108. செவிலி கூற்று. அழகிய கண்கள் நீரைச் செய்ய (பெருக்க), அம் கண் எனமாறுக. கம் – நீர்; "கங்கணம் வேற்கண்ணிணையாற் கட்டினார்"

(109) பரமனை யேபலி தேர்ந்துநஞ்
கண்டது பன்மலர்சேர்
பிரமனை யேசிரங் கொண்டுங்
கொடுப்பது பேரருளாஞ்
சரமனை யேயுடம் பட்டு
முடம்பொடு மாதிடமாம்
வரமனை யேகிளை யாகுமுக்
கண்ணுடை மாதவனே. (௮)

---

என்பர் (பெருந்தொகை). கலையும் செல்ல – அரையுடையும் நழுவ. களம் – கண்டம். கண் நுதல்–கண்களாற் பொலிந்த நெற்றி. சொரிய, சோர, செல்ல, வேர்ப்ப, பரமனைப் பெண் பேதுறும் என முடியும். கொன்றை அம் தார் உருவப் பெண் – கொன்றைமாலை போலும் சுணங்கழகுடைய பெண்; 'குழலுஞ் சுணங்குங் கொன்றை காட்ட' என்பர் (திருவாரூர் மும்மணிக் கோவை. 1). உருவம்– அழகு (சீவக. 1953, உரை). இனிப் 'பரமனைக் கொன் றையந்தார் வேண்டிப் பெண் பேதுறும்' என்று பொருள் கொள்ளினும் ஆம். களங்கமில்லாள் ஆகிய பெண் என்க. பெண் பரமனிடம் பேதுறும் என்பது ஓர் பேதைப்பருவத்துக்குரிய கருத்தாலாம் எனமுடியும். நெஞ்சம்–கருத்து; ஆகுபெயர். 'பெண் களங்கம் இவள்' என்பது பாடமாயின்; பெண்ணாகிய இவள் பேதுறும் என்பது களங்கமாகும் எனப் பொருள்படும்.

109. பரமனை– அயல் வீடுகள். அவ்வீடுகளிற் பலியாக உணவுகளை ஆராய்ந்து பெற்றும், தான் உண்டது நஞ்சாகும். பன்மலர்– பன்ம மலர் என்பதன் திரிபு; பன்மம் – பதுமம்; யாவரும் கூறும் தாமரைமலர் எனினுமாம். உலகம் படைக்கும் பிரமனது சிரத்தை அருளின்றிக்கொண்டும் தான் கொடுப் பது பேரருளாம் என்பது இரண்டாமடியின் பொருள். ஐஞ்சர மன் – ஐங்கணைக் கிழவன்; காமத்தையூட்டு மவனை அனங்கனாக எரித்தும் தன்மேனியுடன் இடப்பாற் கொண்டது மாதாகும். தான் வசிப்பதற்குச் சிறந்த மனையாகக் கொண்டது ஆல், மா, பலாப் போன்ற மரக்கிளையாகும் என்க. 'பேரருளாஞ் சரமனையே' என்றும் பாடம். இவற்றால் ஈசனது நிக்கிரகாநுக்கிரகங்கள் அமைந்தவாறு சிறப்பிக்கப்பட்டன.

(110) தவனே யுலகுக்குத் தானே
முதருன் படைத்தவெல்லாஞ்
சிவனே முழுதுமென் பார்சிவ
லோகம் பெறுவர்செய்ய
வவனே யடல்விடை யூர்தி
கடலிடை நஞ்சமுண்ட
பவனே யெனச்சொல்லு வாரும்
பெறுவரிப் பாரிடமே. (௯)

(111) இடமால் வலந்தா னிடப்பா
றுழாய்வலப் பாலொண்கொன்றை
வடமா லிடந்துகி றேல்வல
மாழி யிடம்வலமா
னிடமால் கரிதால் வலஞ்சே
திவனுக் கெழினலஞ்சேர்
குடமா விடம்வலங் கொக்கரை
யாமெங்கள் கூத்தனுக்கே. (௰)

110. தவன் – தவமூர்த்தி. தவன் ஏய் – தவம் பொருந்திய (உலகுக்கு) எனினுமாம். உலகுக்கு எல்லாக் காரணமுமானவன் சிவனே என்ற இத்தத்துவ முணர்ந்தோர் சிவலோகத்தையும், அவனது குணம்புகழ்களைச் சொல்வோர் இப்பூலோகத்தையும் பெறுவர் என்பது கருத்து. விடையூர்தி – இடபவாகனனே! விளி. பவன் – யாவும் தோற்றுவிப்பவன்; சிவபிரான்.

111. சங்கர நாராயணரது உருவ வருணனை இப்பாட்டிற் கூறப்படுவது. இடப்பாகம் திருமால், வலப்பாகம் தான்; இடப்பால் துழாய் மாலை, வலப்பால் கொன்றைவடம்; இடப்பக்கம் பொற்றுகில், வலப்பக்கம் புலித்தோல்; இடப்பால் சக்கரம், வலப்பால் மான்; இடப்பாகத்தில் திருமாலினிறம் கரியது; வலப்பாகத்தில் இவன் நிறம் சேயது. அத்திருமால் கூத்துநிகழ்த்த இடப்பக்கங் கொண்டது குடம் ஆகும். எங்கள்கூத்தனை இவன் வலப்பக்கங் கொண்டது, அக்கூத்தில் முழக்கும் கொக்கரையாகும்,

(112) கூத்துக்கொ லாமிவ ராடித்
திரிவது கோல்வளைகள்
பாத்துக்கொ லாம்பலி தேர்வது
மேனி பவளங்கொலா
மேத்துக்கொ லாமிவ ராதரிக்
கின்ற திமையவர்த
மோத்துக்கொ லாமிவர் கண்டதிண்
டைச்சடை யுத்தமரே. (எ)

(113) உத்தம ராயடி யாருல
காளத் தமக்குரிய
மத்தம ராமதி மாடம்
பதிநலஞ் சீர்மைகுன்ற

---

என்றவாறு. திருமாலாடல் குடக்கூத்து எனப்படும்; 'குடங்களெடுத் தேற விட்டுக் கூத்தாட வல்லவெங் கோவே' என்பர் (திவ்.), கொக்கரை ஒருவாத்தியம்; ''கொக்கரை கைத்தாள மொந்தை சச்சரி'' என்பது தேவாரம்.

112. சடையுத்தமர் ஆடித்திரிவது, நாடகம் போலும். பலியாகத் தேர்ந்து கொள்வது, (தாருகாவனத்து) மகளிரின் கைவளைகளாகிய உணவு போலும். இவர்மேனி பவளநிறம் போலும், இவர் ஆதரித்து விரும்புவது, இமையவர்தம் துதி போலும். இவர் அருளிச்செய்தது வேதங்கள் போலும் எ-று; போலும் என்பவை ஒப்பில்போலிகளாம். பாத்து – சோறு, உணவு. ஏத்து– துதி; முதனிலைத் தொழிற்பெயர், இண்டை – ஒருவகை மாலை; தாமரை (திவா.) எனினுமாம்.

113. தம் அடியாரை உலகாளவைத்து, மத்தம் (ஊமத்தை), அரா, மதி என்பவற்றைத் தமக்கு உரியனவாகக்கொண்ட தலைவர். மாடம்பதி – மாடத்தின் அதிபர், அதிகாரி. (மாடம் – கோயில், மடம்) இதனதிபர் வகிக்கும் பதவியை ''மாடாபத்யம்'' என்பர். சேரர்குலத்தவரான கொச்சியரசரை மாடபதி, மாடபூபதி என்று கூறும் வழக்கு உண்டு. 'மாடம்பி' என்ற சிறப்புப்பெயர் அரசவகுப்பினர் சிலர்க்கு மலைநாட்டில் வழங்குவதும் இம் மாடம்பதி என்பதன் மரூஉவாம். இனி மத்தம், அரா, மதி, மாடு இவற்றை

வெத்தம ராயும் பணிகொள்ள
வல்ல விறைவர்வந்தென்
சித்தம ராவக லாதுட
னாடித் திரிதர்வரே. (அ)

(114) திரிதர்வர் கண்ணுள்ளு முள்ளத்தி
னுள்ளுந் திரிதரினு
மரிதவர் தன்மை யறிவிப்ப
தாயினு மாழிநஞ்சேய்
கரிதவர் கண்டம் வெளிதவர்
சாந்தங்கண் மூன்றொடொன்றும்
பரிதவர் தாமே யருள்செய்து
கொள்வர்தம் பல்பணியே. (கூ)

(115) பணிபதம் பாடிசை யாடிசை
யாகப் பனிமலரா
லணிபதங் கன்பற்கொ ளப்பனை
யத்தவற் கேயடிமை

---

யுடைய அழகிய பதி என்றும் ஆம். எத்தமராயும் — அடியார் விரும்பும் எந்தச் சுற்றமாகவும் (திருமேனிகொண்டு). சித்தமரா — சித்தத்தில் அமர்ந்து. சித்தம் அமரா என்பது திரிந்தது. உடன் ஆடித்திரிதர்வர் — உடன்கலந்து விளையாடித் திரிவர். திரிதர்வர் என்பதனுள், தர் என்ற துணைவினை உகரச்சாரியை பெற்றும் பெறாமலும் வழங்கும்; "பறித்ததொரு தலையோடே திரிதர்வேனை" என்ற அப்பர் தேவாரத்தொடருங் காண்க; உழிதர்தல், போதர்தல் என்பவும் இத்தன்மையன. [திரிதவரே என்பது அச்சுப்பதிப்பு].

114. என் கண்களினும் உள்ளத்தினும் அவ்வாறு திரிதந்தாலும் ஈசனது தன்மைகளை அறிதலரிது. ஆயினும் (சிறிதுகூறுவன்), அவரது நஞ்சுவய் (—பொருந்திய) கண்டங் கரியதாம். அவர் பூசியுள்ள சாந்தம் (—திருநீறு) வெளியதாம். கண்கள் மூன்றாக ஒன்றுதலுடையன. தம் பல்பணிகளையும் (ஐந்தொழில்களையும்) தாமே பெரிதும் செய்துகொண்டருளுவர் என்றவாறு.

115. என் துணையற்ற நெஞ்சமே! ஈசனது பாதங்களைப்

துணிபதங் காமுறு தோலொடு
நீறுட றார்த்துநல்ல
தணிபதங் காட்டிடுஞ் சஞ்சல
நீயென் றனிநெஞ்சமே. (௰)

(116) நெஞ்சந் தளிர்விடக் கண்ணீர்
ததும்ப முகமலர
அஞ்செங் கரதலங் கூம்பவட்
டாங்க மடிபணிந்து
தஞ்சொன் மலரா லணியவல்
லார்கட்குத் தாழ்சடையான்
வஞ்சங் கடிந்து திருத்திவைத்
தான்பெரு வானகமே. (௰க)

(117) வானக மாண்டுமந் தாகினி
யாடிநந் தாவனஞ்சூழ்
தேனக மாமலர் சூடிச்செல்
வோருஞ் சிதவல்சுற்றிக்

---

பணிவாயாக. அவனது இசை(புகழ்)களைப் பாடுக. இசையோடுகூடி ஆடுக. மலரால் அவனை அணிக. தவமூர்த்தியான அவனுக்கே அடிமையுறத் துணிக. தோலுடன் கூடிய உடலில் திருநீற்றைப் பூசி நற்பதவியே விரும்புக. நல்லன நிறைந்த சிவலோகத்தை அப்பெருமானே உனக்குக் காட்டுவன்; சஞ்சலத்தை ஒழிவாயாக எ-று. பதங்கன் — துவட்டா என்ற சூரியன்; இவன் பற்களைத் தகர்த்தது தக்கயாகத்தில். தணிதல் — நிறைதல்; 'தணிபொன் சொரியும்' என்புழிப் போல (தஞ்சைவா. கோவை. 25). நீ — நீப்பாய்; ஏவல்வினை.

116. தளிர்விட, ததும்ப, மலர, கூம்ப என்ற வினையெச்சங்கள் பணிந்து என்ற வினை கொண்டன. இவற்றினின்று பூஞ்செடியின் இயல்புகளும் தொனித்தல் காண்க. அட்டாங்கம் அடிபணிதல் — தலை, இருகரம், இருசெவி, இருபுயம், மோவாய் என்ற எட்டுறுப்பும் நிலத்துப்பதிய வணங்குதல். திருத்திவைத்தல் — உரிமையாம்படி நன்கமைத்தல்.

117. தேவராய்த் துறக்கவின்பங்களை நுகர்வோரும், மக்கட் பிறவியிற் பிறந்து இரந்துண்போரும், முறையே, சிவபிரானுக்கு அடியரானவரும்

கானகந் தேயத் திரிந்திரப்
போருங் கனகவண்ணப்
பானிற நீற்றற் கடியரு
மல்லாப் படிறருமே. (மஉ)

(118) படிறு யினசொல்லிப் பாழுட
லோம்பிப் பலகடைச்சென்
றிடறு தொழிது மெழுநெஞ்ச
மேயெரி யாடியெம்மான்
கடறு யினநஞ்ச முண்ட
பிரான்கழல் சேர்தல்கண்டா
யுடறு னுளபய னுவசொன்
னேனிவ் வுலகினுள்ளே. (மஙு)

(119) உலகா ளுறுவீர் தொழுமின்விண்
ணுள்வீர் பணிமினித்தம்
பலகா முறுவீர் நினைமின்
பரமனை டொன்றலுற்றீர்
நலகா மலரா லருச்சிமி
னுணர கத்துநிற்கு
மலகா முறுவீ ரரனடி
யாரை யகலமின்களே. (மச)

---

அவரல்லாத தீயோரும் என்பது தெளிக என்பது கருத்து. படிறர் — வஞ்சகர், தீயோர். மந்தாகினி — ஆகாய கங்கை. நந்தாவனம் — ஐந்தருவுள்ள உய்யானம்; காண்டாவனம் என்பதுபோல இடையகரம் நீண்டது; சிதவல் — கிழிந்த சீரை, கந்தை.

118. படிறு — பொய்ம்மை. கடை — மனைவாயில். இடறுது — தடுமாறுமல். எரியாடி — அழலேந்தி யாடுபவன்; 'எரியாடி தன்றில்லை' என்பது திருக்கோவை. (127). கடல் தாயின — கடலிற் பரவியெழுந்த. ஆவ— நல்லவற்றை.

119. ஆளுறுவீர் — ஆளவிரும்புவீர்; விளி, ஏனையவும் இவ்வாறே

(120) அலையார் புனலனல் ஞாயி
றவனி மதியம்விண்கா
ற்றலையா வுயிருடம் ! பாகிய
சோதியைத் தேர்குமினோ
தலையாற் சுமந்துந் தடித்தொண்
கொடித்தே ரரக்கனென்னே
கலையா னொருவிர ருங்ககில்
லாவிட்ட காரணமே. (௰௫)

(121) காரணன் காமரம் பாடவோர்
காமரம் பூடுறத்தன்
றூரணங் காகத் தளர்கின்ற
தையலைத் தாங்குவர்யார்

---

கொள்க. தொழுதல் — கைகூப்பி வணங்கல். பணிதல் — அடிவீழ்ந்து வணங்கல். பல — இம்மையின்பங்கள் பலவற்றையும். ஒன்றலுற்றீர் — சாயுச்சியம் பெற முயல்வீர். கா மலர் — நந்தவன மலர். காமுறுதல் — காமமுறுதல், விரும்புதல். நாள் — நாளும்; உம்மை தொக்கது. நரகத்துள் வீழ்க்கும் அல — நரகத்தில் வீழப்பெறச் செய்யும் தீச்செயல்களை. அலமின் — வருத்துங்கள்.

120. நீர், தீ, சூரியன், பூமி, சந்திரன், ஆகாயம், காற்று, உயிர் (இயமானன்) என்ற எட்டனையும் தன் சரீரமாகக் கொண்ட சோதி. சிவபிரானை 'அட்டமூர்த்தி', 'எட்டானமூர்த்தி' (தேவா) என்ப. அரக்கன் — இராவணன்; அவன் தலையாற் சுமந்தானாயினும், ஒரு சிறுவிரலின் அழுத்தந் தாங்கமுடியாத காரணம் தேர்குமினோ என்றது, இராவணன் கயிலையை எடுக்க முயன்றபோது அதனைத் தலையால் தாங்கினனாயினும், செருக்கால் நிகழ்த்தினமையின், ஈசன் விரலால் நசுக்குண்டு வருந்தலாயினன் எ-று. காரணம் தேர்குமினோ என இயையும். தடித்து — மின்; மின்போன்ற ஒளியுள்ள வீணைக்கொடி என்க. கலையான் — ஒரு கலையுள்ள பிறையைச் சூடியவன்; மானை ஏந்தியவன் எனினுமாம். விட்ட — செயலற்று ஒழிந்த. ['தொக்குமினோ' என்பது அச்சுப்பதிப்பு.]

121. காரணன் — எல்லாவற்றுக்கும் மூலகாரணமானவன். காமரம் — சீகாமரம் என்ற பண். காரணனானவன் பாட என்க; காரணனைப் பற்றிய

போரணி வேற்கண் புனற்படம்
　　போர்த்தன பூஞ்சுணங்கா
ரேரணி கொங்கையும் பொற்பட
　　மூடி யிருந்தனவே. (௰௬)

(122) இருந்தன மெய்தியு நின்றுந்
　　திரிந்துங் கிடந்தலைந்தும்
வருந்திய வாழ்க்கை தவிர்த்திடு
　　போகநெஞ் சேமடவாள்
பொருந்திய பாகத்துப் புண்ணியன்
　　புண்ணியல் சூலத்தெம்மான்
றிருந்திய போதவன் றானே
　　களையுநந் தீவினையே. (௰௭)

(123) தீவினை யேனைநின் றைவ
　　ரிராப்பகற் செத்தித்தின்ன
மேவின வாழ்க்கை வெறுத்தேன்
　　வெறுத்துவிட் டேன்வினையு

---

காமரத்தை அடியார் பாட எனினுமாம்; "கறையணி கண்டன் றன்னைக் காமரங் கற்றுமில்லேன்" (தேவா) என்ப. காமர் — காமன். ஊடுருவ — உடலிடையே உருவிச் செல்ல. தார் அணங்காக — அவனணிந்த மாலை வருத்தம் விளைப்பதாக. போர் அணி, வேலுக்கு அடை. புனற்படம் — நீராகிய போர்வை. சுணங்கு — தேமல். பொற்படம் மூடி — பசலை பரவி; பசலையைப் பொன்னிறமாகக் கொள்வர் (குறுந். 183). இது தோழிகூற்று.

122. போகத் தவிர்த்திடு— முற்றுநீங்க விலக்குக; வாழ்க்கையையும் போகங்களையும் தவிர்த்திடு எனினுமாம், புண் இயல் — புண்படச் செய்யும். ஆன்மாக்கள் தம்மைப் பக்குவமாக்கிக்கொள்ளுங் காலத்தே அவற்றின் தீவினைகளை அவனே நீக்குவன் என்றது, முற்றத்துறந்து மெய்யுணர்ந்தநிலையில் என்க.

123. நின்று செத்தித் தின்ன என இயையும். நின்று — நிலையாக. ஐவர் — ஐம்புலன்கள். செத்துதல் — அரிதல், சிறிது சிறிதாக வெட்டுதல்;

ஓவின துள்ளந் தெளிந்தது
கள்ளங் கடிந்தடைந்தேன்
பாவின செஞ்சடை முக்கண
ஞரணன் பாதங்களே. (௧௨௩)

(124) பாதம் புவனி சுடர்நய
னம்பவ னம்முயிர்ப்போங்
கோத முடுக்கை யுயர்வான்
முடிவிசும் பேயுடம்பு
வேத முகந்திசை தோண்மிகு
பன்மொழி கீதமென்ன
போத மிவற்கோர் மணிநிறந்
தோற்பது பூங்கொடியே. (௧௨௪)

---

மலைநாட்டுவழக்கு. வாழ்க்கையை வெறுத்தேன் வெறுத்து விட்டேன் — உலக வாழ்வை அருவருத்தேன், அதனை ஒழிசதேன் (அதனால்). ஓவினது — நீங்கியது. பாவின — பரவியுள்ள. ஆரணன் — வேதரூபியானவன்.

124. இது சிவபிரானது விராட்டுருவங் கூறியது. பூமி பாதமாம். சூரிய சந்திர அக்கினிகள் கண்களாம். பவனம் — (காற்று) உயிர்ப்பாம். கடல் ஆடையாம். வான் (பரமாகாசம்) முடியாம். விசும்பு மேனியாம். வேதம் முகமாம். திக்குக்கள் புயங்களாம். பலவாய மொழிகளும் கீதமாம். (இவ்வாறு பேருருக்கொண்டு நிற்கும் இப்பெருமானிடம் காதல்கொண்டு) இப் பூங்கொடிபோல்வாள் தன் அழகிய நிறத்தை இழப்பது என்ன மதி? (மதியீனமே) எ—று. போதம் — அறிவு; மலைநாட்டுவழக்கு. "மாநிலஞ் சேவடி யாகத் தூநீர், வளைநரல் பவ்வ முடுக்கை யாக, விசும்புமெய் யாகத் திசைகை யாகப், பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணாக, இயன்ற வெல் லாம் பயின்றகத் தடக்கிய, வேத முதல்வ னென்ப, தீதற விளங்கிய திகிரி யோனே" (நற்றிணை, கடவுள் வாழ்த்து) என்ற பெருந்தேவனார் பாடல் இதனுடன் ஒப்பிடத்தக்கது.

(125) கொடிமேல் விடையமுங் கோவணக்
 கீளுமோர் கொக்கிறகு
மடிமேற் கழலு மகலத்தி
 னீறுமை வாயரவு
முடிமேன் மதியு முருகலர்
 கொன்றையு மூவிலைய
வடிவேல் வடிவுமென் கண்ணுளெப்
 போதும் வருகின்றவே. (உ௰)

(126) வருகின்ற மூப்பொடு தீப்பிணிக்
 கூற்றம்வை கற்குவைகல்
பொருகின்ற போர்க்கொன்று மாற்றகில்
 லேன்பொடி பூசிவந்துன்
னருகொன்றி நிற்க வருளுகண்
 டாயழல் வாயரவம்
வெருகொன்ற வெண்மதி செஞ்சடை
 மேல்வைத்த வேதியனே. (உக)

---

125. கோவணக் கீள் — கோவணத்துடன் கூடிய கீள். கீள் — ஆடையின் கிழிவாய் அரைஞாண் போல இடையிற் கட்டுவது; 'கீளொடு கோவணம்', 'கோவணமுங் கீளும்' (தேவா.) என்ப. கொக்கிறகு, சிவபிரான் திருமுடியில் அணிவதொன்று; 'கொக்கினிற கணிந்தசின் முடி' என்பது திருக்கோவையார். அகலம் — மார்பு. முருகு — மணம்.

126. மூப்பும் பிணியும் கூற்றமும் வந்துகொண்டிருக்கின்றன. நாளும் நாளும் இவைபுரியும் போராட்டத்துக்கு ஆற்றகில்லேன். நின்பக்கல் நிற்கும்படி அருளுக எ-று. அரவையும் அதன் அச்சம் நீங்கப்பெற்ற வெண்மதியையும் என உம்மை விரிக்க. "பாம்பொடு திங்கள் பகைதீர்த் தாண்டாய்" என்ப.

(127) வேதியன் பாதம் பணிந்தேன்
பணிந்துமெய்ஞ் ஞானமென்னுஞ்
சோதியென் பாற்கொள்ள வுற்றுநின்
றேற்கின்று தொட்டிதுதா
னீதியென் றான்செல்வ மாவதென்
றேன்மே னினைப்புவண்டே
ரோதிநின் போல்வகைத் தேயிரு
பாலு மொழித்ததுவே. (௨௨)

(128) ஒழித்தேன் பிறவியை யூர்ந்தே
னுவகையை யோங்கிற்றுள்ள
மிழித்தே னுடம்பினை யேலேன்
பிறரிடை யிம்மனையும்
பழித்தேன் பழியே விளைக்கும்பஞ்
சேந்தியக் குஞ்சரமுந்
தெழித்தேன் சிவனடி சேர்ந்தேன்
இனிமிகத் தெள்ளியனே. (௨௩)

---

127. மெய்ஞ்ஞானம் என்னுஞ் சோதி – தத்துவஞானமாகிய பேரொளி. அந்த ஞானவொளி என்பால் நிரம்பிநின்ற நிலையில், ஈசன் என்னை நோக்கி 'இன்றுமுதல் இதுவே உனக்கு அமைந்த முறை' என்றான் 'எனக்கு அழியாச் செல்வம் இதுவே' என்றனன் யான். அதன்மேல், நான் அவன் என்ற வேற்றுமையுணர்வை அவ்வருட்பிரகாசம் முழுதும் ஒழித்துவிட்டது. தோழீஇ! அதனியல்பு நின்போல்வார் அறியற்பாலதோ" என்று சிவானுபவத்தால் தான்பெற்ற பேரின்பத்தைத் தலைவி தோழிக்குக் கூறியவாறு. இங்கு ஆன்மாவைத் தலைவியாகவும், ஆத்தரான அடியாரைத் தோழியாகவும் கொள்க.

128. அச் சிவானுபவத்தால் உண்டான பயன்களைக் கூறுகின்றார். உவகையை யூர்தல் – பேரின்பத்தில் திளைத்தல். 'ஊர்ந்தேன் அறுபகை' என்றும் பாடம். இங்கு ஊர்தல் – வென்றி மேற்கொள்ளலாம். ஓங்கிற்று – கிளர்ச்சியுற்றது. இழித்தல் – இழிவாகக் கொள்ளல். ஏலேன் – இரந்து கொள்

129) தெள்ளிய மாந்தரைச் சேர்ந்திலென்
 தீங்கவி பாடலுற்றேன்
ஒள்ளிய சொல்லும் பொருளும்
 பெறேனுரைத் தாருரைத்த
கள்ளிய புக்காற் கவிகளொட்
 டார்கட னஞ்சயின்றாய்
கொள்ளிய வல்லகண் டாய்புன்சொ
 லாயினுங் கொண்டருளே. (உச)

(130) அருளால் வருநஞ்ச முண்டுநின்
 றுயை யமரர்குழாம்
பொருளார் கவிசொல்ல யானும்புன்
 சொற்கள் புணர்க்கலுற்றேன்
இருளா சறவெழின் மாமதி
 தோன்றவு மேன்றதென்ன
வெருளா ததிர்சென்று மின்மினி
 தானும் விரிகின்றதே. (உரு)

---

ளேன். மனை – இல்வாழ்க்கை. பஞ்சேந்திரியங்களை யானையாக உருவகித்தல் மரபு; "உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான், வரனென்னும் வைப்பிற்கோர் வித்து" (குறள்)என்பவாதலின், சிவனடி சேர்ந்தேன் என்றார். செழித்தல் – உரப்பி யடக்குதல்.

129. தெள்ளிய – கல்வியறிவுகளால் தெளிந்த. தீங்கவி – இனிய பாடல். கவிபாடுதற்கு ஏற்ற சீரிய சொற்பொருள்களைப் பெற்றேனல்லேன். முன்பு பாடிய புலவர் பாடல்களினின்று, அவற்றைக் களவுசெய்து பாடப் புக்கால், அப்புலவர் இணங்காது தடுத்து விடுவர். கள்ளிய – களவுகாண. கொள்ளிய – ஏற்றுக் கொள்ளுதற்கு. நஞ்சை அயின்றவனாதலின் புன்சொலா யினும் என்கவிகளையும் ஏற்றருள்வாயாக எ—று.

130. வரும் நஞ்சு – கடலில் எழுந்த விடம், அருளால் உண்டு என இயையும். விண்புலவராதலின் பொருளார்ந்த கவியாயிற்று. மாமதி

(131) விரிகின்ற ஞாயிறு போன்றது
மேனியஞ் ஞாயிறுசூழ்ந்
தெரிகின்ற வெங்கதி ரொத்தது
செஞ்சடை யச்சடைக்கீழ்ச்
சுரிகின்ற காரிருள் போன்றது
கண்டமக் காரிருட்கீழ்ப்
புரிகின்ற வெண்முகில் போன்றுள
தாலெந்தை யொண்பொடியே. (உகூ)

(132) பொடிக்கின் றிலமுலை போந்தில
பல்சொற் பொருடெரியா
முடிக்கின் றிலகுழ லாயினுங்
கேண்மின்கண் மூரிவெள்ளங்
குடிக்கொண்ட செஞ்சடைக் கொண்டலங்
கண்டன்மெய்க் கொண்டணிந்த
கடிக்கொன்றை நாறுகின் றாளறி
யேன்பிறர் கட்டுரையே. (உஎ)

---

தோன்ற அதற்கிணையாக மின்மினியும் பறந்தொளிர்கின்றது; (அதுபோல) அமரர்சூழாம் நன்சொற்கவி சொல்ல யானும் புன்சொற் கவிதொடுக்கலானேன் என்க; எடுத்துக்காட்டுவமை.

131. கதிர் விரிகின்ற ஞாயிறு போலும் சிவபிரானது திருமேனி. அஞ்ஞாயிற்றைச் சூழ்ந்தொளிரும் கிரணங்கள் போலும் சடாபாரம். அச்சடையின் கதிர்க்கு ஆற்றாதோடிய காரிருள் போலும் நீலகண்டம். அவ்விருளின் கீழ் இயலும் வெண்மேகம்போலும் திருமேனியி லணிந்த திருநீறு என்றவாறு. பலவயிற் போலியுவமை.

132. செவிலி தன் சிறுமியான தலைவியின் காதன்மிகுதி கண்டு கலங்கிக் கூறியது இப்பாட்டு. முலைகள் அரும்பின வல்ல. பற்கள் முளைத்து வெளிப்போந்தனவல்ல. சொற்கள் பொருள் தெரியாத மழலைத் தன்மையன. கூந்தல் வளரப்பெறாமையால், கூட்டிமுடிக்கக் கூடியநிலை யில்லை. இங்ஙனமாயினும், பெருமான் அணிந்த கொன்றைமலரின் மணம் கமழப் பெறுகின்றாள். என்னே! இது கொண்டு அயலார்கூறும் கட்டுரைப்பொருள் இன்ன

(133) உரைவளர் நான்மறை யோதி
யுலகமெ லாந்திரியும்
விரைவளர் கொன்றை மருவிய
மார்பன் விரிசடைமேற்
றிரைவளர் கங்கை நுரைவளர்
தீர்த்தஞ் செறியச்செய்த
கரைவளர் வொத்துள தாற்சிர
மாலையெங் கண்டனுக்கே. (உ௩)

(134) கண்டங் கரியன் கரியீ
ருரியன் விரிதருசீர்
அண்டங் கடந்த பெருமான்
சிறுமான் தரித்தபிரான்
பண்டன் பரம சிவனோர்
பிரமன் சிரமரிந்த
புண்டங் கயிலன் பயிலார
மார்பனெம் புண்ணியனே. (உ௪)

---

தென்று தெரிந்திலேன் எ—று. பொடித்தல் — அரும்புதல்; "முலைபொடியா" என்பது திருக்கோவை. (204) மூரிவெள்ளம் — பெருநீரைக்கொண்ட கங்கை. கொண்டல் அம் கண்டன் — கார்மேகத்தை ஒத்த நீலகண்டன். கடி — நறுமணம். கட்டுரை — கட்டியுரைக்கும் அலர். கேண்மின்கள், வியப்புக் குறித்தது.

133. நான்மறை ஓதி — வேதநான்கும் ஓதுபவன்; 'நான்மறை யங்கமொ டோதிய நாவன்' (தேவா.) என்ப. ஓதித் திரியும் என வினையெச்சமாக்கி முடிப்பினுமாம். கங்கைத் தீர்த்தம் (வெள்ளம்) உள்ளடங்கக் கட்டப்பட்ட கரை போன்றுளது, சிவபிரான் முடியிலணிந்த தலைமாலை எ—று. 'தலைமாலை தலைக் கணிந்து' (தேவா.) என்பதனால் சிரமாலை முடியணியாதல் காண்க.

134. (புண்ணியன்) கண்டம் கரியன் — கண்டங்கறுத்திருப்பவன்; இடத்து நிகழ்பொருளின் தன்மை இடத்தின்மே னின்றது. ஈர் — உரித்த.

(135) புண்ணியன் புண்ணியல் வேலையன்
வேலைய நஞ்சனங்கக்
கண்ணியன் கண்ணிய னெற்றியன்
காரணன் காரியங்கும்
விண்ணியன் விண்ணியல் பாணியன்
பாணி கொளவுமையாள்
பண்ணியன் பண்ணியல் பாடல
னாடற் பசுபதியே. (௧௩௫)

(136) பதியார் பலிக்கென்று வந்தா
ரொருவர்க்குப் பாவைநல்லீர்
கதியார் விடையுண்டு கண்மூன்
றுளகறைக் கண்டமுண்டு

---

அண்டங்கடந்த பெருமான், 'அண்டமாரிரு ளூடு கடந்தும்பர், உண்டு போலு மோர் ஒண்சுடர்' (அப். தேவா.) என்பர். அண்டங்கள் தந்தபெருமான் எனினுமாம். பண்டன் – பழையோன். அயிலன் – சூலமுடையான். ஆரம் பயில் மார்பன் எனக.

135. ஆடற் பசுபதி – கூத்தனான சிவபிரான்; எழுவாய். வேல் ஐயன் – வேற்படை தாங்கிய தலைவன். வேலைய நஞ்சன் – கடலதாய நஞ்சை உட்கொண்டவன். அங்கக் கண்ணியன் – எலும்புகளை முடிமாலையாகத் தரித்தவன்; 'அங்கமாலை சூடு மையாறரே' (தேவா.) என்ப. கார் – மேகம். விண்ணியன் – ஆகாயரூபி. விண் இயல் பாணியன் – விண்ணில் இயக்கும் (கங்கை) நீரைத் தரித்தவன். பாணி – நீர். பாணி கொள உமையாள் பண்ணியன் பண் இயல் பாடலன் – உமாதேவி தாளத்தை அறுதியிடத் தான் பண்ணுடன் பாடலை இசைப்பவன். ஆடல்பாடல்களுடன் சிவபிரான் நிகழ்த்தும் கூத்தில், தேவி தாளந்தருத லுண்டென்பது, "நீ காபால மாடுங்கால் முத்துறழ் முறுவலாள் முற்பாணி தருவாளோ" (கலித். கடவுள்வாழ்த்து) என்பதனானும் அறிக. பண்ணும் பாடலும் தம்முள் இயைந்துள்ளமைபற்றிப் 'பண்ணியற் பாடலன்' என்றார்; "பண்ணென்னும் பாடற் கியைபின்றேல்' என்றார் வள்ளுவனாரும். 'நாடல் பசுபதியே' என்றும் பாடமோதுவார்.

136. நம் ஊரில் பிச்சைக்கென்று வந்த ஒருவர் பூண்டுவந்த கோலம்

கொதியார் மழுவுண்டு கொக்கரை
யுண்டிறை கூத்துமுண்டு
மதியார் சடையுள மாலுள
தீவது மங்கையர்க்கே. (௩௧)

(137) மங்கைகொங் கைத்தடத் திங்குமக்
குங்குமப் பங்கநுங்கி
யங்கமெங் குங்நெகச் சங்கமங்
கைத்தலத் துங்கவர்வான்
கங்கைநங் கைத்திரைப் பொங்குசெங்
கண்ணர வங்கள்பொங்கிப்
பங்கிதங் கும்மலர்த் திங்கடங்
கும்முடிப் பண்டங்கனே. (௩௨)

---

என்னே என்று தலைவி தன் ஆயத்தார்க்குக் கூறியது. பதி ஆர் பலி — ஊரிற் பெறும் விச்சை. கொதி — அழலுகை. கொக்கரை — வாத்தியவகை. இறை — சிறிது. மங்கையர்க்கு ஈவது மால் உளது — மகளிர்க்குக் கொடுக்கும் மயக்கமும் உண்டு. மால் — மயக்கந்தரும் மந்திரப் பொடி போல்வனவுமாம்; இங்கு ஆகுபெயர். பலவகை வேடத்துடனும் எருத்துடனும் ஊரிடை வந்து பிச்சையெடுக்கும் ஆண்டியியல்புகள் இதனுட் குறிப்பிக்கப்படுதல் காண்க. இது தலைவி கூற்று.

137. பண்டங்கன், நெக, நுங்கி, சங்கமும் (வளைகளும்) கவர்வான் என வினைகள் முடியும். பண்டங்கன் — பாண்டரங்கம் என்ற கூத்து நிகழ்த்துபவன்; மரூஉ; 'பண்டங்க வேடத்தன்' (தேவா) என்ப. பாண்டரங்கம், சிவனுடல்களில் ஒன்று (கலித். கடவுள்வாழ்த்து). கொங்கைத் தடத்து இங்கும் — முலைத்தடத்தில் அப்பப்பட்ட. இங்குதல் — பதிதல், அப்புதல் (களவழி. 41). குங்குமப்பங்கம் நுங்கி — குங்குமச் சேற்றை அளைந்து. நெக நுங்கி — நெகும்படி திளைத்துக்கலந்து: அங்கைத்தலத்துச் சங்கமும் கவர்வான் என இயைக்க. கங்கையின் அலையில் அரவங்கள் விளையாடி மகிழும் பங்கி (—கேசம்) என்க. பொங்குதல் — மகிழ்தல், மூளுதல். மலர்த்திங்கள் — முடிமலர்போன்ற சந்திரன். பங்கியில் முடிமலராகத் திங்கள் தங்கப்பெற்றவன், எ—று. இப்பாட்டு வழியேதுகை நயம்பெற அமைந்தது.

(138) பண்டங்கன் வந்து பலிதாவென்
றுன்பக லோற்கிடென்றேன்
அண்டங் கடந்தவ னன்னமென்
றுனய னூர்தியென்றேன்
கொண்டிங்கு ஐயம்பெய் யென்றுன்
கொடித்தே ரனங்கனென்றேன்
உண்டிங் கமைந்ததென் றுற்கது
சொல்ல வுணர்வுற்றதே. (௩௩)

(139) உற்றடி யாருல காளவோ
ருறு முறக்குமின் றிப்
பெற்றம தாவதென் றேறும்
பிரான்பெரு வேனெடுங்கட்
சிற்றடி யாய்வெண்பற் செவ்வா
யிவள்சிர மாலைக்கென் று
மிற்றிடை யாம்படி யாகவென்
னுக்கு மெலிகின்றதே. (௩௪)

---

138. தலைவி தன் கனவுநிலை கூறியது. பலி தா – உணவுப்பலியைக் கொடு. இதற்கு, பல் இதா(–பல் இந்தா)என்ற வேறுபொருள் கொண்டு, 'நீ தக்க யாகத்தில் உடைத்த பல்லைப் பகலோனுக்கே இடுக' என்றேன்; "பல்லிலனுகப் பகலைவென்றோன்" (திருக்கோவை) என்ப. அன்னம் (சோறு) என்று கேட்டவர்க்கு அயனூர்தி அஃது என்றேன். உன் ஐயம்பெய் (உன் பிச்சையைப் பெய்க) என்றார்க்கு, ஐ அம்பு எய் (–பஞ்சபாணங்களை எய்க) என்ற பொருள் கொண்டு அஃது அனங்கற்குரியது என்றேன். எனக்கு விருப்பமா யமைந்தது இங்கு உண்டு என்று ஈசன் கூறவும், அதற்கு விடைதருதற்கின்றித் துயில் நீங்கி உணர்வுற்றேன் என்றாள் எ–று.

139. பிரானது சிரமாலைக்கு இவள் மெலிகின்றது எற்றுக்கு? என முடியும். உலகு உற்று ஆள என இயைக்க; உற்று – உரித்தாகப்பெற்று. உறக்கு – உறக்கம். பெற்றம் – விடை. ஆவது – தமக்கு நல்லதாக. ஆய்

(140) மெலிக்கின்ற வெந்தீ வெயில்வா
யிழுதழல் வாய்மெழுகு
கலிக்கின்ற காமங் கரதல
மெல்லி துறக்கும்வெங்கூற்
றொலிக்கின்ற நீறுறு தீயொளி
யார்முக்க ணத்தர்மிக்க
பலிக்கென்று வந்தார் கடிக்கொன்றை
சூடிய பல்லுயிரே. (௯௫)

(141) பல்லுயிர் பாக முடறலை
தோல்பக லோன்மறல்பெண்
வில்லியோர் வேதியன் வேழ
நிரையே பறித்துதைத்துப்

---

பல் – சிறிய பற்கள் ; ஆய்தல் – நுணுகுதல் (தொல். சொல். 330) சிரமாலை– முடியில் அணிந்த கொன்றைமாலை. 'சடைமேலது கொன்றை' (39) என்பர். இற்று இடையாம்படி – இடைபோல ஒடுங்கும்படி. என்னுக்கு – எதன்பொருட்டு. இது தாய்கூற்று.

140: முக்கண் அத்தர் கொன்றை சூடிய (– சூடிக்கொண்டு) பலிக்கென்று வந்தார்; அதனால் தீ வெயில்வாய் இழுது (– வெண்ணெய்), அழல்வாய் மெழுகு இவைபோலக் காமம் பெருகியுருகுவதாயிற்று ; (இவரைக்கண்ட) மகளிர்பலருயிர்களையும் கொடிய கூற்றம் இரவில் தன்கைகளால் நீக்கிவிடும் என முடிக்க. மெலிக்கின்ற – மெலியச் செய்கின்ற. நீறுறு தீ – நீறு பூத்த நெருப்பு. நீருறு என்பது பாடமாயின் கங்கைதங்கிய முக்கணத்தர் என இயைக்க. 'கரதலநெல்லி' என்பது பழம்பாடம் போலும். இதற்கு 'கூற்று துறக்கும் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி' (மிகத் தெளிவாம்) என்பது பொருள் ; 'தடக்கையின் நெல்லிக்கனி' என்ப (திருவாச.).

141. பகலோன் (– சூரியன்), மறல் (யமன்), பெண் (உமை), வில்லி (காமன்), வேதியன் (பிரமன்), வேழம் — இவற்றின் பல், உயிர், பாகம், உடல், தலை, தோல் என்பவற்றைப் பறித்தும், உதைத்தும், புல்லியும், சுட்டும், அறுத்தும், உரித்தும் கொண்டவன் என நிரனிறையே கூட்டிப் பொருள்

புல்லியுஞ் சுட்டு மறுத்து
முரித்துங்கொண் டான்புகழே
சொல்லியும் பாடியு மேத்தக்
கெடுநங்கள் சூழ்துயரே. (௱௪௰௧)

(142) துயருந் தொழுமழுஞ் சோருந்
துகிலுங் கலையுஞ்செல்லப்
பெயரும் பிதற்று நகும்வெய்
துயிர்க்கும் பெரும்பனிகூர்ந்
தயரு மயர்விக்கு மூரி
நிமிர்க்குமந் தோவிங்ஙனே
மயரு மறைக்காட் டிறைக்காட்
டகப்பட்ட வாணுதலே. (௱௪௰௨)

(143) வாணுதற் கெண்ணநன் றன்று
வளர்சடை யெந்தைவந்தா
ணுதற் கெண்ணுள் பலிகொடு
சென்று நகுநயந்து

---

கொள்க. மறல் – மறலி என்பதன் றிரிபு. இவ்வாறு கொண்டவனது புகழை ஏத்த நங்கள் துயர் கெடும் என்க. நங்கள், மலைநாட்டுவழக்கு. ஏிரணி றையணி.

142. மறைக்காடு – வேதாரணியம் என்ற திருப்பதி. இறைக்கு ஆள் தகப்பட்ட – பெருமானுக்கு அடிமை மிகப்பெற்ற. துயர்தல் – துயரப் படுதல். கலை – மேகலை. வெய்துயிர்த்தல் – வெப்பமாக நெடுமூச்சுவிடுதல். அமர்வித்தல் – அமர்ந்திருக்கும்படி தன்னைச் செய்தல். மூரிநிமிர்த்தல் – சோம்பல் முறிக்க உடம்பை நெளித்தல். மயர்தல் – மயக்கங்கொள்ளுதல். தலைவியின் நிலைக்குத் தாய் இரங்கியவாறு.

143. பிட்சாடனராகப் பெருமான் வாயிற்கடை வந்தால் தன் இளமைப் பருவத்துக் கேற்ப நாணங்கொள்ளக் கருதாள். பலி (உணவு) கொண்டு சென்று அப்பிரானை நோக்கி நகுவாள். அவனை விரும்பி உபசரிக்க

பேணுதற் கெண்ணும் பிரமன்
திருமா லவர்க்கரிய
தாணுவுக் கென்றோ விராப்பக
லைந்திவ டாழ்கின்றதே. (௩௮)

(144) தாழுஞ் சடைசடை மேலது
கங்கையக் கங்கைநங்கை
வாழுஞ் சடைசடை மேலது
திங்களத் திங்கட்பிள்ளை
போழுஞ் சடைசடை மேலது
பொங்கர வவ்வரவம்
வாழுஞ் சடைசடை மேலது
கொன்றையெம் மாமுனிக்கே. (௩௯)

(145) முனியே முருகலர் கொன்றையி
னுயென்னை மூப்பொழித்த
கனியே கழலடி யல்லாற்
களைகண்மற் றென்றுமிலேன்

---

எண்ணுவாள். பெருந்தேவர்கட்கும் அறிதற்கரிய அத் தாணுவின்பொருட்டு இங்ஙனம் இவள் இரவும்பகலும் வருந்துவது என்னோ? என்க. அரியயர்க்கும் அரியானை நோக்கி இவள் வருந்தலாற் பயனில்லை என்றபடி. தாணு – அசைவற்றவன்; சிவபிரான்.

144. 'முனிகள் முனியே' (தேவா.) என்பவாகலின் 'மாமுனிக்கே' என்றார். அம்முனிக்குச் சடை தாழவுள்ளது, கங்கை அச்சடையின் மேலுளது, அக்கங்காதேவி அங்கே மகிழ்ந்து வாழ்கின்றாள், அச் சடைமேல் திங்கள் உண்டு, அத்திங்கட்குழவி (பிறை) அதனூடு சென்று இயங்காநின்றது, சீற்றங்கொண்ட அரவங்களும் அங்குண்டு, அவ்வரவுகள் மகிழ்ந்து வாழுமிடமாவது அச்சடை, அதன் மேலிடமாகக் கொன்றைமாலை சூடப்பெற்றுளது என்று சிவபிரான் கொண்ட தவத்திருக்கோலத்திற் சடாபாரம் சிறப்பிக்கப்பட்டவாறு.

145. மூப்பொழித்த கனி – ஔவையுண்ட நெல்லிக்கனி போல

இனியே லிருந்தவஞ் செய்யேன்
　　றிருந்தவஞ் சேநினைந்து
தனியேன் படுகின்ற சங்கட
　　மார்க்கினிச் சாற்றுவனே. (சரு)

(146) சாற்றுவன் கோயி றலையு
　　மனமுந் தவமிவற்று
லாற்றுவ னன்பெனு நெய்சொரிந்
　　தாற்றியஞ் சொன்மலரா
லேற்றுவ னீசன்வந் தென்மனத்
　　தானென் றெழுந்தலரே
தூற்றுவன் றோத்திர மாயின
　　வேயினிச் சொல்லுவனே. (சச)

---

அமிழ்தானவன். "சிந்தித் தெழுவார்க்கு நெல்லிக்கனியே", "நெல்லிக்கனி யைத் தேனைப் பாலை" என்பர் (தேவா. திருவாச.). அக்கனியை உண்டமை யால், உன்னைமறக்கும் முதுமைத்தளர்ச்சி எனக்கில்லை என்றபடி. களைகண் – பற்றுக்கோடு. அஞ்சே திருந்த நினைந்து தவஞ்செய்யேன் எனக் கூட்டுக. அஞ்சு – பஞ்சாக்கரம். இனியேல் – ஏல் அசை; இனி ஏல் (– ஏற்பாயாக) எனினுமாம். சங்கடம் – மனவேதனை; "ஐவர் சங்கடம்பலவுஞ் செய்ய" என்பர் (தேவா.).

146. கோயில் சாற்றுவன் – நீ எழுந்தருளியுள்ள திருக்கோயிற் பெருமைகளைப் பலர்க்கும் உரைப்பேன்; இனி கோயில், இவ்வந்தாதி பாடப் பெற்ற சிற்றம்பலமுமாம். தலை மனம் இவற்றால் தவம் ஆற்றுவன் எனக் கூட்டுக. தலையால் வணங்கலும் மனத்தால் இடைவிடாது நினைத்தலுமாகிய தவாக்கினியை அன்பெனும் நெய்சொரிந்து வளர்ப்பேன் என்றவாறு. சொன் மலராகிய விளக்கை ஏற்றுவன் என்க. அலர் தூற்றுவன் – பூக்களைச் சொரிந்து அருச்சிப்பேன்.

(147) சொல்லா தனகொழு நாவல்ல
சோதியுட் சோதிதன்பேர்
செல்லாச் செவிமரந் தேறித்
தொழாதகை மண்டிணிந்த
கல்லா நினையா மனம்வணங்
காத்தலை யும்பொறையா
மல்லா வவயவந் தானு
மனிதர்க் கசேதனமே. (சஉ)

(148) தனக்குன்ற மாவையஞ் சங்கரன்
றன்னரு ளின்றிப்பெற்றால்
மனக்கென்று நஞ்சிற் கடையா
நினைவன் மதுவிரியும்
புனக்கொன்றை யானரு ளாற்புழு
வாகிப் பிறந்திடினும்
எனக்கென்றும் வானவர் பொன்னுல
கோடொக்க வெண்ணுவனே. (சங)

---

147. சோதியுட்சோதி – சந்திரசூரியாதியர்க்கும் ஒளிதரும் பரஞ்சோதி. அச்சோதியின் பெயரைச் சொல்லாத நா இருப்புக் கொழுவாம்; கேளாச் செவி மரமாம்; தொழாத கை மண்ணாம்; நினையா மனம் கல்லாம்; வணங்காத் தலை பொறை (– சுமை) யாம்; பிறவுறுப்புக்களும் மக்கட்குச் சடப் பண்டங்களாம் எ–று. "கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான், தாளை வணங்காத் தலை" என்றவாறு, இறைபணிகட்கு ஆகா உறுப்புக்கள் யாவும் பயனற்றவை என்றபடி. சேதனனாகிய ஆன்மாவுடன் கூடப்பெற்றிருந்தும் அதனதன் பயனை அடையப் பெறாமை பற்றி, 'அசேதனமே' என்றார்.

148. ஈசனதருளால் அல்லாமல், இவ்வையத்தைத் தனக் குன்றங்களுடையதாகப் பெற்றாலும் அதனை நஞ்சினுங் கடைப்பட்டதாகவே கருதுவேன். அப்பெருமான் அருளால் புழுவின்பிறவி எடுக்கநேரினும் அதனைப் பொன்னுலகத்து வானவர் பிறவியோடு ஒப்ப மதிப்பேன் எ–று. கற்குன்ற

(149) எண்ண மிறையே பிழைக்குங்கொ
லாமிமை யோரிறைஞ்சுந்
தண்ணம் பிறைச்சடைச் சங்கரன்
சங்கக் குழையன்வந்தெ
னுண்ணன் குறைவ தறிந்து
மொளிமா நிறங்கவர்வான்
கண்ணு முறங்கா திராப்பக
லெய்கின்ற காமனுக்கே. (௪௯)

(150) காமனை முன்செற்ற தென்று
ளவளிவள் காலனென்னுந்
தாமநன் மார்பனை முன்செற்ற
தென்றுதன் கையெறிந்தாள்

---

மாகவன்றிப் பொற்குன்றங்களாக உலகைப் பெற்றாலும் என்பார், 'தனக் குன்றமா' என்றார். மனக்கு – மனத்தின் கண். எனக்கு – என்னளவில். வானவர் பொன்னுலகோடு, பொன்னுலகு வானவரோடு என மாறுக.

149. சங்கரன் என் உள்ளத்தில் நன்குறைவது அறிந்துவைத்தும் என்மேனியின் பேரொளியைக் காமன் தன் அம்பெய்து கவர்வானாயினன். அவனுக்கு இறைவன் திறத்திற் பிழைசெய்வதே குறிக்கோள் போலும் எ–று. முன்பு ஈசன்பால் குற்றமிழைத்து அனங்கனாகியும், அச் செற்றம் நீங்காது அவனையுளங்கொண்ட என்னையும் வருத்திச் சிவாபராதமே புரியலா யினன் என்று தலைவி கூறியவாறு. இறையே பிழைக்கும் எண்ணங்கொலாம் எனக் கூட்டுக. இறையே – ஈசன் திறத்தே. சங்கக் குழையன் – "சங்கவெண் குழையோர் காதிற்" கொண்டவன்.

150. தாருகாவனத்து மகளிர்மூவருள் ஒருத்தி கூற்று. இந்த அந்தணர் முதலிற் செற்றது காமனை என்று (எங்களுள்) அவள் கூற, இவள் 'அஃதில்லை, காலனைத்தான் இவர் முதலிற் செற்றது என்று தன் கையறைந்து உறுதி கூறினள். இவ்விருவர் வாதத்துள் உண்மை எது என்பதை அறிய வேண்டி (அவ்வந்தணரை அணுகி) 'ஐயரே! நீர் முதலிற் செற்றது காமனையா காலனையா' என்று உசாவினேன். 'இன்னது ஆம் இன்னதன்று' என்பதை

நாமுனஞ் செற்றதன் றுரையென்
றேற்கிரு வர்க்குமஞ்சி
யாமெனக் கிற்றில ரன்றெனக்
கிற்றில ரந்தணரே. (சுஒ)

(151) அந்தண ராமிவ ராரு
ருறைவதென் றேனதுவே
சந்தணை தோளியென் றூர்தலை
யாய சலவரென் றேன்
பந்தணை கையா யதுவுமுண்
டென்று ருமையறியக்
கொந்தணை தாரீ ருரையினென்
றேன்றுடி கொட்டினரே. (சுக)

---

அவ்விருவரையும் அஞ்சிச் சொல்லமாட்டாமல் அவர் தயங்கினர் எ—று. செற்றது என்ற வினைப் பெயர்கள், முறையே எரித்தும் உதைத்துங் கொன்ற செயல்களைக் குறிக்கும். முன்கொன்றது, பின்கொன்றது என்ற இரண்டும் கொலைத்தொழில்களே யாதலாலும், அவற்றுள் எதற்கு விடைதரினும் இரண்டும் செய்யப்பட்டனவாகவே அமைந்து, தாங்கொண்ட கோலத்துக்கு ஏற்காமையாலும் 'ஆமெனக் கிற்றிலர், அன்றெனக் கிற்றிலர்' என்றாள். காமாந்தகராகவும் காலாந்தகராகவும் உள்ள இவர், எவ்வுயிர்க்குஞ் செந்தண்மையே பூண்டொழுகும் அந்தணவேடத்தோடு இங்குவந்த நோக்கம், நம் உள்ளத்தையும் உயிரையும் வருத்துவதேயன்றிப் பிறிதன்று என்று மகளிர் அசதியாடிய வாறு.

151. இதுவும் அம்மகளிருள் ஒருத்தி கூற்று. 'அந்தணரே! நீர் ஆருடைய ஊரில் உறைவது' என்று யான் உசாவியதற்கு 'அதுவே ஊர்' என்று விடைகூறினர் (திருவாரூர் என்றபடி). 'நீர் தலையாய சலவர்' (— முதன்மையான தீம்பர்) என்று யான் கூற, அதற்குத் (தலையில் கங்கைநீரை யுடையவர் எனப் பொருள்கொண்டு) 'அதுவும் (தலையில்) உண்டு' என்றார். 'கொந்தணை தாரீர் உமையறிய உரைமின்' என்று யான்கூறப் (பூஞ்சேக்கை அளித்து உம்மை இன்னாரென்ப தறியச்சொல்லும் என்ற பொருள்கொண்டு)

(152) கொட்டுஞ் சிலபல சூழநின்
றூர்க்குங்குப் புற்றெழுந்து
நட்ட மறியுங் கிரீடிக்கும்
பாடு நகும்வெருட்டும்
வட்டம் வருமருஞ் சாரிகை
செல்லு மலர்தயங்கும்
புட்டங் கிரும்பொழில் சூழ்மறைக்
காட்டரன் பூதங்களே. (௧௫௨)

(153) பூதப் படையுடைப் புண்ணிய
ரேபுறஞ் சொற்கணும்மேல்
ஏதப் படவெழு கின்றன
வாலிளை யாளொடும்மைக்
காதற் படுப்பான் கணைதொட்ட
காமனைக் கண்மலராற்
சேதப் படுத்திட்ட காரணம்
நீரிறை செப்புமினே. (௧௫௩)

---

தம் கைத்துடியைக் கொட்டிக்கொண்டு மகிழ்ந்தார் எ–று. சந்து – சந்தனம். பந்து – விளையாடற் பந்து; 'பந்தணை விரலாள்' (தேவா.) என்ப.

152. திரு மறைக்காட்டில் உள்ள சிவகணங்களான பூதங்களின் இயல்புகளைக் கூறுவது இப்பாடல். கொட்டும் – பறைமுழக்கும். குப்புற்று – கவிழ்ந்து. மறியும் – வளைந்தாடும். கிரீடிக்கும் – விளையாடும். சாரிகை – இடமும் வலமுமாக மாறிவருகை. 'சாரணை' என்றும் பாடம்.

153. பெண்டிரிடம் காதல்புரிதற்கு நீர் தக்கவரல்லீர் என்ற கருத்தில் மகளொருத்தி கூறியது. புறஞ்சொற்கள் – புறம்புளோர் கூறும் பழிப்புரைகள். இளையாள் – உமாதேவி. காதற் படுப்பான் – காதலுறச் செய்தற்காக. இறை – சிறிது. மகளிர்நய மறியாத மூடர் என்பாள், 'பூதப்படையுடைப் புண்ணியரே' என்று விளித்தாள்.

(154) செப்பன கொங்கைக்குத் தேமலர்க்
கொன்றை நிறம்பணித்தான்
மைப்புரை கண்ணுக்கு வார்புனற்
கங்கைவைத் தான்மனத்துக்
கொப்பள வில்லா வொளிகிளர்
உன்மத் தமுமமைத்தான்
அப்பனை யம்மனை நீயென்
பெறுதுநின் றார்க்கின்றதே. (சுக)

(155) ஆர்க்கின்ற நீரு மனலு
மதியுமை வாயரவு
மோர்க்கின்ற யோகு முமையு
முருவு மருவும்வென்றி
பார்க்கின்ற வேங்கையு மானும்
பகலு மிரவுமெல்லாங்
கார்க்கொன்றை மாலையி னார்க்குட
னாகிக் கலந்தனவே. (௫௰)

---

154. பாங்கி சிறைப்புறமாகக் கூறியது. அன்னாய்! அப்பனை ஈசன் நின் கொங்கைத்தடத்துக்குத் தன் கொன்றைநிறத்தை அருளினன். நின் கண்கட்குக் கங்கைவெள்ளத்தையே வைத்தனன். உன் மனத்துக்குத் தான் சூடிய உத்தமமான உன்மத்தத்தையும் அமைத்தனன். இங்ஙனமாகவும், எது பெருமை பற்றி அப்பெருமானை நீ சினந்து ஆரவாரிப்பது? எ-று. கொன்றைநிறம் — சுணங்கு; "குழலுஞ் சுணங்குங் கொன்றை காட்ட" என்பர். 'ஒப்பளவில்லா ஒளிகிளர்' என்பது உன்மத்தத்தைக் குறிப்பால் இழித்தவாறு. உன்மத்தம் — ஊமத்தை, பித்து. அம்மனை — அன்னை; அண்மை விளி. 'அருவினையேன் பெற்ற அம்மனைக்கே' (திருக்கோவை) என அருமைபற்றித் தலைவியை இவ்வாறு அழைப்பர்.

155. கார்க் கொன்றையினார்பால் நீரும் அனலும், திங்களும் அரவும், தவயோகமும் உமைபாகமும், உருவும் அருவும், வேங்கையும் மானும், பகலும் இரவும் ஆகிய பகைப்பொருள் யாவும் ஒற்றுமையுடன் கலந்துள்

(156) கலந்தனக் கென்பலர் கட்டவிழ்
வார்கொன்றை கட்டரவார்
சலந்தனக் கண்ணிய கானக
மாடியோர் சாணகமும்
நிலந்தனக் கில்லா வகதிய
ளுகிய நீலகண்டத்
தலந்தலைக் கென்னே யலந்தலை
யாகி யழிகின்றதே. (ருசு)

(157) அழிகின்ற தாருயி ராகின்ற
தாகுல மேறிடுமால்
இழிகின்ற சங்க மிருந்த
முலைமேற் கிடந்தனபீர்

---

ளன எ-று. கார்க்கொன்றை — கார்காலத்துப் பூக்குங் கொன்றை; "கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்" (அகநா.) என்ப. "மங்கையோடிருந்தே யோகுசெய் வானை" என்றார் திருவிசைப்பாவினும். ஈசுவர சந்நிதானத்தின் முன் உலகப்பொருள் யாவும் தம்முள் வேற்றுமையற்றுக் கலந்து வாழ்வன என்றபடி.

156. தனக்கு (அணி) கலம் எலும்பு; சூடும்பூ கொன்றை; அரவு தோல்வார் என்க. கானகம் — மயானம். அக்காடன்றி ஒருசாண் பூமியிடமும் தனக்கில்லாத அகதியன் (புகலிடமில்லான்). விடமுண்ட கண்டனுய் இவ்வாறு அலைந்து திரிபவன்றிறத்தில் இவள் மனக்கலக்க முடையளாய் வாடுவதென்னே? எ-று. கட்டு அவிழ் — மொட்டு விரியும். வார் — நீண்ட. கட்டு அர — தான் கட்டும் அரவு. சலம் தனக்கு அண்ணிய — நடுக்கஞ்செய்தலைத் தன்பாற் பொருந்திய. ஒருசாண் நிலவகமும் என மாறுக. அகம் — உள்ளிடம். அலந்தலை — அலைந்துதிரிவோன்; துன்பம் (திவா.).

157. ஆகுலம் — மனவேதனை. மால் (மயக்கம்) ஏறிடும் என்க. சங்கம் — கைவளைகள். இருந்த முலை — நிலைபெற்ற தனங்கள். பீர் — பசலை

பொழிகின்ற கண்ணீர் புலர்ந்தது
வாய்கலை போனவந்தார்
மொழிகின்ற தென்னினி நான்மறை
முக்கண் முறைவனுக்கே. (கூஉ)

(158) முறைவனை மூப்புக்கு நான்மறைக்
கும்முத லேழ்கடலந்
துறைவனைச் சூழ்கயி லாயச்
சிலம்பனைத் தொன்மைகுன்றா
இறைவனை யெண்குணத் தீசனை
யேத்தினர் சித்தந்தம்பா
லுறைவனைப் பாம்பனை யாம்பின்னை
யென்சொல்லி யோதுவதே. (கூங)

---

விறம். வாய் புலர்ந்தது, கலை போன என்க. வந்தார் – தூதுசென்று வந்தவர்; (அவர்) மொழியக்கூடியது இனி என்ன உண்டு எ–று. ஆர் வந்து என்ன மொழிகின்றது இனி உண்டு எனினும் ஆம். முறைவன் – முறையில் (உலகை) நடத்துவோன்; யானையை நடத்தும் பாகரை 'முறைவர்' என்பதுங் காண்க (பெருங்கதை).

158. மூப்பு – பழைமை; பழைமை என்பதற்கும் நால்வேதங் கட்கும் முதலானவன் என்க. "எல்லார் யாக்கைக்கும் முன்னே தன்னிச்சை யாற் கொள்ளப்பட்ட திருமேனியையுடைய னுதலின்" 'மூப்புக்கும்... முதல்' என்றார். "மூப்பான் இளையவன்" என்றார் வாதவூரடிகளும் (திருக் கோவை. 212). எழ்கடலந் துறைவனை – ஏழுகடல்களையுந் துறைகளாகக் கொண்ட சத்த தீவங்கட்கும் உரியவனை; "ஏழுடையான் பொழில்" (திருக் கோவை) என்ப. எண்குணம் – தன்வயத்தனாதல் முதலிய சிவனெண்குணங் கள் (குறள்– 9, பரிமேலழகருரை). உறைவன் – உறைபவன். சித்தந் தம்பால்– மனத்தினிடம். பாம்பன் – நாகாபரணன். இவ்வகைகளாலன்றி வேறு என் சொல்லித் துதிக்கவல்லேம் எ–று.

(159) ஓதவ னுமை முரையவன்
பல்குண முன்னை விட்டேன்
போதவன் பின்னே பொருந்தவன்
வாழ்க்கை திருந்தச்சென்று
மாதவ மாகிடு மாதவ
மாவளர் புன்சடையான்
யாதவன் சொன்ன னதுகொண்
டொழியினி யாரணங்கே. (௯௪)

(160) ஆரணங் கின்முக மைங்கணை
யானக மவ்வகத்திற்
றோரணந் தோளவன் றேரக
லல்குறன் மைக்கண்வந்த

---

159. உடன்போக்கிற்கு ஒருப்பட்ட தலைவிக்குத் தோழி வழிப்படுத்து உரைத்தது:— ஆரணங்கே (தாய் தந்தை ஆயம் என்பார் பெயர் குணங்களைக் கூறுதலொழிந்து) புன்சடையான் நாமங்களை ஓதுக; அவன் பல்குணங்களையே உரைக்க. (பிரிவின்றியிருந்த யானும்) உன்னை நீங்கினேன். அவ்வீசன் பின்பே போதுவாயாக. அவன் வாழ்க்கையோடு திருத்தமாக நடந்தொழுகுக. இச் செயல்களே பெரிய தவப்பயனாகும். அப்பெருமான் யாதுசொன்னான் அதனையே இனிக் குறிக்கொண்டு மற்றவற்றை ஒழிக எ—று. மாதவம் ஆகிடு — மாதவப்பயன் உனக்கு ஆகுக எனினுமாம். இடு — ஒரு வியங்கோள் துணைவினை ; "இச் சேனை இடக்கிடு" என்றார் கம்பரும்.

160. தோழி கூற்று. (என் தோழியாகிய) இவ்வணங்கின் முகம் ஐங்கணைக் கிழவனது படைவீடாம். அவ்வீட்டுவாயிலில் நிற்கும் தோரணக் கால்களாம், இவள் தோள்கள்; (அம்மனைக்கு முன்னிறுத்திய) காமன் தேராகும் இவளல்குல் ; அங்கு மங்கலமாக முன்வைக்கப்பட்ட பூரணகும்பங்களாகும், இவள் தனங்கள் ; இவற்றை யாவருங் காணும்படி ஈசனடிகளில் வீழ்ந்து இவள் தொழுகின்றாள். இவ்வாறு தொழுங்கருத்து, அன்பு பற்றியதோ பகைமை பற்றியதோ அறிகிலேன் எ—று. "பூரணபொற்குடம் வைக்க... ......தோரணம் நீடுக" என மனைக்குரிய அலங்காரப் பொருள்களை வாதவூரடிகளும் கூறுதல் காண்க (திருக்கோவை). முகத்தை ஐங்கணையான்

பூரண கும்ப முலையிவை
காணப் புரிசடையெங்
காரணன் றூடொழு மன்போ
பகையோ கருதியதே. (௫௫)

(161) கருதிய தொன்றில்லை யாயினுங்
கேண்மின்கள் காரிகையாள்
ஒருதின மும்முள ளாகவொட்
டாதொடுங் காரொடுக்கப்
பொருதநன் மால்விடைப் புண்ணியன்
பொங்கிளங் கொன்றையின்னே
தருதிர்நன் றூயிடுந் தாரா
விடிற்கொல்லுந் தாழிருளே. (௫௬)

---

அகம் என்றது, அக்கணைக ளாந்தனோடும் ஒப்புமைகொண்ட உறுப்புக்கள் அங்குள்ளமை பற்றி; "வனசம் சூதம் அசோகம் முல்லை, குவளை காமன் கொலுமைங் கணையே" (பிங்.) என்ப; இவற்றுடன் ஒப்புடைய உறுப்புக்களை நோக்கிக் கொள்க. தொன்மைக்கண் வந்த – பழைமையாக மங்கலப் பொருளாகிய. காண – நிலத்தே உறுப்புக்கள் பதியத்தொழுதலை யாவருங் காணும்படி. காமாரியான சிவபிரானை அக்காமன் படைவீடாகவுள்ள இவள் தொழுவாளாயினும், 'தொழுதகை யுள்ளும் படையொடுங்கும்' என்றபடி பழம் பகைமை பற்றிய செயலாகவுமாம் என்று தோழி அதிசங்கை கொண்டு கூறியவாறு.

161. தாழ் இருள் – ஆழ்ந்துவரும் இரவிருள்; எழுவாய். இருளானது (ஈசன்பாற் காதல் கைகடந்த இவளை) இவ்வொருதினந்தானும் வாழும்படி ஒட்டாது. அதனால், அவன் சூடிய கொன்றையாகிய மருந்தினைக் கொணர்ந்தணிவீர்; அதனால் இவளுற்ற நோய் குணமாம். கொணரீராயின் இருளடித்து இவளுயிரை நீக்கிவிடும் என்று தோழி கூறியவாறு. இவளைக் கொல்லுங் கருத்து இருளுக் கில்லையாயினும், அதனியற்கை இவளையழிக்க வல்லது என்பார், 'கருதிய தொன்றில்லை யாயினும்' என்றாள். ஒடுங்கார் – பகைவர். பொருத புண்ணியன் என இயையும். பொருத மால்விடை எனினும் ஆம். நன்றூதல் – நோய்நீங்கிக் குணம்பெறுதல்.

(162) இருளார் மிடற்று விராப்பகல்
தன்னால் வரைமறையாற்
பொருளார் கமழ்கொன்றை யான்முல்லை
புற்றர வாடுதலாற்
றெருளார் மதிவிசும் பாற்பௌவந்
தெண்புனல் தாங்குதலால்
அருளாற் பலபல வண்ணமு
மாவர னுயினனே. (௬௭)

(163) ஆயின வந்தணர் வாய்மை
யரைக்கலை கைவளைகள்
போயின வாணிகர் கண்ணுறு
மைந்நீர் முலையிடையே

---

162. ஈசன் பல்வேறு உருவாகவும் உள்ளவர் என்று கூறுவது இப்பாட்டு. கறுத்த கண்டத்தால் இருளாவர். தம் திருமேனி நிறத்தாற் பகலாவர். வேதவுருவானமையால் மலையாவர். சூடிய கொன்றைமலரால் முல்லைநில மாவர். அரவுகள் விளையாடலால் புற்றுவர். சந்திரனையுடைமையால் விசும்பாவர்; புனலை (கங்கைநீரை) ஏற்றலாற் கடலாவர். இவ்வகையே தம்மருளாற் பலபல வடிவுகளாக அரன் ஆயினர் எ—று. வேதவுருவம் பற்றி வரையாவர் என்றது, வேதகிரி வேதாசலம் எனப்பட்ட திருக்கழுக்குன்றத்தைக் கருதி. "கழுக்குன்ற வாணனை...காதலித்தாள்" என்று அத்தலத்தை இவரே அடுத்துக்கூறுதலுங் காண்க (59); வேதவுருவினதாகக் கயிலையைக் கொள்ளினும் அமையும். இனி. 'வரை மறையால்' என்பது பாடமாயின், மானை ஏந்தலால் வரை (மலை) யாவர் என்க. மறை — மான்வகை. கொன்றை முல்லைநிலத்துக் குரியதாகும். 'வண்ணமுமால்' என்பது பாடமாயின் ஆல் ஈற்றசை.

163. தலைவியின் பிரிவாற்றாமைக்குத் தோழி இரங்கியது. (இவளது) அரைக்கலைகள், பிரிந்த தலைவரான அந்தணரது வாய்மொழிபோல நெகிழலாயின. கைவளைகளும் கழன்று விழுந்தன. கண்ணீர்த்துளிகள் தனங்களிடையே பரவின. இவள் ஆயிழைகளும் காமவேளின் கைவாளால் அறுபட்ட நூல்கள்போல் ஆயின எ—று. கரபத்திரம் — கைச்சுரிகை; காமனுக்குக் கைதை (மடற்றாழை)மலர் சுரிகை என்ப. வாள் நிகர் — வாளை ஒத்த. பாயின —பரவின.

பாயின வேள்கைக் கரபத்
திரத்துக்குச் சூத்திரம்போ
லாயின பல்சடை யார்க்கன்பு
பட்டவெம் மாயிழைக்கே. (௫௩)

(164) இழையார் வனமுலை வீங்கி
இடையிறு கின்றதிற்றாற்
பிழையாள் நமக்கிவை கட்டுண்க
வென்பது பேச்சுக்கொலாம்
கழையரர் கழுக்குன்ற வாணனைக்
கண்டனை காதலித்தாள்
குழையார் செவியொடு கோலக்
கயற்கண்கள் கூடியவே. (௫௪)

(165) கூடிய தன்னிடத் தானுமை
யாளிடத் தானையையா
நீடிய பல்சடை மேற்றெறி
வண்ண மெனப்பணிமின்

---

சூத்திரம் – நூல். ஆயிழை – ஆய்ந்த இழைகளையுடையாள். 'ஆயிழைக்கே' என உடம்பொடுபுணர்த்து, அவ்விழைகள் சூத்திரம்போலாயின என்பது பெறவைத்தார்.

164. தலைவியின் காதல் கைம்மிக்க நிலையைப் பாங்கி செவிலிக்குக் கூறியது. தனங்கள் பெருத்துவருதலால், தலைவியி னிடை இற்றொடிகின்றது. அஃது இற்றால் இவள் உயிர்தாங்காள். நமக்கு இவை கட்டுப்படுக என்பது, ஒரு பேச்சாகுமோ? கழுக்குன்றவாணனாகிய ஈசனைக் கண்டு 'அன்னை' காதலித்தனள். அக்காதற் குறிப்பு இவளது கயற்கண்கள் செவிவரை சென்று கூடுதலால் புலனாகின்றது எ–று. 'கட்டுண்க என்பது பேச்சுக்கொலாம்' என்றது, இடை முலைகள் நம் ஆணைக்கு அடங்கா என்றபடி. அனை – அன்னை; தோழி தலைவியை இச்சொல்லால் அழைத்தல் மரபு (தொல்). 'கண்டனைக் காதலித்தாள்' என்பதும் பாடம்.

165. ஆன் (விடை), தன்பாற் கூடியிருப்பது; உமையாளை இடப்

பாடிய நான்மறை பாய்ந்தது
கூற்றைப் படர்புரஞ்சுட்
டாடிய நீறுசெஞ் சாந்திவை
யாமெம் மயனெனவே. (சுரு)

(166) அயமே பலியிங்கு மாடுள
தாணுவோர் குக்கிக்கிடப்
பயமே மொழியும் பசுபதி
யேறெம்மைப் பாய்ந்திடுமாற்
புயமேய் குழலியர் புண்ணியர்
போமி னிரத்தல்பொல்லா
நயமே மொழியினு நக்கரம்
மாவும்மை நாணுதுமே. (சுசு)

---

பால் உடையான்; ஐயை (தேவி) ஆகிய கங்கை, வளர்சடைமே லுளது. தீயி னிறம் அவன் வண்ணமாம்' என்று தியானித்துப் பணிமின்கள். எம் ஐயன் பாடியவை நான்மறை; தாக்கியது கூற்றை; இயங்குந் திரிபுரத்தை எரித்துத் திளைத்த சாம்பர், அவன் அணியுஞ் செஞ்சாந்து என்று கூறுங்கள் எ-று. அயன் — ஐயன் (போலி); பிறப்பிலான் (அஜன்) எனினுமாம். எனல்—என்று கூறுக. 'அயனெனவே' என்றும் பாடமோதுவர்.

166. இருடி பத்தினியர் கூற்று:— மாடு உளதாணு — இடபத்தோடு வந்துள்ள தாணுவே! அண்மைவிளி. 'நீர் இங்கே பெறும்பலி பிச்சையே. அதனைப்பெற்று ஒரு சிறுவயிற்றுக்கு இட—வேண்டி (நீர் கூறுவனவும்) எங்கட்கு அச்சம் விளைக்கும் (அதிகாரப்) பேச்சாகும். பசுபதியான உம் இடபமோ எம்மேல் பாயக்கூடியதாக வுளது. இங்குள்ள பெண்டிர்கள் புண்ணிய கருமங்கள் புரியும் தவமகளிர்; நீர் இங்கு வந்திருப்பது பொல் லாத்தனமே' (என்று மகளிர் சொல்ல, ஈசன் நயமொழிகளையே கூறவும்) 'நீர் நயமே மொழிந்தாலும் நக்கராக உள்ள உம்மைக்காண நாங்கள் நாணுகின் றேம்; போமின் என்றார்' என்க. அயம் — ஐயம் (போலி). குக்கி — வயிறு. நக்கர் — நிர்வாணமானவர், சிவபிரான். (நக்ந: வடசொல்). 'நக்கர் மேருவர் நாடுமோ ரூருமே' என்பதுங் காண்க (தேவா.).

(167) நாளு நடக்க நலத்தார்க்
கிடையில்லை நாமெழுக
வேளு ரிருந்தமி ழான்மற
வேனுன் னினைவினென்னும்
பூணார் முலையீர் நிருத்தன்
புரிசடை யெந்தைவந்தாற்
காணு விடேன்கண் டிரவா
தொழியேன் கடிமலரே. (கசஎ)

(168) கடிமலர்க் கொன்றை தரினும்புல்
லேன்கலை சாரவொட்டேன்
முடிமலர் தீண்டின் முனிவன்
முலைதொடு மேற்கெடுவன்

---

167. நலத் தார் — ஈசனணிதலால் நலம்வாய்ந்த மாலை. (நீ விரும்பியபடி) 'அம் மாலையைப் பெற்றுவரும்பொருட்டு நாடோறும் நாங்கள் அவன்பால் சென்றுவர எங்கட்குச் சமயமில்லை; இருந்தமிழ்ப்பாக்களால் நாக்கொண்டு மெழுகி வாய்புனிதமாம்படி பாடி அவனை உன் நினைவில் மறவாது வைப்பாயாக' என்று கூறும் மங்கைமீர்! எந்தையான ஈசன் இங்கு (எவ்வகையினும் வரக்கூடும்) வந்தால், அவனைக் காணுமற் போகேன்; கண்டு அவனது கடிமலரை இரந்துபெறுமலும் விடேன் எ-று. நாள் நாம் நடக்க — நாளும் நாங்கள் நடந்துவர. நாணணடக்க (— நாளும் நாளும் நடக்க) என்றும் பாடம், உம்மைகள் தொக்கன. இடை — சமயம். எண் ஆர் — பெருமை பொருந்திய. நுன் — உன்; திசைச்சொல். (சீவக.).

168. ஈசன் அவ்வாறு வந்தவிடத்துத் தான் நிகழ்த்தப்போகும் ஊடற் செயல்களைத் தலைவி படைத்துமொழிவது இப்பாட்டு. "விரும்பிய கடிமலரைப் பெருமான் அளித்தாலும் நான் பெறப்போவதில்லை, என் ஆடைப் பக்கமும் அவனைச் சார வொட்டேன், என் முடிமலரைத் தீண்டுமேல் முனிவேன்; அதனைமீறி அவன் என் தனங்களைத் தொடப் புக்கால் 'என் கற்புநிலை கெடுவேன், வானவரேத்தநின்ற உன் தலைமைக்கு இஃது அழகன்று' என்பேன்; என் தொடித் தோள்களைத் தொடப் புகுமேல் அவனுடைய திருவாணைமொழியைக் கூறித் தடுப்பேன்" எ-று. திருவாணை — 'விரையாக்கலி' என்ற ஈசனது ஆணைத்தொடர்; 'விரையாக்கலியெனு மாணை

அடிமலர் வானவ ரேத்தநின்
றுய்க்கழ கல்லவென் பன்
தொடிமலர்த் தோள்தொடு மேற்றிரு
வாணை தொடங்குவனே. (கூஅ)

(169) தொடங்கிய வாழ்க்கையை வாளா
துறப்பர் துறந்தவரே
அடங்கிய வேட்கை யரன்பா
லிலரறு காற்பறவை
முடங்கிய செஞ்சடை முக்கண
ருக்கன்றி யிங்குமன்றிக்
கிடங்கினிற் பட்ட கராவனை
யார்பலர் கேவலரே. (கூசு)

(170) வலந்தான் கழலிடம் பாடகம்
பாம்பு வலமிடமே
கலந்தான் வலநீ றிடஞ்சாந்
தெரிவலம் பந்திடமென்

---

யும்' என்றார் பட்டினத் தடிகளும். இதனைத் 'திருவிரையாக்கலி' என்று வழங்குவர் (பெரியபு.).

169. கேவலரானவர் 'லர், தாம் தொடங்கிய இல்வாழ்க்கைநிலையில் நின்று அதனறங்களைச்செய்து பயன்பெறாது அவ்வாழ்க்கையைவெறுத்து வீணே துறப்பர்; அவ்வாறு துறந்தவர், தம் பற்றினை அரன்பால் வைத்தல் செய்யார்; ஆகவே, மறுமைப் பயன்பெற ஈசனுக்கு மாகாமல், இம்மைப் பயன்பெற இல்வாழ்க்கைக்கும் உதவாமல், நீர்க்கிடங்கில் தானே விழுந்தகப்பட்ட முதலையைப்போல வருந்துவர் எ—று. கேவலர் — கைவல்லிய பதவிபெற விருப்புவோர்; சாமானியர் என்றுமாம். அறுகாற் பறவை — தேன்வண்டு. கரா — ஆண்முதலை (திவா.) கிடங்கினுள் விழுந்த முதலை, அதனுள்ளிருந்து உணவுக்காக அகப்படும்பிறவற்றை எதிர்பார்த்தும் வெளியேற முடியாமல் தவித்தும் அலைதல் உவமிக்கப்பட்டது.

170. உமையுடன் கூடிய ஈசன் திருவுருவத்தைச் சிறப்பிப்பது இப்பாட்டு, வலம் பூண்பது கழல்; இடம் பூண்பது பாடகம்; வலமணிவது

பலந்தார் வலமிட மாடகம்
வேல்வல மாழியிடம்
சலந்தாழ் சடைவலம் தண்ணங்
குழலிடஞ் சங்கரற்கே. (௬௫)

(171) சங்கரன் சங்கக் குழையன்
சரணர விந்தந்தன்னை
அங்கரம் கூப்பித் தொழுதாட்
படுமின்தொண் டீர்நமனார்
கிங்கரர் தாஞ்செய்யுங் கீழா
யினமிறை கேட்டலுமே
இங்கர மாயிர மீரவென்
னெஞ்ச மெரிகின்றதே. (௬௬)

(172) எரிகின்ற தீயொத் துளசடை
யீசற்கத் தீக்கிமையோர்
சொரிகின்ற பாற்கடல் போன்றது
சூழ்புன லப்புனலிற்

---

நாகாபரணம், இடமணிவது அர்தனுபரணங்கள். வலப்பாற் பூசுவது திருநீறு, இடப்பாற் பூசுவது செஞ்சாந்து; வலமேந்தியது தீ, இடமேந்தியது பந்து; வலப்பாற் பூண்பது என்புமாலை, இடப்பாற் பூண்பது பொன்னரிமாலை; வலமேந்தியது வேல், இடமேந்தியது சக்கரம்; வலப்பக்கம் உள்ளது சடா பாரம், இடப்பக்கம் உள்ளது அளகபாரம் எ-று. "பாடகஞ்சேர் காலொரு பால் கனைகழற்காலொருபாற் றோன்றும்" (பெருந்தொகை. 55) "பால் வெள்ளைநீறும் பசுஞ்சாந்தும்" (திருவாசகம்) என்றார் ஆன்றோரும். என்பு அலந்தார் – எலும்பாகிய உவந்தமாலை; அலம் – உவப்பு, திருப்தி.

171. சங்கரன் சங்கக்குழையன்–"சங்கரனற் சங்கவெண்குழையோர் காதிற் கோமாற்கே" என்பது அப்பர் திருவாக்கு. தொண்டீர் என்ற விளி உலகினர்க்கு அடிமையானவரை நோக்கி. கிங்கரர் – காலதூதுவர், மிறை – வேதனைச் செயல். அரம் – ஈர்வாள்.

172. ஈசனது சடை எரியுந் தீயொத்துளது. அத்தீயை அவித்

சரிகின்ற திங்களோர் தோணியொக்
கின்றதத் தோணியுய்ப்பான்
தெரிகின்ற திண்கழை போன்றுள
தாலத் திறலரவே. (சுஎ)

(173) அரவ முயிர்ப்ப வழலுமங்
கங்கை வளாய்க்குளிரும்
குரவங் குழலுமை யூடற்கு
நைந்துரு கும்மடைந்தார்
பரவும் புகழண்ண றீண்டலும்
பார்வா னவைவிளக்கும்
விரவு மிடரின்ப மெம்மிறை
சூடிய வெண்பிறையே. (சுஅ)

(174) பிறைத்துண்டஞ் சூடலுற் றேபிச்சை
கொண்டன லாடலுற்றே
மறைக்கண்டம் பாடலுற் றேவெண்பு
நீறும் மருவலுற்றே

---

தற்காக இமையோர் சொரியும் பாற்கடலை ஒத்துள்ளது கங்கை; அக்கங்கை யில் இயங்கும் ஓர் தோணி போன்றுள்ளது பிறைமதி; அத் தோணியைச் செலுத்தற்குரிய திண்ணிய கழைபோன்றுளது வலிய அரவுகள் எ-று. "மின் தாகினி நீரிற்......பிறைக்கலஞ் சேர்தருந் தாரவனே" என்றார் வாதவூரடிகளும் திருவாசகம்).

173. எம் ஈசன் சடையிற்சூடிய வெண்பிறையானது, ஆங்குள்ள அரவுகள் மூச்செறிதலால் வெதும்பும்; அதுவே கங்கைநீர் வளாவுதலால் குளிர்கின்றது; உமையாள் ஊடுங்காலத்து ஈசன் சிரம்பணிதலால் உடல் நைந்துருகும்; அதுவே, அவ்வூடல் நீங்கி உமையை அவன் தீண்டும்போது இவ்வுலகையும் வானுலகையும் விளங்கச் செய்கின்றது. இவ்வாறு இடரும் இன் பமும் மாறி மாறி அஃது அடையாநின்றது எ-று. வளாய் — வளாவ, நீரலை மோத. 'குரவுவார் குழன்மடவாள்' என்பர் வாதவூரடிகளும் (திருவாசகம்.)

174. முடிக்கண்ணியான பிறைத்துண்டத்தைத் தான் சூடுதல்

கறைக்கண்டம் புல்லலுற் றோகடு
வாயர வாடலுற்றோ
குறைக்கொண் டிவளரன் பின்செல்வ
தென்னுக்குக் கூறுமினே. (௬௬)

(175) கூறுமி னீசனைச் செய்மின்குற்
றேவல் குளிர்மின்கண்கள்
தேறுமின் சித்தம் தெளிமின்
சிவனைச் செறுமின்செற்றம்
மாறுமின் வேட்கை யறுமி
னவல மிவைநெறியா
ஏறுமின் வானத் திருமின்
விருந்தா விமையவர்க்கே. (௭௰)

(176) இமையோர் கொணர்ந்திங் கிழித்திட
நீர்மைகெட் டேந்தல்பின்போ
யமையா நெறிச்சென்றோ ராழ்ந்த
சலமக ளாயணைந்தே

---

விரும்பியோ, அனலெடுத்தாடிப் பிச்சை யேற்றற்கோ, வேதங்களைக் கண்டத்தோடு (– இசையோடு) பாடுதற்கோ, எலும்புமாலையும் சாம்பற்பூச்சும் பொருந்துவதற்கோ, தன்தொண்டை கறையை அடைதற்கோ, அரவுகளை யெடுத்தாட்டுதற்கோ—இவற்றுள் எதன் பொருட்டு இவள் அரன்பின் குறைகொண்டு உடன்செல்லக் கருதுவது, கூறுமின்' என்று உடன்போக்கு வலித்த தலைவிக்குச் செவிலி கூறியவாறு. பிறைத்துண்டம் – ஒருகலைமதி. கண்டம் மறைபாடுதற்கோ என்க. கடுவாய் – விடந்தங்கிய வாய்.

175. ஈசன் திருநாமங்களைக் கூறுமின், அவனுக்கே குற்றேவல் செய்மின், அவனைத் தெரிசித்துக் கண்கள் குளிர்மின், சித்தத்தை ஒருவழிப் படுத்துமின். அவனே (பரம்பொருளென்று) தெளிமின், செற்றம் அடக்குமின், அவாவை ஒடுக்குமின், துக்கம் நீங்குமின். இக்கூறியவைகளே வழியாகத் துறக்கஞ் சென்றேறி அங்கே வானோர்க்கு நல்விருந்தாக வாழ்மின் எ–று.

176. (கங்கையாகிய) சலமகள் தலைமகளாயிருப்பு அவள்கீழ் உமை

எமையா ளுடையான் தலைமக
ளாயக் கிருப்பவென்னே
உமையா ளவள்கீ ழுறைவிடம்
பெற்றோ வுறைகின்றதே. (எசு)

(177) உறைகின் றனரைவ ரொன்பது
வாயிலோர் மூன்றுளதால்
மறைகின்ற வென்பு நரம்போ
டிறைச்சி யுதிரமச்சை
பறைகின்ற தோல்போர் குரம்பை
பயனில்லை போயடைமின்
அறைகின்ற தெண்புனல் செஞ்சடைக்
கொண்டோ னலரடிக்கே. (எஎ)

---

யவள் குடியிருப்பிடம்பெற்று ஈசன்பால் வாழ்வது என்னே எ-று. இழித்திட — இறங்கச் செய்ய, தாழ்வுபடுத்த. நீர்மை கெட்டு — விண்ணுலகில் மந்தாகினி என்று பெருமைபெற்ற தன்மையை இழந்து, குணக்கேடுற்று. ஏந்தல் — பகீரதன், அயலானாகிய ஓர் ஆண்மகன். அமையா நெறி — இமயம் சன்னுமுனிவர் ஆச்சிரமம் முதலிய எற்றிழிவிடங்களிற் சென்று, சற்புடை மகளிர்க்கு ஒவ்வாநெறியில் ஒழுகி. "கங்கை திறம்பினள்" என்றார் கம்பரும். (தமிழ்நா. சரிதை). சலமகளாய் — நீருருக் கொண்ட பெண்ணாய், குற்றமுள்ள பெண்ணாய். தலைமகள் — சடைமுடியில்வாழும் மகள், தலைமை மனைவி. கங்காதேவியைப் பழிப்பதுபோலச் சிலேடையணிபெறக் கூறியவாறு.

177. ஐவர் — ஐம்புலன்கள்; ஓர் மூன்று — காமம் வெகுளி மயக்கம் என்ற முப்பகைவர்; "மொழிந்தனர் ஆசிகள் முப்பகை வென்றார்" என்றார் கம்பரும். உள்ளதால் — உள்ளிடத்தது; ஆல் — அசை. என்பு நரம்பு முதலியவற்றால் போர்க்கப்பட்ட குரம்பை (குடில்) என்க. போர் குரம்பை, வினைத்தொகை. மச்சை — என்பினுள் அமைந்த சாரம் என்பர். (கன். 268. சங்கர. வி.) பறைகின்ற — சொல்லப்படும்; மலைநாட்டுவழக்கு. 'மலரடிக்கே' என்றும் பாடம்.

(178) அடிக்கண்ணி கைதொழு தார்க்ககன்
ஞாலங் கொடுத்தடிநாய்
வடிக்கண்ணி நின்னைத் தொழுவனை
கொண்டனை வண்டுண்கொன்றைக்
கடிக்கண்ணி யாயெமக் கோரு
ரிரண்டகங் காட்டினையாற்
கொடிக்கண்ணி மேனல்ல கொல்லே
றுயர்த்த குணக்குன்றமே. (எஅ)

(179) குன்றெடுத் தான்செவி கண்வாய்
சிரங்க ணெரிந்தலற
அன்றடர்த் தற்றுகச் செற்றவ
னற்றவர்க் கற்றசிவன்

178. திருவடிகளில் கண்ணி (மாலையணிந்து) கைதொழுதார்க்கு என்றது, கோச்செங்கணார், மூர்த்திநாயனார் போலும் உலகாண்டவரை. இனி, 'கைதொழுதாட்கு' என்பது பாடமாயின், நின்னைக் கைதொழுத தேவியான (அங்கயற்) கண்ணிக்கு உலகையளித்து என்று கொள்க. கண்ணி என்ற நாமைகதேசத்தால் தேவி மீனாட்சியைக் குறிப்பிட்டபடி. அடிநாய் — அடிமையான நாய்போன்ற எனது; 'அடிநாய் சொல்' என்றார் ஆளுடையடிகளும் (தேவா). வடி — மாவடு; கண்ணுக்கு உவமை. கடி — மணம். 'ஒரூர் இரண்டகங் காட்டல்' ஒரு பழமொழி. அஃதாவது ஒரூரில் ஒருபண்டத்தையே, இரண்டுவிலைக்கு விற்று வாணிபஞ்செய்வதுபோலும் முறைமை; 'ஒரு ரிரண்டகமாயிற்று' என்றார் பிறரும் (சீவக. 2087). அடிதொழுதார் இருவருள், ஒருவர்க்கு உலகுகொடுத்தும் மற்றவளான இவளிடம் வளைகொண்டும் மாறுபட்ட செயல் காட்டினை எ—று.

179. குன்றெடுத்தான் — கயிலையை எடுக்கமுயன்ற இராவணன். அவனது செவிகள் வாய் சிரங்கள் ஒன்றும்படி நசுக்குறலால் அலற. அடர்த்து— நெருக்கி. அற்றுக — வலியற்று என்பு நெகும்படி. செற்றவன் — சினந்தவன். நற்றவர்க்கு அற்ற— மெய்யடியார்க்கே தன்னை உரிமையாக்கிய. அற்றவர்க்கு— என்று கொண்டு, பற்றற்றவர்க்கு என்றுமாம். மன்றத்து நெல்லிக்கனி,

மன்றிடைத் தோன்றிய நெல்லிக்
கனியிற்ப மானுடர்போய்
ஒன்றெடுத் தோதிப் புகுவர்
நரகத் துறுகுழியே. (௭௪)

(180) குழிகட் கொடுநடைக் கூன்பற்
கவட்டடி நெட்டிடையூன்
உழுவைத் தழைசெவித் தோன்முலைச்
சூறை மயிர்ப்பகுவாய்த்
தெழிகட் டிரைகுரற் றேம்பல்
வயிற்றுத் திருக்குவிரற்
கழுதுக் குறைவிடம் போல்கண்ட
னாடுங் கடியரங்கே. (௭௫)

(181) அரங்கா மணியன்றில் தென்றலோர்
கூற்ற மதியமந்திச்
சரங்காம னெய்யஞ்சு சந்துட்
பகையா லிவள்தளர்ந்தா

---

விடாய்த்தவர்க்கு உதவுமாறுபோல உதவுபவன் என்க; சிற்றம்பலத்துப் பெருமானைக் குறிப்பித்தவாறு. ஒன்றெடுத்து - பிறிதோர் தெய்வத்தை குறித்துக் கொண்டு.

180. கண்டன் ஆடுங் கடியரங்கு கழுதுக்கு (-பேய்கட்கு) உறைவிடம்போலும் எ-று. குழிந்த கண், கோணிய நடை, வளைந்த பல், கவட்டு அடி, நீண்ட இடை, உழுவைச் செவிபோலும் ஊன் தழைத்த காது, தோலாக வற்றிய முலை, சுழன்ற மயிர், பிளவுபட்ட வாய், அதடடிக் கட்டியுரைக்குமு இரைந்த குரல், வாடிய வயிறு, பின்னிய விரல் இவற்றையுடைய கழுது என்க. போல் -போன்ம்; போலும் எனபதன் திரிபு. (சாமிநாதபண்டிதர் தேவாரப்பதிப்பு, பக்கம் 441—2; 463—5). உழுவை - புலி. கடி - அச்சம். கண்டன் - அரன்; "கழுக்குன்றவாணனைக் கண்டனை" என்றார் முன்னும்.

181. அன்றில் அரம் என்க. கா மணி அன்றில் - சோலையில்

எிரங்கா மனத்தவ ரில்லை
யிரங்கா னிமையவர்தஞ்
சிரங்கா முறுவா னெலும்புகொள்
வானென்றன் தேமொழிக்கே. (௭௬)

(182) மொழியக்கண் டான்பழி மூளக்கண்
டான்பிணி முன்கைச்சங்கம்
அழியக்கண் டானன்றி லீரக்கண்
டான்றென்ற லென்னுயிர்மேற்
சுழியக்கண் டான்றுயர் கூரக்கண்
டான்றுகில் சூழ்கலையுங்
கழியக்கண் டான்தில்லைக் கண்ணுத
லான்கண்ட கள்ளங்களே. (௭௭)

---

வாழும் அழகிய அன்றில்; (அது) அரம் போலும். காமன் எய் சரம் அஞ்சு எனக் கூட்டுக. ஐங்கணையும் சந்தனமுங்கூடி ஆறு உட்பகை (போல) உள்ளன எ-று. பேரூழியில் தேவருட்பட யாவரையும் சங்கரித்து அவர் சிரங்களையும் என்புகளையும் விரும்பியணிதலால் 'இமையவர் சிரங்காமுறுவான் எலும்பு கொள்வான்' என்றார். தலைவியான இவள் திறத்தில் யாவரும் இரங்குவராயினும், சர்வசங்காரமூர்த்திக்கு அவ்விரக்கம் உண்டாதல் எங்ஙனம் என்றபடி.

182. தில்லைப்பெருமான் எனக்கு வேண்டிய அருள்புரிவர் என்ற தோழிக்குத் தலைவி கூறியது. அயலாரை அலர்தூற்றச் செய்தான். காமநோய் என்பாற் பெருகச்செய்தான். முன்கை வளைகள் கழன்றுவிழச் செய்தான். அன்றில் (தன் குரலால் என்னெஞ்சை) ஈரும்படி செய்தான். தென்றல் என் உயிர்மேற் சீறும்படி செய்தான். மற்றுந்துயரங்கள் மலியுமாறு செய்தான். துகில்மேலணிந்த மேகலையையும் நழுவச் செய்தான். இன்னவையே அப்பெருமான் என்பாற்புரிந்த மாயச் செயல்கள் எ-று. கலை - மேகலை; முதற்குறை. கண்டான் - செய்தான்.

(183) கள்ள வளாகங் கடிந்தடி
மைப்படக் கற்றவர்தம்
உள்ள வளாகத் துறுகின்ற
வுத்தம நீண்முடிமேல்
வெள்ள வளாகத்து வெண்ணுரை
சூடி வியன்பிறையைக்
கொள்ள வளாகின்ற பாம்பொன்
றுளது குறிக்கொண்மினே. (எங)

184) குறிக்கொண் டிவள்பெய்த கோல்வளை
யேவந்து கோளிழைத்தீர்
வெறிக்கொண்ட வெள்ளிலம் போதோ
எலும்போ விரிசடைமேல்
உறைக்கொன்றை யோவுடைத் தோலோ
பொடியோ உடைகலனோ
கறைக்கண்ட ரேநுமக் கென்னோ
சிறுமி கடவியதே. (எச)

---

183. 'உத்தமரே! நும் சடைமுடிமேல் கங்கையின் நுரைப் போர்வையைச் சூடி மறைத்துக்கொண்டு அங்குள்ள பிறையைக் கௌவிப் பிடிக்க முயலும் நாகமொன்று உள்ளது. அதனை உள்ளத்துக் கொண்டு அப் பிறையைக் காப்பீராக எ—று. கள்ளவளாகம்—வஞ்சனைச்சூழல். கற்றவர்—பழகியவர். 'கல்லார் நெஞ்சின் நில்லான்' ஆகலின் 'கற்றவர்தம் முள்ள வளாகத் துறுகின்ற' என்றார். வளாகம் எனவருவன சூழல், இடம், வளைப்பு என்னும் பொருளன. வளாகின்ற—சூழ்கின்ற (பிங்.) 'இன் வெயில் வளாவ' எனக் காண்க (பரிபா.). 'உத்தம னீண்முடிமேல்' என்றும் பாடம்.

184. நீலகண்டரே! இவள் அணிந்த கைவளைகளையே குறிக் கொண்டு வந்து கொள்ளுதல்செய்தீர். அவை, மயானத்திற் பூக்கும் விளாவின் மலரோ, எலும்போ, சூடிய கொன்றையோ, தோலுடையோ, திருநீறோ, வேறு

(185) கடவிய தொன்றில்லை யாயினுங்
கேண்மின்கள் காரிகையாள்
மடவிய வாறுகண் டாம்பிறை
வார்சடை யெந்தைவந்தாற்
றிடவிய நெஞ்ச மிடங்கொடுத்
தாட்கவ லங்கொடுத்தான்
றடவிய கொம்பதன் றுண்மே
லிருந்து தறிக்குறுமே. (அய)

(186) தறித்தா யயன்றலை சாய்த்தாய்
சலந்தர னைத்தழலாய்ப்
பொறித்தா யனங்கனைச் சுட்டாய்
புரம்புன லுஞ்சடைமேற்

---

உடையும் அணிகலமுமோ தெரிந்திலேம். இவ்வாறு கவர்ந்துகொள்ள இச் சிறுமி உமக்குக் கடமைப்பட்டதென்னோ எ-று. கோளிழைத்தல் — கொள் ளுதல் செய்தல், தீங்குபுரிதல். வெறி — மணம். வெள்ளில் — விளா; இகொட்டு மரங்களுள் ஒன்று (மணிமே). உறை — தேன்றுளி. இது தோழி கூற்று.

185. ஈசனுக்குத் தான் கடமைப்பட்டது ஒன்றுமில்லை யாயினும், தன்பால் வந்த அவனுக்குத் தன் விசாலமான நெஞ்சில் தங்க இவள் இடங் கொடுத்தாள். இதற்குக் கைமாறாக அவ்வீசன் அவலத்தை இவட்கு அளித் தனன். பெருத்த மரக்கிளையொன்றன் தாளை அக்கிளைமேலிருந்து தறித்தல் போலாம் இச்செயல் எ-று. இடங்கொடுத்ததனால் நேர்ந்த அவலமாதலின் 'மடவியவாறு கண்டாம்' என்றாள். மடவியவாறு — மடமையடைந்தபடி. அவலம் — நடைத்தளர்ச்சி முதலிய பலவீனம். இத் துயர்தந்தவன், தானும் தன் செயற்கிரங்கி வருந்துவன் என்றபடி. தறிக்கலுறும் என்பது தறிக்குறும் என விகாரப்பட்டது; உறும் — போலும். இது தோழி கூற்று.

186. அயன் தலையை அரிந்ததும், சலந்தரனை அழித்ததும், காம னை எரித்ததும், திரிபுரங்களைச் சுட்டதும், கங்கையின்வெள்ளத்தைச் சடை யில் அடக்கியதுமாகிய இச் செயல்கள் நின் பெரும் புகழ்களானமை

செறித்தாய்க் கிவைபுக ழாகின்ற
கண்டிவள் சில்வளையும்
பறித்தாய்க் கிதுபழி யாகுங்கொ
லாமென்று பாவிப்பனே.

(187) பாவிக்கும் பண்டைய ளல்லள்
பரிசறி யாள்சிறுமி
ஆவிக்குங் குக்குலு நாறு
மகநெக வங்கமெங்குங்
காவிக்கண் சோரும்பொச் சாக்குங்
கறைமிடற் றானைக்கண்ணிற்
றாவிக்கும் வெண்ணகை யாளம்மெ
லோதிக்குச் சந்தித்தவே. (அஉ)

---

அறிந்த யான் இவளது சிலவாகிய வளைகளையும் நெகிழ்த்துப்பறித்த செய்கையை நோக்கி, இது நினக்குப் பழியாகுமே என்று எண்ணி வருந்துகின்றேன் எ—று. அயன்தலை தறித்தது முதலிய பராக்கிரமங்களைப் புராணம் வல்லார்வாய்க் கேட்டுணர்க. இதுவும் தோழி கூற்று.

187. இச்சிறுமி, பெருமூச் செறிகின்றாள்; அம் மூச்செறிகை குங்கிலியப் புகைபோல வெளித்தோன்றுகிறது. மனந்தளர்ந்து தன் கண்களினின்று மேனியெங்கும் நீர்சோர்கின்றாள். நினைவு மாறுகின்றாள். நீலகண்டனைத் தன் கண்களில் தாபித்துக் கொள்ளுகின்றாள். வெண்ணகை புரிகின்றாள். இத் தன்மைகள் இவளிடம் சார்ந்துள்ளன. இவள் பண்டையள் அல்லள் எ—று. பாவிக்கும் பண்டையள் அல்லள் — நாம் எண்ணிய பழைய நிலைமையில் உள்ளவ ளில்லை. குக்குலு — குங்கிலியம்; சாம்பிராணி; சோரும் — கண்ணீர் ஒழுகும். தாவிக்கும் — தாபிக்கும்; நிறுத்தும். அம் மெல் ஓதி — அழகிய மெல்லிய கூந்தலையுடையாள்; 'அம் மென்கூந்தல்' (சிறுபாண்.) என்ப. செவிலி கூற்று.

(188) சந்தித்த கூற்றுக்குக் கூற்றும்
பிணிக்குத் தனிமருந்தாம்
சிந்திக்கிற் சிந்தா மணியாகித்
தித்தித் தமுதமுமாம்
வந்திக்கின் வந்தெனை மால்செய்யும்
வானோர் வணங்கநின்ற
அந்திக்க ணாடி யரனடி
யார்களுக் காவனவே. (அஅ)

(189) ஆவன யாரே யழிக்கவல்
லாரமை யாவுலகிற்
போவன யாரே பொதியகிற்
பார்புர மூன்றெரித்த
தேவனைத் தில்லைச் சிவனைத்
திருந்தடி கைதொழுது
தீவினை யேனிழந் தேன்கலை
யோடு செறிவளையே. (அகூ)

---

188. எதிர்த்த கூற்றுக்குக் கூற்றாகும்; பிறவிப்பிணிக்கு அரு மருந்தாகும், சிந்திக்குமிடத்துச் சிந்தாமணிபோ லுதவும்; தித்திக்கும் அமுத முமாகும்; இவையாவும் அரனடியார்கட்கு ஆகின்றன. (ஆனால் என் திறத் தோவெனின்) யான் வந்திக்குமிடத்துமட்டும் என்பால்வந்து அவன் 'என்னை மயக்கஞ் செய்கின்றான் என்று. அந்திக்கண் ஆடி — மாலைக் (பிரதோஷ) காலத் தில் நடிப்பவன். இது தலைவி இரங்கிக் கூறியது.

189. அரனடியார்கட்கு நல்லன நிகழுமாற்றைக் கூறியவர், அவ் வரனடிகளைத் தொழுத தனக்கு அல்லன நிகழ்ந்ததைத் தலைவி உலகியல்மேல் வைத்துக் கூறி இரங்கியது இப்பாட்டு. தில்லைச் சிவனது திருவடிகளைக் கைதொழுதும், தீவினைப்பயனால் என் மேகலையையும் கைவளைகளையும் யான் இழந்தேன். ஒருநிலைப்படாத இவ்வுலகின்கண் ஆகக்கூடியவற்றை

(190) செறிவளை யாய்நீ விரையல்
குலநலங் கல்விமெய்யாம்
இறையவன் றாமரைச் சேவடிப்
போதென்றெல் லோருமேத்து
நிறையுடை நெஞ்சிது வேண்டிற்று
வேண்டிய நீசர்தம்பாற்
கறைவளர் கண்டனைக் காணப்
பெரிதுங் கலங்கியதே. (அ௯)

(191) கலங்கின மால்கடல் வீழ்ந்தன
கார்வரை யாழ்ந்ததுமண்
மலங்கின நாக மருண்டன
பல்கணம் வானங்கைபோ
யிலங்கின மின்னொடு நீண்ட
சடையிமை யோர்வியந்தார்
அலங்கனன் மாநட மார்க்கினி
யாடுவ தெம்மிறையே. (அ௰)

---

அழிக்கவல்லார் யாவர்? போகக்கூடியவற்றை யாவரே நிலைபெறுத்த வல்லவர் எ—று.

190. தலைவிக்குற்ற நோயறிந்து நிமித்தமறியலுற்ற தோழிக்கு அத் தலைவி கூறியது; அவள் செவிலிக்குக் கூறியதுமாம். 'தோழீ! (எனக்கு உற்ற நோயை விளைத்த தெய்வம் இன்னதென அறியவேண்டிப் பிறநிமித்தி கரை நாடி) நீ விரையவேண்டா. குலம் நலம் கல்வி யாவும் மெய்யான அவ் விறைவன் திருவடிமலர்களே என்று அறிஞரெல்லாம் புகழும் நிறைவுள்ள நெஞ்சினையே யான் வேண்டியது. நீ விரும்பிய கீழோரிடம் (குறி ஆவேசங்கள் மூலம்) எம் பிரானைக் காணமுயலுதலால், என் நெஞ்சம் பெரிதுங் கலங்கா நின்றது எ—று. 'சேவடிப்போது என்று ஏத்தும் நெஞ்சு' எனவும் 'இது (நெஞ்சு) கலங்கியது' எனவும் இயையும். நீசர்—வேலன் கணி முதலியோர்.

191. கடையூழியிறுதியில் ஈசனிகழ்த்தும் திருக்கூத்தினைச் சிறப்

(192) எம்பிறை வன்னிமை யோர்தலை
வன்னுமை யாள்கணவன்
மும்முறை யாலும் வணங்கப்
படுகின்ற முக்கணக்கற்
செம்முறை யாளிவ ளன்பிழைத்
தாட்கிறை யென்பிழைத்தான்
இம்முறை யாலே கவரக்
கருதிற் றெழிற்கலையே. (அள)

(193) கலைதலை சூல மழுக்கனல்
கண்டைகட் டங்கக்கொடி
சிலையிவை யேந்திய வெண்டோட்
சிவற்கு மனஞ்சொற்செய்கை

---

பிப்பது இப்பாட்டு. பெருங்கடல்கள் கலங்கின. கருவரைகள் வீழ்ந்தன. மண்ணுலகம் கீழே ஆழ்ந்தது. அட்டமாநாகங்களும் நிலைகுலைந்தன. பதினெண் கணங்களும் மருட்சியடைந்தன. நீண்ட சடாபாரம் வானத்தைக் கடந்து மின்னிவிளங்கியது. தேவரெல்லாம் வியப்புற்றனர். இவ்வாறு ஊழித்தீயின்கண் ஆடுங் கூத்தை இனி யாவர் மகிழ இறைவன் ஆடுவதோ? தெரிந்திலேன் எ-று. அலங்கு அனல் மாநடம் – ஊழித்தீக்கண் ஆடும் பெருங்கூத்து. "விண்ணை மடங்க விரிநீர் பரந்து வெற்புக்கரப்ப, மண்ணைமடங்க வருமொரு காலத்தும்" என்றதிருவாக்கும் இங்கு ஒப்பிடுக (திருக்கோவை).

192. முக்கண்ணுடைய நக்கபிரானுக்கு இவள் என்ன முறையினள்? அவன்திறத்தில் இவள் பிழைத்ததென்னோ? இறைவன் இவட்கு எலும்பாக (உடலை) ஆக்கினன். (இம்மட்டோ.) இத் தளர்நிலையில் இவளது அரைக்கலையையும் அவன் கவரக் கருதினன் எ-று. யாம் வணங்குந்தெய்வமும், தேவாதிதேவனும், உமாகாந்தனுமானவன் இவள்திறத்தில் இங்ஙனம் புரிவதே என்று செவிலி இரங்கியபடி. 'அன்பிழைத்தாட்கு' என்பதும் பாடம்போலும்.

193. எண்டோளுடைய பெருமானுக்குத் திரிகரணங்களாலும் நிலைபெயராமல் அடிமைத்திருத்தொண்டினைச் செய்தோர் மேருமலைபோல ஓங்கி

நிலைபிழை யாதுகுற் றேவல்செய்
தார்நின்ற மேருவென் னும்
மலைபிழை யாரென்ப ராலறிந்
தோர்களிம் மாநிலத்தே. (அஅ)

(194) மாநிலத் தோர்கட்குத் தேவ
ரனையவத் தேவரெல்லா
மானலத் தாற்றொழு மஞ்சடை
யீச னவன்பெருமை
தேனலர்த் தாமரை யோன்றிரு
மாலவர் தேர்ந்துணரார்
பாநலத் தாற்கவி யாமெங்ங
னேயினிப் பாடுவதே. (அகூ)

---

என்றும் நிலைபெறக் கூடியவர் என்று கூறுவர், அறிந்தோர் எ-று. கலை — மான். தலை — கபாலம். மழு — வாட்படை (திருக்கோவை, 387 பேரா.) கனல் — தீ. கண்டை — மணி. கட்டங்கக் கொடி — கட்டுவாங்கமாகிய கொடி; கட்டங்கம் — மழு (திருக்கோவை, 242); கட்வாங்கம் என்ற வடசொற்றிரிபு. கட்டங்கம் சிவபிரானுக்குக் கொடியாகவும் முன்னோராற் கூறப்படும். இதனை 'கட்டங்கக் கொடி' எனவருந் தேவாரத்தொடர் பலவற்றாலும் அறிக (தேவா. சாமிநாத பண்டிதர் பதிப்பு, பக். 596—1; 720-2; 949-2). சிலை — வில்; இப்படைகளை ஏந்திய எட்டுத் தோள்களையுடைய சிவற்கு என்க. எண்டோள்கள் ஈசனுக் குள்ளமை, 'அட்டமாம்புய மாகு மாருரரே' என்ற தேவாரத் தொடராலும் அறிக. 'மேருவென்னும் மலைபிழையார்' என்பதனுள், மேரு என்பது, ஒற்றுமைநயம் பற்றி அதன் சிகரங்களுள் ஒன்றான கயிலையென்றுகொண்டு, அக் கயிலையின் பெருவாழ்வை நீங்கார் எனக் கொள்ளினும் அமையும்.

194. ஈசன் பெருமைகளை அயனரிபோன்றாரும் ஆய்ந்து உணர்ந்தவ ரல்லர். அவ்வாறாக அவன் தன்மைகளை அறிந்து, சிறுமானிடராகிய யாம் சீரிய கவிகளால் எங்ஙனம் பாடவல்லேம் எ-று. மாநிலத்தோர்கட்குத் தேவரனைய அத்தேவர் — பூசுரர் எனப்படும் அந்தணர். ஆனலம் — பஞ்சகவ்வியம்; 'ஆனைந்து' என்பர் (தேவா.). பாநலம் — செய்யுணயங்கள்.

(195) பாடிய வண்டுறை கொன்றையி
னுன்படப் பாம்புயிர்ப்ப
ஓடிய தியா லுருகிய
திங்களி னூறலொத்த
தாடிய நீறது கங்கையுந்
தெண்ணீர் யமுனையுமே
கூடிய கோப்பொத்த தாலுமை
பாகமெங் கொற்றவற்கே. (கூ0)

(196) கொற்றவ னேயென்றுங் கோவணத்
தாயென்று மாவணத்தா
னற்றவ னேயென்று நஞ்சுண்டி
யேயென்று மஞ்சமைக்கப்
பெற்றவ னேயென்றும் பிஞ்ஞக
னேயென்று மன்மதனைச்
செற்றவ னேயென்று நாளும்
பரவுமென் சிந்தனையே. (கூக)

---

195. சிவபிரான் அணிந்துள்ள வெண்ணீறானது, அவனது சடையிலுள்ள நாகம்விட்ட உயிர்ப்பாற் பெருகிய தீப்பட்டு உருகிய சந்திரகலையின் ஊற்றொழுக்கை ஒத்துளது. உமாபாகமான அவன் திருமேனியானது கங்கையும், தெளிந்த நீருள்ள யமுனையுந் தம்முட்கூடிய சங்கமத்தை ஒத்துள்ளது எ-று. கங்கை, வெண்ணிறத்தது; யமுனை, கருநிறத்தது. கோப்பு — கலந்தநிலை, சங்கமம்.

196. கோவணத்தாய் — கீளொடுகூடிய கோவணத்தை உடையவனே! மா வணத்தால் நற்றவனே — மாட்சிமை தங்கிய வண்ணத்தொடு கூடிய தவமூர்த்தியே! வண்ணம் — தவ வடிவம். ஆல் உருபு — ஒடுப் பொருளது. நஞ்சுண்டி என்பதனுள், டகரம் பெயரிடைநிலை. அஞ்சு — ஆனஞ்சு, பஞ்சகவ்வியம்; பஞ்சகிருத்தியமுமாம். பிஞ்ஞகன் — [பிஞ்ஜக: வடசொல் — சங்கரிப்போன்] சிவபிரான். பிறவெளிப்படை.

(197) சிந்தனை செய்ய மனமமைத்
தேன்செப்ப நாவமைத்தேன்
வந்தனை செய்யத் தலையமைத்
தேன்கை தொழவமைத்தேன்
பந்தனை செய்வதற் கன்பமைத்
தேன்மெய் யரும்பவைத்தேன்
வெந்தவெண் ணீறணி யீசற்
கிவையான் விதித்தனவே. (கூஉ)

(198) விதித்தன வாழ்நாள் பெரும்பிணி
வித்தைகள் கொண்டுபண்டே
கொதிப்பினி லொன்றுங் குறைவில்லை
குங்குமக் குன்றனைய
பதித்தனங் கண்டனங் குன்றம்வெண்
சந்தனம் பட்டனைய
மதித்தனங் கண்டன நெஞ்சினி
யென்செய்யும் வஞ்சனையே. (கூஅ)

---

197. பந்தனை — பிணித்தல்; 'பத்திவலையிற் படுவோன்' ஆதலால், 'பந்தனை செய்வதற் கன்பமைத்தேன்' என்றார். அமைத்தல், விதித்தல் — நியமித்துக்கொள்ளுதல். பிற வெளிப்படை.

198. இது தலைவிகூற்று. வாழ்நாள், பெருநோய்கள், வித்தைகள் என்பன ஆதியே என்பால் நியமிக்கப்பட்டுள்ளன. (இவற்றால் உண்டாவனவன்றி) வேறு மனவேதனைகளையும் யான் அடைந்துவருவதிற் குறைவில்லை. குங்குமக்குன்றுபோன்ற என்கொங்கைகளின் பருமையைக் கண்டேம். அக்குன்றம் வெண்சந்தனத்தைப் பூசியது போன்ற சந்திரனது நிலவின் கொடுமையையும் கண்டேம். நெஞ்சம் எனக்குச் செய்யும் வஞ்சனை இனி யாதுளது ? எ—று. 'குங்குமஞ் சாந்தம் கொட்டாப் பொங்குவெம் முலைகள்' (கம்பரா.) என்பவாகலின், கொங்கைகளில் அவ்விரண்டும் பூசப்படுவன வாகும். கொதிப்பு — மனவேதனை. பதித்தனம் — மேலாய தனங்கள். மதித்தனம் — சந்திரனது நிலவின் கொடுமை. இதற்கு வேறுபொருள் கூறுவாருமுளர்,

(199) வஞ்சனை யாலே வரிவளை
கொண்டுள்ள மால்பனிப்பத்
துஞ்சும் பொழுது முறத்தொழு
தேன்சொரி மாலருவி
அஞ்சன மால்வரை வெண்பிறை
கவ்வியண் ணுந்தனைய
வெஞ்சின யானையி னீருரி
மூடிய வீரனையே. (கூசு)

(200) வீர னயனரி வெற்பலர்
நீரெரி பொன்னெழிலார்
காரோண் கடுக்கை கமலந்
துழாய்விடை தொல்பறவை
பேரோண் பதிநிறந் தாரிவ
ரூர்திவெவ் வேறென்பரால்
யாரு மறியா வகையெங்க
ளீசர் பரிசுகளே. (கூ0)

---

199. யானையின் தோலைப்போர்த்த வீரனான ஈசன், வஞ்சனையோடு என் கைவளைகளைக் கவர்ந்து கொள்ளுதலால் உள்ளம் மயக்கங்கொண்டு நடுங்க, அதனால் இறந்துபடும் பொழுதும் அவனையே மிகவும் தொழலானேன் எ-று. கறுத்த மலையொன்று, வெண்பிறையைக் கௌவி மிளிர்ந்துநின்றது போன்ற யானை என்க.

200. ஈசன் திரிமூர்த்தியுருவாயுள்ளான் என்று கூறுவது இப் பாட்டு. (சிவனது) பெயர்கள்:—அரன், அயன், அரி என்பன. அவன் வாழும் பதி:—வெற்பு (கயிலை), அலர் (பதுமம்), நீர் (பாற்கடல்) ஆகும். அவனது நிறம்:—எரி (வண்ணம்), பொன் (வண்ணம்), கார் (வண்ணம்) ஆம். அவன் மாலைகள்:—கடுக்கை (கொன்றை), கமலம், துழாய் என்பன. அவனூர்திகள்:—இடபமும், அன்னம் கருடனாகிய பறவைகளுமாம். இவ்வாறு எங்கள் ஈசரது பரிசுகள் யாவரும் அறியாவகையில் வேறுவேறாக உள்ளன என்று

(201) பரியா தனவந்த பாவமும்
பற்றுமற் றுப்பணிந்தார்க்
குரியா னெனச்சொல்லி யுன்னுட
னாவ னெனவடியார்க்
கரியா னிவனென்று காட்டுவ
னென்றென் றிவையிவையே
பிரியா துறையுஞ் சடையா
னடிக்கென்றும் பேசுதுமே. (௬௧)

(202) பேசுவ தெல்லா மரன்றிரு
நாமமப் பேதைநல்லாள்
காய்சின வேட்கை யரன்பா
லதுவறு காற்பறவை

---

கூறுவர் எ-று. காலருத்திர மூர்த்தியாகலின், 'வீரன்' என்றார். தொல்பறவை - பழைமையாகவுள்ள அன்னமும் கருடனும். வீரனிறையணி.

201. பாவமும் பற்றுமற்றுப் பணிந்த அடியார்க்குத் தான் உரியவனென்றும், அவர்க்கு 'உன்னுடனாகுவன்' என்றும் சொல்லிக்கொண்டு, அவர்க்கும் தன்னை அரியவனாக ஈசன் காட்டுகின்றான் (இஃதென்னே)— என்று இத்தகைய குறைச்சொற்களையே அவ்வீசன்திறத்தில் நாம் பேசுவோம் எ-று. அவனையன்றி வேறறியாத எம்போன்றவர்க்கு மிக எளியன் போலக்காட்டி அரியனாயுள்ளானாதலால், அவன்பக்கல் யாங்கள் இவ்வாறு குறைகூறும்படி யாயிற்று என்பது கருத்து. இரண்டாமடியில் 'என' என்ற எச்சங்கள் சொல்லி என்பதனுடனும், அச் 'சொல்லி' என்பது 'காட்டுவன்' என்பதனுடனும் இயைந்தன. சடையானடிக்கு - சடையான் திறத்தில்.

202. இப்பேதைப்பெண் பேசுவன யாவும் ஈசனது திருநாமங்களே. வெறுப்பற்ற இவளது வேட்கைமுழுதும் அவனிடமே உள்ளது. அவன் முடிமேற் சூடிய கொன்றையையும், பூசின சாந்தையும் தன் தனங்களிற் கொண்டு முயங்கவேண்டி இவள் அவனைத் தொழாநின்றாள்; இக்கூற்றொன்றும் பொய்யன்று எ-று. முடிமேலது கொன்றையும் பூசியசாந்தும் முயங்க

மூசின கொன்றை முடிமே
லதுமுலை மேன்முயங்கப்
பூசின சாந்துந் தொழுமா
லிவையொன் றும் பொய்யலவே. (கஎ)

(203) பொய்யா நரகம் புகினுந்
துறக்கினும் போந்துபுக்கிங்
குய்யா வுடம்பினொ டூர்வ
நடப்ப பறப்பவென்று
கையா விளியினும் நானில
மாளினும் நான்மறைசேர்
மையார் மிடற்று னடிமற
வாவரம் வேண்டுவனே. (கஅ)

(204) வேண்டிய நாள்களிற் பாதியுங்
கங்குல் மிகவவற்றுள்
ஈண்டிய வெங்நோய் முதலது
பிள்ளைமை மேலதுமூப்

---

என இயைக்க. அறுகாற் பறவை — வண்டு. மூசின — மொய்த்த. இது தோழி கூற்று.

203. நரகம் புகுவதாயினும், இம்மையின்பங்களைத் துறந்தாலும், ஊர்வன நடப்பன பறப்பனவாகிய தாழ்பிறவிகளிற் பிறந்து நைந்து இறந்தாலும், இவ்வுலகை யாண்டாலும் ஈசனடி மறவாத வரமொன்றையே யான் வேண்டுவேன் எ—று. ஊர்வ நடப்ப பறப்ப (ஆகிய) உய்யா உடம்பொடு என்றும் போந்துபுக்கு விளியினும் என இயையும். உய்யா உடம்பு — பிறவி நீங்கி உய்தற்குரிய வாகாத உடற்பிறப்பு.

204. வேண்டிய நாள்களில் — மக்கட்கு விதிக்கப்பட்ட ஆயுட் காலத்தில்: பாதி இரவிற் கழிவது; மிக்க பாதியுள், நோய்பெருகுதற்குரிய முதல்சில பிள்ளைப்பருவமாம். அதற்கு மேல் அமைந்தது முதுமைப்பருவம். இவ்விருநிலைகட்கும் இடைப்பட்ட ஆண்டுகளிடத்தன, அச்சம் வெகுளி அவா

பாண்டின வச்சம் வெகுளி
யவாவழுக் காறிங்ஙனே
மாண்டன சேர்தும் வளர்புன்
சடைமுக்கண் மாயனையே. (கக)

(205) மாயனன் மாமணி கண்டன்
வளர்சடை யாற்கடிமை
யாயின தொண்டர் துறக்கம்
பெறுவது சொல்லுடைத்தே
காய்சின வானை வளருங்
கனக மலையருகே
போயின காக்கையு மன்றே
படைத்தது பொன்வண்ணமே. (ஙு)

முற்றும்.



அழுக்காறு ஆகிய தீக்குணங்கள்; இங்ஙனமே காலமுழுதும் கழிந்தன. இப்போதே முக்கண்மாயனை யாம் தியானித்துய்வோம் எ-று.

205. ஈசற்கு அடிமைத் தொண்டரானவர் வீடுபெறுவர் என்பது சொல்லளவே யானதோ? கனகமயமான மேருமலையை அணுகிய காகமும் அப்போதே பொன்வண்ணமாவது கண்கூடன்றோ எ-று. "பொற்குன்றஞ் சேர்ந்ததோர் காக்கை பொன்னாகும்" என்றார் ஆளுடை நம்பிகளும் (தேவா.)

௳

# சேரமான் பெருமாள் நாயனார்

## அருளிச்செய்த

# திருவாரூர் மும்மணிக் கோவை.

அகவல்

(206) விரிகடல் பருகி யளறுபட் டன்ன
கருநிற மேகங் கன்முக டேறி
நுண்டுளி பொழிய நோக்கி யொண்டொடி
பொலங்குழை மின்னப் புருவ வில்லிட்
டிலங்கெழிற் செவ்வாய் கோப மூர்தரக்
கைத்தல மென்னுங் காந்தண் மலர

---

* மும்மணிக் கோவை என்பது, ஆசிரியம், வெண்பா, கலித்துறை என்ற பாக்கள் மூன்றும் மாறிமாறி வர முப்பது செய்யுட்களால் மணிக் கோவை போல அந்தாதித் தொடையில் அமைக்கப்படும் பிரபந்தமாகும். இம் மும்மணிக்கோவை, சேரமான் பெருமாள் நாயனாரால் திருவாரூர்ச் சிவபிரான்மேற் பாடப்பெற்றது. இந்நாயனார் ஆளுடைய நம்பிகளுடன் திருவாரூர்ச் சிவபிரானைத் தரிசித்தபோது, அந் நம்பிகள் கேட்டுவக்க இக் கோவையைப் பாடினரென்பர் சேக்கிழார். இது பதினொராந் திருமுறையில் அடங்கிய சிவனடியார் பிரபந்தங்களுள் ஒன்றாகும்.

206. இது, கார்ப்பருவங் கண்டிரங்கிய தலைவியின் பிரிவாற்றாமையை விளைந்து தோழி கூறியது.

சூற்கொண்ட கருமேகமானது, மலைமுகட்டில் ஏறி மழைத்துளிகளைப் பொழிதலைக் கண்ட என் தோழியும், இக் கார் காலத்தின் இயல்புகளுடையளாய்ப் புனலைப் பொழிந்து காட்டினள்; இப்பருவத்தே வருவன் என்று பிரிந்துசென்ற தலைவர் இன்னும் வாராமையால், அவர் மனம், திருவாரூர் எல்லையில் அமைந்த பலிபீடக்கல்லே போலும் எ-று. கார்ப் பருவத்துக் கேற்பத் தலைவியும், காதிற் குழைகளாகிய மின்னு விளங்கவும்,

முத்திலங் கெயிறெனு முல்லை யரும்பக்
குழலுஞ் சுணங்குங் கொன்றை காட்ட
எழிலுடைச் சாய விளமயில் படைப்ப
உண்ணிறை யுயிர்ப்பெனு மூதை யூர்தரக்
கண்ணீர்ப் பெருமழை பொழிதலி னுண்ணிறத்
தஞ்சனக் கொழுஞ்சே றலம்பி யெஞ்சா
மணியும் பொன்னும் மாசறு வயிரமும்
அணிகிள ரகிலு மாரமு முரிஞ்சிக்
கொங்கை யென்னும் குவட்டிடை யிழிதரப்
பொங்குபுயல் காட்டி யோளே கங்கை
வருவிசை தவிர்த்த வார்சடைக் கடவுள்
அரிவை பாகத் தண்ண லாரூர்
எல்லையி லிரும்பலி சொரியும்
கல்லோ சென்ற காதலர் மனமே. (௧)

---

புருவமாகிய வானவில் தோன்றவும், செவ்வாயாகிய இந்திரகோபம் ஊரவும், கைத்தலங்களாகிய காந்தள் மலரவும், பற்களென்னும் முல்லை அரும்பவும், குழலுந் தேமலுங் கொன்றைகளைத் தோற்றுவிக்கவும், தன்சாயலானது இளமயிலின் தோற்றந்தரவும், பெருமூச்செனும் ஊதைக்காற்று வீசவும், கண்ணீராகிய பெருமழையைப்பொழிந்ததால் அவைபெருகி அக்கண்ணினுள்ள அஞ்சனச் சேற்றில் அளைந்து, மணி பொன் வயிரம் அகில் சந்தனம் இவற்றை உரிஞ்சிக் கொங்கைகளாகிய மலைமுகட்டிடையே இழிய, அதனாற் கார்ப்பருவத்தின் நிலைகளைத் தானும் புலப்படுத்தினள் என்றபடி. வானவில்விடல், இந்திரகோபமூர்தல், காந்தள் முல்லை கொன்றையாகிய முல்லைப்பூக்கள் மலர்தல், மயில் ஆலுதல், வாடைவீசல் முதலியன கார்காலத்துக்கு உரியவாதல் கண்டு கொள்க. தலைவன்குறித்த பருவத்தையே நினைந்துவந்தமையின் தலைவியும் அப்பருவநிலையடைந்தனள் என்பது குறிப்பு. இரும்பலி சொரியும் கல்—பலிபீடக் கல்.

வெண்பா

(207) மனமா லுருதேமற் றென்செய்யும் வாய்ந்த
கனமால் விடையுடையோன் கண்டத்—தினமாகித்
தோன்றினகார் தோன்றிலதேர் சோர்ந்தனசங் கூர்ந்
கான்றனநீ ரேந்திழையாள் கண். [தனபீர் (உ)

கட்டளைக் கலித்துறை

(208) கண்ணார் நுதலெந்தை காமரு கண்ட மெனவிருண்ட
விண்ணா லுருமொடு மேலது கீழது கொண்டல்விண்ட
மண்ணார் மலைமே லினமயி லான்மட மானனைய [(ங)
பெண்ணா மிவளினி யென்னாய்க் கழியும் பிரிந்துறைவே

அகவல்

(209) உறைகழி யொள்வாண் மின்னி யுருமெனும்
அறைகுரன் முரச மார்ப்பக் கைபோய்

---

207. இதுவும் அத்துறை. இடபவாகனனான ஈசனது கண்டத்தின் இனம்போல (நீனிறங்கொண்டு) கார்மேகந் தோன்றியது. இப்பருவத்தில் வருதற்குரிய அவர் தேரோ தோன்றவில்லை. அதனால் நம் ஏந்திழையாளது கைவளைகள் கழன்றன. பசலைநிறம் மேனியில் ஊர்ந்தது. கண்கள் நீரைப் பொழிந்தன. இவ்வாறு காதலால் மனமயக்கம் கொள்ளாமல் இவள் வேறு என் செய்யவல்லள் எ—று.

208. எந்தையாகிய ஈசனது நீலகண்டம் போன்று இருண்ட மேகம் இடியுடன்கூடி மேலிடத்துள்ளது. கீழிடத்தோ, மலைச்சாரலில் இனம் இனமாக மயில், ஆனிரை, மடமான்கள் ஆகியவை (கலந்து மகிழ்வன). இவற்றைக் கண்ட பெண்பாலான இவட்குத் தலைவனைப் பிரிந்துறையும் வாழ்வு எத்தன்மையதாகுமோ (தெரிந்திலேன்) எ—று. கொண்டல் விண்ட மண் — மேகத்தின் பொழிவாற் சிதறுண்ட மண். மலைமேல் இனமயில் ஆல் என்றும், மடமான் அனைய இவள் என்றும் பிரித்துப் பொருள் கொள்ளினும் ஆம்; இனமயிலால் – இனமயில்கள் (உள்ளனவாம்); ஆல் – அசை என்க. 'இள மயிலால்' என்றும் பாடம்.

209. கார்ப்பருவங் கண்டிரங்கிய தலைவிகூற்று:— கார்வானம், உறை

வெஞ்சிலை கோலி விரிதுளி யென்னு
மின்சரந் துரந்தது வானே நிலனே
கடிய வாகிய களவநன் மலரொடு
கொடிய வாகிய தளவமு மந்தண்
குலைமேம் பட்ட கோடலுங் கோபமோ
டலைமேம் பட்ட காந்தளு மிவற்றொடு
காயா வெந்துயர் தருமே யவரே
பொங்கிரும் புரிசை போக்கற வளைஇக்
கங்குலும் பகலுங் காவல் மேவி
மாசறு வேந்தன் பாசறை யோரே
யானே இன்னே
அலகி லாற்ற லருச்சுனற் கஞ்ஞான்
றுலவா நல்வர மருளிய வுத்தமன்
அந்த ணாரூர் சிந்தித்து மகிழா
மயரிய மாக்களைப் போலத்
துயருழந் தழியக் கண்டுயி லாவே. (ச)

---

*ழித்த ஒள்வாள்போல மின்னவும், இடியெனும் அதிர்குரல் முரசம் ஆர்ப்பவும், தன் வில்லை வளைத்து மழைத்துளிகளாகிய சரங்களைப் எய்வதாயிற்று. அதனால் களா, வெண்காந்தள், செங்காந்தள், காயா என்ற மரங்கள் மலர்ந்து இந்திர கோபத்துடன் கொடுந்துயர் விளைப்பனவாயின. இனி, வேந்தற்கு உற்றுழிப் பிரிந்த அவரோ (தலைவரோ) எனின், பகைவரது பெரிய மதிலரணை அவர்போக்கறும்படி வளைத்து இரவும் பகலுங் காவலை மேற்கொண்டவராய், வேந்தனது பாசறையில் அமர்ந்தனர். யானோ, திருவாரூரைச் சிந்தித்து மகிழாத அறிவு கலங்கிய மாக்களைப்போலத் துயருழந் தழிதலால், கண்கள் துயில் பெறாவாயின எ-று. கைபோய் – வினைசெய்யுந் திறங்கொண்டு. முல்லைநிலப் பூக்கள் பிரிந்தார்க்குக் காமநோய் பெருக்குவன. கோடல் – வெண்காந்தள். புரிசை – மதிலரண். இன்னே – இப்போதே. மயரிய – மயக்கமுற்ற. (15.) நல்வரம் – பாசுபதம் அளித்தது.

வெண்பா

(210) துயிலாநோ யாந்தோன்றத் தோன்றித்தீத் தோன்ற
மயிலால வந்ததால் மாதோ—அயலாய
அண்டத்துக் கப்பாலா னந்திங்கட் கண்ணியான்
கண்டத்துக் கொப்பாய கார். (ரு)

கட்டளைக் கலித்துறை

(211) காரு முழக்கொடு மின்னொடு வந்தது காதலர்தந்
தேருந் தெருவுஞ் சிலம்பப் புகுந்தது சில்வளைகள்
சோருஞ் சிலபல வங்கே நெரிந்தன துன்னருநஞ்
சாரு மிடற்றண்ண லாரூ ரனைய வணங்கினுக்கே. (சு)

அகவல்

(212) அணங்குறை நெடுவரை யருமை பேணது
மணங்கமழ் தெரியல் சூடி வைகலும்

---

210. இதுவும் அது: ஈசனது நீலகண்டத்தை ஒத்த கார்வானம் தூக்கமின்றித் துயருழத்தலாகிய நோய் எமக்குத் தோன்றவும், தோன்றிமரத்தில் தீப்போலும் மலர் தோன்றவும், மயில்கள் ஆரவாரித்து ஆடும்படியும் வந்தடைந்தது (என் செய்கேன்) எ—று. தோன்றி – மழைக்குத் தளிர்க்கும் செங்கிறப் பூ மரம்; செங்காந்தள் என்ப (பிங்.) 'கார்க்கேற் றெரிவனப்புற்றன தோன்றி' என்ப (கலித். பக். 630).

211. குறித்த கார்ப்பருவத்துத் தலைவன்வரக் கண்டு தோழி மகிழ்ந்து கூறியது:— முழக்கோடும் மின்னோடும் கார்மேகம் வந்தது. அக் காரோடு காதலர்தேரும் தெருவில் ஒலிக்கும்படி புகுந்தது. அதனால், திருவாரூரனைய நம் தலைவிக்குக் கழன்றுவீழ்ந்த சிறுவளைகள் முன்கையிற் செறியலாயின எ—று. நெரிதல் – செறிதல்; 'நெரிமுகைக் காந்தள்' (பரிபாடல்) என்புழிப் போல. ஐய அணங்கு – வியக்கத்தக்க தெய்வப்பெண் போல்வாள், தலைவி; 'ஐய காமனார்' என்றார் பிறரும் (சீவக.).

212. பொருள்வயிற் பிரிவில், தலைவியது ஆற்றாமைபற்றித் தோழி கூறியது. இவ் வேந்திழையாள், (நம் தலைவர்) வருத்துந் தெய்வங்களையுடைய

விடுசுடர் நெடுவேல் முன்னடி விளக்காக்
கடுவிசைக் கான்யாற்று நெடுநீர் நீந்தி
ஒருதனிப் பெயரும் பொழுதிற் புரிகுழல்
வானர மகளிர்நின் மல்வழங் ககலத்
தானாக் காத லாகுவ ரென்று
புலவி யுள்ளமொடு பொருந்தாக் கண்ணள்
கலைபிணை திரியக் கையற வெய்தி
மெல்விர னெரித்து விம்மி வெய்துயிர்த்
தல்லியங் கோதை யழலுற் றூஅங்
கெல்லையி விருந்துய ரெய்தினள் புல்லார்
திரிபுர மெரிய வொருகணை தெரிந்த
அரிவை பாகத் தண்ண லாரூர்
வளமலி கமல வாண்முகத்
திளமயிற் சாய லேந்திழை தானே. (எ)

---

மலைவழியிற் செல்லுதலருமையையும் பொருட்படுத்தாமல், ஆங்குள்ள மணமலர்களைச் சூடியவராய் இரவில் தம் கையிலுள்ள ஒள்ளிய வேலை முன்னடிகாட்டும் விளக்காகக் கொண்டு, இடைப்பட்ட கான்யாற்றுக் கடுவிசை நீத்தத்தையும் கடந்து வேறு துணையின்றிச் செல்லுங்காலத்து, (தேவகுமாரனைப்போல வரும்) 'நமது நீண்ட வலிய மார்பில் அணைதற்கு வானரமகளிர் மிக்க காதலுடையர் ஆவர்போலும்' என்று ஐயுற்றுப் புலந்த உள்ளமுடன் துயிலாக் கண்ணளாகியும், மான்கள் தம் துணையுடன்திரியச் செயலற்றும், விரல்களைநெரித்து விம்மிப் பெருமூச்செறிந்தும் திருமகள் அழுவதுபோல எல்லையற்ற பெருந்துயர் எய்தினள் எ-று. முன்னடி விளக்கா — அடிவைப்பில் முன்பக்கம் ஒளிரும் விளக்காக. "எல்லிற் றென்னான் வென்வே லேந்தி, நசைதர வந்தவன்" (அகநா. 362) ஆதலின், 'நெடுவேல் முன்னடிவிளக்கா' என்றார். வான் அரமகளிர் — தேவமகளிர். ஆறு — விரம்பாத.

வெண்பா

(213) இழையார் வனமுலையீர் ஈர்ந்தண் புனத்தி
னுழையாகப் போந்ததொன் றுண்டோ—பிழையாச்சீர்
அம்மா னனலாடி யாரூர்க்கோ னன்றுரித்த
கைம்மானே ரன்ன களிறு. (அ)

கட்டளைக்கலித்துறை

(214) களிறு வழங்க வழங்கா வதர்கதிர் வேல்துணையா
வெளிறு விரவ வருதிகண் டாய்விண்ணி னின்றிழிந்த
பிளிறு குரற்கங்கை தாங்கிய பிஞ்ஞகன் பூங்கழல்மாட்
டொளிறு மணிக்கொடும் பூணிமை யோர்செல்லு மோங்
கிருளே (கூ)

---

213. வேழம் வினாதல்: அஃதாவது — பாங்கியிற் கூட்டம் விரும்பிச் சென்ற தலைவன், தலைவியுடன் அவள் இருந்த புனத்திடைச் சென்று, அன்னோர் குறிப்பறிதற் பொருட்டு, தான் வேட்டையாடித் துரத்திவந்த களிறொன்று இப்பக்கமாகப் புக்கதோ என்று அவர்களை உசாவுதல். பொருள் வெளிப்படை. உழையாக – பக்கமாக; மான்போல ஓட்டமெடுத்து எனினுமாம். பிழையாச் சீர் – குற்றமில் புகழ். கைம்மான் – யானை. ஈசனால் தோலுரிக்கப்பட்ட வெஞ்சினயானை போன்றதொன்று என்றான், தன்னாற்றல் தோற்ற.

214. தலைவன் குறியிடமாக இரவுவருதலைப் பாங்கி ஏதங்கூறி விலக்கல்:— களிறுகள் இயங்குதலால் மக்களெவரும் இயங்காத மலைவழியில் வேலே துணையாகக்கொண்டு செறிந்த நள்ளிருளில் அறிவின்றி நீ வருவாயோ எ–று. 'வெற்றடியேனை விடுதிகண்டாய் விடிலோ கெடுவேன்' (திருவாச.) என்புழிப் போல, 'வருதிகண்டாய்' என்பது வரல் தகாது என்பதுபட நின்றது. சிவபிரானை வழிபடவேண்டித் தேவர் இயங்கும் நள்ளிருள் என்க. ஆலயங்களில் இராப் பூசை தேவர் நிகழ்த்துவதென்பர். வெளிறுவிரவ – அறிவு மடம்பட. "கல்லடர்ச் சிறுநெறி எஃகு துணையாக" (அகம்) "மொய்யிருள்வாய் வழங்கா அருநெறி வழங்கல்" (திருக்கோ) ஏதம்பயக்கும் என்று தோழி விலக்கியவாறு. பிளிறுதல் – முழங்குதல். ஒளிறுதல் – ஒளிவிடல்.

அகவல்

(215) இருள்புரி கூந்தலு மெழினலம் சிதைந்தது
மருள்புரி வண்டறை மாலையும் பரிந்த
தொண்ணுதற் றிலகமு மழிந்தது கண்ணும்
மைந்நிற மொழிந்து செந்நிற மெய்தி
உள்ளறி கொடுமை யுரைப்ப போன்றன
சேதகம் பரந்தது செவ்வாய் மேதகு
குழைகெழு திருமுகம் வியர்ப்புள் ளூறுத்தி
இழைகெழு கொங்கையு மின்சாந் தழீஇக்
கலையுந் துகிலும் நிலையிற் கலங்கி
என்னிது விளைந்த வாறென மற்றி
தன்ன தறிகில மியாமே செறிபொழில்
அருகுடை யாரு ரமர்ந்துறை யமுதன்
முருகுவிரி தெரியன் முக்கண் மூர்த்தி
மராமரச் சோலைச் சிராமலைச் சாரற்
சுரும்பிவர் நறும்போது கொய்யப்
பெருஞ்செறு வனத்தில்யான் பிரிந்ததிப் பொழுதே.(ய)

---

215. தலைவன் தலைவியர்க்குள் கூட்டமுண்மையைத் தோழி முன்னுறவுணர்ந்து கூறியது. ஈசனது சிராமலைச் சாரலில் என் தோழி (தலைவி) சூடவேண்டி நறுமலர் கொய்துவருதற்கு நான் அவளைப் பிரியநேர்ந்தது சிறிது முன்புதான். (இச் சிறுகாலத்துள்ளே) இவளது கூந்தலணி சிதைந்தது. மாலை பரிந்தது. நெற்றித் திலகமும் அழிவுற்றது. கண்களும், தீட்டிய மைநிறம் மாறிச் செந்நிறம் பெற்று, உள்ளறிந்த கொடுவினையை உரைப்பன போன்றன. செவ்வாயும் சேறுபட்டது. திருமுகம் வியர்வை உட்கொண்டும், கொங்கைகள் பூசிய சந்தனம் அழிந்தும், அணிந்த மேகலையும் துகிலும் நிலை கலங்கியும் (போனமையால்) 'என்னிது விளைந்தவாறு' என்று (ஆராய்ந்தும்) மற்றதன் காரணம் யாம் அறியகில்லேம் எ-று. எழில் நலம் — ஈண்டுப் பின்னலழகின் சிறப்பு. பரிதல் — மலர் சிதறுதல். திலகம் — நெற்றிப் பொட்டு; "திலகங் கிடந்த திருநுதலாய் (முத்தொள்.) என்ப. உள்ளறிகொடுமை — மன

வெண்பா

(216) பொழுது கழிந்தாலும் பூம்புனங்காத் தெள்கி
யெழுது கொடியிடையா யேகான்—தொழுதமரர்
முன்னஞ்சேர் மொய்கழலான் முக்கணன் நான்மறையான்
மன்னுஞ்சேய் போலொருவன் வந்து. (கக)

கட்டளைக்கலித்துறை

(217) வந்தா ரெதிர்சென்று நின்றேற்
கொளிரும்வண் டார்தழைகள்
தந்தா ரவையொன்று மாற்றகில்
லேன்றக்கன் வேள்விசெற்ற
செந்தா மரைவண்ணன் தீர்த்தச்
சடையன் சிராமலைவாய்க்
கொந்தார் பொழிலணி நந்தா
வனஞ்சூழ் குளிர்புனத்தே. (கஉ)

---

மறியச்செய்த துணிவு. சேதகம் – வண்டல், சேறு (திவா.); இஃது அதரபானத்தா லானதாம். தெரியல் – மாலை. அமுதனது சிராமலைச் சாரல் என்க. சிராமலை – திருச்சிராப்பள்ளிக் குன்றம். பெருஞ்செறு – பெரிய நீர்நிலை; 'செறுவில் வாளைகளோட' (தேவா.) என்ப. 'யாமே' என்றது, ஆயத்தாரை உளப்படுத்தி.

216. புனத்திடைத் தலைவன் வருகையைத் தோழி தலைவிக்கு உரைத்தது:—கொடியிடையாய்! முக்கண்ணனது சேயான முருகனைப்போல ஒருவன் இங்குவந்து, பொழுது கழிந்தாலும் இப் பூம்புனத்தைக் காப்பவன் போலத் தங்கி, (தன் உள்ளக்கிடையைக் கூறவும்) கூசியவனாய் வெளியே போதவனாக உள்ளான் எ–று. முன்னம் – முற்பட்டு; திருமுன்பு எனினும் ஆம். எள்கி – கூச்சமுற்று; 'பழிவந்து மூளுமென் றெள்குதுமே' (திருக்கோவை.) என்ப.

217. தலைவன் அளித்த தழையைத் தான் ஏற்றதனைத் தோழி தலைவிக்குக் கூறியது. காவற்புனத்தினின்று போகாமல் எம்மெதிர் வந்த

அகவல்

(218) புனமயிற் சாயற் பூங்குழல் மடந்தை
மனைமலி செல்வ மகிழா ளாகி
ஏதில னொருவன் காதல னாக
விடுசுடர் நடுவணின் றடுதலி னிழலும்
அடியகத் தொளிக்கு மாரழற் கானத்து
வெவ்வினை வேடர் துடிக்குரல் வெரீஇ
மெய்விதி ரெறியுஞ் செவ்விய ளாகி
முள்ளிலை யீந்து முளிதா ளிலவமும்
வெள்ளிலும் பரந்த வெள்ளிடை மருங்கிற்
கடுங்குரற் கதநாய் நெடுந்தொடர் பிணித்துப்

---

தலைவரைச் சந்தித்த எனக்கு, விளங்காநின்ற பூந்தாரையும் தழையுடையையும் அவர் விரும்பியளித்தார். அவற்றிலொன்றையும் நான் மறுக்க முடியாதவளானேன் (ஏற்கலானேன்) எ-று. மாற்றகில்லாது ஏற்றதன் காரணம் புனத்திடைத் தம்மைத் தாக்கவந்த களிற்றினின்றும் காத்ததும், தம்பால் நீங்காமல் அன்புகாட்டுவதுமாம் என்பர் (திருக்கோவை). கொந்து—பூங்கொத்து. நந்தாவனம், காண்டாவனம் போல இடையகரம் நீண்டது. தீர்த்தச்சடையன்—கங்கைவேணியன். மாற்றுதல்—மறுத்தல்; 'உள்ளதின்றென்று மாற்றலன்' என்புழிப்போல (கம்பரா.).

218. தலைவியின் உடன்போக்குக்குச் செவிலித்தாய் வருந்திக் கூறியது. திருவாரூரினளான என் பூங்கொடிமடந்தை, தன் மனைப்பெருஞ் செல்வத்தில் மகிழ்ச்சிகொள்ளாளாய், அயலானொருவன் தன்காதலனாக அவன் பின்னே, அடியின்கீழ்த் தன்னிழல் மறையக்கூடிய நடுப்பகலில் மிக்க அனல் வீசும் பாலைவனத்திடையே, கொடுந்தொழில் புரியும் மறவேடுவர் கொட்டுந் துடியோசைக்கு அஞ்சி மெய்ந்நடுங்குந் தன்மையளாய், ஈந்தும் இலவமும் விளாவும் நெருங்கிய வெளியிடையில் அமைந்ததும், வேட்டை நாய்களைப் பிணித்த கயிற்றால் அரிக்கப்பட்ட கம்பத்தின் மேலிடமாக மரைமான்களின் உரிதோலை வேய்ந்து அதன் மயிர்களால் மூடப்பெற்றதுமான சிறுகுடிசையிலே

பாசந் தின்ற தேய்கா லும்பர்
மரையதள் வேய்ந்த மயிர்ப்புன் குரம்பை
விரிநரைக் கூந்தல் வெள்வாய் மறத்தியர்
விருந்தா யினள்கொல் தானே திருந்தாக்
கூற்றெனப் பெயரிய கொடுந்தொழி லொருவன்
ஆற்றல் செற்ற வண்ண லாரூர்ச்
செய்வளர் கமலச் சீறடிக்
கொவ்வைச் செவ்வாய்க் குயின்மொழிக் கொடியே.(கங)

வெண்பா

(219) கொடியேர் நுடங்கிடையாள் கொய்தாரான் பின்னே
அடியால் நடந்தடைந்தா ளாக—பொடியாக
நண்ணாரூர் மூன்றெரித்த நாகஞ்சேர் திண்சிலையான்
தண்ணாரூர் சூழ்ந்த தடம். (கச)

---

விரித்த நரைக்கூந்தலையும் வெளுத்த வாயையுமுடைய மறத்தியர்க்கு விருந்தாயினள் போலும் எ-று. ஏதிலன் — அயலான். நடுவண் — உச்சிவானம். விதிரெறிதல் — நடுக்கங்கொள்ளுதல். செவ்வியள் — தன்மையள். முளிதாள் — உலர்ந்த அடிமரம். வெள்ளிடை — வெளியிடம். வெள்ளில் — விளா, நெடுந் தொடர்ப் பாசம் என இயைக்க. பாசம் — கயிறு. உம்பர் — மேற்கூரை. அதள்— தோல், குரம்பை — சிறுகுடில். "அத்தம்...கூர்வேல் விடலை பொய்ப்பப் போகிச், சேக்குவள் கொல்லோ தானே தேக்கின், அகலிலை கவித்த புதல் போற் குரம்பை, ஊன்புழுக் கயரு முன்பிற், கான்கெழு வாழ்நர் சிறுகுடி யானே" (அகம். 315) என்ற சான்றோர்கூற்றும் ஒப்பிடுக.

(219) செவிலிக்குத் தோழி கூறியது:—உடன்போகிய என் தோழி தன் காதலனான தலைவன்பின்னே காலால் நடந்து சென்று, திருவாரூர் சூழ்ந்த பிரதேசத்தை இனிது அடைந்தவளாகுக எ-று. ஆக — ஆகுக. நண்ணார்— பகைவர். நாகம் — வாசுகி நாண். திண்சிலை — மேரு வில். தடம் — வளைப்பு, பிரதேசம்.

கட்டளைக் கலித்துறை

(220) தடப்பாற் புனற்சடைச் சங்கரன்
தண்மதி போன்முகத்து
மடப்பான் மடந்தை மலரணைச்
சேக்கையிற் பாகம்பிரீஇ
யிடப்பாற் றிரியின் வெருவு
மிருஞ்சுரஞ் சென்றனளால்
படப்பா லனவல்ல வாற்றமி
யேன்றையல் பட்டனவே. (௧௫)

அகவல்

(221) பட்டோர் பெயரு மாற்றலு மெழுதி
நட்ட கல்லும் மூதூர் நத்தமும்
பரன்முரம் பதரு மல்லது படுமழை
வரன்முறை யறியா வல்வெயிற் கானத்துத்
தேனிவர் கோதை செல்ல மானினம்

---

220. உடன்போக்கில் செவிலி இரங்கிக் கூறியது. ஈசனது சடையின் மதிபோன்ற முகத்தினையுடைய என் மடந்தை, ஒருசேக்கையில் (என் வலப்பக்கமாக அணைந்துகொண்டு துயிலுங்கால்) அவ்வணைப்புப் பிரிந்து இடப்பக்கமாக நான் மாறினும் வெருவக்கூடியவளாவள்; அத்தகையாள் (இப்போது) பெரும் பாலைவனத்துச் சென்றனளே! அங்கே நேரக்கூடிய துயரங்கள் அவளால் அடையக்கூடியன வல்லவே எ-று. "தழுவின கையிறை சோரிற் றமியமென் றேதளர்வுற், றழுவினை செய்யும் ... பேதை" என்றார் வாதவூரடிகளும் (திருக்கோவை). தடம் பாற் புனல் — சீரிய பால்போலும் நீருள்ள கங்கை. தடம் — பெருமை, சிறப்பு (திருக்கோவை. 10.) சங்கரனது சடைத் தண்மதி என இயைக்க. மடப்பால் — மடமைத்தனம். 'பாசம்பிரீஇ' என்றும் பாடம்.

221. மகட்போக்கிய செவிலி, சுரவொடும் பிறவொடும் கூறிவருந்தல்:— என் கோதை கடுவெயிற் கானத்தே தன் காதலனுடன் போதலால்,

அஞ்சி லோதி நோக்கிற் கழிந்து
நெஞ்செரி வுடைமையின் விலக்காது விடுக
கொங்கைக் கழிந்து குன்றிடை யடைந்த
கொங்கிவர் கோங்கமுஞ் செலவுடன் படுக
மென்றோட் குடைந்து வெயினிலை நின்ற
குன்ற வேய்களுங் கூற்றடைந் தொழிக
மாயிருங் கடற்றிடை வைக லாயிரம்
பாவையை வளர்ப்போ யண்ணணிப் பாவையை
விலக்காது பிழைத்தனை மாதோ நலத்தகு
அலைபுன லாரு ரமர்ந்துறை யமுதன்
கலையமர் கையன் கண்ணுத லெந்தை
தொங்கலஞ் சடைமுடிக் கணிந்த
கொங்கலர் கண்ணி யாயின குரவே. (கசு)

---

அவளது கண்ணழகிற்குத் தோற்றமை பற்றி உண்டான நெஞ்செரிவோடு ஆங்குள்ள மானினம் அவளைத் தடுக்காமற் செல்லவிடுவனவாக. அவள் கொங்கைகட்குத் தோற்றுக் குன்றையடைந்த கோங்கமும், அவள் செலவுக்கு உடன்படுக. அவள் தோளுக்கு உடைந்து வெயிலிடை நிற்கும் வேய்களும் அவ் வெயிலால் கூற்றின்வாய்ப்பட்டு ஒழிக. எம் ஈசன் தன் முடிக்கண்ணியாக அணிந்த குரவமே! பெரிய சுரத்திடைநின்று நித்தமும் ஆயிரம் பாவைகளை வளர்ப்போய்! உனக்கு மிகவணியளாக வரும் என்பாவையைத் தடைசெய்யாமல், அக் குற்றத்தினின்று தப்பினையாவாய் எ-று. பட்டோர் – பகைவர் கவர்ந்த ஆனிரைகளை மீட்டபோது இறந்துபட்ட கரந்தைமறவர்; "ஆடவர், பெயரும் பீடு மெழுதி யதர்தொறும், பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்" என்றார் அகத்தினும் (131). நத்தம் – குடியிருப்பிடம், (பிங்.). பரல் முரம்பு அதர் – பருக்கைக் கற்களுள்ள வன்னிலத்து வழி; "பரன்முரம் பாகிய பயனில் கானம்" என்ப (அகம். 5). வரன் முறையாவது – பருவமழை பெய்யாமை என்க. அம் சில் ஓதி – அழகிய சிலவாய கூந்தலையுடையாள். கொங்கு இவர் – மணம் பொருந்திய. கடறு – பாலைவனம். குரவு – பாலைமரங்களுள் ஒன்று; இதன் பூ, பாவைபோல்வதாதலின் 'ஆயிரம் பாவையை வளர்ப்போய்' என்றார்; "தழைகெழு பாவை பலவும் வளர்க்கின்ற தண்குரவே" என்றார்

வெண்பா

(222) குரவங் கமழ்கோதை கோதைவே லோன்பின்
விரவுங் கடுங்கானம் வெவ்வா—யரவஞ்
சடைக்கணிந்த சங்கரன் ருர்மதனன் றன்னைக்
கடைக்கணித்த தீயிற் கடிது. (கள)

கட்டளைக் கலித்துறை

(223) கடிமலர்க் கொன்றையுந் திங்களுஞ்
செங்க ணரவுமங்கேழ்
முடிமல ராக்கிய முக்கணக்
கன்மிக்க செக்கரொக்கும்
படிமலர் மேனிப் பரம
னடிபர வாதவர்போல்
அடிமலர் நோவ நடந்தோ
கடந்தெம் மம்மனையே. (கஅ)

---

பாண்டிக்கோவையினும். அண்ணணி பாவை — மிக அணிமையில் வரும் என் பாவைபோல்வாள் (மகள்); "சேய்த்தன்றி அண்ணணித் தூராயின்" (முல்லைக்கலி. 8), 'அண்ணணிக் கொண்டான் (தொல். எழுத். 246, நச்). என்புழிப் போல, ஈண்டும் பாடமும் பொருளுங் கொள்க. பிழைத்தனை — பிழைத்தனை யாவாய். குரவு, சிவபிரானுகந்த தென்பது, 'குரவுநாண்மலர் கொண்டடியார் வழிபாடுசெய், விரவு நீறணிவார்' (தேவா.) என்பதனுலும் அறிக.

222. இதுவும் செவிலி கூற்று. குரவமலர் மணக்குங் கூந்தலையுடைய என்மகள் மாலையணிந்த வேலோன்பின் சென்ற கடுங்கானம், ஈசன் மன்மதனைக் கடைக்கணிட்டு எரித்த தீயினும் கொடுமை வாய்ந்தது எ—று. எதிர்ப்பட்டதை அக்கானம் எரித்துவிடக் கூடியது என்றபடி. கடைக்கணித்தல் — மூன்ருங் கண்ணுல் நோக்குதல். தான்சென்ற நிலத்துப் பூவே சூடவேண்டுதலின் 'குரவங்கமழ் கோதை' என்ருள்.

223. இதுவும் அது. கொன்றை, திங்கள், அரவுகளை முடிமல

அகவல்

(224) மனையுறை குருவி வளைவாய்ச் சேவல்
சினைமுதிர் பேடைச் செவ்வி நோக்கி
ஈனி லிழைக்க வேண்டி யாறு
அன்புபொறை கூர மேன்மேல் முயங்கிக்
கண்ணுடைக் கரும்பி னுண்டோடு கவரும்
பெருவளந் தழீஇய பீடுசால் கிடக்கை
வருபுன லூரன் பார்வை யாகி
மடக்கொடி மாதர்க்கு வலையாய்த் தோன்றிப்
படிற்று வாய்மொழி பலபா ராட்டி
உள்ளத் துள்ளது தெள்ளிதிற் கரந்து
கள்ள நோக்கமொடு கைதொழு திறைஞ்சி
எம்மி லோயே பாண அவனேல்
அமரரு மறியா வாதி மூர்த்தி
குமரன் றாதை குளிர்சடை யிறைவன்

---

ராகக் கொண்ட முக்கணக்கனும், பெருத்த செவ்வானம் போலும் விரிந்த திருமேனியுடையவனுமாகிய ஈசனை வணங்கித் துதியாதார் வறுமையால் வெயிலில் வருந்தியலைவது போல, என் அருமை மகளும் பாலையை நடந்து போலும் கடந்து சென்றனள் எ-று. அம் கேழ் – அழகிய ஒளிதங்கிய. 'அங்கே' என்றும் பாடம். செக்கர் ஒப்பாம்படி மலரும் மேனி என்க.

224. வாயில்வேண்டி வந்த பாணனொடு தோழி வெகுண்டு கூறியது:—தலைவனுடைய பார்வைவிலங்கு போன்றும், இளைய மகளிரை அகப்படுத்தும் வலைபோலத் தோன்றியும், உள்ளத்துள்ளதை வெளிப்படுத்தாது மறைத்துப் பொய்கலந்த சொற்களால் எம்மைப் பலபடப் பாராட்டியும், கள்ள நோக்குடன் எம்மைக் கைதொழுது பணிந்தும் எம் மனையில் வந்துள்ள பாண் மகனே! நீ குறித்த தலைவனோ எனில், (இப்பக்கம் நாடாமல்) இன்சொற் பரத்தையர் தம்வசமாகி, கண்ணாடியனைய தன்மையனாக உள்ளான் எ-று. (1-7) "மனையுறை குருவி...ஊரன்"— தன் பெடையின் கரு முற்றிவரும்

அறைகழ லெந்தை ஆரூ ராவணத்
துறையிற் றூக்கு மெழின்மென் காட்சிக்
கண்ணடி யனைய நீர்மைப்
பண்ணுடைச் சொல்லியர் தம்பா லோனே. (கக)

வெண்பா

(225) பாலாய சொல்லியர்க்கே சொல்லுபோய்ப் பாண்மகனே
ஏலாவிங் கென்னுக் கிடுகின்றாய்—மேலாய
தேந்தண் கமழ்கொன்றைச் செஞ்சடையான் றாள்சூடும்
பூந்தண் புனலூரன் பொய். (உ0)

---

பருவங் கண்டு அதற்கு ஈனில் ஒன்று அமைக்கவேண்டி ஆராவன்பின் மேன் மேலும் அப்பெடையைத் தழுவியதாய்க் கரும்பின் நுண்ணிய தோட்டிழை களைக் கவர்ந்துகொண்டுவரும் புனலூரன் என்க; என்றது, சிறுகுருவி யினமும் தம் பேடையிடம் பேரன்புகாட்டும் ஊரையுடைய னாயினும், புதல்வற் பெற்ற புனிறுதீர்ந்த எம்மைப் புறக்கணித்தவனாய் அயற்சேரி மகளிருடன் வாழ்தலை விரும்பலாயினன் என்பது குறிப்பு. "குன்முதிர் துள்ளு நடைப் பெடைக்கில் துணைச்சேவல் செய்வான், தேன்முதிர் வேழத்தின் வெண்பூக் குதர்செம்ம லூரன்" என்றார் வாதவூரடிகளும் (திருக்கோ. 269). ஈனில் — பிரசவ வீடு (குறுந். 18). அன்பு பொறை கூர — அன்பு கனமுற, முயங்கி — கலந்து; முயன்று எனினுமாம். பார்வை — பிறவிலங்கைப் பிடித்தற்குப் பழக்கிய மிருகம். 'பார்வை யாத்த பறைத்தாள் விளவின்' (பெரும்பாண்) என்ப. ஆரூர் ஆவணத் துறை — திருவாரூர்க் கடைச்சார்பு. "கையுங் காலுந் தூக்கத் தூக்கும், ஆடிப்பாவை போல, மேவன செய்து" (குறுந்.) பரத்தையர் கருத்துப்படி ஒழுகுபவனென்பது தோற்ற "ஆவணத்துறையிற் றூக்குங் கண் ணடியனைய நீர்மை" எனப்பட்டது. சொல்லியர் தம்பால் கண்ணடியனைய நீர்மையன் எனத் தலைவனுக்குரியதாக நீர்மையை மாற்றிப் பொருள்கொள்க. இனி கண்ணடியனைய நீர்மைச் சொல்லியர் என இயைத்து, கண்ணாடி எல் லார்க்கும் வனப்பு இத்தகையதென்று உணர்த்தல்போல, பிறர்க்கு அழகுத் தன்மை இத்'தன்மையதென்று உணர்த்துபவர் என்றும் ஆம்; "வனப்பிற்கெல் லாம் கண்ணடியனைய பாவாய்" என்றார் பிறரும் (சீவக.). கண்ணடி, விகாரம்.

225. இதுவும் அது. பாண்மகனே! பூம்புனலூரன் பொய்ம்

கட்டளைக் கலித்துறை

(226) பொய்யார் தொழினு மருளு
மிறைகண்டம் போலிருண்ட
மையார் தடங்கண் மடந்தையர்
கேட்கிற்பொல் லாதுவந்துன்
கையா லடிதொடல் செல்வவெற்
புல்லல் கலையலையல்
ஐயா விவைநன்கு கற்றாய்
பெரிது மழகியவே. (உக)

---

மொழிகளைப் பால்போலும் இன்சொல்லுடைய பரத்தையரிடமே சென்று சொல்லுக. ஏற்கத்தகாத அவற்றை எதன்பொருட்டு எம்மிடம் கட்டியுரைக்கின்றாய் எ-று. ஏலாதவை — தலைவர் "நின்பால் மெய்கொண்ட அன்பினர்" (திருக்கோவை) என்றாற் போல்வன. இடுகின்றாய் — இல்லாதன கூறுகிறாய்; 'படாததொரு வார்த்தை யிட்டன ரூரார்'' (சிலப்.) என்புழிப்போல. ஈசன் தான் சூடும் ஊரன் என்றாள், அவற்கு இது தகாதென்பது தோன்ற.

226. அணைந்தவழியூடல்: அஃதாவது, தோழியால் ஊடல் தணிவிக்கப்பட்டுப் பள்ளியிடத்தாளாகிய தலைமகள், ஆற்றாமை வாயிலாகப்புக்க தலைமகனோடும் புலந்து கூறியதாம். ஐயா! யான் இரங்கும்படி நீர் என் அடிதொட்டுப் பணியவேண்டா. என் மேனியைப் புல்லவேண்டா. என் ஆடையை இழுத்து அலைக்கவேண்டா. இச் சாகசங்களைப் புரிய நன்கு கற்று வந்தனைபோலும். மிகவும் அழகியன நும் செயல்கள்; மைவிழியாரான நின் சேரிப்பெண்டிர் இவற்றைக் கேட்பராயின், உமக்குப் பெருந்தீங்காக முடியும் எ-று. "நின் சேயிழையார் நலஞ்செய்த புல்லங்கள் மாட்டேம் தொடல்விடு நற்கலையே'' "கால்தான் தொடல் தொடரேல்விடு தீண்டல் எங் கைத்தலமே'' (திருக்கோவை.) என்பவை ஒப்பிடத்தகும். பொய்யார் தொழலும் — பொய்யடிமையில்லாா தொழுதவளவில்; பொய்மையுடையராய்த் தொழினும் எனினும் அமையும். நஞ்சுபோலும் கண்ணால் மருட்டிப் பிணிப்பவர் என்பாள், 'மையார் தடங்கண் மடந்தையர்' என்றாள். தலைவியின் அடிதொடல், ஊடற்காலத்து மனைவியுயர்வும் கிழவோன்பணிவும் பற்றி நிகழும் என்ப (தொல்.),

அகவல்

(227) அழகுடைக் கிண்கிணி யடிமிசை யரற்றத்
தொழிலுடைச் சிறுபறை பூண்டு தேரீர்த்
தொருகளி றுருட்டி யொண்பொடி யாடிப்
பொருகளி றனைய பொக்கமொடு பிற்றாழ்ந்து
பூங்குழற் சிறாரோடு தூங்குநடை பயிற்றி
அக்கரை யுடுத்தி யைம்படை கட்டி
ஒக்கலை யிருக்கு மொளிர்புன் குஞ்சிக்
குதலையங் கிளவிப் புதல்வன் றன்னை
உள்ளச் சொரிந்த வெள்ளத் தீம்பால்
உடைய வாகிய தடமென் கொங்கை
வேண்டாது பிரிந்த விரிபுன லூரன்
பூண்டாங் ககலம் புல்லுவ னெனப்போய்ப்
பெருமட முடையை வாழி வார்சடைக்
கொடுவெண் டிங்கட் கொழுநில வேய்க்குஞ்

---

னின் தலைமைக்கு இது தகாதென்பது தோன்றச் 'செல்வ' என்று விளித்தாள். 'செல்லலில்' என்றும் பாடம்.

227. பரத்தையிற்பிரிவிடைத் தலைமகனை நினைந்து தலைவி வருந்தல்:—நெஞ்சமே! என் இளம்புதல்வனை நினைந்தவளவிற் சுரக்குந் தீம்பாலை யுடைய என் கொங்கைகளைத் தழுவும் விருப்பமின்றிப் பிரிந்த தலைவரது பூணணிந்த மார்பினைப் புல்லுவன் என்று என்னைவிட்டு நீ அவரிடஞ்சென் றமையால், பெரிய மடமைக்குணம் உடையை ஆயினை எ—று. (1–8). கிண்கிணி ஒலிக்கவும், சிறுபறையைக் கையிற் பற்றியும், சிறுதேருருட்டியும், புழுதியளைந்தும், இளஞ்சிறாரொடு தளர்நடைபயிற்றியும், அக்குமணிகளை அரையிற் கட்டியும், ஐம்படைத் தாலி அணிந்தும் என் ஒக்கலையிலுள்ள புதல்வன் என்க. பொக்கம் — செருக்கு; மலைநாட்டுவழக்கு. குஞ்சி — முன்னுச்சிமுடி. காரணப்பொருளில் வந்த செயவெனெச்சம் 'போய்' எனச் செய்தெனெச்சமாகத் திரிந்து, உடையை என்ற குறிப்புவினை கொண்டது.

சுடுபொடி யணிந்த துளங்கொளி யகலத்
தண்ண லாரூர் திண்ணிதிற் செய்த
சிறைகெழு செம்புனல் போல
நிறையொடு நீங்கா நெஞ்சம் நீயே. (உஉ)

வெண்பா

(228) நீயிருந்திங் கென்போது நெஞ்சமே நீளிருட்கண்
ஆயிரங்கை வட்டித் தனலாடித்—தீயரங்கத்
தைவா யரவசைத்தா னன்பணைத்தோட் கன்பமைத்த
செய்வான னூரன் றிறம். (உகூ)

கட்டளைக் கலித்துறை

(229) திறமலி சின்மொழிச் செந்துவர்
வாயினை யெங்கையர்க்கே
மறமலி வேலோ னருளுக
வார்சடை யான்கடலூர்த்

---

'ஆரூர்...சிறைகெழு செம்புனல்' என்றது திருவாரூரில் உள்ள கமலாலயம் போலும் திருக்குளத்தை. சிறை – அணைத்த கரை. "சிறை யழிந்ததோர் செம்புனல்" தன் னிலைகுலைதலைப் பிறரும் உவமை கூறுவர் (சீவக. 1776). 'னிறையொடு நீங்காய்' என்றும் பாடம்.

228. பிரிவிடையாற்றாத தலைவி தன் நெஞ்சினை நோக்கிக் கூறியது:— நெஞ்சமே! தீயரங்கத்தில் ஆடும் ஈசனது திருத்தோள்களிடம் அன்பு அமைத்த திருத்தொண்டினைச் செய்யும் தலைவன்பக்கல் செல்வாயாக. நீ இங்கிருந்து என்ன பயன் எ–று. வட்டித்தல் – சுழற்றுதல், பரவச்செய்தல்; தாள ஒத்தறுத்தல் (பிங்.) என்றுமாம். "ஆயிரந்தோள் மன்னு கரதலங்கள் மட்டித்து...மன்னு குலவரையு மாருதமுந் தாரகையும், தன்னி னுடனே சுழலச் சுழன்றாடும், கொன்னவிலு மூவிலைவேற் கூத்தன்" (பெரிய திருமடல்) என்றார் திருவாலிநாடரும். இங்ஙனம் வட்டித்தாடிய திருத்தோள்களில் தலைவன் ஈடுபட்டமை தோன்ற, "நன்பணைத்தோட் கன்பமைத்த...ஊரன்" என்றார். திறம் – பக்கல்.

229. தலைமகன், பரத்தையிற் பிரிந்து தலைமகளுழை வந்தானை

துறைமலி யாம்பல்பல் லாயிரத்
துத்தமி யேயெழினும்
நறைமலி தாமரை தன்னதன்
றேசொல்லு நற்கயமே. (உச)

அகவல்

(230) கயங்கெழு கருங்கடல் முதுகுதெரு மரலுற
இயங்குதிமில் கடவி யெறியிளி நுளையர்
நொய்ம்மீன் கவரல் வேண்டிக் கைம்மிகுத்
தால வட்ட மேய்ப்ப மீமிசை
முடிகெழு தருவலை வீசி முந்நீர்க்
குடரென வாங்கிக் கொள்ளை கொண்ட
சுரிமுகச் சங்குஞ் சுடர்விடு பவளமும்
எரிகதிர் நித்திலத் தொகுதியுங் கூடி
விரிகதிர் நிலவுஞ் செக்கருந் தாரகை
உருவதுங் காட்டு முலவாக் காட்சித்

---

நோக்கித் தோழி கூறியது:— வீரவேலோய்! சின்மொழியையும் பவள்வாயை யுமுடைய எங்கையர்க்கே நீர் அருள்புரிவீராக. நீர்க்கயமொன்றில் பல்லாயிரமாக ·வுள்ள ஆம்பல்மலர்களிடையே தான் ஒன்றாகத் தாமரை தோன்றுமாயினும், அத்தாமரைக் குரியதாக வன்றோ, அந்நீர்க்கயம் தன்னை வழங்கும் எ—று. நீர்க்கயம் ஊரும், ஆம்பல்கள் பரத்தையரும், தாமரை தலைவியுமாகக் கொள்க. இதனால், தலைவியுடன் கூடிய பின் இல்வாழ்க்கையையே ஊரார் சிறப்பிப்பரன்றி, புறவாழ்க்கையை மதியார் என்பதாயிற்று. இளை — இளைய : விகாரம்; 'இளையிருள்' (சிலப்.) என்புழிப்போல. வேலோன், அண்மைவிளி.

230. வரைவுவேண்டித் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி கூறியது:— தண்ணந்துறைவனான தலைவனது தடவரைபோலும் மார்பினைக் கண்டதுமுதலாக, திருவாரூர்விழாவின் ஆரவாரம்போன்ற பேரலர் இச்சிற்றூரில் எழுவதாயிற்று எ—று. என்றது, இவ்வலர் நீங்க நீ விரைந்து வரையல் வேண்டும் என்று தலைவன்கேட்பக் குறிப்பிட்டவாறு. (1–11) நுளையர்

தண்ணந் துறைவன் தடவரை யகலங்
கண்ணுறக் கண்டது முதலா வொண்ணிறக்
காள மாசுணங் கதிர்மதிக் குழவியைக்
கோளிழைத் திருக்குங் கொள்கை போல
மணிதிகழ் மிடற்று வானவன் மருவும்
அணிதிக ழகலத் தண்ண லாரூர்
ஆர்கலி விழவி னன்னதோர்
பேரலர் சிறந்தது சிறுநல் லூரே. (உ௩)

வெண்பா

(231) ஊரெலாந் துஞ்சி யுலகெலா நள்ளென்று
பாரெலாம் பாடவிந்த பாயிருட்கட்—சீருலா
மார்துறைவா யீசன் மணிநீர் மறைக்காட்டுப்
பூந்துறைவாய் மேய்ந்துறங்கா புள். (உ௪)

---

(வலைஞர்) மீன்கவரவேண்டி வீசிய வலையாற் கொள்ளைகொண்ட சங்கு பவளம் முத்துக்கள் முறையே நிலவு, செவ்வானம், தாரகைகளின் காட்சியை அளிக்கும் கடற்றுறைவன் என்க. நொய்மீன் – ஆரல் (பிங்.); நெய்ம்மீன் என்பது பாடமாயின் நெய்ப்பண்டமுள்ள சுறாமுதலிய மீன்கள் என்க. ஆலவட்டம் – பெருவிசிறி. முடி கெழுதரு வலை – கொடுமுடிப்புக்கள் பொருந்திய வலை; "கொடுமுடி நெடுவலை" (அகம். 340) என்ப. காள மாசுணம் – கரும்பாம்பு; கேது. அது பிறையைக் கவ்வியது போலக் கருநிறங் கொண்ட கண்டம் என்க.

231. அல்லகுறி யறிவித்தல்: அஃதாவது— தலைவன் சிறைப்புறமாக வந்துநிற்ப அவன் கேட்கும்படி, முன்னாளிரவில் குறியல்லாத குறிக்கட்சென்று தலைவனைக் காணாது தாம் மீளநேர்ந்ததனைத் தோழி புட்களின் மேல்வைத்துக் கூறியதாம். ஊர் முழுதும் துயின்றும், உலகு ஒலியடங்கியும், மக்கள் தொழில்மடங்கியும் உள்ள பரவிய நள்ளிரவில், திருமறைக்காட்டு நீர்த்துறையிடமாக அன்னமுதலிய புட்கள் இரைமேய்ந்து உறங்காவாயின எ–று. என்றது, வேற்றுப்புட்களின் வரவு, மக்கள் வரவோசை, பழங்கள் வீழ்த்துவிழுதல் முதலிய நிகழ்ச்சிகள்பற்றி அவை ஆரவாரித்தமையால், அத்

கட்டளைக்கலித்துறை

(232) புள்ளுந் துயின்று பொழுதிறு
மாந்து கழுதுறங்கி
நள்ளென்ற கங்கு லிருள்வாய்ப்
பெருகிய வார்பனிநாட்
டுள்ளுங் கலைக்கைச் சுடர்வண்
ணனைத்தொழு வார்மனம்போன்
றுள்ளு முருக வொருவர்திண்
டேர்வந் துலாத்தருமே. (உஎ

அகவல்

(233) உலாநீர்க் கங்கை யொருசடைக் கரந்து
புலானீ ரொழுகப் பொருகளி றுரித்து
பூத நாத னாதி மூர்த்தி
திருமட மலைமகட் கொருகூறு கொடுத்துத்தன்
அன்பி னமைத்தவ னாரூர் நன்பகல்
வலம்புரி யடுப்பா மாமுத் தரிசி
சலஞ்சல நிறைய வேற்றி நலந்திகழ்
பவளச் செந்தீ மூட்டிப் பொலம்பட
இப்பியந் துடுப்பா லொப்பத் துழாவி

---

தடைகாரணமாகத் தலைவி குறியிடம் வாய்க்கப் பெற்றிலள் என்றபடி. "பொன்னங் கலர்புன்னைச் சேக்கையின் வாய்ப்புலம் புற்றுமுற்றும், அன்னம் புலரு மளவுந் துயிலா தழுங்கினவே" என்றார் திருக்கோவையினும். மாந்துறை – சோணாட்டுள்ள ஒரு திருப்பதி.

232. தலைவனது தேர்வரவினைத் தோழி தலைவிக்குக் கூறியது:— இராப்பொழுது இறுமாந்ததுபோல மிகுந்து, புட்களும் பேய்களும் துயிலாநின்ற இப்பனிநாளில் நள்ளிருளிடையே, ஈசனைத் தொழும் அடியார்மனம் போல நம் உள்ளம் உருகும்படி ஒப்பற்ற நம் தலைவரது தேர் இங்குவந்து உலவாநின்றது எ–று. கலைக் கை – மானேந்திய கரம்.

233. தன் ஆயத்திடையே விருந்தினனாகப்புக்க தலைவனால் தான்

அடாஅ தட்ட வமுதம் வாய்மடுத்
திடாஅ வாயமொ டுண்ணும் பொழுதிற்
றிருந்திழைப் பணைத்தோட் டேமொழி மாதே
விருந்தி னடியேற் கருளுதி யோவென
முலைமுக நோக்கி முறுவலித் திறைஞ்சலின்
நறைகம ழெண்ணெய்ச் சிறுநுண் டுள்ளி
பொங்குபுன லுற்றது போலவென்
அங்க மெல்லாந் தானு யினனே. (உஅ)

வெண்பா

(234) ஆயினவன் பாரே யழிப்ப ரனலாடி
பேயினவன் பாரோம்பும் பேரருளான்—தீயினவன்
கண்ணுளா னூர்க் கடலார் மடப்பாவை
தண்ணாருங் கொங்கைக்கே தாழ்ந்து. (உக)

---

அடைந்த வேறுபாட்டைத் தலைவி தோழிக்குக் கூறியது. ஈசனது திருவாரூருள் ஒருநாள் நண்பகலில் (என் ஆயத்துடன் கூடி) வலம்புரிச் சங்கை அடுப்பாகக் கொண்டு, முத்துக்களாகிய அரிசியைச் சலஞ்சலம் என்ற கலம் நிறையப் பெய்து ஏற்றி, பவளமாகிய செந்தீயை மூட்டி, அழகாக இப்பியாகிய துடுப்பால் ஒப்பத்துழாவிச் சமைத்த அடாஅ அமுதை என் ஆயச்சிறுமியருடன் வாய்மடுத்து யான் உண்ணும் பொழுது (அங்கு ஒருவன்வந்து) என் முலைமுகம் நோக்கி முறுவலித்தவனாய், 'தேமொழிமாதே! விருந்தினனாக வந்த அடியேற்கும் அமுதம் அளிப்பாயோ' என்றுகூறி என்னை இறைஞ்சிநின்றான். அதனால், பொங்கும் நீரில் எண்ணெய்த் துளிகள் பட்டதுபோல என் அங்கமெல்லாம் அவ்விருந்தினனே ஆயினன் எ-று. அடாது அட்ட அமுதம் - மணற்சிறுசோறு. இடும் ஆயம் என்பது இட்டு ஆடும் சூதுக்கருவியாதலின், இடா ஆயம் என்றது மகளிர்குழுவாம்; வெளிப்படை. நீரிற்பட்ட எண்ணெய்த் துளிகள் அந்நீர்முழுதும் பரவி வேறுபடுத்தல் போலத் தலைவனது காட்சி தன்னை முற்றும் வேறுபடுத்திய தென்றபடி. இது "புகாஅக் காலைப் புக்கெதிர்ப் பட்டுழிப், பகாஅ விருந்தின் பகுதிக்கண்" தலைவி தோழிக்குக் கூறியதன்பாற் படும் (குறிஞ்சிக்கலி, 15).

233. கழறிய பாங்கற்குத் தலைமகன் கூறியது. ஆரூர்மடப்பாவை

கட்டளைக்கலித்துறை

(235) தாழ்ந்து கிடந்த சடைமுடிச்
சங்கரன் ருள்பணியா
தாழ்ந்து கிடந்துநை வார்கிளை
போலயர் வேற்கிரங்கிச்
சூழ்ந்து கிடந்த கரைமேற்
றிரையென்னுங் கையெறிந்து
வீழ்ந்து கிடந்தல றித்துயி
லாதிவ் விரிகடலே. (௩௰)

முற்றும்.

---

யின் கொங்கைத்தடத்தில் விருப்புற்றுப் பெருகிய என் அன்பினை இனி யாரே நீக்கவல்லவர் எ-று. பேயின அன்பார்- பேயின் அன்பு கொண்டவர்; "பேயாய நற்கணத்தில் ஒன்றாய நாம்" என்ற காரைக்காலம்மையார் போலும் அடியாரைக் குறித்தவாறு. அன்றி, பேயினவன், பார் ஓம்பும் பேரருளான்' என்று பிரித்துப் பொருள் கொள்ளலும் ஒன்று. பேயினவன்-பேய்க்கணத்தை உடையவன். ஆரூர்க் கடலார் - ஆரூர்க்கடற்றுறையிலுள்ள; கடலார், பரதருமாம்.

234. பிரிவாற்றாது தலைவி கடலொடு கூறி வருந்தல்:— ஈசனது திருவடிகளைப் பணியாது பிறவிக்கடலில் ஆழ்ந்துகிடந்து நைபவரைப்போல வருந்தும் என்பால் இரக்கமுற்று, சூழ்ந்துள்ள தன்கரைமேல் அலையாகிய கைகளால் அடித்துக் கொண்டும், வீழ்ந்தும், கிடந்தும், அலறியும் இக் கடல் துயிலாதாயிற்று எ-று. இவ்வாறு என்பாலிரக்கம் கடலுக்குண்டாயிற்றாயினும், தலைவர் சிறிதும் இரங்கிற்றிலர் என்றபடி.

உ

## சேரமான்பெருமாள் நாயனார்

அருளிச்செய்த

# ஆதியுலா*

கலிவெண்பா

(236) திருமாலு நான்முகனுந் தேர்ந்துணரா தன்றங்
கருமா லுறவழலாய் நின்ற—பெருமான்
பிறவாதே தோன்றினான் காணாதே காண்பான்
துறவாதே யாக்கை துறந்தான்—முறைமையால்

---

* உலா என்பது தமிழ்மொழியில் வழங்கும் தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தங்களுள் ஒன்று. பேதை முதல் பேரிளம்பெண் ஈறாகவுள்ள எழு பருவத்து மகளிரும் தன்னைக் கண்டு காதல்கூரும்படி தலைவனொருவன் நகரிற் பவனிபோந்த செய்தியைக் கலிவெண்பாவில் அமைத்துப் பாடப்படுவது இப் பிரபந்தமாகும்; "திறந்தெரிந்த பேதை முதலெழுவர் செய்கை, மறந்தயர வந்தான் மறுகென், றறைந்தகலி வெண்பா உலாவாம்" என்பது இதனிலக் கணம் (வச்சணந்திமாலை). இதனை, உலாச்செய்யுள் உலாப்புறம் என்றுங் கூறுவர். இச்செய்யுளிற் கூறப்படும் கைக்கிளைச் செய்திகள், பரத்தையர்க்கன்றிக் குலமகளிர்க்குக் கூறப்படா என்பர் நச்சினார்க்கினியர் (தொல். புறத். 30). இப்பிரபந்தம், மானிடத்தலைவர்மேல் மட்டுமன்றித் தெய்வத் தலைவர்மேலும் பாடப்படும். இவ்வாறு பாடப்பெற்ற உலாப்பிரபந்தங்களுள்ளே, பழைமை வாய்ந்தது இவ்வுலாவாகும். அதனால், ஆதியுலா என்று முன்னோர் இதனை வழங்கிவந்தனர்; இதனை "ஆதியந்த உலாவாசு பாடிய சேரர்" என அருணகிரி நாதரும் (திருப்புகழ்), "பொன்வண்ணத்தந்தாதி, ஆதியுலாவோ டமைத்தோனும்" என இரட்டையரும் (ஏகாம்பரநாதருலா. 90) பாடுதலால் அறிக. "திருவுலாப்புறம்" என்ற வழக்கும் இதற்குப் பழைமையாக உண்டு. (பெரியபு.

ஆழாதே யாழ்ந்தான் அகலா தகலியான்
ஊழா லுயராதே யோங்கினான்—சூழொளிநூல்

ஓதா துணர்ந்தான் நுணுகாது நுண்ணியான்
யாது மணுகா தணுகியான்—ஆதி

அரியாகிக் காப்பா னயனாய்ப் படைப்பான்
அரனா யழிப்பவனுந் தானே—பரனாய

தேவ ரறியாத தோற்றத்தான் தேவரைத்தான்
மேவிய வாறே விதித்தமைத்தான்—ஓவாதே

எவ்வுருவில் யாரொருவ ருள்குவா ருள்ளத்துள்
அவ்வுருவாய்த் தோன்றி யருள்கொடுப்பான்—எவ்வுரு

தானேயாய் நின்றளிப்பான் தன்னிற் பிறிதுருவம் [வும்
ஏனோர்க்குங் காண்பரிய எம்பெருமான்—ஆனாத

---

வெள்ளானை. 47; தொல்காப். செய். 160, நச். உரை.) 'திருக்கைலாய ஞான வுலா' என்றும் இதனைப் பின்னோர் வழங்கினர். சுந்தரமூர்த்திநாயனார் திருவஞ்சைக் களத்தினின்றும் வெள்ளானைமீதேறித் திருக்கயிலை நோக்கிப் புறப்பட்டதனை அறிந்த அவர்தோழரான சேரமான்பெருமான் நாயனார், தாமும் ஒரு குதிரைமேலேறி அதிவேகமாக அவர்முன்செல்ல, முடிவில் அவ்விருவரும் கயிலையங்கிரியை அடைந்தார்கள். அங்கே சிவபெருமான் திருமுன்பு அவர்கள் பணிந்து நின்றபோது, சேரமான்பெருமாள் அப்பெருமான் அனுமதியின் மேல், தாம்பாடிய இவ்வுலாவை அரங்கேற்றி அவரை உவப்பித்தனர் என்றும், அதனைக் கயிலையிற் கேட்டிருந்த மாசாத்தனார் தம் மனத்திற்றரித்து வந்து சோணாட்டுத் திருப்பிடவூரில் உலகோரறிய வெளியிட்டனர் என்றுங் கூறுவர் சேக்கிழார். பதினோராந்திருமுறையுள் தொகுக்கப்பட்ட பிரபந்தங்களுள் இஃதொன்றாம்.

1. அருமால் – நீக்கற்கரிய மயக்கம். அழல் – அக்கினிப்பிழம்பு. 3. ஒளிநூல் – ஞானநூல்கள். 7. 'தன்னைக்கண்ட என்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மாகிய ஈசனுக்கே' என்றார் பொன்வண்ணத் தந்தாதியினும்.

சீரார் சிவலோகந் தன்னுட் சிவபுரத்தின்
ஏரார் திருக்கோயி லுள்ளிருப்ப—ஆராய்ந்து
செங்க ணமரர் புறங்கடைக்கட் சென்றீண்டி
எங்கட்குக் காட்சியரு ளென்றிரப்ப—அங்கொருநாட்
பூமங்கை பொய்தீர் தரணி புகழ்மங்கை
நாமங்கை யென்றிவர்கள் நன்கமைத்த—சேமங்கொள்
ஞானக் கொழுந்து நகராசன் தன்மடந்தை
தேன்மொய்த்த குஞ்சியின்மேற் சித்திரிப்ப—ஊனமில்
நந்தா வனமலரு மந்தா கினித்தடஞ்சேர் [சீர்
செந்தா மரைமலர்நா றுயிரத்தால்—நொந்தா
வயந்தன் தொடுத்தமைத்த வாசிகை சூட்டி
நயந்திகழு நல்லுறுப்புக் கூட்டிப்—பயன்கொள்
குலமகளிர் செய்த கொழுஞ்சாந்தங் கொண்டு
நலமலிய வாகந் தழீஇக்—கலைமலிந்த

---

9. சிவபுரம் – கைலாயம். 10. புறங்கடை – வீடு கோயில்களின் வெளிப்புறம்; 'புறங்கடை வைத்தீவர் சோறும்' (நாலடி) என்பர்.

11. பெண்பாற் சொல்லான 'கீர்த்தி' என்ற வடசொல்லை நோக்கிப் 'புகழ்மங்கை' எனப்பட்டது; 'நாணென்னு நல்லாள்' (குறள்) என்புழிப் போல; "பூமங்கை தங்கிப் புவிமங்கை மன்னிப், புகழ்மங்கை யெங்குந் திகழ' (பெரிய திருமொழி.) என்றார் திருவாலிநாடரும். சேமங் கொள் – (பூ புவிபுகழ் மங்கையரின்) காவலைக்கொண்ட.

12. நகராசன் – இமவான்; அவன்திருமகளான பார்வதி, (ஈசனது) குஞ்சியில் அலங்காரஞ்செய்ய என்க. 13. நந்தாவனம் – கற்பகச் சோலை. மந்தாகினி – ஆகாய கங்கை.

14. வயந்தன் – வசந்தகாலத்துக் குரிய மன்மதன். வாசிகை – சிகைமாலை, செறியக்கோத்த மாலை (பிங்.). நல்லுறுப்பு – வாசந்தரு பண்டம். 15. தழீஇ – தடவி, பூசி.

கற்பக மீன்ற கமழ்பட் டினையுடுத்துப்
பொற்கழல்கள் கான்மேற் பொலிவித்து—விற்பகருஞ்

சூளா மணிசேர் முடிகவித்துச் சுட்டிசேர்
வாளார் நுதற்பட்ட மன்னுவித்துத்—தோளா

மணிமகர குண்டலங்கள் காதுக் கணிந்தாங்
கணிவயிர கண்டிகை பொன்னாண்—பணிபெரிய

ஆர மவைபூண் டணிதிக ழுஞ்சன்ன
வீரந் திருமார்பில் வில்லிலக—வேருடைய

எண்டோட்குக் கேயூரம் பெய்துதர பந்தனமும்
கண்டோர் மனமகிழக் கட்டுறீஇக்—கொண்டு

கடிசூத் திரம்புனைந்து கங்கணங்கைப் பெய்து
வடிவுடைய கோலம் புனைந்தாங்—கடிநிலைமேல்

நந்திமா காளர் கடைகழிந்த போழ்தத்து
வந்து வசுக்க ளிருக்குரைப்ப—அந்தமில்சீர்

எண்ணருங் கீர்த்தி யெழுவ ரிருடிகளும்
அண்ணல்மே லாசிகள் தாமுணர்த்த—ஒண்ணிறத்த

பன்னிருவ ராதித்தர் பல்லாண் டெடுத்திசைப்ப
மன்னு மகத்தியன்யாழ் வாசிப்பப்—பொன்னியலும்

---

17. சூளாமணி—முடிமணி. 19. சன்னவீரம்—ஒருவகை மாலை; 'சன்னவீ ரத்த கோவை' என்ப (சம்பரா. சிந்தனை. 8). 18, 21. ஆங்கு, அசைச்சொற்கள். 20. கேயூரம்—தோள்வளை. உதரபந்தனம்—வயிற்றின்மேற் கட்டப்படும் அணி; முந்நூல். 21. கடிசூத்திரம்—அரை ஞாண்; 'கடிசூத்திரத்திற்குப் பொன்' (தொல். சொல். 77, உரை) என்பர். அடிநிலை—பாதுகை. 22. நந்தி மாகாளர்—சிவகணத்தலைவர். 24. 'அகத்தியன் யாழ்வாசிப்ப' என்பதனால் அகத்திய முனிவர் யாழ்வாசித்தலில் வல்லவர் என்பது விளங்கும். இதனை, "தமிழ்க்குன்றில் வாழுஞ் சடாதாரி பேரியாழ்" (தக்கயாகப்பரணி. 539) என்பதனாலும், 'பொதி

25 அங்கி கமழ்தூப மேந்த யமன்வந்து
மங்கல வாசகத்தால் வாழ்த்துரைப்பச்—செங்கண்

நிருதி முதலோர் நிழற்கலன்க ளேந்த
வருணன் மணிக்கலசந் தாங்கத்—தெருவெல்லாம்

வாயு நளிவிளக்க மாமழை நீர்தெளிப்பத்
தூயசீர்ச் சோமன் குடையெடுப்ப—மேவியசீர்

ஈசானன் வந்தடைப்பை கைக்கொள்ள வச்சுனிகள்
வாயார்ந்த மந்திரத்தால் வாழ்த்துரைப்பத்—தூய

உருத்திரர்கள் தோத்திரங்கள் சொல்லக் குபேரன்
திருத்தகு மாநிதியஞ் சிந்தக்—கருத்தமைந்த

30 கங்கா நதியமுனை யுள்ளுறுத்த தீர்த்தங்கள்
பொங்கு கவரி புடையிரட்டத்—தங்கிய

பைந்நாக மெட்டுஞ் சுடரெடுப்பப் பைந்தறுகட்
கைந்நாக மெட்டுங் கழல்வணங்க—மெய்ந்நாக

மேகம் விதானமாய் மின்னெலாஞ் சூழ்கொடியாய்
மேகத் துருமு முரசறையப்—போகஞ்சேர்

---

யிலின்க ணிருந்து இராவணனைக் கந்தருவத்தாற் பிணித்து' என்ற நச்சினார்க்கினியர் கூற்றாலும், "இசைக்குருகப்படு சிலை" (தஞ்சைவா. கோவை. 345) என்பதற்கு 'இராவணனைப் பிணிக்கக் குறுமுனி பாடும் இசைக்கு உருகப்பட்ட பொதியமலை' என்ற சொக்கப்பநாவலர் உரையாலும் அறிக.

26. நிழற் கலங்கள் – ஒளியுள்ள அணிகலங்கள். மணிக்கலசம் – அரதனக் குடம் மங்கலப்பொருளாம் (சீவக. 2399). 28. ஈசானன்–ஏகாதச ருத்திரருள் ஒருவர். அடைப்பை – வெற்றிலைப்பை (சீவக. 1303). 29. உருத்திரர் – சிவகணங்களுள் ஒருவர். 30. உள்ளுறுத்த – உள்ளிட்ட. 31. பைந்நாகம் – திந்நாகங்கள். கைந்நாகம் – திக்கியானைகள். 32. உருமு – இடி.

தும்புரு நாரதர்கள் பாடத் தொடர்ந்தெங்குங்
கொம்புருவ நுண்ணிடையார் கூத்தாட—எம்பெருமான்
விண்ணோர் பணிய வுயர்ந்த விளங்கொளிசேர் [ணோர்
வெண்ணோர் மழவிடையை மேல்கொண்டாங்—கெண்
கருத்துடைய பாரிடங்கள் காப்பொத்துச் செய்யத்
திருக்கடைக ளேழ்கழிந்த போதிற்—செருக்குடைய
சேனா பதிமயின்மேல் முன்செல்ல யானைமேல்
ஆனைப்போ ரிந்திரன் பின்படர—ஆனாத
அன்னத்தே யேறி யயன்வலப்பால் கைபோதக்
கன்னவிலுந் திண்டோட் கருடன்மேல்—மன்னிய
மாலிடப்பாற் செல்ல மலரார் கணையைந்து [டைய
மேலிடப்பால் மென்கரும்பு வில்லிடப்பால்—ஏல்வு

34. வெண் நார் விடை—வெண்ணிறமான அன்புபொருந்திய இடபம். நார்—அன்பு; 'நலத்தின்கண் நாரின்மை தோன்றின்' (குறள்) எனக் காண்க. வெண்மை ஆர்ந்த எனினுமாம். 34. ஆங்கு, அசை. 35. பாரிடங்கள்—பூதங்கள்.

(8) எம்பெருமான், (9) சிவபுரத்தின் உள்ளிருப்ப, (12) நகராசன் தன்மடந்தை சித்திரிப்ப, (14) சூட்டி, (15) தழீஇ, (16) உடுத்து, பொலிவித்து, (17) முடிகவித்து, (18) அணிந்து, (19) பூண்டு, வில்லிலக, (20) பெய்து, கட்டுறீஇ, (21) புனைந்து, (22) கடைகழிந்த போழ்தத்து, இருக்குரைப்ப, (23) ஆசிகள் உணர்த்த, (24) பல்லாண்டு எடுத்திசைப்ப, யாழ் வாசிப்ப, (25) தூபமேந்த, வாழ்த்துரைப்ப, (26) ஏந்த, தாங்க, (27) விளக்க, தெளிப்ப, குடையெடுப்ப, (28) கைக்கொள்ள, வாழ்த்துரைப்ப, (29) சொல்ல, சிந்த, (30) கவரிபுடையிரட்ட, சுடரெடுப்ப, கழல்வணங்க, (32) முரசறைய, (33) பாட, கூத்தாட, (34) மழவிடைமேற்கொண்டு, 35. திருக்கடைகளேழ் கழிந்த போதில் எனமுடிக்க.

36. சேனாபதி—தேவசேனாபதி, முருகக்கடவுள். 37. கைபோத—பக்கத்துச் செல்ல; கடந்துசெல்ல எனினுமாம் (சீவக. 710).

சங்கணையு முன்கைத் தடமுலையார் மேலெய்வான்
கொங்கணையும் பூவாளி கோத்தமைத்த—ஐங்கணையான்

காமன் கொடிப்படைமுன் போதக் கதக்காரி
வாமன் புரவிமேல் வந்தணைய—நாமஞ்சேர்

வேழ முகத்து விநாயகனை யுள்ளுறுத்துச்
சூழ்வளைக்கைத் தொண்டைவாய்க் கெண்டையொண்

மங்கை யெழுவருஞ் சூழ மடநீலி [கட்—டாழ்கூந்தல்
சிங்க வடலேற்றின் மேற்செல்லத்—தங்கிய

விச்சா தரரியக்கர் கின்னரர் கிம்புருடர்
அச்சா ரணரரக்க ரோடசுரர்—எச்சாரும்

சல்லரி தாளம் தருணிதந் தத்தளகங்
கல்லலகு கல்ல வடமொந்தை—நல்லிலயத்

தட்டழி சங்குஞ் சலஞ்சலந் தண்ணுமை
கட்டழியாப் பேரி கரதாளங்—கொட்டுங்

குடமுழவங் கொக்கரை வீணை குழல்யாழ்
இடமாங் தடாரி படக—மிடவிய

---

38—40. கணையைந்தனையும் கருப்புவில்லின் மேற்பகுதியிலே (வைத்து) அவ்வில்லைத் தன் இடப்பக்கமாகப் பிடித்துத் தடமுலையார்மேல் எய்யும் பொருட்டு மலரம்புகளைக் கோத்தமைத்த காமனது கொடிப்படை முன்னர்ச் செல்ல என்க. கொடிப்படை – முன்னணிப்படை ; மகளிர் ; 'கொடிப்படைபோக்கி' (பெருங்கதை.) என்பர். கதக்காரி – வீரச்சினம் உள்ள மாசாத்தன். வாம் மன் புரவி – தாவும் நிலைமையுள்ள குதிரை. 42. மங்கை எழுவர் – சத்தமாதர். நீலி – துர்க்கை. 44—47. பவனியில் ஒலித்த வாச்சியவகைகள் கூறப்படுகின்றன:—சல்லரி திமிலைப்பறை என்ப ; 'சல்லரியாழ் முழவம்' (தேவா. 89—2). தருணிதம், 'தகுணிதம் துந்துபி தாளம் வீணை (பதினொராங். காரைக். திருவாலங். 9) ; கல்லவகு : 'கல்லலகு பாணிபயின் றார்' (தேவா. 519—1). கல்லவடம் : 'கல்லவடமிட்டுத் திசைதொழுதாடியும்'

மத்தளந் துந்துபி வாய்ந்த முருடிவற்றால்
எத்திசை தோறு மெழுந்தியம்ப—ஒத்துடனே

மங்கலம் பாடுவார் வந்திறைஞ்ச மல்லருங்
கிங்கரரு மெங்குங் கிலுகிலுப்பத்—தங்கிய

ஆறு மிருதுவும் யோகு மருந்தவமும்
மாறாத முத்திரையு மந்திரமு—மீறார்ந்த

காலங்கண் மூன்றுங் கணமுங் குணங்களும்
வால கிலியரும் வந்தீண்டி—மேலை

இமையோர் பெருமானே போற்றி யெழில்சேர்
உமையாள் மணவாளா போற்றி—எமையாளும்

தீயாடி போற்றி சிவனே யடிபோற்றி
ஈசனே யெந்தா யிறைபோற்றி—தூயசீர்ச்

சங்கரனே போற்றி சடாமகுடத் தாய்போற்றி
பொங்கரவா பொன்னங் கழல்போற்றி—அங்கொருநாள்

ஆய விழுப்போ ரருச்சுனன தாற்றற்குப்
பாசுபத மீந்த பதம்போற்றி—தூய

மலைமேலாய் போற்றி மயானத்தாய் வானோர்
தலைமேலாய் போற்றிதாள் போற்றி—நிலைபோற்றி

போற்றியெனப் பூமாரி பெய்து புனல்கலங்க
நாற்றிசையு மெங்கு நலம்பெருக—ஏற்றுக்

---

(தேவா. 576-6). மொந்தை– ஒருகட்பறை விசேடம் (பிங்.). தட்டழி –பறை வகை; 'தட்டழி கொட்டிகள்' (S. I. I. II. 527). தண்ணுமை – முழவுவகை (சிலப்.). குடமுழவம் : குடமுழநந்தீசனை வாகனமாக் கொண்டார் (தேவா.). நொக்கரை–பறைவகை (தேவா.). தடாரி– கிணைப்பறை, உடுக்கை. (பொருந. 70). படகம்– ஒருமுகப்பறை (கல்லா. 8). முருடு –மத்தளவகை; 'முருடதிர்ந் தன' (சிலப்.). 48. கிலுகிலுப்ப – ஆரவாரிக்க. 49. ஆறும் – ஆறு ஆகிய. 50. வாலகிலியர் – மிகக்குறுகிய வடிவுடைய ஒருசார் முனிகணத்தார்.

கொடியும் பதாகையுங் கொற்றக் குடையும்
வடிவுடைய தொங்கலுஞ் சூழக்—கடிகமழும்
பூமாண் கருங்குழலா ருள்ளம் புதிதுண்பான்
வாமான வீசன் வரும்போழ்திற்—சேமேலே

குழாங்கள்

வாமான வீசன் மறுவில்சீர் வானவர்தங்
கோமான் படைமுழக்கங் கேட்டலுமே—தூமாண்பின்

---

57. பதாகை – பெருங்கொடி (பிங்.). தொங்கல் – மயிலிறகால் அமைந்த சேருடி என்னும் விருது (குலோத். உலா. 132). 58. ஆசிரியர் நச்சினார்க்கினியர் "கலிவெண்பாட்டே" என்ற தொல்காப்பியச் செய்யுளியற் சூத்திரவுரையுள் (16), "இப் புறப்பொருளான் வந்து இரண்டுறுப்பாயும் ஒருறுப்பாயும் பாவும் பொருளும் வேறுபட்டு வெள்ளடியின் இகந்துவரும் கலிவெண்பாவாகிய உலாச்செய்யுள், அடிவரையறை யின்றி வருமாறும், பெருந்திணைப்பொருள்மேல் வரும் மடற்செய்யுளும் ஒருறுப்பாய் அடியிகந்து வருமாறும் இக்காலத்துக் கூறுகின்றவற்றுட் காண்க; அது, திருவுலாப்புறத் துள்ளும் "வாமான வீசன் வரும்" என முடிந்து, மேல் வேறோர் உறுப்பாய வாறும், ஒழிந்த உலாக்களுள் வஞ்சியுரிச்சீர் புகுந்தவாறும், அடிவரையறை யின்மையுமாம்" என எழுதியவை ஈண்டறியத்தக்கன. இதனால், அவ்வுரை யாசிரியர்காலத்தில், மேற்குறித்த பாடம்போலன்றி, "வாமான வீசன் வரும்" என இக்கண்ணி முடிந்து பின் வேறோருறுப்பாக "வாமான வீசன் மறுவில் சீர் வானவர்தம்" என்ற கண்ணி தொடங்கி வழங்கிவந்த தென்பது புலப் படுகின்றது. வாமான ஈசன் – வாவும் (–தாவும்) மானைத் தரித்த ஈசன். சே – இடபம்.

(36—42) சேனபதி இந்திரன் முதல் நீலிவரையுள்ளோர் முன் னும் பின்னும் பக்கங்களிலும் செல்ல, (43—47) விச்சாதரர் முதல் அசுரர் வரையுள்ளோர் சல்லரிமுதல் முருடுவரையுள்ள வாச்சியங்களை எடுத்தியம்ப, (48) இறைஞ்ச, கிலுகிலுப்ப, (50) ஈண்டி, (52) போற்றி, (56) போற்றி எனப் பூமாரி பெய்து, நலம்பெருக, (57) சூழ, (58) ஈசன் வரும்போழ் தில் என முடிக்க.

வானநீர் தாங்கி மறையோம்பி வான்பிறையோ
டூனமில் சூல முடையவாய்—ஈனமிலா
வெள்ளை யணிதலால் வேழத் துரிபோர்த்த
வள்ளலே போலும் வலியுடைய—ஒள்ளிய
மாட நடுவின் மலரா ரமளியே
கூடிய போர்க்கள மாக்குறித்துக்—கேழற்
சிலம்பு பறையாகச் சேயரிக்க ணம்பா
விலங்கு கொடும்புருவம் வில்லா—நலந்திகழுங்
கூழைபின் தாழ வளையார்ப்பக் கைபோந்து
கேழ்கிளரு மல்குலாந் தேருந்திச்—சூழொளிய
கொங்கைமாப் பொங்கக் கொழுநர் மனங்கவர
அங்கம் பொருதசைந்த வாயிழையார்—செங்கேழற்
பொற்கலசத் துள்ளான் மணிநீர் முகஞ்சேர்த்தி
நற்பெருங் கோல மிகப்புனைந்து—பொற்புடைய

---

60—62. 'வேழத் துரிபோர்த்த வள்ளலே போலும்......மாடம்' என்பது, சிலேடை நயம்பெறக் கூறப்படுகின்றது. வானநீர் – மேகநீர், கங்கை. மறையோம்புதல் – ஈசனுக்கு வேதத்தை ஓதிப் பேணுதலாகவும், மனைக்கு வேதத்தைப் பயின்று பேணுதலாகவும் கொள்க; "நான்மறை யங்கமொ டோதிய நாவன்" (தேவா.) என்ப. 'பிறையோடு...சூலம் உடையவாய்' என்றது, சந்திரசேகரனும் சூலபாணியுமான ஈசன்போல, அச் சந்திரனையும் சூலத்தையும் மாடங்களும் மேலிடமாகக் கொண்டுள்ளன என்றபடி; "மன் போற் பிறையணி மாளிகை சூலத்தவ ய்" (திருக்கோவை. 222) என்றார் வாதவூரடிகளும். சூலம் – மாடத் துச்சியில் இடிதாங்கியாக வைக்கப்படுவது; 'மாடத் துச்சிமிசைச் சூலம்' (பெரியதிருமொழி) என்ப. வெள்ளை – வெண் சுதையும் திருநீறும். வேழத்துரி போர்த்ததற்கு மேகம் கவிந்திருத்தல் ஒப்பாம். 62—65. கலவியைப் போராக உருவகிப்பன இவ்வடிகள். அமளி (துயிலணை) – போர்க்களம்; சிலம்பு – பறை; கண் – அம்பு; புருவம் – வில்;

பேதை முதலாகப் பேரிளம்பெண் ணீருக
மாதரவர் சேர மகிழ்ந்தீண்டிச்—சோதிசேர்

சூளிகையுஞ் சூட்டுஞ் சுளிகையுஞ் சுட்டிகையும்
வாளிகையும் பொற்ருேடு மின்விலக – மாளிகையின்

மேலேறி நின்று தொழுவார் துயர்கொண்டு
மாலேறி நின்று மயங்குவார்—நூலேறு

தாமமே தந்து சடாதாரி நல்கானேல்
யாமமே லெம்மை யடுமென்பார்—காமவேள்

ஆமென்பா ரன்றென்பா ரையுறுவார் கையெறிவார்
தாமுன்னை நாரோடு சங்கிழப்பார்—பூமன்னும்

பொன்னரி மாலையைப் பூண்பாரப் பூண்கொண்டு
துன்னரி மாலையாச் சூட்டுவார்—முன்னம்

ஒருக ணெழுதிவிட் டொன்றெழுதா தோடித்
தெருவம் புகுவார் திகைப்பா—ருருகிருந்த

---

கூழை (பெண்மயிர்) – பின்னணிப்படை; வளை...கை – பக்கப்படை; அல்குல்– தேர்; கொங்கை – யானை எனப் போருறுப்புக்கள் காண்க. வளை ஆர்ப்பக் கை போந்து – வளைகள் ஆரவாரிக்கும்படி கைப்படையாகப் போக. அங்கம் – போர். அசைந்த – இளைத்த. கேழல் – ஒளி, பிரகாசம்; அல் சாரியை; கேழில் என்றும் வழங்குவர்; 'கேழில் பரஞ்சோதி' (திருவாசக.) எனக் காண்க.

68. சூளிகை – மாளிகையின் மேலுறுப்பு; 'மாளிகையிற் சூளிகைமேல் மகப்பாராட்ட' (தேவா.) என்ப. சூட்டு – மதிலுறுப்பு; 'இடுசூட்டிஞ்சியின்' (புறப். வெண்பா). சுளிகை, சுட்டிகை, வாளிகை என்பன அணிவகைகள். யாமம் – இரவு. 72. துன் அரி மாலை – அரி (– வண்டு) துன் (பொருந்திய) மாலை என இயைக்க. தோள்மாலையைத் தலைமாலையாக மயங்கிச் சூட்டுவார். 73. தெருவம், அம் சாரியை; 'செங்கொடி தெருவத்துப் பரப்பி' (பெருங்.) என்ப.

கண்ணாடி மேற்பஞ்சு பெய்வார் கிளியென்று [மேற்
பண்ணாடிச் சொற்பந்துக் குற்றுரைப்பார்—அண்ணன்
கண்ணென்னு மாசாலங் கோலிக் கருங்குழலார்
திண்ண நிறைத்தாள் திறந்திட்டா—ரொண்ணிறத்த

பேதை

பேதைப் பருவம் பிழையாதாள் வெண்மணலாற்
றூதைச் சிறுசோ றடுதொழிலாள்—தீதில்
இடையாலு மேக்கழுத்த மாட்டாள் நலஞ்சேர்
உடையாலு முள்ளுருக்க கில்லாள்—நடையாலும்
கவ்வைநோய் காளையரைச் செய்யாள் கதிர்முலைகள்
எவ்வநோய் செய்யுந் தொழில்பூணாள்—செவ்வனேர்
நோக்கினும் நோய்நோக்க நோக்காடன் செவ்வாயின்
வாக்கும் பிறர்மனத்தை வஞ்சியாள்—பூக்குழலும்
பாடவந் தோன்ற முடியா ளிளவேய்த்தோள்
ஆடவர் தம்மை யயர்வுசெய்யாள்—நாடோறும் [கட்
டொன்றுரைத் தொன்றுன்னி யொன்றுசெய் தொன்றின்
சென்ற மனத்தனளாஞ் சேயிழையாள்—நன்றாகத்

---

74. பஞ்சு – செம்பஞ்சுக் குழம்பு; காலுக்கிடும் அதனை மயங்கிக் கண்ணுக் கிடுவார் என்க. 75. மா சாலம் – பெரிய வலை.

(62) மாடநடுவில் (65) ஆயிழையார் (66) புனைந்து [(67) ஈண்டி (69) தொழுதல் முதல் (75) பந்துக் குரைத்தல் ஈறாகச் செயல்களை மயங்கிப் புரிவாராய் (75) நிறையாகிய கதவின் தாளைத் திறந்திட்டனர் என முடிக்க

76. பேதைப்பருவம் – ஐந்துமுதல் எழாண்டுவரையுள்ள பெண் பாற்பிராயம் தூதை – சிறுபானை; 'வட்டவாய்ச் சிறுதூதை' (நாச். திருமொழி) என்ப. 77. எக்கழுத்தம் – தலையெடுப்பு, செருக்கு. 79. நோய்நோக்கம். காமவிகாரத்தை விளைக்கும் பார்வை. 80. பாடவம், பெருமை, (பெரியபு. இயற்பகை. 18); உள்ளக்களிப்பும் (திவா.) ஆம்.

தாலி கழுத்தணிந்து சந்தனத்தான் மெய்பூசி
நீல வறுவை விரித்துடுத்துக்—கோலஞ்சேர்

பந்தரிற் பாவைகொண் டாடுமிப் பாவைக்குத்
தந்தையா ரென்றொருத்தி தான்வினவ—அந்தமில்சீர்

ஈச னெரியாடி யென்ன வவனையோர்
காய்சின மால்விடைமேற் கண்ணுற்றுத்—தாய்சொன்ன

இக்கணக்கு நோக்கா ளிவள்போல்வாள் காமனூல்
நற்கணக்கின் மேற்சிறிதே நாட்செய்தாள்—பொற்பு
[டைய

பெதும்பை

பேரொளிசேர் காட்சிப் பெதும்பைப் பிராயத்தாள்
காரொளிசேர் மஞ்ஞைக் கவினியலாள்—சீரொளிய

தாமரை யொன்றி னிரண்டு குழையிரண்டு
காமருவு கெண்டையோர் செந்தொண்டை—தூமருவு

முத்த முரிவெஞ் சிலைசுட்டி செம்பவளம்
வைத்தது போலு மதிமுகத்தாள்—ஒத்தமைந்த

கங்கணஞ் சேர்ந்திலங்கு கையாள் கதிர்மணியின்
கிங்கிணி சேர்ந்த திருந்தடியாள்—ஒண்கேழல்

அந்துகில் சூழ்ந்தசைந்த வல்குலா ளாய்பொதியிற்
சந்தனந் தோய்ந்த தடந்தோளாள்—வந்து

85. நற்கணக்கு – சிறந்த கலை. நாட்செய்தல் – நன்னாளிற் பயிலத் தொடங்குதல். 86. பெதும்பை – எட்டுமுதல் பதினொராண்டுவரையுள்ள பருவம். 87. ஒரு தாமரையில் இரண்டுகுழை (குண்டலங்கள்), இரு கெண்டை (கண்கள்), ஒரு தொண்டை (வாய்), 88. முத்தம் (பல்), சிலை (புருவம்), சுட்டி (நெற்றியணி), செம்பவளம் (இதழ்) இவற்றை வைத்ததுபோலும் முகத்தவள் என்க. கேழல் – ஒளி; அல் சாரியை; தொடையல்போல. 90. ஆய்பொதியில் – தமிழை ஆராய்ந்த பொதியமலை; ஆய்வேளின் பொதியில் எனினும் ஆம் (புறநா. 188).

திடரிட்ட திண்வரைக்கண் செய்த முலையாள்
கடல்பட்ட வின்னமுத மன்னாள்—மடல்பட்ட

மாலை வளாய குழலாண் மணநாறுஞ்
சோலை யிளங்கிளிபோற் றூமொழியாள்—சாலவும்

வஞ்சனை செய்து மனங்கவரும் வாட்கண்ணுக்
கஞ்சனத்தை யிட்டங் கழகாக்கி—யெஞ்சா

மணியாரம் பூண்டாழி மெல்விரலிற் சேர்த்தி
அணியார் வளைதோண்மேன் மின்ன—மணியார்த்த

95 தூவெண் மணற்கொண்டு தோழியருந் தானுமாய்க்
காம னுருவம் வரவெழுதிக்—காமன்

கருப்புச் சிலையு மலரம்புந் தேரும்
ஒருப்பட் டுடனெழுதும் போழ்தில்—விருப்பூருந்

தேனமருங் கொன்றையந்தார்த் திர்த்தன் சிவலோகன்
வானமா லேற்றின்மேல் வந்தணையத்—தானமர

நன்றறிவார் சொன்ன நலந்தோற்று நாண்தோற்று
நின்றறிவு தோற்று நிறைதோற்று—நன்றாகக்

கைவண்டுங் கண்வண்டு மோடக் கலையோட [ண்ட
நெய்விண்ட பூங்குழலாள் நின்றொழிந்தாள்—மொய்கொ

---

91. வரைக் கண்செய்த – மலையைத் தன்னிடம் செய்தனைய. 98. நன்றறிவார் சொன்ன நலம் – பெண்களுக்கு உரியவாக உறுப்பிலக்கண நூலோர் கூறிய அழகுகள். 99. கைவண்டு – கைவளைகள்.

(86—99) பெதும்பைப் பிராயத்தாளாகிய (88) முகத்தாள், (89) கையாள், திருந்தடியாள், (90) அல்குலாள், தடந்தோளாள், (91) முலையாள், அமுதமன்னாள், (92) குழலாள், தூமொழியாள், (93) அழகாக்கி, (94) பூண்டு, சேர்த்தி, மின்ன, (95) காமனுருவம்...உடனெழுதும் போழ்தில் (97) சிவலோகன் வந்தணைய, (98) தோற்று, (99) கலையோட...நின்றொழிந்தாள் என முடிக்க.

மங்கை

100 மங்கை யிடங்கடவா மாண்பினாள் வானிழிந்த
கங்கைச் சுழியனைய வுந்தியாள்—தங்கிய

அங்கை கமல மடிகமலம் மானோக்கி
கொங்கை கமல முகங்கமலம்—பொங்கெழிலார்

இட்டிடையும் வஞ்சி யிரும்பணைத்தோள் வேயெழிலார்
பட்டுடைய வல்குலுந் தேர்த்தட்டு—மட்டுவிரி

கூந்த லறல்பவளஞ் செய்யவா யவ்வாயில்
ஏய்ந்த மணிமுறுவ லின்முத்தம்—வாய்ந்தசீர்

வண்டு வளாய வளர்வா சிகைசூட்டிக்
கண்டி கழுத்திற் கவின்சேர்த்திக்—குண்டலங்கள்

105 காதுக் கணிந்து கனமே கலைதிருத்தித்
தீதில் செழுங்கோலஞ் சித்திரித்து—மாதராள்

பொற்கூட்டிற் பூவையை வாங்கி யதனோடுஞ் [கோட்டு
சொற்கோட்டி கொண்டிருந்த வெல்லைக்கண்—நற்

வெள்ளி விலங்கன்மேல் வீற்றிருந்த ஞாயிறுபோல்
ஒள்ளிய மால்விடையை மேல்கொண்டு—தெள்ளியசீர்

---

101. மங்கை – பன்னிரண்டுமுதற் பதின்மூன்றாட்டைப் பருவத்தவள்; இடங்கடவா – தன் மனையினின்று வெளியேறாத. 101. மான் நோக்கி – மானோக்கம் உடையவளது. 102. இட்டிடை – சிறுகிய இடை. 101—103. கமலம், வஞ்சி, வேய், தேர்த்தட்டு, அறல் (நுண்மணல்), பவளம், முத்தம் இவற்றை (உவமைகளாகக்கொண்ட உறுப்புக்களை) வாய்ந்த சீரையுடைய 105 மாதரான் என்க. 104. வாசிகை – கோத்த மாலை (பிங்.).

106. பூவை – நாகணவாய்ப்புள். பொற்கூட்டினின்றும் பூவையைக் கையில் வாங்கி (ஏந்தி) என்க. சொற்கோட்டி கொள்ளல் – சொல்லாடிக் கொண்டிருத்தல் (குறள். 401, 720). எல்லைக்கண் – சமயத்தில். கோடு – சிகரம். 107. விலங்கல் – மலை.

தாழுஞ் சடையான் சடாமகுடந் தோன்றுதலும்
வாழுமே மம்மர் மனத்தளாய்ச்—சூழொளியான்

தார்நோக்குந் தன்றாரும் நோக்கு மவனுடைய
ஏர்நோக்குந் தன்ன தெழில்நோக்கும்—பேரருளான்

தோணோக்குந் தன்றோளு நோக்கு மவன்மார்பில்
நீணோக்கம் வைத்து நெடிதுயிர்க்கும்—நாணோக்கா

துள்ள முருக வொழியாத வேட்கையாம்
வெள்ளத் திடையழுந்தி வெய்துயிர்த்தாள்—ஒள்ளிய

மடந்தை

தீந்தமிழின் தெய்வ வடிவாள் திருந்தியசீர்
வாய்ந்த மடந்தைப் பிராயத்தாள்—ஏய்ந்தசீர்

ஈசன் சிலையு மெழில்வான் பவளமும்
சேய்வலங்கை வேலுந் திரண்முத்தும்—பாசிலைய

வஞ்சியும் வேயும் வளர்தா மரைமொட்டும்
மஞ்சில்வரு மாமதிபோன் மண்டலமும்—எஞ்சாப்

புருவமுஞ் செவ்வாயுங் கண்ணு மெயிறும்
உருவ நுசுப்புமென் றோளும்—மருவினிய

---

108. வாழுமே, வாழாள் என்றபடி; இரக்கச் சொல்.

(100—111) உந்தியான், (101) மாணேக்கி, (105) மாதரான், (104) சூட்டி, சேர்த்தி, (105) அணிந்து, திருத்தி, சித்திரித்து, கோட்டிகொண் டிருந்த ஏல்வைக்கண், (108) சடாமகுடந்தோன்றுதலும், (109) நோக்கும், (110) நோக்கும், நெடிதுயிர்க்கும், (111) இவ்வாறு ஒழியாத வேட்கையால்... வெய்துயிர்த்தாள் என முடிக்க.

112. தமிழின் தெய்வ்வடிவு – தமிழின் திப்பிய வுருவம்; இன்பம் பயக்கும் பருவம் எ–று. மடந்தைப் பிராயம் – பதினன்குமுதல் பத்தொன்பது ஆண்டுவரை உள்ள நிலை. 113—116. சிலை, பவளம், வேல், முத்து, வஞ்சி, வேய், தாமரைமொட்டு, மதி இவற்றை முறையே புருவமுதல் முகம்வரை

கொங்கையும் வாண்முகமு மாக்கொண்டாள் கோலஞ்சேர்
பங்கயப் போதனைய சேவடியாள்—ஒண்கேழல் [சேர்
வாழைத்தண் டன்ன குறங்கினாள் வாய்ந்தசீர்
ஆழித்தேர்த் தட்டனைய வல்குலாள்—ஊழித்
திருமதிய மற்றொன்று மென்று முகத்தை
உருவுடைய நாண்மீன்சூழ்ந் தாற்போற்—பெருகொளிய
முத்தாரங் கண்டத் தணிந்தா ளணிகலங்கள்
மொய்த்தார வார மிகப்பெருகி—வித்தகத்தாற்
120 கள்ளுங் கடாமுங் கலவையுங் கைபோந்திட்
டுள்ளும் புறமுஞ் செறிவமைத்துத்—தெள்ளொளிய
காளிங்கஞ் சோதி கிடப்பத் தொடுத்தமைத்த
தாளிம்பத் தாம நுதற்சேர்த்தித்—தோளொங்குந்
தண்ணறுஞ் சந்தனங்கொண் டப்பிச் சதிர்சாந்தை [ள்
வண்ணம் பெறமிசையே மட்டித்தாள்—கொண்ணுதலா
தன்னமர் தோழியர்கள் சூழத் தவிசேறிப்
பின்னுமோர் காமரம் யாழமைத்து—மன்னும்

---

யுள்ள உறுப்புக்களாகப் படைத்தவள். 116. கேழல்—ஒளி; அல் சாரியை, 119. வித்தகத்தால்—திறமையால்;

120.—121 கள், கடாம் (யானைமதநீர்), பிற கலவைப்பண்டம் இவற்றை வித்தகத்தாற் கலப்பக் கூட்டி, கண்ணின் உள்ளும் புறத்தும் செறியத்தீட்டியதனால் ஒளிபொருந்திய கருஞ்சோதி ஒருசார் கிடப்ப என்க. கைபோந்து இட்டு—திறம்படக் கூட்டி.

121. காளிங்கம்—கருமைநிறம். தாளிம்பம்—நுதலணிமாலை; "ஏழொன்றாக அடுத்து விளக்கின தாளிம்பம்" (S. I. I. Vol. II, 145) என்ப. 122. சதிர் சாந்து—திருநீறு. மட்டித்து—பூசி. 123. காமரம்—பண்.

விடவண்ணக் கண்டத்து வேதியன்மே விட்ட
மடல்வண்ணம் பாடும் பொழுதின்—டடல்வல்ல
125 வேல்வல்லான் வில்வல்லான் மெல்லியலார்க் கெஞ்ஞா
மால்வல்லா னூர்கின்ற மால்விடையின்—கோல [ன்று

மணியேறு கேட்டாங்கு நோக்குவாள் சால
அணியேறு தோளானைக் கண்டாங் - கணியார்ந்த

கோட்டி யொழிய வெழுந்து குழைமுகத்தைக்
கோட்டி நுதல்சிவப்ப வாய்துலக்கி—நாட்டார்கள்

எல்லாருங் கண்டா ரெனக்கடவு ளிங்காயம்
நல்லாய் படுமேற் படுமென்று—மெல்லவே

செல்ல லுறுஞ்சரணங் கம்பிக்குந் தன்னுறுநோய்
சொல்லலுறுஞ் சொல்லு முடைசெறிக்கும்—நல்லாகம்

130 காண லுறுங்கண்கள் நீர்மல்குங் காண்பார்முன்
நாண லுறுநெஞ்ச மொட்டாது—பூணாகம்

புல்லலுறு மண்ணல்கை வாரானென் றிவ்வகையே
அல்ல லுறுமழுந்து மாழ்துயரால்—மெல்லியலாள்

தன்னுருவம் பூங்கொன்றைத் தார்கொள்ளத் தான்கொ
பொன்னுருவங் கொண்டு புலம்புற்றாள்— [ன்றைப்
[பின்ஞெருந்தி

---

வாய்துலக்கி – வாயை வெளிக்காட்டி. 124. மடல்வண்ணம் – மடற்பிரபந்த இசை; பாடும்பொழுது. 126. விடையின் மணியேறு கேட்டு என்க. மணியேறு – கழுத்தின் மணி எறியும் ஓசை. 127. கோட்டி– ஆயத்தார். 128. எல்லாருந் தம்மைக் கண்டார் என்று, கடவுள் இங்குள்ள ஆயத்திடம் வருதலுங் கூடும். நல்லாய் – அவ்வாயத்துள் ஒருத்தியை நோக்கிய விளி. 129. கம்பிக்கும் – நடுங்கும்; உடைசெறிக்கும் – உடையை இறுக உடுக்கும்; 'சொல்லி முடை செறிக்கும்' என்றும் பாடம்.

132. ஈசனணிந்த கொன்றைமாலை மடவாளுருவைத் தன்வசமாக்க,

அரிவை

செங்கேழற் றாமரைபோற் சீறடியாள் தீதிலா
அங்கே யரிவைப் பிராயத்தா—ளொண்கேழற்
றிங்களுந் தாரகையும் வில்லுஞ் செழும்புயலுந் [ளிசேர்
தங்கொளிசேர் செவ்வாயு முண்மையாற்—பொங்கொ
மின்னார்வான் காட்டு முகவொளியாள் மெய்ம்மையே
தன்னாவா ரில்லாத் தகைமையாள்—எந்நாளும்
இல்லாரை யெல்லாரு மெள்குவார் செல்வரை
எல்லாருஞ் செய்வர் சிறப்பென்னுஞ்—சொல்லாலே
அல்குற்கு மேகலையைச் சூழ்ந்தா ளணிமுலைமேன்
மல்கிய சாந்தொடு பூண்புனைந்து—நல்கூர்
இடையிடையே யுள்ளுருகக் கண்டா ளெழிலார்
நடைபெடை யன்னத்தை வென்றாள்—அடியிணைமேல்

---

அம்மாலையின் பொன்னிறத்தைத் தன்வசமாக்கிக் கொண்டு அவள் வருந்தினள் என்க. பொன்னுருவம் – பசலைநிறம்.

(112–132) மடந்தைப்பிராயத்தாள், (116) கொண்டாளாய், சேவடியாளாய், (117) குறங்கினளாய், அல்குலினளாய், (119) அணிந்தாளாய், (121) சேர்த்தி, (122) அப்பி, மட்டித்து, (123) தவிசேறி, யாழமைத்து, (124) வண்ணம் பாடும்பொழுதில், (ஈசனது) (125—126) விடையின் மணியேறு கேட்டு, தோளானைக் கண்டு, (129—131) செல்லல் முதல் அழுந்தல் முதலிய மயக்கச் செயல்களைப் புரிந்தவளாய், (132) புலம்புற்றாள் என்க.

133. அரிவைப் பிராயம் – இருபதுமுதல் இருபத்தைந்து ஆண்டுவரையுள்ள பெண்பாற்பருவம். 134—135. திங்கள்முதல் செவ்வாயீறானவை உள்ளமையால், மின்னார்வானத்தின் தன்மையைக் காட்டிய முகத்தாள்; அஃதாவது—திங்கள் நெற்றி, தாரகை முத்தாரம், வில் புருவம், புயல் கூந்தல், செவ்வாய்(கோள்) செய்ய வாய் எனக்கொள்க. 135. தன்னாவார்—தனக்கு ஒப்பாவார். 136—138. இடையானது உள்ளுருகும்(நோவும்)படி அல்குற்கும் முலைக்கும் முறையே மேகலையையும் பூண்களையும் அணிந்தனர்; அதனால் "இல்லாரை

பாடகங் கொண்டு பரிசமைத்தாள் பன்மணிசேர்
சூடக முன்கை தொடர்வித்தாள்—கேடில்சீர்ப்
140 பொன்னரி மாலை தலைக்கணிந்து பூண்கொண்டு
மன்னுங் கழுத்தை மகிழ்வித்தாள்—பொன்னனாள்
இன்னிசை வீணையை வாங்கி யிமையவர்தம்
அண்ணன்மேல் தானிட்ட வாசையாள்—முன்னமே
பாடல் தொடங்கும் பொழுதிற் பரஞ்சோதி
கேடிலா மால்விடைமேற் றோன்றுதலும்—கூடிய
இன்னிசையு மிற்பிறப்பும் பேணு மிருந்தமிழும்
மன்னிய வீணையையுங் கைவிட்டுப்—பொன்னனையீர்
இன்றன்றே காண்ப தெழினலங் கொள்ளேனேல்
நன்றன்றே பெண்மை நமக்கென்று—சென்றவன்றன்
145 ஒண்களப மாடு மொளிவாள் முகத்திரண்டு
கண்களப மாடுவபோற் கட்டுரைத்தும்—ஒண்கேழற்

---

யெல்லாரு மெள்ளுவர்" (குறள். 752) என்ற முன்னோர்கூற்று உண்மையா யிற்று என்றபடி; "செல்வர்க்கே சிறப்புச்செய்யுந் திருந்துநீர் மாந்தர்போல, அல்குற்கு முலைக்கு மீந்தா ரணிகல மாய வெல்லாம், நல்கூர்ந்தார்க் கில்லை சுற்ற மென்றுநுண் ணுசுப்பு நையு...குடங்கைக் கண்ணார்" (சீவக. 2535) என்றார் பிறரும்.

139. பாடகம் - காலணி. சூடகம் - முன்கையணி; 'சூடகமுன்கை மங்கை' (தேவா.) என்ப. 140. பொன்னரிமாலை - தாளிம்பம் என்ற நுதலணி. 141. இட்ட - வைத்திட்ட. 144. (நம் திறமை) இன்றன்றோ காணக்கூடியது என்று வீரமொழி கூறினள் என்க.

145. களபம் - திருநீறு, கலவை. 146. ஈசனது நீறணிந்த ஒளி முகத்தில் (இவளது)கண்களாகிய கருங்கலவை ஆடுதல் போல; நோக்கி என ஈண்டு வருவிக்க.

144. நன்றன்றே பெண்மை நமக்கென்று (145) (நோக்கிக்)கட்டுரைத்

கூந்த லவிழ்க்கும் முடிக்குங் கலைதிருத்தும்
சாந்தந் திமிரு முலையார்க்கும்—பூந்துகிலைச்
சூழு மவிழ்க்குந் தொழுமழுஞ் சோர்துயருற்
றூழு மழுந்து மயாவுயிர்க்கும்—சூழொளிய
அங்கை வளைதொழுது காத்தாள் கலைகாவாள்
நங்கை யிவளும் நலந்தோற்றாள்—அங்கொருத்தி

தெரிவை

ஆரா வமுத மவயவம் பெற்றனைய
சீரார் தெரிவைப் பிராயத்தா—ளோரா
மருளோசை யின்மழலை வாய்ச்சொலா லென்றும்
இருடீர் புலரியே யொப்பா—ளருளாலே
வெப்ப மிளையவர்கட் காக்குதலா லுச்சியோ
டொப்பமையக் கொள்ளு முருவத்தாள்—வெப்பந்தீர்ந்
தந்தளிர்போற் சேவடியு மங்கையுஞ் செம்மையால்
அந்திவான் காட்டு மழகினாள்—அந்தமில்

---

தும் (அக்கட்டுரையை மறந்து செயலற்று) 146—7. கூந்த லவிழ்த்தல் முதல் அயாவுயிர்த்தல் ஈறான மயக்கச் செயல்களைப் புரிந்து நலந்தோற்றாள் என்றபடி. 147. அயாவுயிர்த்தல் — நெட்டுயிர்த்தல், இளைப்பாறுதலுமாம் (சீவக.). 148. (கைகளை உயரவெடுத்துத்) தொழுதலால் வளைகள் கழலாமற் காக்கப்பட்டன என்க.

(133—148) அரிவைப் பிராயத்தாள், (135) முகவொளியாள், தகைமையாள், (137) சூழ்ந்தாள், (138) உள்ளுருகக் கண்டாள், வென்றான், (139) பரிசமைத்தாள், தொடர்வித்தாள், (140) மகிழ்வித்தாள் (ஆகி), (142) பாடல் தொடங்கும்பொழுதில் பரஞ்சோதி தோன்றுதலும், (143) கைவிட்டு, (145) உரைத்தும், (148) நலந்தோற்றாள் எனமுடிக்க.

149. தெரிவைப் பிராயம் இருபத்தாறுக்குமேல் முப்பத் தீராண்டு வரையுள்ள பெண்பாற் பருவம். 150. துயிலெழுந்த அனந்தரில் உண்டாம்

சீரார் முகமதிய மாதலாற் சேயிழையாள்
ஏரா ரிரவி னெழில்கொண்டாள்—சீராருங்

கண்ணார் பயோதரமு நுண்ணிடையு முண்மையால்
தண்ணிளங் காரின் சவிகொண்டாள்—வண்ணஞ்சேர்

மாந்தளிர் மேனி முருக்கிதழ்வா யாதலால்
வாய்ந்த விளவேனில் வண்மையாள்—மாந்தர்

அறிவுடையீர் நின்மின்க ளெல்லார்போ மென்று
பறையறைவ போலும் சிலம்பு—முறைமையாற்

சீரார் திருந்தடிமேற் சேர்த்தினள் தேரல்குல்
ஓரா தகல லுருதென்று—சீராலே

அந்துகிலு மேகலையுஞ் சூழ்ந்தா ளணிமுலைகள்
மைந்தர் மனங்கவரு மென்பதனால்—முந்துறவே

பூங்கச்சி னுலடையப் பூட்டுறீஇப் பொற்றொடியாற்
காம்பொத்த தோளிணையைக் காப்பேவி—வாய்ந்தசீர்

நற்கழுத்தை நல்லாரத் தான்மறைத்துக் காதுக்கு
விற்பகருங் குண்டலங்கள் மேவுவித்து—மைப்பகருக்

காவியங் கண்ணைக் கதந்தணிப்பாள் போலத்தன்
றாவிய வஞ்சனத்தை முன்னூட்டி யாவரையும்

குரலோசைகளாலும்; பொருள் புலப்படாத வாய்ச்சொற்களாலும் என்க; இவ்விரண்டும் விடியற்பொழுதுக்கும் தெரிவைக்கும் ஒக்கும். 151. இளையவர்கட்கு – இளைய ஆடவர்க்கு. 152—153 புலரி, உச்சி, அந்தி, இரவு ஆகிய நாட்பகுதிகளோடு தலைவியை ஒப்பிட்டுக் கூறியவாறு.

154. பயோதரம் – முலையும் மேகமும். நுண்ணிடைக்கு மின்னல் உவமையாம். கார் – கார்காலம். சவி – அழகு, பொலிவு (பிங்.). மாந்தளிரும் முருக்கமலரும் இளவேனிற்கு உரியன. வண்மையாள் – வளப்பமுடையாள். 156. சிலம்பு 157 சேர்த்தினள் என இயையும். 159. பூட்டுஉறீஇ – பூட்டுதலுறச் செய்து. 161. தாவிய – வன்மை பொருந்திய; தா –

ஆகுல மாக்கு மழகினா ளன்னமுங்
கோகிலமும் போலுங் குணத்தினா—ளாகிப்

பலகருதிக் கட்டிக் கரியவாய்க் கோடி
அலர்சுமந்து கூழைய வாகிக்—கலைகரங்

துள்யாது மின்றிப் புறங்கமழ்ந்து கீழ்தாழ்ந்து
கள்ளாவி நாறுங் கருங்குழலாள்—தெள்ளொளிய

165 செங்கழுநீர்ப் பட்டுடுத்துச் செங்குங் குமமெழுதி
அங்கழுநீர்த் தாம நுதற்சேர்த்திப்—பொங்கெழிலார்

பொற்கவற்றின் வெள்ளிப் பலகை மணிச்சூது
நற்கமைய நாட்டிப் பொரும்பொழுதில்—விற்பகிருந்

தோளான் நிலைபெறு தோற்றங்கே டாய்நின்ற
தாளான் சடாமகுடந் தோன்றுதலும்—கேளாயம்

நாளு ணடக்க நலத்தார்க் கிடையில்லை
ஏனு ரொழிக வெழிலொழிக—பேணும்

---

வன்மை (தொல்.). 162. ஆகுலம் – மனக்கலக்கம்; சிந்தாகுலம் (திருக்கோவை) என்ப. குணம் – தன்மை. 163. பல – ஐம்பாலாக. அலர்சுமத்தலால் கூழையவாயிற்று; கூழை – குறுகியது. கலை கரந்து – பிறைபோலும் நெற்றியை மறைத்து. 164. கள் ஆவி – தேன்மணம் (சீவக. 20).

165. செங்கழுநீர்நிறம் போலும் பட்டு. உடுத்து, எழுதி, சேர்த்து என்ற வினையெச்சங்கள். 166 பொரும்பொழுதில் என்பதனுள் பொருதலுடன் இயையும். கவறு – சூதாடுகருவி. வில் பகிரும் – மேருவில்லைத் தனக்குரியதாகக் கொண்ட. 167. நிலைபெறு – திதி. தோற்றம் – சிருட்டி. கேடு – சங்காரம்; இம் மூவகையும் தானேயாயினும் நின்ற(நிலைபெற்ற) தாளான் என்க. தாள் – அடி, ஆதி (சூடா.). கேள் ஆயம் – கேள்(சுற்றம்) ஆகிய ஆயமகளிர்.

168. (ஆயத்தார்) நலம்பொருந்திய ஈசனது தார்பெறும்பொருட்டு நாளுநாளும் (என்பொருட்டு) நடக்க இடை(சமயம்) இல்லை; (அதனால்)

குலத்தா ரகன்றிடுக குற்றத்தார் வம்மின்
நலத்தீர் நினைமி னீரென்று—சொலற்கரிய
தேவாதி தேவன் சிவனாயின் தேன்கொன்றைப்
பூவா ரலங்க லருளாது—போவானேல்
கண்டா லறிவ னெனச்சொல்லிக் கைசோர்ந்து
வண்டார்பூங் கோதை வளந்தோற்றாள்—ஒண்டாய

பேரிளம்பெண்

பெண்ணரசாய்த் தோன்றிய பேரிளம் பெண்மையாள்
பண்ணமரு மின்சொற் பணிமொழியாள்—மண்ணின்மேற்
கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுளவென்று—பண்டையோர்

---

171 கண்டால் அறிவன் என்று சபதங் கூறினாள் என்க. "நாணாள் நடக்க நலத்தார்க் கிடையில்லை" எனவரும் பொன்வண்ணத்தந்தாதிச் செய்யுளும் (62) இங்கு ஒப்பிடத்தகும். 168. ஏனார் – உயர்ந்த அன்பு; அந்நியர் எனினுமாம். 169. குற்றத்தார் – (என்போல ஈசன்பாற்) காதற்குற்றம் புரிந்தவர். 169. நினைமினீர் என்று(ம்), 171 எனச் சொல்லி(யும்) கைசோர்ந்து வளந்தோற்றாள் என இயையும். ஒண்தாய – ஒளிபரவிய; 'உண்டாய' எனவும் பாடங் கொள்ளலாம்.

(149—171) தெரிவைப் பிராயத்தாள், (150) புலரி ஒப்பாள், (151) உருவத்தாள், (152) அழகினாள், (153) எழில்கொண்டாள், (154) சவி கொண்டாள், (155) வண்மையாள், (157) சேர்த்தினாள், (158) சூழ்ந்தாள், (162) அழகினாள், குணத்தினாள், (164) கருங்குழலாள், (166) சூது பொரும் போழ்தில், (167) சடாமகுடந் தோன்றுதலும், (171) வளந்தோற்றாள் என முடிக்க.

172. பேரிளம்பெண் – முப்பத்திரண்டுக்குமேல் நாற்பது ஆண்டு வரையுள்ள பெண்பாற்பருவம். பணிமொழி – மெல்லியமொழி (குறள், 1121). 173. பண்டையோர் – வள்ளுவனார்.

கட்டுரையை மேம்படுத்தாள் கண்ணாடி மண்டலம்போல்
விட்டிலங்கு நல்லுகிர்சேர் மெல்விரலாள்—கட்டரவம்

அஞ்சப் பரந்தகன்ற வல்குலா ளாய்நலத்த
வஞ்சிக் கொடிநுடங்கு நுண்ணிடையாள்—எஞ்சாத

பொற்செப் பிரண்டு முகடு மணியழுத்தி
வைத்தன போல வளர்ந்தேந்தி—ஒத்துச்

சுணங்குந் திதலையுஞ் சூழ்போந்து கண்டார்க்
கணங்கு மமுதமுமாய்த் தோன்றி—இணங்கொத்த

கொங்கையாள் கோலங்கட் கெல்லாமோர் கோலமா
நங்கையாள் நாகிளவேய்த் தோளினாள்—அங்கையாற்

காந்தட் குலம்பழித்தாள் காமவேள் காதலாள்
சாந்த மிலங்கு மகலத்தாள்—வாய்ந்துடனே

ஏய்ந்து குவிந்து திரண்டு மறிந்திருபால்
தேய்ந்து துடித்த செழும்பவளம்—காய்ந்திலங்கி

முத்தமுந் தேனும் பொதிந்து முனிவரையும்
சித்தந் திறைகொள்ளுஞ் செவ்வாயாள்—ஒத்து

வரிகிடந் தஞ்சன மாடி மணிக
ளுருவ நடுவுடைய வாகிப்—பெருகிய

தண்ணங் கயலுஞ் சலஞ்சலமுந் தோன்றுதலால்
வண்ணங் கடலனைய வாட்கண்ணாள்—ஒண்ணிறத்த

---

174. கட்டு உரை – கேட்டார்ப் பிணிக்கும் உரை. 173. 'கண்டு கேட்டு...உள' (குறள். 1101).

175. ஆய் நலத்த – நுணுகிய நலமுடைய. 177. சுணங்கும் திதலையும் – பொன்னிறத்தேமலும் மஞ்சணிறப்பசலையும். இணங்கு – இணை, ஒப்புமை; 'இணங்கு நின்னோரை யில்லாய்' (திருவாய்.) என்ப. 179. பழித்தாள் – இழிவுறும்படி செய்தவள்.

180. 'ஏய்ந்து...துடித்த பவளம்' செவ்வாய்க்கு இல்பொருளுவமை.

குண்டலஞ்சேர் காதினள் கோலக் குளிர்மதிய
மண்டலம் போலு மதிமுகத்தாள்—வண்டலம்ப

யோசனை நாறுங் குழலாள் ஒளிநுதன்மேல்
வாசிகை கொண்டு வடிவமைத்தாள்—மாசில்சீர்ப்

பாதாதி கேசம் பழிப்பிலாள் பாங்கமைந்த
சிதாரி கொண்டுதன் மெய்புகைத்தாள்—மாதார்ந்த

பண்கவருஞ் சொல்லார்பல் லாண்டேத்தப் பாயொளி
வெண்கவரி வெள்ளத் திடையிருந்து—ஒண்கேழற் [சேர்

கண்ணவனை யல்லது காணா செவியவன
தெண்ணருஞ்சீ ரல்ல திசைகேளா—அண்ணல்

கழலடி யல்லது கைதொழா வஃதால் [டைய
அழலங்கை கொண்டான்மாட் டன்பென்—றெழிலு

வெண்பா விரித்துரைக்கும் போழ்தில் விளங்கொளிசேர்
கண்பாவு நெற்றிக் கறைக்கண்டன்—விண்பால்

182. மணிகளுருவம்—நீலமணிகளின் அழகு. 183. சலஞ்சலம் – உயர்சாதிச் சங்கு. கண்ணுக்குக் கூறுமிடத்து, சலம் சலம் என்பது சுழற்சியும் வஞ்சனையும் என்க; "சலம்வரு குயவன திகிரி (கம்பரா.), சலப்படையான் (பரிபா.) எனக் காண்க. 184. மதிமுகத்தாள் – மதிக்கூத்தக்க முகமுடையவள்.

185. வாசிகை – செறியக்கோத்த மாலை. 186. சிதாரி – புகைக்கும் வாசனைப்பண்டம்; சாம்பிராணி என்ப. 'சிதாரி' எனச் சாஸனங்களிற் பயிலும் (I. M. P. Tj. No. 55. Tp. No. 333). 187. கேழல் – ஒளி; அல் சாரியை. 188—189. இவ்வெண்பா தனியாகவும் வழங்குவதுண்டென்பது, பிரயோகவிவேக நூலார் (11 உரை) இதனை எடுத்தாளுதலால் தெரியலாகும்.

அரியரணஞ் செற்றுங் கலைபுனலும் பாம்பும்
புரிசடைமேல் வைத்த புராணன்—எரியிரவில்
ஆடு மிறைவ னமரர்குழாந் தற்சூழ
மாட மறுகில் வரக்கண்டு—கேடில்சீர்
வண்ணச் சிலம்படி மாதரார் தாமுண்ட
கண்ணெச்சி லெம்மையே யூட்டுவா—னண்ணலே
வந்தாய் வளைகவர்ந்தாய் மாலு மருந்துயருந்
தந்தா யிதுவோ தகவென்று—நொந்தாள்போற்
கட்டுரைத்துக் கைசோர்ந் தகமுருகி மெய்வெளுத்து
மட்டிவரும் பூங்கோதை மால்கொண்டாள்—கொட்டி
[மைசேர்

---

191. அரியரணம் – பகைவரது திரிபுரம். செற்றுங்கு, ஆங்கு அசைநிலை. எரி – தீயோடு. 193. பிற மாதர்கள் கண்ணால் உண்ட (நின் அழகாகிய) எச்சிலையே எம்மை ஊட்ட வந்தாய்; கண்ணெச்சில் – கண்பட்ட தோடமுடையது (ஈடு. 4–1–2).

195. கொட்டுதல் – இமைத்தல். 196–197. தெரு ஆரவாரம் பெரிது என்க.

(172–197) பேரிளம்பெண்மையாள், பணிமொழியாள், (174) மேம்படுத்தாள், மெல்லியலாள், (175) அல்குலாள், நுண்ணிடையாள், (178) கொங்கையாள், தோளினாள், (179) பழித்தாள், காதலாள், அகலத்தாள், (181) செவ்வாயாள், (183) வாட்கண்ணாள், (184) காதினாள், முகத்தாள், (185) குழலாள், வடிவமைத்தாள், (186) பழிப்பிலாள், மெய்புகைத்தாள், (190) வெண்பா விரித்துரைக்கும்போழ்தில், கறைக்கண்டன், (191) மறுகில் வரக்கண்டு, (195) இதுவோ தகவென்று, (195) கட்டுரைத்து, மால்கொண்டாள்; (196–197) (இவ்வாறு) செஞ்சடையான் போந்த தெரு, பெண்ணாரவாரம் பெரிதன்றே என முடிக்க.

பண்ணாரு மின்சொற் பணைப்பெருந்தோட் சேர்துவர்வா
பெண்ணார வாரம் பெரிதன்றே—விண்ணோங்கி [யப்
மஞ்சடையு நீள்குடுமி வாணிலா வீற்றிருந்த
செஞ்சடையான் போந்த தெரு.

---

(8) எம்பெருமான், (9) சிவபுரத்தில், (34) மழவிடையை மேல் கொண்டு, (58) வரும்போழ்தில், (67) பேதைமுதலாகப் பேரிளம்பெண் ணாக, சொல்லார் ஈண்டி, (75) சிறைத்தாள் திறந்திட்டார்; (அவருள்) பேதைப் பருவத்தாள், (84, 85) ஈசனவனை விடைமேற் கண்ணுற்று, காமநூல்மேல் நாட்செய்தாள்; (86) பெதும்பைப் பிராயத்தாள், (97) சிவலோகன் ஏற்றின்மேல் வந்தணைய, (98–99) அறிவுசிறைகளைத் தோற்று நின்றொழிந்தாள்; (110) மங்கைப் பருவத்தாள், (108) சடாமகுடந் தோன் றுதலும், (111) வெய்துயிர்த்தாள; (112) மடந்தைப் பிராயத்தாள், (126) மால்விடையில், (127) தோளானைக்கண்டு, (132) புலம்புற்றாள்; (133) அரிவைப்பிராயத்தாள், (142) பரஞ்சோதி தோன்றுதலும, (148) நலந்தோற்றாள்; (149) தெரிவைப் பிராயத்தாள், (167) சடாமகுடந் தோன் றுதலும், (171) வனந்தோற்றாள்; (172) பேரிளம்பெண்மையாள், (190) கறைக்கண்டன், (192) மாடமறுகில் வரக்கண்டு, (195) மால்கொண்டாள்; (இங்ஙனமாக) (197) செஞ்சடையான் போந்த தெரு பெண்ணாரவாரம் பெரிதாயிற்று என ஆதியுலாவுக்கு வினைமுடிவுகள் அமையும்.

—:O:—

வெண்பா

237 பெண்ணீர்மை காமின் பெருந்தோ ளிணைகாமின்
உண்ணீர்மை மேகலையு முள்படுமின்—தெண்ணீரக்
காரேறு கொன்றையந்தார்க் காவாலி கட்டங்கன்
ஊரேறு போந்த துலா.

---

முற்றும்.

---

பெண்ணீர்மை – நாணமடமச்சம்பயிர்ப்புக்கள். காமின் – பேணிக் கொள்ளுங்கள். தோளிணை காமின் – கைவளைகள் கழலாவண்ணம் உங்கள் தோள்களைப் பேணுங்கள். உள் நீர்மை – உள்ளமைந்த சிறப்பையுடைய. மேகலையை நழுவவிடாது உள்ளாக அமையச் செறிமின். கார் ஏறு கொன்றை – கார்காலத்துப் பொலிவுறும் கொன்றை. காவாலி – கபாலமுடைய சிவபிரான். கட்டங்கன – மழுவாளி. கட்டங்கன் ஊரும் ஏறு உலாப்போந்தது என்றது, ஈசனைத் தாங்கிச்செல்லும் பெரும்பேற்றால், அவன் திருவுலாப்புறத்தைத் தன்னுலாப்புறமாகவே கருதி, அவ்வேறு பீடுநடைபெற்றுப் போந்தது என்றபடி.

உ

# வேணாட்டடிகள்

அருளிய

# திருவிசைப்பா *

## கோயில்

(பண் — புறநீர்மை)

238 துச்சான செய்திடினும் பொறுப்பரன்றே யாளுகப்பார்
கைச்சாலுஞ் சிறுகதலி யிலைவேம்புங் கறிகொள்வார்
எச்சார்வு மில்லாமை நீயறிந்து மெனதுபணி
நச்சாய்காண் திருத்தில்லை நடம்பயிலும் நம்பானே. (க)

---

* வேணாட்டடிகள், திருவிசைப்பா ஆசிரியரான அடியார்களுள் ஒருவர். இவராற் பாடப்பெற்றது, தில்லையைப் பற்றிய திருப்பதிகம் ஒன்றேயாம். வேணாட்டடிகள் என்ற சிறப்புப் பெயர், தென்திருவாங்கூர்ப் பகுதியை ஆண்டுவந்த அரசர்க்கு வழங்கிவந்த தாகும்; "வேணாட்டடிகள் வீரகேரள ரவிவர்மன் (கிழப்பேரூர்), திருவேணாட்டடிகள் வீரராமன் கேரளவர்மன் எனவழங்கும் அரசர்பெயர்கள் காண்க (T. A. S. Vol. I, p. 384 ; VI, p. 63). இவ்வேணாட்டடிகளை, அவ்வரசருட் பழமையானவர் என்றே கருதல்தகும். இவர் அருளிய திருப்பதிகத்தால் இவரது வாக்கின்சிறப்பும் பத்தித்திறமும் நன்கு விளங்கும். ஒன்பதாந் திருமுறையான திருவிசைப்பாவினுள் இப்பதிகம் முன்னோரால் தொகுக்கப்பட்டுள்ளது.

238. துச்சு – இழிவு; துச்சம் என்ற வடசொல்லின் திரிபு. ஆள் உகப்பார்–அடிமைகளை உகந்தேற்பவர்; அவ்வடிமைகள் துச்சான செய்திடினும் என்க. சிறுகதலி – வாழையிளம்பிஞ்சு. கதலிப் பிஞ்சும் வேப்பிலையும் கைச்சாலும் கறிசமைத் துண்பர். கைச்சாலும் – கைத்தாலும். நச்சாய் – விரும்பாய். நம்பான் – நம்பன்; சிவபிரான்; 'நம்பான் மேய நன்னகர் போலும்' (தேவா.) என்ப.

239 தம்பானை சாயப்பற் றாரென்னு முதுசொல்லும் [தேன்
எம்போல்வார்க் கில்லாமை யென்னளவே யறிந்தொழிந்
வம்பானார் பணியுகத்தி வழியடியேன் றொழிலிறையும்
நம்பாய்காண் திருத்தில்லை நடம்பயிலும் நம்பானே. (உ)

240 பொசியாதோ கீழ்க்கொம்பு நிறைகுளமென் றதுபோலத்
திசைநோக்கிப்பேழ்கணித்துச்சிவபெருமானோவெனினு
மிசையானலென் றிறத்து மெனையுடையானுரையாடாள்
நசையானேன் திருத்தில்லை நடம்பயிலும் நம்பானே. (௩)

241 ஆயாத சமயங்க ளவரவர்கள் முன்பென்னை
நோயோடு பிணிநலிய விருக்கின்ற வதனாலே
பேயாவித் தொழும்பனைத்தம் பிரானிகழு மென்பித்தாய்
நாயேனைத் திருத்தில்லை நடம்பயிலும் நம்பானே. (௪)

---

239. தம் பண்டங்கள் இட்டுக்கொண்ட பானையை அப்பண்டஞ் சாயும்படி எவருங் கைப்பற்ற மாட்டார் என்பது இப்பழமொழிக் கருத்து. 'சாய்ப்பற்றார்' என்றும் பாடம். வம்பானார் – புதியராய் அடியரானவர். வழியடியேன்–பரம்பரையே அடியனாயுள்ள யான். தொழில் – தொழுதால்.

240. நீர் நிறைந்துள்ள ஏரி, தன் கீழ்க்கரைமுனை கரையில் கசிவுடையதாகும் என்பது இப்பழமொழிக் கருத்து. பொசிதல்–கசிதல். கொம்பு – ஏரிக்கரையின் முனை ; வழக்கு. ஈசன்கீழ் அடியனான என்றிறத்து அவனது அருள் கசியவில்லை என்றபடி. பேழ்கணித்தல்–மருண்டு நோக்குதல்; "உமையாளவள் பேழ்கணிக்க...விடமுண்டதென்னே" (தேவா.) என்ப. அவனது திருமேனியில் இடங்கொண்ட தேவியும் உரையாடாள். நசை – விருப்பம்.

241. ஆயாத சமயங்கள் அவரவர்–ஆராய்ந்து தெளியாத சமயங்களையுடைய வாதியர். நோய் (மனவேதனை), பிணி (உடல்வேதனை) இரண்டும் நலிய. பேயா – பேயாக. பேயாவி – பேயுயிர் கொண்ட எனினும் ஆம். என்பித்தாய் – என்று சொல்லச் செய்தனை.

[னேன்
242 நின்றுநினைந் திருந்துகிடந் தெழுந்துதொழுந் தொழும்ப
ஒன்றியொருகா லினையா திருந்தாலு மிருக்கவொட்டாய்
கன்றுபிரி கற்றாப்போற் கதறுவித்தி வரவுநில்லாய்
நன்றிதுவோ திருத்தில்லை நடம்பயிலும் நம்பானே. (ரு)

243 படுமதமு மிடவயிறு முடையகளி றுடையபிரான்
அடியறிய வுணர்த்துவது மகத்தியனுக் கோத்தன்றே
இடுவதுபுல் லோரெருதுக் கொன்றினுக்கு வையிடுதல்
நடுவிதுவோ திருத்தில்லை நடம்பயிலும் நம்பானே. (சு)

244 மண்ணோடு விண்ணளவு மனிதரொடு வானவர்க்குங்
கண்ணாவாய் கண்ணாகா தொழிதலுநான் மிகக்கலங்கி
அண்ணாவோ வென்றண்ணாந் தலமந்து விளித்தாலும்
நண்ணாயால் திருத்தில்லை நடம்பயிலும் நம்பானே. (எ)

245 வாடாவாய் நாப்பிதற்றி யுனைநினைந்து நெஞ்சுருகி
வீடாஞ்செய் குற்றேவ லெற்றேமற் றிதுபொய்யிற்
கூடாமே கைவந்து குறுகுமா றியானுன்னை
நாடாயால் திருத்தில்லை நடம்பயிலும் நம்பானே. (அ)

---

242. வரவுநில்லாய் — வருதற்கண் நிலைத்துநில்லாய்; வாராய் என்றபடி.

243. மிட — மிடா. களிறு உடைய — வேழமுகக்கடவுளைத் திருமகனாக உடைய. அடியறிய — தொடக்கமுதல் அறிய. ஒத்து — தமிழிலக்கணம்; 'தழற்புரை சுழற்கடவுள் தந்ததமிழ் தந்தான்' என்றார் கம்பரும் (கம்பரா.). இவ்வாறு பேராசிரியரான நீர், ஒருநுகம் பூண்ட இரண்டெருதுகளுள் ஒன்றற்குப் புல்லும் மற்றொன்றற்கு வைக்கோலும் இடுவது நடுநிலையாமோ என்றபடி.

244. மனிதரொடு வானவர்க்குங் கண்ணாவான் — 'சக்ஷுர்தேவாநாமுதமர்த்யாநாம்' என்பது வேதவாக்கியம்; "கண்ணாவான் விண்ணோர் மண்ணோர்க்கு" என்ற திருவாய்மொழித்தொடரும் ஒப்பிடுக.

245. வாயில் உள்ள நா வாடுமாறு பிதற்றி என்க. எற்றே — எத்தகை

246 வாளாமா லயன்வீழ்ந்து காண்பரிய மாண்பிதனைத்
தோளாரக் கையாரக் துணையாரத் தொழுதாலும்
ஆளோம்நீ யுடையதுவு மடியேனுன் றுள்சேரும்
நாளேதோ திருத்தில்லை நடம்பயிலும் நம்பானே. (கூ)

247 பாவார்ந்த தமிழ்மாலை பத்தரடித் தொண்டனெடுத்
தோவாதே யழைக்கின்று னென்றருளி னன்றுமிகத்
தேவேதென் திருத்தில்லைக் கூத்தாட நாயடியேன்
சாவாயு நினைக்காண்ட வினியுனக்குத் தடுப்பரிதே. (ய)

---

யது; பயனற்றதுபோலும் என்றபடி; 'எற்றென்கிளவி யிறந்தபொருட்டே (தொல்.) என்ப.

246. வீழ்ந்து – விரும்பி, துணையார – இணைந்து; இல்லாளுடன் சேர்ந்து எனினுமாம். ஆள் ஓம் நீ – ஆட்கொள்ளுதலை நீக்கும் நீ; ஓம் – ஓவும்; வாம்பரி என்புழிப்போல. 'ஆளாய் நீ' என்பது பழம்பாடம்போலும்.

247. அருளின் நன்று – அருள்புரிந்தால் நலமாம்; (இல்லையேல்,) சாவாயும் (சாகும்வரையும்) உன்னைக் காண்பதினின்றும் (நீங்கேன்). அதனை இனித் தடுத்தல் அரிது என்பது கருத்து. 'நினைக்காண்பல்' என்பது பழம் பாடம்போலும்.

## சேரவேந்தர் இயற்றிய

# பாடல்கள்



(248) யாவரே காராளர் யாவ ரிணையாவார்
நாவலோ நாவலோ நாவலோ—கோவைப்
பொருப்பா லளித்தாற்குப் போதுமே யுண்மை
நெருப்பா லளித்தார்க்கு நேர். (க)

(249) பொரிப்பு நறுநெய்யும் போனகமுந் தேனும்
பருப்புமின் சர்க்கரையும் பாலும்—விருப்பமுடன்
வாளோ டணைவிழி மங்கையு முண்டாமால்
நா ளோமழைநாள் நமக்கு. (உ)

---

248. "பழையனூரார் பழிதீர்த்த தீக்குழி அவியாதெரிய மூவேந்தரும் வந்து பார்த்தபோது" சேரமான் பாடியது இப்பாட்டு என்பது, தமிழ் நாவலர்சரிதைக் குறிப்பால்(151) அறியப்படுகின்றது. பழையனூர் நீலி என்ற பேயின் வஞ்சத்தால் அப்பேயைக் கலந்து உயிரிழந்த வணிகனுக்குப் பிணை கொடுத்த அவ்வூர் வேளாளர், தம் சபதப்படி தீக்குழியில் விழுந்து உயிர் துறந்தனர் என்பதும், அதனைக்காண மூவேந்தரும் வந்து பாடினர் என்பதும் வரலாறு. இதனை—"வஞ்சம் படுத்தொருத்தி வாணாள் கொள்ளும் வகைகேட், டஞ்சும் பழையனூ ராலங்காட்டெம் மடிகளே" (தேவா.) என்ற சம்பந்தமூர்த்திகள் பாசுரத்தால் அறிக. இதன் விரிவை, பெருந்தொகை, 1460ஆம் பாடற் குறிப்பிற் கண்டுகொள்க. நாவலோ—மகிழ்ச்சி வெற்றிகளை உணர்த்துஞ் சொல். கோ—பசுநிரை. பொருப்பு—கோவர்த்தன கிரி. நேர் போதுமே—ஒப்புப் பொருந்துமோ.

249. கார்காலத்தைப் பற்றித் தமிழ்மூவேந்தரும் பாடிய பாடல்களுள் இது சேரமான் பாடியது; தஞ்சைச் 'சரச்சுவதிமால்' புத்தகசாலயத்துள்ள சுவடியொன்றிற் கண்டது (பெருந்தொகை, 2202). பொரிப்பு—பொரிய லுணவு.

அகிலகலா வல்லவன் சேரமான்பெருமாள்

## வஞ்சி மார்த்தாண்டன்

## பாடியவை

(250) காவிரியைச் சோணாட்டைக் காராளர் தம்மரபை
நாவலரைக் காவலரை நல்லோரைப்—பூவலயம்
உள்ளத் தகும்பு துவை யூரைச் சிறப்பித்தான்
பிள்ளைப் பெருமாள் பிறந்து. (௩)

(251) பேரோசைப் பிள்ளைப் பெருமாளைச் சேதிபனைக்
காரோசைக் கையானைக் கண்டீரே—பாரோர்
விடுங்கோள் கொடுங்கோள் விழியருள்பூண் டன்னம்
இடுங்கோள் கொடுங்கோ (ளென ?) (௪)

---

250. "அகிலகலா வல்லவன் சேரமான்பெருமாள் வஞ்சிமார்த்தாண்டன் திருப்பா மூத்ததிருவடி சொல்லிவரக்காட்டின பாகுடக்கவி" என்ற தலைக்குறிப்புடன் சிலபாடல்கள் மூவலூர்ச் சிவாலயத்துள்ள சாஸனமொன்றிற் காணப்படுகின்றன (செந்தமிழ். தொகுதி, 4; பக். 251—2). இவை, அச்சேரமானால், புதுவைச் சேதிபர்குலத்துப் பிள்ளைப்பெருமாள் என்ற தலைவனைப்பற்றிப் பாடப்பெற்றவை. இத்தலைவன், விஜயநகரவேந்தரான வீரப்பிரதாபதேவ மகாராயர் ஆட்சியில், புதுக்கோட்டைச் சீமை விராச்சிலைச் சிவாலயத்துக்கு தானமளித்த செய்தி, அவ்வாலயத்தில் (கி. பி. 1443 ல்) அமைந்த சாஸனமொன்றால் தெளிவாகின்றது; "சோழமண்டலத்து ... திருவாரூர்க் கூற்றத்துப் புதுச்சேரிச் சோழமண்டலத் தாபனாசாரியன் புதுச்சேரியுடையான் பிள்ளைப்பெருமாள்" என்பது அச்சாஸனத் தொடர். இங்கே 'சோழமண்டலத் தாபனாசாரியன்' என்றதற் கேற்ப 'சோணாட்டை....சிறப்பித்தான்' என்று இப்பாட்டுக் கூறுதலுங் காண்க. இச்சேதிபனை, பெரிய வள்ளலென்றும் "செந்தமிழ்ச சிகாமணி" என்றும் சிறப்பித்துத் திருக்கோடிகா முதலிய தலங்களிற் கண்ட கல்வெட்டுக்களும் கூறுகின்றன. விஜயநகர மகாராஜ்யத்தில் இவன் செல்வாக்குப்படைத்திருந்தவன் என்று தெரிதலால், இத்தலைவனே சேரமான்பெருமாளான வஞ்சிமார்த்தாண்டரால் சிறப்பிக்கப்பட்டவனாதல் வேண்டும். இச்சேரமான், திருப்பாப்பூர் மூத்ததிருவடி வீரராம மார்த்தாண்

# 2. சேரவேந்தரைப்பற்றிய பாடல்கள்

## திருமுகப் பாசுரம்

(252) மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவும் பானிற வரிச்சிறை
அன்னம் பயில்பொழி லால வாயின்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்

---

டவர்மன் என்போராவர். திருப்பா என்பது திருப்பாப்பூர் என்பதன் திரிபு. இவற்றின் விவரமெல்லாம், திருவாங்கூர் யூனிவர்ஸிடிப் பதிப்பாக யான் வெளியிட்டுள்ள "Some Aspects of Kerala and Tamil Literature" (Part. i, pp. 50—58) என்ற ஆங்கிலநூலிற் காண்க.

பேரோசை—பெரும்புகழ்; "ஓசைகொண் மைந்தரோ டுசாவி" என்பர் (வில்லிபாரதம். வேத்திர. 22). கொடுங்கோள் – கொடிய கொள்கையை; கொடுங்குறளையை எனினுமாம்.

252. இப்பாசுரம், தம் அடியவரும் இசைவல்லாருமான பாணபத்திரர் என்பாரது வறுமையை நீக்கவேண்டித் தம் அன்பரான சேரமான்பெருமாளுக்குத் திருவாலவாய்ச் சிவபிரான் பாடியளித்தது என்பதும், இத்திருமுகப் பாசுரம் பெற்றுப் பாணபத்திரர் வருவதை அச்சேரமன்னரும் ஈசனருளால் முன்னரே அறிந்து, அப்பாணர்க்கு வேண்டிய நிதிமுதலியவற்றை அளித்து விடுத்தனர் என்பதும் வரலாறுகும். இவ்வரலாற்றினை—"தாரமுய்த்தது பாணற் கருளொடே", "பாணனிசை பத்திமையாற் பாடுதலும் பரிந்தளித்தான்" என்ற தேவாரத் தொடர்களாலும், "பரிபுரக் கம்பலை யிருசெவியுண்ணும், குடக்கோச் சேரன் கிடைத்திது காண்கென, மதிமலி புரிசைத் திருமுகங் கூறி, அன்புருத் தரித்த வின்பிசைப் பாணன், பெறநிதி கொடுக்கென வுறவிடுத் தருளிய, மாதவா வழுத்துங் கூடற் கிறைவன்" (15) என்ற

குரிமையி னுரிமையி னுதவி யொளிதிகழ்
குருமா மணிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க
பண்பால் யாழ்வல பாண பத்திரன்
தன்போ லென்பா லன்பன் றன்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே. (௫)

## கோப் பெருஞ்சேர லிரும்பொறையைப் பற்றிய *தகடூர்யாத்திரைப் பாடல்கள்

(253) மெய்ம்மலி மனத்தி னம்மெதிர் நின்றோன்
அடர்வினைப் பொலிந்த சுடர்விடு பாண்டிற்
கைபிகந் தமருந் தையணற் புரவித்
தலையவிழ் கண்ணி யிளையோன் சீறின்

கல்லாட அடிகளாலும், திருவாலவாயுடையார் புராணத்து 55-ம் படலத்தாலும் அறிக. இவ்வாறு பாணவடியார்க்கு நிதியளித்த வேந்தர், சுந்தரமூர்த்தி சுவாமிகள் காலத்தவரான சேரமான்பெருமாள் நாயனாரே என்பர், சேக்கிழார் (பெரியபு, கழறிற்: பு. 26—38). இத் திருமுகப்பாசுரம் பதினோராந்திருமுறையுள் முதனூலாக முன்னோரால் தொகுக்கப்பட்டுளது. "திருமுகவகவல்" என்றும் இதனைத் தமிழ்நாவலர் சரிதை வழங்கும். (6) "உரிமையினுரிமையின், ஒருமையி னிருமையும்; (7) குருமா மணிவிரைக் குடையதனிழற்கீழ்; (9) யாழ்வல" என்பன பாடபேதங்கள்.

* இந்நூல், சேரமான் பெருஞ்சேரல் இரும்பொறையோடு அவன் தாயாதியும் தம்பிமுறையினனுமான அதியமான் நெடுமானஞ்சி என்பான் பகைத்தமையால், அச்சேரன் அதியமானது தகடூர்மேற் படையெடுத்துப்புரிந்த போர்ச்செய்திகளையும், முடிவில் அவனைக் கொன்று பெற்ற வெற்றிகளையும் கூறுவது. [தகடூர்யாத்திரை — தகடூரின்மேல் எடுத்துச்சென்ற படைச்செலவு] இந்நூல், உரையிடையிட்ட பாடல்கள் உடையதென்றும், பழைய கதையைப் பொருளாகக் கொண்டதென்றும் கூறுவர் (தொல், பொருள், 485 உரை).

விண்ணுயர் நெடுவரை வீழ்புயல் கடுப்பத்
தண்ணறுங் கடாஅ முமிழ்ந்த நெடுங்கோட்
டண்ணல் யானை யெறித லொன்றே
மெய்ம்மலி யுவகைய னம்மருங்கு வருதல்
கடியமை கள்ளுண் கைவல் காட்சித்
துடிய னுண்க ணோக்கிச் சிறிய
கொலைமொழி மின்னுச் [சிதர்]சிதர்ந் தனையதன்
வேறிரித் திட்டு நகுதலு நகுமே. (சு)

---

மகாபாரதக் கதைபோல, அரசரிருவர்க்குள் தாயவழக்குப்பற்றி நிகழ்ந்த போர் வரலாறுகளை விரித்துக்கூறுவது இந்நூல். புறத்திரட்டு என்ற தொகை நூலாலும் தொல்காப்பிய உரைகளாலும் இந்நூற்குரியனவாகக் காணப்படும் 50-செய்யுட்களைத்தவிர, நூல்முழுதும் இதுவரை கிடைக்கவில்லை. இச் செய்யுட்களில், சேரமானை நோக்கி அரிசில்கிழார் பொன்முடியார் என்ற சங்க காலத்துப் புலவர்கள் கூறியனவாக அமைந்த பாடல்களும் சிலவுள. அவை அப்புலவர்களால் நேரே பாடப்பட்டவையல்ல என்றும், கதையமைதிக்கேற்ப அவர்கள்கூற்றாக நூலியற்றிய ஆசிரியர் பாடியவை என்றும் கொள்ள இட முண்டு. அதனால், பின்னோர்வாக்காகத் தெரியும் இப்பாடல்கள், இக் கோவை நூலின் இரண்டாந்தொகுதியுட் சேர்க்கப்பட்டன என்க.

இப்பாட்டு, தொல்காப்பியத்துள் 'பேராண்பக்கம்' என்ற புறத் துறைக்கு மேற்கோளாக நச்சினார்க்கினியரால் எடுத்தாளப்பட்டது. இது "அதிகமானாற் சிறப்பெய்திய பெரும்பாக்கனை மதியாது சேரமான் முனைப் படை நின்றானைக் கண்டு அரிசில்கிழார் கூறியது" என்பர், அவ் வுரை யாளர் (தொல். பொருள். 63). (1) நம்மெதிர் நின்றோன் ஆகிய, (4) இளையோன் என்க. பாண்டில் - குதிரைச் சேணம், தையணல் - அணிந்த பிடர்மயிர். 'புரவியூரும் இளையோன் சீறின் யானையெறிதல்' என்றது, அரசர் மேலும் படைத்தலைவர்மேலும் யானை சேறலும், களிறு தேர்களின்மேற் குதிரை சேறலும் போர்மரபாதலின் என்க (தொல். பொரு. 79, உரை). (10) துடியன் -போரில், வீரனுக்கு ஊக்கமுண்டாகத் துடிகொட்டியும் படைக் கலங்கள் ஏந்தியும் உதவுபவன் (புறம். 285).

(254) கார்த்தரும் புல்லணற் கண்ணஞ்சாக் காளைதன்
தார்ப்பற்றி யேர்தருந் தோணோக்கித்—தார்ப்பின்னர்
ஞாட்பினுள் யானைக் கணநோக்கி யானைப்பின்
தேர்க்குழா நோக்கித்தன் மாநோக்கிக்—கூர்த்த
கணைவரவு நோக்கித்தன் வேனோக்கிப் பின்னைக்
இணைவனை நோக்கி நகும். (எ)

(255) மறனுடை மறவர்க் கேறவிட னின்றி
நெய்யோ டையவி யப்பியெவ் வாயும்
எந்திரப் பறவை யியற்றின நிறீஇக்
கல்லுங் கவணுங் கடுவிசைப் பொறியும்
வில்லுங் கணையும் பலபடப் பரப்பிப்
பந்தும் பாவையும் பசுவரிப் புட்டிலும்
என்றிவை பலவுஞ் சென்றுசென் றெறியும்
முந்தை மகளிரை யியற்றிப் பின்றை
எய்பெரும் பகழி வாயிற் றூக்கிச்
சுட்டல் போயின் றாயினும் வட்டத்
தீப்பாய் மகளிர் திகழ்நலம் பேர
நோக்குநர் நோக்குநர் நொந்துகை விதிர்க்குந்
தாக்கருந் தானை யிரும்பொறை
பூக்கோட் டண்ணுமை கேட்டொறுங் கலுழ்ந்தே.

---

254. இதுவும் அது (தொல். பொரு. 67 நச்). புல்லணல்-புல்லிய தாடி (மீசை). காளை—பகைப்புறத்தவனை பெரும்பாக்கன். ஞாட்பு—போர்க்களம். இணைவன்—மேற்கூறிய துடியன். "இது பொன்முடியார் ஆங் கவனைக் கண்டுகூறியது" என்பர் (தொல். பொருள், 67, உரை).

255. இது, 'தொல்லெயிற் கிவர்தல்' என்னும் புறத்துறைக்கு (தொல். பொரு. 67) மேற்கோள்; இதுவும் பொன்முடியார் என்ற புலவர் பாடியதாம். (2) 'நெய்யொடு ஐயவி அப்பி' என்றது, மதில்வாயிலின் நெடுநிலை

(256) கலையெனப் பாய்ந்த மாவு மலையென
மயங்கம ருழந்த யானையு மியம்படச்
சிலையலைத் துய்ந்த வயவரு மென்றிவை
பலபுறங் கண்டோர் முன்னு ளினியே
அமர்புறங் கண்ட பசும்புண் வேந்தே
மாக்களி றுதைத்த கணைசேர் பைந்தலை
மூக்கறு நுங்கிற் றூற்றயற் கிடப்பக்
களையாக் கழற்காற் கருங்க ணாடவர்
உருகெழு வெகுளியர் செறுத்தன ரார்ப்ப
மிளைபோ யின்று நாமே
உருமிசை கொண்ட மயிர்க்கட்
டிருமுர சிரங்க வூர்கொள் குவமே.

---

யிலுள்ள தெய்வத்தின்பொருட்டு அப்பப்படுவதை (நெடுநல். 81). எந்திரப் பறவை — ஆண்டலைப்புள் சிச்சிலி முதலிய உருவுடையவாகப் பகைவரைக் கடித்துங் கொத்தியும் வருத்தும் மதிற்பொறிகள் (சிலப். 15, 211—216). கல் — இடங்கணிப் பொறி (ஷை, 210). கடுவிசைப் பொறி — எந்திர வில். கவண் — கல்லுமிழ் கவண்பொறி; இவ்வாறு தகடூர்மதில் பொறிகளாலும் பெருமையாலும் மதிக்கத்தக்கதாயினும், சேரனது தண்ணுமை கேட்டொறும் நோக்குவோர் கைகள் விதிர்ப்பனவாகும். பூக்கோள் தண்ணுமை — பகை விலங்கோடற்குரிய முழவம்; பூவைச் சூடிய முழவு எனினுமாம்.

256. "இது சேரமான் பொன்முடியாரையும் அரிசில்கிழாரையும் நோக்கித் தன் படைபட்டதன்மை கூறக்கேட்டோற்கு அவர் கூறியது." நம் வயவர்(வீரர்), பகைவீரர்களை முன்னுளிற் புறங்கண்டனர்; இனி, இன்றுநாளை அப்பகைவரது ஊரையே நாம் கொள்வோம்" என்பது கருத்து. நச்சினார்க்கினியர், புறத்தோனை அகத்தோன் வருத்திய புறத்துறைக்கு இதனை உதாரணங்காட்டுவர். இதற்கேற்ப, 'நம் வயவரைப் பகைவீரர் முன்னுட் புறங்கண்டனர். இனி, நாமே அவரூர் கொள்குவம்" என்று கூறினும் அமையும். (1) கலை என — மான்போல. (6) களிற்றால் உதைக்கப்பட் வீரர்பைந்தலை மூக்கற்ற பனை நுங்குபோலத் தூறுகளிடையே கிடப்ப, (10) மிளை — காவற் காடு. (11) உருமிசை — இடிக்குரல். மயிர்க்கண் முரசு — ஏற்றுரிமுரசம்.

(257) மொய்வேற் கையர் முரண்சிறந் தொய்யென
வையக மறிய வலிதலைக் கொண்ட
தெவ்வழி யென்றி வியன்றார் மார்ப
எவ்வழி யாயினு மவ்வழித் தோன்றித்
திண்கூ ரெஃகின் வயவர்க் காணிற்
புண்கூர் மெய்யி னுராஅய்ப் பகைவர்
பைந்தலை யுதைத்த மைந்துமலி தடக்கை
ஆண்டகை மறவர் மலிந்துபிறர்
தீண்டல் தகாது வெந்துறை யரணே.

(258) கால வெகுளிப் பொறையகேள் நும்பியைச்
சாலுந் துணையுங் கழறிச் சிறியதோர்
கோல்கொண்டு மேற்சேறல் வேண்டா வதுகண்டாய்
நூல்கண்டார் கண்ட நெறி

---

257. இது, தகடூரின் தன்மைகளைப் பொன்முடியார் சேரமானுக்குக் கூறியது. வேற்கையரான பகைவீரர் வலிமைமிக்குத்தங்கிய அரணிடமானது எவ்வழியுள்ளது என்று வினவுகின்றாய்; எவ்வழியாயினும் அவ்விடமே தோன்றிப் பகைவீரர் தலைகளைத் துமிக்கவல்ல ஆண்டகை மறவர் மலிதலால், பிறர் தீண்டவும் முடியாதது (தகடூரின்) அரண் என்பது கருத்து. இது, புறத்தோன் அகத்தோன்மேல் வந்துழி, அவன்பகையினைப் போற்றாது அகத்தோன் இகழ்ந்திருத்தற்கு அமைந்த மதிலரணைச் சிறப்பிக்கும் புறத்துறையாம் (தொல். பொரு. 67, உரை.).

258. இது, சேரமானால் அதியமானிடம் தூதாக விடுக்கப்பெற்ற சான்றோர் அச்சேரமானுக்குக் கூறியது. பொறைய என்றது பெருஞ்சேரலிரும்பொறையைநோக்கிய விளி. சேரமானுக்கு அதியமான் தம்பிமுறையினனாதலின் 'நும்பியை' என்றார். 'முடியுமளவும் அத்தம்பிக்கு இடித்துச் சொல்லுக; இச் சிறிய கோலைக் கொண்டு, அவனை ஒறுப்பதற்கு மேற்செல்ல வேண்டா; அதுவே, நூலோர் கண்ட நெறி என்றார்' என்க.

(259) ஒளிவிடு பசும்பொ னோடை சூட்டிய
வெளிறில் வெண்கோட்ட களிறுகெழு வேந்தே
வினவுதி யாயிற் கேண்மதி சினவா
தொருகுடர் படுதர வோரிரை துற்றும்
இருதலைப் புள்ளி னோருயிர் போல
அழிதரு வெகுளி தூங்காய் வழிகெடக்
கண்ணுறு பொழுதிற் கைபோ லெய்தி
நும்முற்கு நீதுணை யாகலு முளையே
நோதக முன்னவை வருஉங் காலை
நும்முன் நுமக்குத்துணை யாகலு முரியன்
அதனால், தொடங்க வுரிய வினைபெரி தாயினும்
அடங்கல் வேண்டுமதி யத்தை அடங்கான்
துணையிலன் தமியன் மன்னும் புணையிலன்
பேர்யா றெதிர்நீந்து மொருவ னதனைத்
தாழ்த லன்றோ வரிதுதலைப் படுதல்
வேண்டிற் பொருந்திய
வினையி னடங்கல் வேண்டும்
அனைய மாகீண் டறிந்திசி னோர்க்கே.

---

259 இது, சேரமானால் தூதுவிடுக்கப்பட்டுச் சென்ற சான்றோர் அதியமானிடம் கூறியது. வேந்தே என்றது அதியனைநோக்கி. சினவாது கேள் என்க. ஒருகுடரில் ஓர் இரை சேரும்படி உண்ணும் இருதலைப்புள்ளின் ஒருயிர்போல, நும் முன்னுக்கு (தமையனுக்கு) நீயும், நும்முன் உனக்கும் உற்றுழியுதவுங் கைபோலத் துணையாதலுண்டு. ஆதலால், நீவிர் சேர்ந்து தொடங்கவேண்டிய செயல்கள் வேறு பலஉள. அதனால் சீற்றங்கொள்ளாது அடங்குக. துணையின்றித் தமியனாகவும் புணையில்லாதவனாகவும் பேரியாற்றை நீந்திக்கடக்க ஒருவன் முற்படுதல் அரிது; அவ் வெள்ளத்துக்கு அஞ்சித் தாழ்தலன்றோ அவன் செயற்பாலது. அதனால், போர்வினை தொடங்கலினின்றும் தவிர்க. அறிஞர்முன், அத்தன்மையம் ஆவேமாகுக எ—று. (5) 'இருதலைப்புள்ளி னோருயிர் போல' என்றது, 'ஒருயிர்ப்புள்ளி னிருதலையுள் ளொன்று போரெதிர்ந்'தது போலும் நும் பகைமை என்றபடி. (6) வழி – குலம்.

## *ஔவையார் பாடியவை

(260) சிரப்பார் மணிமுடிச் சேரமான் றன்னைச்
சுரப்பாடு கேட்கவே பொன்னாடொன் றீந்தான்
இரப்பவ ரென்பெறினுங் கொள்வர் கொடுப்பவர்
தாமறிவார் தங்கொடையின் சீர். (க)

(261) சேரலர்கோன் கோதை செழும்பூந் திருக்கோவ
லூரளவுந் தான்வருக வுட்காதே—பாரிமகள்
அங்கவையைக் கொள்ள வரசன் மனமியைந்தான்
சங்கியா தேவருக தான். (உ)

---

* சேரவேந்தர்களைப்பற்றி ஔவையார் பாடியனவாகத் தமிழ் நாவலர்சரிதையிற் கண்ட பாடல்கள் பல. சங்ககாலத்தவரான ஔவையா வாக்காக இவை வழங்கினும், முன்னோரெவரும் எடுத்தாளாமையால் இப் பாடல்களைப் பிற்காலத்தனவாகக் கருதுவாருளர். இவற்றுட் பலவற்றை அவ்வாறு கருத இடமுமுண்டு.

260. தமிழ். நா. சை, 24:—ஔவையார், பழையனூர்க் காரி என் பானுக்கு ஆடு வாங்கிக் கொடுக்க வாதவன், வத்தவன், யாதவன் (என்ற) மூவரி டத்தும் போய் அவர்கள் கொடாதபடியினாலே, சேரமானிடஞ் சென்று கேட்க அவ்வரசன் பொன்னாடு கொடுத்தபோது பாடிய வெண்பா என்று தமிழ்நாவலர் சரிதையிற் குறிப்புக் காணப்படுகின்றது. சிரப்பார் மணிமுடி – சிரத்தில் பாரையும் மணிமுடியையும் உடைய. சுரப்பு – பால் சுரக்கை, கொடையிற் பெரியோனாதலின், தன் பெருமைக் கேற்பப் பொன்னாடாகக் கொடுத்தான் என்றபடி. இவன் இவ்வாறளித்த போது, 'வேந்தே! உன்னாடு பொன்னாடு' என்று ஔவையார் கூறினார் என்பர்.

261. தமிழ். நா. சை. 47:— அங்கவை சங்கவை என்பார் வேள் பாரியின் மகளிர். தமிழ்மூவேந்தருங் கூடி அப்பாரிவேளுடன் பகைத்து அவ னைப் போரிற் கொன்றபின், அவ்வேளின் உயிர்த்துணைவரான கபிலர் அவன் மகளிரைப் பார்ப்பாரிடம் அடைக்கலப்படுத்திப் பின் வடக்கிருந்து தம்முயிர் நீத்தனர். அதன்பின், ஔவையார் திருக்கோவலூர் சென்று, அப் பாரிமகளிரைத்

(262) மதுர மொழிநல் லுமையாள் சிறுவன் மலரடியை
முதிர நினையவல் லார்க்கரி தோமுகில் போன்முழங்கி
அதிர வருகின்ற யானையுந் தேரு மதன்பின்வருங்
குதிரையுங் காதங் கிழவியுங் காதங் குலமன்னனே. (௩)

(263) சிறுக்கீரை வெவ்வடகுஞ் சேதாவி னெய்யும்
மறுப்படாத் தண்டயிரு மாந்தி—வெறுத்தேனை
வஞ்சிக்குங் கொற்கைக்கு மன்னவனேற் பித்தானே
கஞ்சிக்கும் புற்கைக்குங் கை. (௪)

---

திருக்கோவலூர் மலையமான் குலத்தோன்றலான தெய்வீகன் என்பானுக்கு மணம்புரிவித்தனர் என்பது வரலாறு. இவ்வாறு, அங்கவை சங்கவையைத் தெய்விகனுக்கு மணம்புரிவிக்கிறபோது, விநாயகமூர்த்தியைக்கொண்டு மூவேந் தருக்கும் அழைப்போலை எழுதுவித்ததாக ஔவையார் கூறிய மூன்று பாடல் களிலே, இப்பாட்டுச் சேரமானுக்கு விடுத்ததாகும். 'சங்கவை யுங்கூடத் தான்' என்பது பிற்காலத்துப் பாடம். பாரிமகளை மலையமானுக்குக் கபிலரே மணம் புரிவித்தார் என்று திருக்கோவலூர்ச் சாஸனம் (பெருந்தொகை, 1047) கூறும்.

262. தமிழ். நா. தை; 54:—"சேரன் கயிலைக்குப் போகிறபோது ஔவையாரை அழைக்க, அவள் விநாயகபூசைபண்ணித் தாமதமாயிருக்க விநாயகர் தம் துதிக்கையால் எடுத்துக் கயிலையில் விடச் சேரனைக்கண்டு பாடியது" என்ற குறிப்புத் தமிழ்நாவலர் சரிதையிற் காணப்படுகின்றது சேரமான்பெருமாள்நாயனாரோடு தொடர்புடைய இவ்வரலாறு, சேக்கிழார் முதலிய முன்னோராற் கூறப்படாமையாலும், சங்ககாலத்து-ஔவையார்க்குப் பொருந்தாமையாலும் பின்னோர் வழங்கிய கதையாகவே இது கருதற்குரியது. குதிரையிற் சென்ற சேரமானுக்கு முன்னரே, விநாயகமூர்த்தியுதவியால் கயிலைவந்து சேர்ந்த ஔவையார், அச்சேரமானை ஆங்குக்கண்டு இப்பாடல் கூறினரென்பர். அச் சேரனது ரதகசதுரகங்கள் தமக்கு ஒருகாத தூரம் பிற்பட்டுவரலாயின என்பது கருத்து.

263. தமிழ். நா. தை, 57:— "சேரன் கயிலையில் இருக்கத் திரும்பி வந்து ஔவையார் பாடிய வெண்பா" என்பது தமிழ்நாவலர் சரிதைக் குறிப்பு. வஞ்சிக்குங் கொற்கைக்கும் மன்னவன் என்றது, ஈண்டு சேரமானை. புற்கை – ஒருவகைக் கஞ்சி; 'தெண்ணீரடுபுற்கை' என்ப (குறள்.).

(264) பூங்கமல வாவிசூழ் புல்வேளூர்ப் பூதனையும்
ஆங்குவரு பாற்பெண்ணை யாற்றினையும்—ஈங்கு
மறப்பித்தாய் வாளதிகா வன்கூற்றை நாவை
அறுப்பித்தா யாமலகந் தந்து. (ரு)

## இளங்கோவடிகள் பாயிரம்

(265) நீடிருங் குன்றம் நிழல்காலு மண்டிலத்துக்
கோடுகோ டாய்த்தோன்றுங் கொள்கைத்தே—கூடலார்
கொண்டாடுஞ் செஞ்சொற் குடக்கோ முனிசேரன்
தண்டா வுரைமுத் தமிழ். (கூ)

---

264. தமிழ். நா. தை, 21 :—"ஔவையார் தமக்கு நெல்லிப்பழம் கொடுத்த அதிகமானைப் பாடிய வெண்பா" என்பது தமிழ்நாவலர் சரிதைக் குறிப்பு. இவ்வரலாறு பற்றி, "வலம்படு வாய்வாளேந்தி" (91) என்று ஔவை பாடிய புறநானூற்றுப் பாடலும், அதனையடுத்து இவ்வெண்பாவும் அச் சரிதையில் அமைந்துள்ளன. "சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது, ஆதல் நின்னகத் தடக்கிச், சாதல் நீங்க எமக்கீத் தனையே" என்ற அப்பாட்டின் கருத்தைத் தழுவி, 'வன்கூற்றை நாவை யறுப்பித்தாய் ஆமலகந் தந்து' என்று இங்கே காணப்படுவது அறியத்தகும். இப்பாட்டிற் கூறப்பட்ட புல்வேளூர்ப் பூதனை ஔவையார் புகழ்ந்துபாடிய பாடல் இவ்வெண்பாவை அடுத்துள்ளது. இப்பாட்டு முன்னோரால் எடுத்தாளப்படவில்லையேனும் பழைமை குறிப்பதாம். அதியமான் சேரவேந்தர் மரபினனாதலின், இப்பாடல் ஈண்டுத் தொகுக்கப்பட்டது. 'வன்கூற்றி னாவை' என்றும் பாடம்.

265. ஒளிவிடுஞ் சிறுகண்ணாடியில் பல சிகரங்களுடன் பெரிய குன்றம் தோன்றுவது போல, சேரன் பாடிய முத்தமிழும் செந்தமிழின் பலமுடிவுகளையும் விளக்கவல்லது என்பது கருத்து. "செந்தமிழியற்கையின், ஆடிநன் னிழலி னீடிருங் குன்றம், காட்டு வார்போற் கருத்து வெளிப்படுத்து" எனவரும் சிலப்பதிகார நூற்கட்டுரைத் தொடர்கள் இங்கு ஒப்பிடத்தக்கன. கோடு— சிகரம். குடக் கோ முனி — சேரமுனிவர். தண்டா— பழுதற்ற. முத்தமிழ் — முத்தமிழுங் கூறும் சிலப்பதிகாரம்.

(266) நலத்தகு நால்வரென் றோதிய நான்முகத் தோன்படை
குலத்ததி கார வணிகர் குலபதி கோத்ததமிழ்ப் [த்த
புலத்ததி கார ருறைபதி பூம்புகார் போற்றநின்ற
சிலப்பதி காரஞ்செய் தானெடுஞ் சேரர் சிகாமணியே(எ)

—:o:—

## ஐயனாரிதனார் பாயிரம்.

(267) மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்
தென்மலை யிருந்த சீர்சால் முனிவரன்
தன்பாற் றண்டமிழ் தாவின் றுணர்ந்த
துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன்முதற்
பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த
பன்னிரு படலமும் பழிப்பின் றுணர்ந்தோன்
ஓங்கிய சிறப்பி னுலகமுழு தாண்ட
வாங்குவிற் றடக்கை வானவர் மருமான்

---

266. நால்வரென்று ஓதிய குலத்து என்க. அதிகார வணிகர் — செல்வாக்குள்ள வைசியர்; அவரது குலத்துக்குரிய பதி (நகரம்) என்க; வணிகரது மேலான பதி எனினுமாம். தமிழ்ப்புலத்து அதிகாரர் — தமிழ்ப் புலமைக்கு ஆணை செலுத்த வல்லோர். குலபதியும், உறைபதியுமான பூம் புகார் என இயையும். 'புகார் போற்ற' என்றது, பிற தலைநகர்க்கு உப லக்கணம்.

267. இது, புறப்பொருள் வெண்பாமாலைச் சிறப்புப்பாயிரம். தொல் காப்பிய மரபியலுரையுள் பேராசிரியர், அகத்தியனார் மாணாக்கருள் தொல் காப்பியனாரே தலைமை வாய்ந்தவர் என்பதை, "ஐயனாரிதனாருங் கூறினார்; 'என்னை? மன்னிய...பகர்ந்த' எனப் பாயிரஞ்செய்தற்கு உடம்பட்டமை யின் என்பது" என்றெழுதிப் போதலால், இப்பாயிரம் வெண்பாமாலையாசி ரியர் காலத்தே பாடப்பட்டமை பெறப்படும். "உலகமுழுதாண்ட... வானவர்

ஐய னாரிதன் அகலிடத் தவர்க்கு
மையறு புறப்பொருள் வழாலின்று விளங்க
வெண்பா மாலை யெனப்பெயர் நிறீஇப்
பண்புற மொழிந்தனன் பான்மையிற் றெரிந்தே.

---

## * குலசேகர ஆழ்வார் தனியன்கள்.

(268) இன்னமுத மூட்டுகே னிங்கேவா பைங்கிளியே
தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாள்—பொன்னஞ்
சிலைசேர் நுதலியர்வேள் சேரலர்கோ னெங்கள்
குலசே கரனென்றே கூறு. (க)

(269) ஆரங் கெடப்பர னன்பர்கொள் ளாரென் றவர்களுக்கே
வாரங் கொடுகுடப் பாம்பிற்கை யிட்டவன் மாற்றலரை
வீரங் கெடுத்தசெங் கோற்கொல்லி காவலன் வில்லவர்
சேரன் குலசே கரன்முடி வேந்தர் சிகாமணியே [கோன்
(உ)

---

மருமான்' என்பதனால், இவர், சேரர்குலத் தோன்றல் என்பது விளக்கமாம் . முனிவரன் – அகத்தியனார். 1—4. "அகத்திய னென்னும், அருந்தவ முனிவ னாக்கிய முதனூல், பொருந்தக் கற்றுப் புரைதப வுணர்ந்தோர், நல்லிசை. நிறுத்த தொல்காப்பியனும்" என்பது பன்னிருபடலப் பாயிரம். (தொல் மரபி, 94, பேரா. உரை).

* இவ்வாழ்வாரைக் குலசேகரப்பெருமாள் என்றும், இவரருளிச் செயலைப் 'பெருமாள் திருமொழி என்றும் வழங்குவர்.

(268-269) இவ்விரண்டு பாடல்களும், அத்திருமொழியைச் சிறப்பித்து முன்னோர் பாடிய தனியன்கள் (பாயிரங்கள்) ஆகும். இவற்றின் குறிப்புக் களை, இந்நூலின், 1, 2–ஆம் பக்கங்களிற் கண்டுகொள்க.

(270) பொன்புரையும் வேற்குலசே கரனே மாசிப்
புனர்பூசத் தெழில்வஞ்சிக் களத்திற் றோன்றி
அன்புடனே நம்பெருமாள் செம்பொற் கோயி
லனைத்துலகின் பெருவாழ்வு மடியார் தங்கள்
இன்பமிகு பெருங்குழுவுங் காண மண்மேல்
இருளிரிய வென்றெடுத் திசையிற் சொன்ன
நன்பொருள்சேர் திருமொழிநூற் றைந்து பாட்டும்
நன்றாக வெனக்கருள்செய் நல்கி நீயே. (௮)

(271) மாசிப் புனர்பூசங் காண்மினின்று மண்ணுலகீர்
தேசித் திவசத்துக் கேதென்னிற்—பேசுகின்றேன்
கொல்லி நகர்க்கோன் குலசே கரன்பிறப்பால்
நல்லவர்கள் கொண்டாடு நாள். (௪)

(272) அஞ்சனமா மலைப்பிறவி யாதரித்தோன் வாழியே
அணியரங்கர் மணத்தூணை யடைந்துய்ந்தோன் வாழி
வஞ்சிநக ரந்தன்னில் வாழவந்தோன் வாழியே [யே
மாசிதனிற் புனர்பூசம் வந்துதித்தோன் வாழியே
அஞ்சலெனக் குடப்பாம்பி லங்கையிட்டான் வாழியே
அனவரத மிராமகதை யருளுமவன் வாழியே
செஞ்சொன்மொழி நூற்றைந்துஞ் செப்பினான் வாழியே
சேரலர்கோன் செங்கமலத் திருவடிகள் வாழியே (௬)

---

(270) இது, ஸ்ரீமத். வேதாந்ததேசிகர் அருளிய பிரபந்தசாரத்தின் எட்டாம் பாட்டு. வஞ்சிக்களம் – சேரர் தலைநகர். கோயில் – திருவரங்கம். 'இன்பமிகு பெருங்குழூஉக்காண' என்றும் பாடம்.

(271) இது, ஸ்ரீ மணவாளமாமுனிகள் அருளிய உபதேசரத்தின மாலையின் பதின்மூன்றாம் வெண்பா. இத் திவசத்துக்கு தேசு-(மாசிப்புனர் பூசமாகிய) இந்நாளுக்குரிய பொலிவு. தேசு – ஒளி, பொலிவு. பிறப்பால் – அவதாரத்தால்.

(272) இஃது, ஸ்ரீ அப்பிள்ளை அருளிய வாழித்திருநாமத்தின் ஆறாம் பாட்டாகும். அஞ்சனமாமலை – திருவேங்கடமலை. மணத்தூண் – திருவரங்கம் பெரியகோயிற் சந்நிதிப்பக்கத் தமைந்த இரண்டு திருத்தூண்கள்.

## சேரமான்பெருமாள்நாயனாரைப் பற்றியவை.

(273) அன்றுவெள் ளானையின் மீதிமை
யோர்சுற் றணுகுறச்செல்
வன்றொண்டர் பின்பரி மேற்கொண்டு
வெள்ளி மலையரன்முன்
சென்றெழி லாதி யுலாவரங்
கேற்றிய சேரர்பிரான்
மன்றிடை யோதுபொன் வண்ணத்தந்
தாதி வழக்கிதுவே. (௬)

(274) மன்னர் பிரானெதிர் வண்ண னுடலுவ ரூறிநீறு
தன்னர் பிரான்றமர் போல வருதலுந் தான்வணங்க
வென்னர் பிரானடி வண்ணா னெனவடிச் சேரனென்னுந்
தென்னர் பிரான்கழ றிற்றறி வானெனுஞ் சேரலனே.

---

273. இப்பாட்டு பொன்வண்ணத்தந்தாதிமுடிவில், அதன்பாயிரமாக அமைந்தது. அவ்வந்தாதிச் சுவடிகள் பலவற்றினும் இச்செய்யுள் காணப்படாமையால், இது பிற்காலத்தோராற் பாடப்பட்டதென்பர். சேரமான்பெருமாளது திருவுலாப்புறத்தை 'ஆதியுலா' என்று இப்பாடல் கூறுதலும் காண்க. இதனுட் கண்ட வரலாற்றை இந்நூலின் 136—137-ஆம் பக்கங்களால் அறிந்துகொள்க. 'பொன்வண்ணத் தந்தாதி வழக்கு' — பொன்வண்ணத் தந்தாதி வழங்குமுறை; 'வழங்கிதுவே என்று பாடமோதுவர்.

274. நம்பியாண்டார் நம்பிகளது திருத்தொண்டர் திருவந்தாதியின் சுசு-ஆம் பாட்டு இது. சேரமான்பெருமாள் பவனிவரும்போது, எதிரே வண்ணானொருவன் ஆடையொலித்தற்கு வேண்டும் உவர்மண் பொதியைத் தாங்கி, அதன் நீர் உடலிற்கசிந்து உலர்ந்தமையால் முழுநீறு பூசிய முனிவர் போல இவர்முன் தோன்றியவளவில் அவனெதிர் சென்று இவர் வணங்கினர் என்பதும், அதுகண்ட அவன் பதறி 'நான் அடிவண்ணான்' என்றுகூற அதற்கு இவர் 'நான் அடிச்சேரன்' என்று கூறினர் என்பதும் வரலாறு. தன்னர் என்னர் — தன்னவரான, என்னவரான; அர் அசைநிலைகளுமாம். கழறிற்றறிவார் — சேரமான்பெருமாள்

(275) சேரற்குத் தென்னு வலர்பெரு மாற்குச் சிவனளித்த
ஈரக் கடகரி முன்புதன் பந்தி யிவுளி வைத்த
வீரற்கு வென்றிக் கருப்புவில் வீரனை வெற்றிகொண்ட
சூரற்கென துள்ளநன் றுசெய்தாயின் றுதொண்டுபட்டே.

(276) இறையுந் தெளிகிலர் கண்டு மெழிற்றில்லை யம்பலத்துள்
அறையும் புனற்சென்னி யோனரு ளாலன் றடுகரிமேல்
நிறையும் புகழ்த்திரு வாரூ ரனுநிறை தார்ப்பரிமேல்
நறையுங் கமழ்தொங்கல் வில்லவனும் பெற்ற நல்வழியே

(277) காவலர்ம கோதையார் கொடுங்கோ ளூர்க்கோக்
கழறியதை யறிந்தகோச் சிலம்போசைக் கருத்தார்
நாவலர்கோ நம்பரடிச் சேர னென்றே
நவின் றுவரும் வண்ணனை நயந்த கோநற்

---

275. மேற்கூறிய திருவந்தாதி ௭௫-ஆம் பாடல். ஈரம் - கசிவு இவுளி - குதிரை. யானைக்குமுன் குதிரை வைத்த வீரன் - சுந்தரமூர்த்தி சுவாமிகளின் வெள்ளானைக்கு முன்னதாகத் தானேறிச் சென்ற குதிரை செல்லும்படிவைத்த திறலோன். சதுரங்கவிளையாட்டில், யானையைக் கட்டுதற்குக் குதிரையை முன்னிறுத்துவதுபோன்ற செயல்புரிந்த வீரன் என்பது குறிப்பு. இனி, "ஆனைக்குக் குதிரைவைக்கை - பிடிகொடுக்குமாபோலே யிருந்து பிடிகொடா தொழிகை" என்ற முன்னோர் உரையும் இங்கு அறியத்தக்கது. (திருவாய்மொழி ஈடு, 7-10-1; பெரிய திருமொழி, பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் 5—5—8). இதற்கேற்ப, ஈண்டுக் குறிப்புக் கொள்ளினும் ஆம்.

276. இது, நம்பியாண்டார் நம்பிகள் அருளிய கோயிற் றிருப்பண்ணியர்விருத்தத்தின் ௬௧-ஆம் பாட்டாகும். இறையும் - சிறிதும். வில்லவன் - சேரமான்.

277. இது, திருத்தொண்டர் புராணசாரத்தின் ௪௬-ஆம் பாட்டு. மகோதையார் கொடுங்கோளூர் - 'மகோதையார் பட்டணம்' என்று கூறப்படும்

பாவலர்கோப் பாணபத் திரனுல் வாய்ந்த
பரமர்திரு முகம்வாங்கிப் பணிகோ வெற்பின்
மேவியகோ வானைக்குக் குதிரை வைத்த
வீரர்கோ வெனையாளுஞ் சேரர் கோவே. (ம)

அதிகமான் எழினி
விடுகாதழகிய பெருமாள்

(278) 'வஞ்சியர் குலபதி யெழினி வகுத்த
வியக்க ரியக்கியரோ
டெஞ்சிய வழிவு திருத்தியி(வ்) வெண்குண
இறைதிரு மலைவைத்தான்
அஞ்சிதன் வழிவரு மவன்வழி முதலிக[ல்]
அதிகன [மகனன்] நூல்
விஞ்சையர் [தலே]புனை தகடையர் காவலன்
விடுகா தழகிய பெருமாளே. (கக)

---

கொடுங்கோளூர்; இது சேரரின் கடற்கரைத் தலைநகர்; இதற்கு 'மகோதையார்பட்டணம்' என்ற வழக்குண்மை சாஸனங்களாலும் அறியப்படும். 'கழறியவை அறிந்த கோ' என்றது, கழறிற்றறிவார் என்ற திருநாமம்பற்றி. சிலம்போசை — தில்லைத் திருநடனவோசை. வெற்பில் — கயிலையில்.

278. திருமலை (வட ஆர்க்காடு ஜில்லா) சைனப்பள்ளியின் வாயின் முகப்பில் வரையப்பட்ட சிலாசாஸனப் பாட்டு (Ep. Ind., Vol. vi, p 332). "ஸ்வஸ்திஸ்ரீ. சேரவம்சத்து அதிகை மா[ன்] எழினி செய்த தர்மம். ஸ்ரீமத் கேரள பூப்ருதா ய்வனிகா நாம்நா...தகடா நாதேந" என, இக்கல்லெழுத்தின் தென்மொழி வடமொழிப் பகுதிகள் தொடங்குவன. இதனுல், சேரர்மரபினரான ஆதி அதியமானரசரின் குலத்தவனுய் அவரது பழைய தகடூரையே தன் தலைநகராகக்கொண்டு ஆண்டவன் இவன் என்பது தெரியலாம். [தகடூர்— சேலஞ்ஜில்லா தர்மபுரியின் பழம்பெயர்] இவன் முன்னோரான அதியமான் நெடுமானஞ்சி, பொகுட்டெழினி என்பவர் வரலாறுகளை இந்நூலின் முதற்ருெகுதியுட் (பக். 21–23) காண்க. விடுகாதழகிய பெருமாள் என்பது, இச்சாஸனம் வழங்கிய அதிகமான்பெயர். 'விடுகாது அழகிய' என்பது, துளைகளை

(279) உரைமருவுங் குலோத்துங்க சோழ தேவர்க்
குரைத்தயாண் டிருபதின்மே லிரண்டிற் பெண்ணைக்
கரைமருவுஞ் சிறுகோட்டைக் குள[நாகை]நாயகர்க்
கற்றளிதன் பேரிட்ட காரணைய கையான் [களித்துக்
திரைமருவுந் தடங்கமலத் தகடை மன்னன்
செழும்பாலிபெண்ணைபொன்னித்திருநதிமூன் றுடைய
விரைமருவுந் தார்மார்வன் ராசராச வதிகன்
விலங்கா மொழிவிடுகா தழகியபெரு மாளே. (கஉ)

### கூபகர்கோன்

(280) எத்திசையும் புகழ்படைத்த கொல்லந் தோன்றி
இருநூற்றுத் தொண்ணூற்றி ரண்டா மாண்டு
வெற்றிசெயுங் கும்பத்தில் வியாழ னிற்க
விளங்குபுக ழாவணிபன் னிரண்டாந் தேதி

---

வளர்த்துத் தொங்கவிட்ட காதால் அழகான என்ற பொருள்படும். "விடுகா தானாலும் தோடிட்டு வளர்ந்த காது என்ற தெரியுங்காண்" என்பர் முன்னோர் (திருவாய்மொழி. ஈடு, 10-1-1). திருமலைச் சினாலயத்தில் யக்ஷயக்ஷிதெய்வங்களின் பிம்பங்களை இவன் பிரதிஷ்டித்த செய்தி இப்பாட்டிற் கூறப்படுவது.

279. இது, சேலம் ஜில்லா கம்பையநல்லூர்ச் சிவாலயத்திற் கண்ட சிலாசாஸனப் பாட்டு (Ep. Ind. Vol. vi. p. 338). இதுவும் அவ்விடுகாதழகிய பெருமாளின் சாஸனமே. இதனுட் கூறப்பட்ட குலோத்துங்கன் என்பான், அப்பெயர் தரித்த சோழர்களுள் மூன்றாமெண்ணுக் குரியவன் (கி. பி. 1178-1218). இச்சோழனது 22-ஆம் ஆண்டென்பது கி. பி. 1200-ஆம் வருஷம் ஆகும். பாலி, பெண்ணை, காவிரி என்ற மூன்று நதிகளும் பாய்வது இவ்வதிகனது நாடு என்பது அறியத்தக்கது. ராஜராஜ அதிகன் என்பது இவன்தந்தை பெயர். சிறுகோட்டை நாகைநாயகர்க்குக் கற்கோயில் இவன் கட்டுவித்த செய்தி இப்பாட்டிற் கூறப்படுவது. இவ்விரண்டு சாஸனப் பாடல்களாலும், 12, 13-ம் நூற்றாண்டுகளில், அதியமான்மரபினர் நாடாட்சிபுரிந்து வந்த செய்தி தெரியலாகும்.

280. இது, பழையாறு என வழங்கும் பறளியாற்றில் அமைந்த

தத்திவிழும் பறளியாற் றணையுந் தள்ளித்
தமிழ்ப்பாண்டி ராசசிங்கன் றனையும் வென்று
கொத்தலரும் பூஞ்சோலை நாஞ்சி னாடும்
கோட்டாறுங் கூபகர்கோன் கொண்ட நாளே. (௩௩)

## குலசேகரமன்னவன்

(281) நற்கொல்லம் நானூற்று நாற்பத்
திரண்டில் நயந்தசிங்கம்
பொற்கொண்ட தெய்தி பதினொன்று
வெள்ளியிற் பொங்குகிரி
சொற்கண்டு வாழும் புகழ்வள்ளி யூரினைத்
தோன்ற வைத்தான்
மற்கொண்ட திண்புய னேகுல
சேகர மன்னவனே. (௧௪)

## சிறைவாய் மூத்ததிருவடி
## ஆதித்தியவர்மன்

(282) செயதுங்க நாட்டுச் சிறைவாய்மன்
ஆதித்தன் தென்வஞ்சியான்
வியலொன் றகில கலாவல்ல
வன்கன்னி விசாகம்வந்தோன்

---

'பாண்டியனணை'யின்கீழ் வரையப்பட்ட சாஸனப்பாட்டு என்பர். கூபகர்கோன் – திருவிதாங்கூர் அரசன், சேரன்; (கூபகம் – குட்டநாடு). இதனிற் கண்ட கொல்லமாண்டு கி. பி. 1115—3 ஆகும்.

281. குலசேகரமன்னவன் என்பார், சேரவேந்தராதல் வேண்டும். பிற தமிழ்வேந்தர் வழங்கிவந்த சகாப்தத்தாலன்றிச் சேரர்க்கேயுரிய கொல்லமாண்டாற் காலங் குறிக்கப்படுதல் காண்க. இப்பாட்டு, 'அம்மன்கதை' என்ற சுவடியிற் கண்டது என்பர், கவிமணி திரு. தேசிகவிநாயகம்பிள்ளையவர்கள் (Kerala Society Paper, No. 6, p. 318).

282. இது, திருநெல்வேலிஜில்லா திருக்குறுங்குடி, ஸ்ரீ நம்பிகோ

நயமொன்று கொல்லம் அறுநூற்று
நாற்பத்து நாலிலன்பாய்
அயனும் பணிய மணியளித்
தான்நம்பிக் கன்புகொண்டே. (கரு)

## இ ர வி வ ர் ம ன்

(283) ஆதியெழு நூற்றுடன்தொண் ணூற்றை யாண்டில்
அற்பசியேழ் மூற்றசமி யவிட்டந் தன்னில்
மாதிரைசே ரிங்நாளின் இரவிவேந்தன்
மனமகிழப் பகவதிவாள் வைத்த கோட்டத்
தோதிலுறு மிறைவியிருப் பதற்கு மேன்மை
யுறுமுகமண் டபமாம தற்கு நாப்பண்
மூதறிவா லொருகலின்மண் டபஞ்செய் வித்தான்
முல்லைமங்க லவன்திரிவிக் கிரமன் முனே. (கசு)

---

யிற் பெரிய மணியில் வரையப்பட்ட பாடல் (T. A. S. Vol. ix, p. 9). இம் மணியை அக்கோயிற்குக் கொல்லம் 644 (கி. பி. 1469)-ல் அளித்த ஆதித்தன் என்ற அரசர், மூவலூர்ச் சாஸனப்பாடல்களைப் பாடிய "சேரமான்பெருமாள் வஞ்சி மார்த்தாண்டர்" என்ற அரசரின் இளைய சகோதரராவர். திருப்பாப்பூர் மூத்த திருவடி, சிறைவாய் மூத்த திருவடி என்பன, அடுத்தடுத்துப் பட்டம் பெற்ற திருவிதாங்கூர் அரசர்கள் மாறிமாறித் தரித்துவந்தபெயர்களாம். 'அகில கலாவல்லவன்' என்ற சிறப்புப் பெயர், இவர்க்கும் இவர் தமையன் வஞ்சி மார்த்தாண்டர்க்கும் வழங்குவதனால், இச்சகோதரரின் கலாஞானவிசேடம் அறியப்படும். இவரையும் இவர் தமையனையும் பற்றிய பிறசெய்திகளை, யான் ஆங்கிலத்தில் எழுதி வெளியிடுவித்த "Some Aspects of Kerala and Tamil Literature" என்ற நூலின் 50-58-ம் பக்கங்களிற் காண்க. வியல் - விரிவு. அயனும் பணிய என்றது, மணியின் சிறந்த நாதத்தைக் கேட்டுப் பிரமனும் தலைவணங்கும்படி எ-று. நம்பி - திருக்குறுங்குடித் திருமால்.

(283. T. A. S. Vol. vi, p. 171) இது, தக்கலைக்கு 4-மைலில் வடமேற்கிலுள்ள வாள்வைச்சகோட்டம் என்ற ஊரின் பகவதிகோயிலிற்

## சேரவேந்தர் — பொது

(சேரர்பெயர்கள்)

(284) பூழியன் உதியன் கொங்கன் பொறையன்
வானவன் குட்டுவன் வான வரம்பன்
வில்லவன் குடநாடன் வஞ்சி வேந்தன்
கொல்லிச் சிலம்பன் கோதை கேரளன்
போந்தின் கண்ணியன் பொருநைத் துறைவன்
சேரலன் மலையன்கோச் சேரன் பெயரே. (கஎ)

(வானவன்)

(285) ஏற்றூர்தி யானு மிகல்வெம்போர் வானவனும்
ஆற்றலு மாள்வினையு மொத்தொன் றுடைய்வாரே
கூற்றக் கணிச்சியோன் கண்மூன் றிரண்டேயாம்
ஆற்றல்சால் வானவன் கண். (கஅ)

---

காணும் சாஸனப்பாடல். கொல்லம் 795-ம் ஆண்டு இரவிவர்மா என்ற திருவிதாங்கூர் அரசர் காலத்தே, முல்லை மங்கலவன் திரிவிக்கிரமன் என்ற தருமவான், ஷை பகவதிகோயிற்குப் பல திருப்பணிகளும் புரிந்த செய்தி இதனுட் கூறப்படுவதாம்.

284. திவாகரம், மக்கட்பெயர்த் தொகுதி.

285. தொல்காப்பியம், பொருளதிகாரம், சூ. 60, நச்சினார்க்கினியம். இது, சேரனை அரணுகக் கூறியது. ஆற்றலாலும் அருஞ்செயலாலும் அவ்விருவரும் ஒப்பராயினும், உறுப்பால் ஒவ்வார் எ-று. கணிச்சியோன் — மழுவாளி; சிவபிரான்.

(286) பல்யானை மன்னீர் படுதிறை தந்துய்மின்
மல்லல் நெடுமதில் வாங்குவிற் பூட்டுமின்
வள்ளிதழ் வாடாத வானோரும் வானவன்
வில்லெழுதி வாழ்வர் விசும்பு. (கக)

(287) கல்லினைக் கதிர்மணிக் கவண்பெய்து கானவர்
கொல்லையிற் களிறெறி வெற்பே யாதே
கொல்லையுட் களிறெறி வெற்பனிவ் வியனுட்டார்
பல்புகழ் வானவன் ருனே யாதே
பல்புகழ் வானவன் தாள்சேரா மன்னர்க்கு
நல்ல படாஅ பறையே யாதே. (உ0)

(கோதை)

(288) இந்திர னென்னி னிரண்டேகண் ணேறூர்ந்த
அந்தரத்தா னென்னிற் பிறையில்லை—அந்தரத்துக்
கோழியா னென்னின் முகநான்கே கோதையை
ஆழியா னென்றுணரற் பாற்று. (உக)

---

286. முத்தொளாயிரம் (புறத். 1285; தொல். புறத்திணை. 5 இளம்பூரணம்) மன்னீர்! திறைப் பொருள்களைச் செலுத்தி உய்ம்மின்; உங்கள் கோட்டைமதிலில் விற்பொறியை வரைமின்; தேவர்களும் விசும்பிலே சேரன் (இலாஞ்சனையாகிய) வில்லை எழுதி வாழ்வர் எ-று. விசும்புவில் – வானவில்.

287. 'மூப்பெட்டுச் செய்யுள்' என்ற நூலின் பாட்டு (யாப். விருத்தி). 'யாதே' என்பன அசைகள் போலும். 'நல்ல படாஅ பறை'– "செத்தார்க் குரிய நெய்தற்பறையே படும்" என்பதாம் (குறள், 1115, பரிமே. உரை).

288. தொல், பொருளதி. உவமவியல், 32. "இந்திரனையும் இறையோனையும் முருகனையும் ஒப்புமை மறுத்து நெடியோனை உவமங்கூறலின் ஒப்புமை மறுத்துப் பிறிதுநாட்டியது" என்பர் பேராசிரியர். "சேரனைப் பல தேவராகக் கூறியது என்பர் நச்சினார்க்கினியர் (ஷை, புறத்திணையியல், 5 உரை). அந்தரத்தான் – தேவன்.

(289) எருத்துமேல் நோக்குறின் வாழுலே மென்னுங்
கருத்திற்கை கூப்பிப் பழகி—எருத்திறைஞ்சிக்
கால்வண்ண மல்லாற் கடுமான்றேர்க் கோதையை
மேல்வண்ணங் கண்டறியா வேந்து. (உஉ)

(290) வானிற்கு வையகம் வென்றது வானத்து
மீனிற் கனையார் மறமன்னர்—வானத்து
மீன்சேர் மதியனையன் விண்ணுயர் கொல்லியார்
கோன்சேரன் கோதையென் பான். (உ௩)

(291) கரிபரந் தெங்குங் கடுமுள்ளி பம்பி
நரிபரந்து நாற்றிசையுங் கூடி—எரிபரந்த
பைங்கண்மால் யானைப் பகையடுதோட் கோதையைச்
செங்கண் சிவப்பித்தார் நாடு. (உ௪)

(292) அரும்பவிழ்தார்க் கோதை யரசெறிந்த வெள்வேல்
பெரும்புலவுஞ் செஞ்சாந்தும் நாறிச்—சுரும்பொடு
வண்டாடும் பக்கமு முண்டு குறுநரி
கொண்டாடும் பக்கமு முண்டு. (உ௫)

---

289. தொல். மெய்ப்பாட்டியல், 8, பேராசிரியம். நிமிர்ந்து நோக்குமிடத்து நாம் உயிர்வாழேம் என்ற கருத்துடன் கோதையின் அடியுருவத்தை யல்லது, அவனது மேலுறுப்பின் தன்மைகளை அறியாதவராயினர் வேற்றரசர் என்பது கருத்து. எருத்து — கழுத்து. கடுமான் — வேகமான பரிகள் பூண்ட,

290. முத்தொள். (புறத்திரட்டு, 1467). வானிற்கு மீனிற்கு என்பன, வானை மீனை என இரண்டன் பொருளில் மயங்கின. கொல்லியார் — கொல்லிநகரார்; 'கொல்லிநகர்க்கிறை' என்றார் குலசேகரப் பெருமாளும் (61). கொல்லிக் கண்ணன் என்ற பழைய புலவர் பெயராலும் கொல்லி என்ற நகருண்மை அறியப்படும்; கொல்லிமலை சூழ்ந்த நாட்டார் எனினுமாம்.

291. ஷை, (புறத். 1287). சிவப்பித்தார்நாடுகள் எரிபரந்தன என முடியும். சிவப்பித்தார் — சினமூட்டிய பகைவர்.

292. ஷை, ஷை, 1471 பகையரசரைக் கொன்ற கோதையின் வேல்,

கைக்கிளை

(293) தாய ரடைப்ப மகளிர் திறந்திடத்
தேயத் திரிந்த குடுமியவே—ஆய்மலர்
வண்டுலாஅங் கண்ணி வயமான்றேர்க் கோதையைக்
கண்டுலாஅம் வீதிக் கதவு. (உசு)

(294) வாமான்றேர்க் கோதையை மான்றேர்மேற் கண்டவர்
மாமையே யன்றோ விழப்பது—மாமையிற்
பன்னூறு கோடி யுருதோவென் மேனியிற்
பொன்னூறி யன்ன பசப்பு. (உஎ)

---

அப்பகைவர் மார்பிற் பாய்ந்ததனால், ஒருபக்கம் புலாலும் மறுபக்கம் சந்தனமும் நாறும்; அதனால் நரிகள் ஒருசாரும், வண்டுகள் ஒருசாரும் வந்து பொருந்துவனவாயின எ—று.

293. முத்தொளாயிரம் (புறத். 1508)—தம்மகளிர், பவனிவரும் கோதையைக் காண வெளிச்செல்லாதபடி தாயரடைத்தலாலும், அம்மகளிர் அவரைமீறித் திறத்தலாலும் வீதிக்கதவுகள் தேயும்படி திரிந்த குடுமியவாயின எ—று, வீதிக்கதவு திரிந்த குடுமிய என இயையும். குடுமி — கதவின் கீழு மேலுமுள்ள முனைப்பகுதிகள். இதனைக் 'குடுமிக் கதவு' என்ப. "வருவார் கொழுந ரெனத்திறந்தும் வாரார் கொழுந ரெனவடைத்தும், திருகுங் குடுமி விடிவளவுந் தேயுங் கபாடந் திறமினோ" என்பதும் ஒப்பிடுக (கலிங். பா. 69).

294 முத்தொளா. (புறத். 1578)—சேரனான கோதையைத் தேர் மேற்கண்ட பெண்டிர் இழப்பது தம் மாமைநிறமே யாகும். அம் மாமையினும் அவர் தம் மேனியிற் புதிதாகப் பெற்ற பொன்னிறப்பசலை பலநூறு கோடிமடங்கு மேம்பட்டதன்றோ ? எ—று. மாமை — அழகுதேமல், கோதையின்காட்சியால் தாம் இழந்தநிறத்தினும், பெற்றபொன்னிறம் பன்மடங்கு பெரிது என்றபடி.

(295) நீரும் நிழலும்போல் நீண்ட அருளுடைய
ஊரிரே யென்னை யுயக்கொண்மின்—போரிற்
புகலுங் களியானைப் பூழியர்கோக் கோதைக்
கழலுமென் னெஞ்சங் கிடந்து. (உஅ)

(296) கடற்குனைக் கோதையைக் காண்கொடாள் வீணில்
அடைத்தாள் தனிக்கதவ மன்னை—அடைக்குமேல்
ஆயிழையா யென்னை யவன்மே லெடுத்துரைப்பார்
வாயு மடைக்குமோ தான். (உகூ)

(297) ஆய்மணிப் பைம்பூ ணலங்குதார்க் கோதையைக்
காணிய சென்று கதவடைத்தேன்—நாணிப்
பெருஞ்செல்வ ரில்லதது நல்கூர்ந்தார் போல
வருஞ்செல்லும் பேருமென் னெஞ்சு. (௩0)

(298) கடும்பலித் திங்கட்டன் கைபோர்வை யாக
நெடுங்கடை நின்றதுகொல் தோழி—நெடுஞ்சினவேல்
ஆய்மணிப் பைம்பூண் அலங்குதார்க் கோதையைக்
காணிய சென்றவென் னெஞ்சு. (௩க)

---

295. ஷை, (புறத். 1532)—போரிற் புகலும் – போரின்கண் விருப்பஞ்செய்யும். பூழியர் கோ–பூழிநாட்டரசன். அழலும்–காமத்தால் வெதும்பும்.

296. ஷை, (புறத். 1741)—காண் கொடாள்–காணவிடாள். கோதையை யான் காணவிடாமல் அன்னை கதவை அடைத்தாலும், அவன்பால் உள்ள என் காதலை ஊரார் அறிவராதலின், அவர் வாயையும் அடைக்கும் திறமை அவட்கில்லை என்றபடி.

297. ஷை, (புறத். 1553)—கோதையைக் காணச்சென்று, நாணத்தால் கதவையடைத்தேன். ஆனல், என்னெஞ்சமோ, செல்வர்பால் அவரமயம் பார்த்து வறியோர் வருவதும் செல்வதுமாயிருப்பது போல, போக்கும் வரவும் உடையதாயிற்று எ–று.

298. ஷை., (புறத். 1557)—நெஞ்சைத் தூதுவிட்ட தலைவிகூற்று.

(299) இவனென் னலங்கவர்ந்த கள்வன் இவனெனது
நெஞ்ச நிறையழித்த கள்வனென்—றஞ்சொலாய்
செல்லும் நெறியெல்லாஞ் சேரலர்கோக் கோதைக்குச்
சொல்லும் பழியோ பெரிது. (கூஉ)

(300) காராட் டுதிரந்தூஉ யன்னை களனிழைத்து
நீராட்டி நீங்கென்றால் நீங்குமோ—போராட்டு
வென்று களங்கொண்ட வெஞ்சினவேற் கோதைக்கென்
நெஞ்சங் களங்கொண்ட நோய். (கூகூ)

வஞ்சிக்கோ

(301) வருக குடநாடன் வஞ்சிக்கோ மானென்
றருகல ரெல்லா மறிய—ஒருகலாம்
உண்டா யிருக்கவவ் வொண்டொடியாள் மற்றவனைக்
கண்டா ளொழிந்தாள் கலாம். (கூச)

---

கோதையைக் காணச் சென்ற என் நெஞ்சம் இன்னும் என்பால் திரும்பிய தில்லை. கடும்பனியுள்ள இக்காலத்தில், தன் கைகளையே போர்வையாக மூடிக்கொண்டு, அக்கோதையின் கோயில்வாயிலில் அவனது அமயம்பெரு மையால் நின்று வருந்துவது போலும் எ-று

299. ஷை (ஷை, 1567)—கோதை பவனிசெல்லும் வழியெல்லாம், 'இவன் என் நலங்கவர்ந்த கள்வன்; இவன் என் நிறையழித்த கள்வன்' என்ற பழிப்புரையே, அவன்திறத்தில் பெரிதும் எழுவதாயிற்று எ-று.

300. ஷை, (ஷை, 1568)—வெறிவிலக்கல். போராட்டு வென்று களங்கொண்ட — பகைவரது போர்ச்செயல்களை வென்று போர்க்களத்தைத் தன்ன தாக்கிய. என் நெஞ்சினை இடமாகக்கொண்டெழுந்த காமநோயானது என் அன்னை வெறியயர்களத்தை அமைத்து வேலனைக்கொண்டு காராட்டின் உதிரத்தைத் தூவச்செய்து என்னையும் நீராட்டிச் செய்யும் பரிகாரத்தால் நீங் குமதோ எ-று. நோய் நீங்குமோ என இயையும்.

301. முத்தொள். (புறத். 1564) — (இவளது காமநோய் நீங்குதற்கு) 'குடநாடனை வஞ்சிக்கோமான் இவள்காண வருவானாக' என்று

வஞ்சியான்

(302) வஞ்சியே னென்றவன்ற னூருரைத்தான் யானுமவன்
வஞ்சியா னென்பதனல் வாய்நேர்ந்தேன்—வஞ்சியான்
வஞ்சியேன் வஞ்சியே னென்றுரைத்தும் வஞ்சித்தான்
வஞ்சியாய் வஞ்சியார் கோ. (௩௫)

(303) மாலை யருளாது வஞ்சியான் வஞ்சியான்
மேலை யமரர் கடைவேலை—வேலை
வளையார் திரைமேல் வருமன்ன மன்ன
இளையா ளிவளை வளை. (௩௬)

மாந்தைக்கோ

(304) வரைபொரு நீண்மார்பின் வட்கார் வணக்கும்
நிரைபொரு வேன்மாந்தைக் கோவே—நிரைவளையார்
தங்கோலம் வௌவுத லாமோ வவர்தாய்மார்
செங்கோல னல்ல னென. (௩௭)

---

பக்கத்தவரெல்லாம் அறியப் பூசலொன்று உண்டாயிருந்த அளவில், அவன் வரக்கண்டதும், அக்குழப்பத்தை இவள் நீங்கினள் எ-று. கலாம் – பூசல், குழப்பம். அருகலர் – அயலார்; 'அவனென் னருகலி லானே' (திருவாய்.) என்ப.

302. பெருந்தொகை 771— (என்முன் வந்த தலைவனை நோக்கி 'நீர் எந்த ஊர்' என்று யான் கேட்க) 'வஞ்சியேன்' என்றான்; அதனால் அவன் விருப்பிற்கு யான் இசைந்தேன். அவன் வஞ்சியேன் வஞ்சியேன் (வஞ்சி நகரானனை நான் வஞ்சிக்க மாட்டேன்) என்று பலமுறை கூறியும் முடிவில் வஞ்சித்தான்; வஞ்சியாய்! (வஞ்சிக்கொடியனையாய்) எ-று. வஞ்சியார் கோ—சேரன்.

303. தண்டியலங்காரம் 93; மேற்கோள்—கடைவேலை – கடையுக் காலத்து. வேலை – கடல். அன்னம் அன்ன – திருமகளை ஒத்த. வஞ்சியான் இவளை வளைவஞ்சியான் என இயையும். வஞ்சியான் – வஞ்சித்துக் கவரான்.

304. முத்தொள். (புறத். 1517:—மாந்தை – சேரர்க்குரிய பழைய

(305) புன்னாகச் சோலைப் புனற்றெங்கு சூழ்மாந்தை
நன்னாக நின்றலரு நன்னாட—னென்னாகங்
கங்கு லொருநாட் கனவினுட் டைவந்தான்
என்கொ லிவரறிந்த வாறு. (௩௮)

(306) காப்படங்கென் றன்னை கடிமனை யிற்செறித்
தியாப்படங்க வோடி யடைத்தபின்—மாக்கருங்கோ
நன்னலங் காணக் கதவந் துளைதொட்டாற்
கென்னைகொல் கைம்மா றினி. (௩௯)

(307) மல்லனீர் மாந்தையார் மாக்கடுங்கோக் காயினும்
சொல்லவே வேண்டு நமகுறை—நல்ல
திலகங் கிடந்த திருநுதலாய் அஃதால்
உலகங் கிடந்த வியல்பு. (௪0)

---

கடற்கரைத் தலைநகர்; 'கடல்கெழு மாந்தை' (நற்றிணை. 395) என்ப. வட்கார்—பகைவர். வீரனை நீ என்போலும் இளையார் நலத்தைக் கவர்தல் நீதியன்று எ—று.

305. முத்தொள். (புறத் 1547)—புன்னாகம் – சுரபுன்னை. மாந்தை கடற்பட்டினமாதலின் 'நன்னாக நின்றலரும்' என்றார்; 'புன்னையரும்பும் புகார்' என்பதும் ஒப்பிடுக. நன்னாடன் கனவினுள் வந்து என்மேனியைத் தடவினன். இச்செயலால் அவனடைந்தது என்னோ எ—று. இருவேமும் உணர்ச்சியுடன் இணைந்து இன்புற்றிலேம் என்பது கருத்து.

306. முத்தொள். (புறத். 1509). காப்படங்கு – காவலில் அடங்குக. இற்செறித்து – வெளியேறாமல் மனைக்குள்ளே இருத்தி. யாப்பு – கட்டு. அன்னை கடுமையாக இற்செறித்தாளாயினும், கதவின் துளைவழியே கடுங்கோவைக் கண்டு மகிழும்படி, அத்துளையை அமைத்தவனுக்கு நான் செய்யுங் கைம்மாறு என்னையோ அறிகிலேன் எ—று.

307. ஷை, (புறத். 1570)—மாக்கடுங்கோ – சேரன் பெயர். கடுங்கோவேயானும் குறையுற்றார் அக்கோவினிடஞ் சென்று தம்குறை கூறிக்கொள்வது உலகியல் எ—று. மகளிர் நெற்றிக்குத் திலகமணிதல் மரபு; "பவள வாணுதல் திலக மிழப்ப" என்றார் இளங்கோவடிகளும் (சிலப். 5, 54).

மரந்தையார் கோ

(308) நின்றும்மின் மன்னீர் நெருநற் றிறைகொணர்ந்து
முன்றந்த மன்னர் முடிதாக்க—இன்றும்
திருந்தடி புண்ணாகிச் செவ்வி யிலனே
பெருந்தண் மரந்தையார் கோ. (சக)

பூழியர் கோ

(309) பல்வளையார் கூடிப் பகர்வதூஉம் பண்புணர்ந்த
சொல்லவையாரெல்லாருஞ் சொல்வதூஉ—மெல்லிணர்ப்
பூந்தாம நீண்முடியான் பூழியர்கோன் தாழ்தடக்கைத்
தேந்தாம வேலான் திறம். (சஉ)

(310) மரகதப்பூண் மன்னவர் தோள்வளை கீழா
வயிரக் கடகக்கை வாங்கித்—துயருழந்து
புண்ணுற் றழைக்குங் குறுநரித்தே பூழியனைக்
கண்ணுற்று வீழ்ந்தார் களம். (சங)

---

308. முத்தொள். (புறத். 1288)—நேற்றுத் திறைகொணர்ந்த அரசர் சேரனடியில் வீழ்ந்து தம் முடிகளால் தாக்கினமையாற் புண்பட்டு, இன்றும் அவன் மேனிசெவ்வையின்றி உள்ளான்; ஆதலால், மன்னர்காள்! அவன் திருமுன்பு செல்லாது நில்லுங்கள் எ—று. மாந்தைநகரின் வேறாக மரந்தை என்ற நகரும் சேரற்குச் சிறந்திருந்ததாகும்; "குரங்குளைப் புரவிக் குட்டுவன், மரந்தை யன்னவென் நலந்தந்து சென்மே" என்பது அகம் (376). நின்றம்மின்—(திறைசெலுத்தச் செல்லாது) நில்லுங்கள்; நிற்றம்மின் என்பது மெலிந்தது; தம்(- தாரும்), துணைவினை.

309. யாப்பருங்கல விருத்தி, 601, பக். 229—பல்வளையார்—மகளிர் குழு. சொல்லவையார் — சொல்வன்மை வாய்ந்த புலவர் குழு; இவ்விரு குழுவினரும் பகர்வதும் சொல்வதும் பூழியர்கோன் திறம்(ஆற்றல்) என்க.

310. முத்தொள். (புறத். 1431)—பூழியன் – பூழிநாட்டுக்குரிய சேரன். பூழியனைப் போரில் எதிர்ப்பட்டுத் தோற்றுவீழ்ந்த மன்னவரின்

பொறையன்

(311) வரையென மாடங்க ளோங்குறு
வீதியின் வஞ்சிமன்னன்
புரைபுரை நின்றலர் பூந்தொடையற்
பொறையன்ற னருளானேல்
கரையெனக் காலையுங் காண்பரிய
கடல்போலும் கவ்வையும்
அரையின மேகலை யோடவோடு
மிவளாவி யாற்றாதே. (சச)

---

கடகஞ்செறிந்த கையை அவர்தோள்களினின்று வாங்கும் நரிகள், அக்கடகத்தினால் வாய்புண்பட்டுக் கூப்பிடுந் தன்மையவாயின, அப்பகைவரது போர்க்களத்து என்பது கருத்து.

311. யாப்பருங்கல விருத்தி, 95, உரை; பக். 395—குறிலொழுக லேந்திசை வண்ணத்துக்கு உதாரணம். வஞ்சிமன்னவனான பொறையன் அருளானேல், இரவின கரைகண்டாற்போலக் காலையும் காண்பரிது; கவ்வையுங் கடல்போலும்; மேகலையும் ஓடும்; ஆவியும் தாங்காது என்பது கருத்து.

# 3. சேரநாடு, நகர், தலங்கள்.

சேரநாடு

(312) அள்ளற் பழனத் தரக்காம்பல் வாய்நெகிழ
வெள்ளந்தீப் பட்ட தெனவெரீஇப்—புள்ளினந்தம்
கைச்சிறகாற் பார்ப்பொடுக்குங் கவ்வை யுடைத்தரோ
நச்சிலைவேற் கோக்கோதை நாடு. (க)

மலைநாடு

(313) விரைசெய் நறும்பூந் தொடையிதழி
வேணி யார்தங் கழல்பரவிப்
பரசு பெறுமா தவமுனிவன்
பரசு ராமன் பெறுநாடு
திரைசெய் கடலின் பெருவளனும்
திருந்துமலையின் செழுவளனும்
வரையின் வளனு முடன்பெருகி
மல்கு நாடு மலைநாடு. (உ)

---

312. முத்தொள். (புறத். 829)—கோதையின் சேரநாடு, சேறுள்ள வயனிலங்களில் செவ்வாம்பல் மலர்ந்தது கண்டு வெள்ளம் தீப்பிடித்தது என்று அஞ்சி, புள்ளினங்கள் சிறகுகளால் தம் இளங்குஞ்சுகளை ஒடுக்கிக் கொள்ளும் குழப்ப முடையது எ—று.

313. திருத்தொண்டர் புராணத்துள் விறன்மிண்டநாயனார் புராணத்தின் முதற்பாட்டு. மலைநாடு பரசுராமனால் உண்டாக்கப்பட்ட நிலப்பகுதி என்பது, கேரளமான்மியங்களாலும் உலகவழக்காலும் தெரிந்ததாம். கடல்வளம் மலைவளங்களாலும், அவ்விரண்டுக்கு மிடைப்பட்ட நிலவளங்களாலும் மிகவும் செழிப்புற்றது மலைநாடென்பது இப்பாடற் கருத்து.

சேரநாட்டெல்லை

(314) வடக்குத் திசைபழனி வான்கிழ்தென் காசி
குடக்குத் திசைகோழிக் கோடாம்—கடற்கரையின்
ஓரமோ தெற்காகு முள்ளெண் பதின்காதஞ்
சேரநாட் டெல்லையெனச் செப்பு. (௩)

(சேரநாட்டு நகர்கள்)

வஞ்சி.

(315) களிகள் களிகட்கு நீட்டித்தங் கையாற்
களிகள் விதிர்த்திட்ட வெங்கட்—டுளிகலந்
தோய்கெழில் யானை மிதிப்பச்சே றாகுமே
பூம்பொழில் வஞ்சி யகம். (௪)

---

314. இத் தனிப்பாடல் கம்பர்வாக்கென்று கூறப்படுவதாயினும் பிற்காலத்தவா ஒருவராற் பாடப்பட்டதேயாம். தென்காசி என்ற தலமும் அங்கே காசிவிசுவநாதர் கோயிலும் கி பி. 1446—ல் அமைக்கப்பட்டன என்பது "சகாப்தம் 1368—ன் மேல்...தக்ஷிண காசியாக திருப்படைவீடும் உண்டாக்கி உடையார் விசுவநாதரையும்...பிரதிஷ்டித்தும்" என்று தென்காசிக்கோயிற கம்பத்திற் கண்ட கல்லெழுத்துக்களால் அறியப்படுமே (T. A. S. Vol. I., p. 100), இங்கே சேரநாட்டுக்குக் கூறப்பட்ட 80—காதவளவு ஏனைய பாண்டிய சோழநாடுகளிரண்டிஞு சோந்த அளவுடையதாய் விரிநததெனபது, அந்நாடு களைப்பற்றிய வெண்பாக்களால் தெளியப்படுமே.

315. (புறத். 862) வஞ்சிநகரின் உள்ளிடமானது, கள்ளுண்மாக்கள் களிப்புள்ள களை பிறர்க்குக் கொடுத்தற்கு நீட்ட, அக்களளின் துளிகள் கீழ் வீழ்ந்து கலத்தலாலும், அவற்றை யானைகள் மிதித்தலாலும் சேறுகிக் கிடக்கும் எ—று, ஈண்டுக் களிகள் என்பார், மதுவுண்டு களிக்கும் வீரராகப் பெரும்பாலுங் கொள்க.

கருவூர்

(316) காமன்கா ணென்று கருவூரார் பாராட்ட
நாமந்தாழ் கோதை வருவானை—யாமும்
இருகுடங்கை யானெதிரே கூப்பித் தொழக்கண்
டொருகுடங்கை யாயின கண். (ரு)

(317) பூமென் கணையும் பொருசிலையுங் கைக்கொண்டு
காமன் திரியுங் கருவூரா—யாமங்கள்
ஒன்றுபோ யொன்றுபோ யொன்றுபோய் நாழிகையும்
ஒன்றுபோ யொன்றுபோ யொன்று. (சு)

முசிறி

(318) வேரறுகை பம்பிச் சுரைபடர்ந்து வேளைபூத்
தூரறிய லாகா கிடந்தனவே—போரின்
முகையவிழ்தார்க் கோதை முசிறியார் கோமான்
நகையிலைவேல் காய்த்தினார் நாடு. (எ)

---

316. தொல். செய். 19—பேராசிரியம்; சிலப்பதிகார. 49, அடியார்க். உரை. கருவூரார் – வஞ்சிநகரார். கோதையை எம் இருகைகளினாலுங் கூப்பி அவன் பேரழகை இடையறாது பருகுதலால், எங்கண்கள் உள்ளங்கையள வாகப் பெருகின எ–று.

317. சிலப்பதிகாரம். 5, 49. அடியார்கு நல்லாருரை மேற்கோள். இது, நாழிகைக்கணக்கர் கூற்று. இவர், அரசர்க்குச் சென்ற நாழிகைக்குக் கவிசொல்லுவார் ஆவர். "இரவுத்தலைப் பெயரும மைகறை காறும், அரை யிருள் யாமத்தும் பகலுந் துஞ்சான், விரைமலர் வாளியொடு கருப்புவில் லேந்தி, மகர வெல்கொடி மைந்தன் திரிதர, நகரங் காவல் நனிசிறந்தது" ஆதலின் (சிலப். 4, 80–84). 'காமன் திரியுங் கருவூரா' என்றார்.

318. முத்தொ. (புறத். 1279). 'அறுகுபோல் வேரூன்றி' என்பராக லின் 'வேரறுகை' என்றார். அறுகை – அறுகு. "அறுகையும் நெருஞ்சியு மடர்ந்து" (புறநா.) என்பர். வேளை – தைவேளை. பாழ்பட்ட இடங்களில் இவை தாமே உண்டாவனவாம். சேரனது வேலைச் சினக்கும்படி செய்த

கொடுங்கோளூர்—மகோதை

(319) மாவீற் றிருந்த பெருஞ்சிறப்பின்
மன்னுந் தொன்மை மலைநாட்டுப்
பாவீற் றிருந்த பல்புகழார்
பயிலு மியல்பிற் பழம்பதிதான்
சேவீற் றிருந்தார் திருவஞ்சைக்
களமு நிலவிச் சேரர்குலக்
கோவீற் றிருந்து முறைபுரியுங்
குலக்கோ மூதூர் கொடுங்கோளூர். (அ)

(320) வேத நெறியின் முறைபிறழ
மிக்க வொழுக்கந் தலைநின்று
சாதி நான்கும் நிலைதழைக்குந்
தன்மைத் தாகித் தடமதில்சூழ்
சூத வகுள சரளநிரை
துதையுஞ் சோலை வளநகர்தான்
கோதை யரசர் மகோதையெனக்
குலவு பெயரு முடைத்தாமால். (ஆ)

---

பகைவர் நாடுகள், ஊரறிய முடியாவண்ணம் அறுகு சுரை வேளைகள் அடர்ந்து பாழாயின எ—று.

319. திருத்தொண்டர் புராணம், கழறிற்றறிவார்பு. மா — திருமகள். பாவீற்றிருந்த பல்புகழார் – புலவர் பாக்களில் அமைந்து விளங்கும் பெரும் புகழாளர். திருவஞ்சைக்களம் — கொடுங்கோளூர்க்கு அயலதான சிவதலம். அஞ்சைக்களம், அஞ்சை எனவும் வழங்கும். இத்தலம் சுந்தரமூர்த்தி நாயனார் பாடல்பெற்றது. அஞ்சையப்பர் என்பது சுவாமி திருநாமம். 'அஞ்சைக்களமும் நிலவியது கொடுங்கோளூர்' என்பதனால், கொடுங்கோளூர் தலைநகரும், அஞ்சைக்களம், அதனின் வேறாகச் சிவதலமுள்ள ஊர்ப்பகுதியுமாம என்பது விளங்கும்; திருவாரூர்ப் பூங்கோயில், கருவூர் ஆனிலை என்பன போல இதனைக் கொள்க.

320. ஷை, ஷை. சூதம் — மா. வகுளம் — மகிழ் சரளம் — தேவதாருவகை; 'மாதவி சரளமெங்கும்' (பெரியபு. நாட்டு. 29) என்ப. மகோதை

செங்குன்றூர்

(321) வாரி சொரியுங் கதிர்முத்தும்
வயல்மென் கரும்பின் படுமுத்தும்
வேரல் விளையுங் குளிர்முத்தும்
வேழ மருப்பி னொளிர்முத்தும்
ஆரன் முறுவல் வெண்முத்த
நகையார் தெரிந்து முறைகோப்பச்
சேரர் திருநாட் டூர்களின்முன்
சிறந்த மூதூர் செங்குன்றூர். (கய)

சேரன் மாலை

(322) குடையலர் காந்தட் டன் கொல்லிச் சுனைவாய்த்
தொடையவிழ் தண்குவளை சூடான்—படைதிகழுந்
தேரதிரப் பொங்குந் திருந்துவேல் வானவன்
போரெதிரிற் போந்தையாம் பூ. (கக)

---

என்ற பெயரையும் கொடுங்கோளூர் உடையது எ-று. 'மகோதையர் பட்டணம்' என்று சிலையெழுத்துக்களிலும் இந்நகர் வழங்கும். "கோதையரசர் மகோதை' என்பதனால், மா கோதை (பெருஞ்சேரரது) நகரம் என்பது பெறப்படும்; "வஞ்சியை விட்டிக லஞ்சிய கோதை மகோதை" எனக் கூத்தரும் குலோத்துங்கன்பிள்ளைத்தமிழிற் பாடுதல் ஒப்பிடுக. இனி, மகா உதயர்(உதியர், சேரர்) மகோதையர் என்று இணைந்து அது மகோதை என மருவியதென்று உறுப்புப்பொருள் கூறுவது முண்டு. அஞ்சைக்களம என்ற சிவதலம் இம் மகோதையைச் சார்ந்தது என்பது, "கடலங்கரைமேன் மகோதை...அஞ்சைக் களத்தப்பனே" என்று சுந்தரமூர்த்திசுவாமிகள் பாடுதலால் அறியப்படும்.

321. திருத்தொண்டர் புராணம், விறன்மிண்டர்பு, 2. வாரி—கடல். வேரல்—மூங்கில். ஆரன்முறுவல்—புன்னகை கடல், கரும்பு, வேய், வேழம் இவற்றிலிருந்து கிடைத்த முத்துக்களை முத்தநகையார் (மகளிர்) கோப்ப—என்பதனால், நெய்தல் மருதம் முல்லை குறிஞ்சிநிலங்கள் அடுத்தடுத்துள்ள நாட்டு வளம் சிறப்பிக்கப்பட்டவாறு. செங்குன்றூர்—திருவிதாங்கூர்ச் சீமையின் மத்தியிலுள்ள தலம்.

322. குடை அலர் காந்தள் தன்கொல்லி—குடைபோல மலரும்

(323) காய்ந்துவிண் டாரையக் காமரு கூடலிற் கண்சிவந்த
வேந்துகண் டாயென்ன வெள்வளை சோரக் கலைநெகிழப்
போந்துகண் டாளொடும் போந்துகண் டேற்கவன்
போந்துகண் டாளென்று போந்த [பொன்முடிமேற்
[தென் மாட்டோர் புறவுரையே (கஉ)

சேரன் யானை

(324) விறுசால் மன்னர் விரிதாம வெண்குடையைப்
பாற வெறிந்த பரிசயத்தால்—தேருது
செங்கண்மாக் கோதை சினவெங் களியானை
திங்கண்மேல் நீட்டுந்தன் கை. (கங)

---

காந்தளையுடைய தன் கொல்லிமலைமேலுள்ள. தேரதிரப் பொங்கும் — பகைவர் தேர்ப்படை நடுங்கக் கோபிக்கும். பூசல்தோன்றுமாயின், சேரன் சூடும்பூ போந்தையே (பனம்பூவே) யன்றி, இன்பநுகர்ச்சிக்குரிய கொல்லிக்குவளைப் பூவன்று என்றபடி. கொல்லிமலைப் பூக்களை அம்மலைக்கு அணித்தான வஞ்சி மாநகரத்து மக்கள் விரும்பி அணிதலின், 'கொல்லிக் குவளை சூடான்' என்றார். 'கொல்லிப், பெருவாய் மலரொடு பசும்பிடி மகிழ்ந்து...ஒண்ணுத லணிகொள, மாணிழை யரிவை காணிய வொருநாட், பூண்க மாளநின் புரவி நெடுந் தேர்'' எனவரும் பதிற்றுப்பத்து (9–1) அடிகளாலும், கொல்லிப் பூக்களைத் தலைநகரிலுள்ள அரசன்தேவி சூடுதல் அறியப்படும்.

323. (யாப். வி.) காய்ந்து விண்டாரை — சினந்து பகைத்த அரசரை. வேந்துகண்டாய்...புறவுரையே—'வேந்தனை சேரன்காண்' (பவனி வருபவன்) என்று சிலர்சொல்ல, வெளிப்போந்து கண்ட வேறொருத்தியோடு சென்று யானும் காணநேர்ந்தபோது, 'அவன் சூடிய போந்தைக் கண்ணியைக் கண்டு இவள் காதல்கொண்டாள்' என்று என்மட்டிலுமே அலர்மொழி பரவுவதாயிற்று எ—று.

324. (புறத்) வீறுசான் மன்னர் — செருக்குமிக்க பகையரசர். பரிசயம் — பழக்கம். திங்களையும் பகையரசர் குடையென்று கைநீட்டும் என்க.

(325) இருங்களி றின்ற மடப்பிடி சாரல்
இலங்கருவி நீராற் றெளித்தும்—நலங்கிளர்வேற்
றுன்னரும்போர்க் கோதை தொடாஅன் செருக்கின
மன்னர் மதிலாய தென்று. (கச)

சேரன் வாள்

(326) கொங்கவி ழைம்பான் மடவார் வியன்கோயில்
மங்கலங் கூற மறங்கனலும்—செங்கோல்
நிலந்தரிய செல்லு நிரைதண்டார்ச் சேரன்
வலந்தரிய வேந்திய வாள். (கரு)

---

325. முத்தொள். (புறத். 1397). (பகையரசர் அரணிலிருந்து கவர்ந்த) பெரியகளிற்றைத் தன் மடப்பிடி சாரலருவி நீரால் தெளித்துத் தூய்மைசெய்தும், அது, செருக்கிய பகையரசர் அரணுக்குரியது என்றுகருதி கோதை (சேரன்) அதனைத் தொடுதலுஞ் செய்யானாயினன் எ—று.

326. (புறப்பொருள் வெண்பாமாலை, பாடாண், 35). சேரன் வெற்றிவேண்டி உயர்த்திய வாளானது, அரசன் கோயிலுள் மடவார்கள் மங்கலம்பாடச் சினம்பொங்கா நின்றது எ—று, ஒளிகூர்மைகளாற் சிறந்த சேரனது வீரவாள் பகைவர்மேல் ஓச்சிப் பாயும்படி சமைந்துள்ளதென்பார், 'வாள் மறங்கனலும்' என்றார். நிலந்தரிய – பகைவர் பூமியைத் தரும்பொருட்டு. வலந்தரிய – வெற்றிகொடுத்தல் வேண்டி.

# மலைநாட்டுத் திருப்பதிகள்

## திருவண்பரிசாரம்*

பண் — நட்டபாடை; தாளம் — ஏமொத்து.

(327) வருவார் செல்வார் வண்பரி சாரத் திருந்தவென்
திருவாழ் மார்வற் கென்றிறஞ் சொல்லார் செய்வதென்
உருவார் சக்கரஞ் சங்கு சுமந்திங் கும்மோடும்
ஒருபா டுழல்வா னோரடி யானு முளனென்றே.

---

* மலைநாட்டுக்குள் வலமாகத் தலயாத்திரைசெய்ய விரும்புவோர் முதலிற்கண்டு தரிசித்தற்குரிய பாடல்பெற்ற திருமால்திருப்பதி இதுவாகும். இத்தலத்தைத் திருப்பதிசாரம் என்று இக்காலத்தார் வழங்குவர். கன்னியாகுமரி என்ற பிரபலமான தீர்த்தத்துறைக்கு வடக்கே 12-மைலிலும், நாகர்கோயிலையடுத்து இரண்டுமைலிலும் இத்தலம் உள்ளது. இத்திருப்பதியிற் கோயில்கொண்ட எம்பெருமான், 'திருவாழ்மார்பன்' என்ற திருநாமத்துடன் வீற்றிருந்த திருக்கோலமாக உள்ளார். நம்மாழ்வாரின் திருத்தாயாரான உடையநங்கையார் என்பாரது அவதாரஸ்தலமும் இதுவேயாம். இத்திருப்பதிக் கோயிலில் உள்ள சிலாசாஸனமொன்றில், 'அம்மை திருப்பதிநங்கை' என்பார்க்குச் சில நிவந்தங்கள் அளிக்கப்பட்ட செய்தி கூறப்படுகின்றது (T. A. S. Vol v. pp. 157–160). இத் திருப்பதிநங்கை, ஆழ்வார் திருத்தாயாரான உடையநங்கையாரோ என்று கருத இடமுண்டு. நம்மாழ்வாரின் சிறிய செப்புத்திருமேனியும் இக்கோயிலுள் வைத்து வணங்கப்படுகின்றது. இத்திருப்பதியைத் தனிப்பதிகத்தால் நம்மாழ்வார் பாடாவிடினும், 'அங்குமிங்கும்' என்ற திருவாய்மொழியுள் (8–3) ஏழாம் பாசுரத்தால், இத்தலத் தெம்பெருமானைச் சிறப்பித்தருளினர்.

327. (திருவாய்மொழி 8—3—7) வண்பரிசாரத்தில், அடியாரை உகந்

(328) அடியுங் குளிர்ந்தாள் அறிவுங் குலைந்தாள்
முடிகின்றாள் மூச்சடங்கு முன்னே—கடிதோடிப்
பெண்பரிசா ரங்குப் பிறப்பித்து மீளுவார்
வண்பரிசா ரங்கிடந்த மாற்கு.

—:O:—

---

தேற்பிக்கும் பெரியபிராட்டியாருடன் எழுந்தருளியுள்ள பெருமானிடம், 'உமக்கு அன்பனாக ஓர் அடியான் இங்கு உளன்', என்று—வருவாரும் செல்வாருமாயுள்ளவர்களிலே—ஒருவரும் சொல்லுவாரில்லையோ? இதற்கு யான் செய்வதென்னே? எ-று. சக்கரம் சங்கு சுமந்து உம்மோடு ஒருபாடு உழல்வான்—நமக்குப்பாரமான ஆயுதங்களைப் பக்கத்திருந்து தாங்கியவண்ணம் நம் கூடவே அலையக்கூடியவன். ஒருபாடு – ஒருபக்கம்; மிகுதியும் என்றுமாம்; இது மலைநாட்டுவழக்கு. வண்பரிசாரம் என்பது, திருவண்வண்டூர், வண்புருடோத்தமம் என்ற திருமால்திருப்பதிகள்போல, வளமிகுதி குறிக்க அடையடுத்துவழங்கும் பெயர்.

328. திவ்யகவி அழகியமணவாளதாசர் இயற்றியருளிய நூற்றெட்டுத் திருப்பதியந்தாதிச் செய்யுள். தலைவியின் பிரிவாற்றாமை கண்டு செவிலி இரங்கியது. பெண்பரிசு ஆர் அங்குப் பிறப்பித்து மீளுவார் – என மகளது நிலைமைகளை எம்பெருமானின் திருவுளத்துத் தோன்றச்சொல்லி மீள்பவர் யாவர். 'கிடந்த மாற்கு' என்பதனுள் கிடந்த என்பதற்குத் தங்கிய என்ற பொருளே கொள்க. 'வண்பரிசாரத் திருத்தவென் திருவாழ்மார்வற்கு' என்ற ஆழ்வார் பாசுரத் தொடரும், "திருப்பரிசாரக் கோயிலில் வீற்றிருந்தருளிய" என்றே திருமால்திருக்கோவம் சிலாசாஸனங்களிற் கூறப்படுதலும், இக்காலத்தும் அந்நிலையே அமைந்துள்ளமையும் இங்கு அறியத்தக்கன.

## திருவாட்டாறு*

[திருவாய்மொழி; 10-6.]

(பண்—இந்தளம்; தாளம்—நடையொத்து)

(329) அருள்பெறுவா ரடியார்தம் மடியனேற் காழியான்
அருள்தருவா னமைகின்றா னதுநமது விதிவகையே
இருள்தருமா ஞாலத்து ளினிப்பிறவி யான்வேண்டேன்
மருளொழிநீ மடநெஞ்சேவாட்டாற்றா னடிவணங்கே(க)

---

* இத்திருப்பதி, திருப்பரிசாரம் நாகர்கோயில்களினின்று வடமேற்கே 20-மைலில் உள்ளது. இத்தலத்துத் திருமால் 'ஆதிகேசவன்' என்ற திருநாமமும், மேற்கே திருமுகமண்டலமும், பள்ளிகொண்ட திருக்கோலமும் உடையவர். திருவனந்தபுரம் ஸ்ரீபத்மநாபஸ்வாமி சன்னிதிபோலவே, இக்கோயிற் கர்ப்பக்கிருகமும் மூன்று திருவாயில்கள் கொண்டது. குன்றுபோலுயர்ந்த இடத்தமைந்த இம் மலைமாடக்கோயிலும், கீழே இத்தலத்தைச் சுற்றியோடும் பழையாறு என்ற வாட்டாறும், இதனைச்சூழ அடர்ந்துள்ள சோலைகளும்—"ஓங்குமணை லோங்கிமர மோங்கிமலை யோங்கிப், பூங்குலை குலாவு குளிர் சோலைபுடை விம்மித், தூங்குபுன லாறுருகு சூழலதோர் குன்றின், பாங்கருள தாலுறையுள் பஞ்சவடி மஞ்ச" என்று கம்பர்பாடிய பஞ்சவடிவர்ணனையை நமக்கு நினைப்பூட்டுவன. சங்ககாலத்தில் இவ் வாட்டாறு, எழினி ஆதன் என்ற சிற்றரசனுக்கு உரிய தலைநகராயிருந்தது (புறநா,396). சேரர்க்கும பாண்டியர்க்கும் போர்நிகழ்ந்த களங்களுள் இவ்வூரும் ஒன்றென்பது பாண்டிக் கோவை (இறை. களவியலுரை)யால் அறியலாகும்.

329. தன் திருவருள்பெறவல்ல அடியார்க்கு அடியானுவதையே மேற்கொண்டுள்ள எனக்கும், எம்பெருமான் தன்னருளை வழங்கக் காத்திருக்

(330) வாட்டாற்று னடிவணங்கி மாஞாலப் பிறப்பறுப்பான்
கேட்டாயே மடநெஞ்சே கேசவனெம் பெருமானைப்
பாட்டாய பலபாடிப் பழவினைகள் பற்றறுத்து
நாட்டாரோ டியல்வொழிந்து நாரணனை நண்ணினமே.

(331) நண்ணினநா ராயணனை நாமங்கள் பலசொல்லி
மண்ணுலகில் வளமிக்க வாட்டாற்றான் வந்தின்று
விண்ணுலகந் தருவானாய் விரைகின்றான் விதிவகையே
எண்ணினவா றாகாவிக் கருமங்க ளென்னெஞ்சே.

---

கின்றான் எ—று. அது நமது விதிவகையே என்றது, அவ்வாறு வழங்குவதும் நாம் நியமித்த முறையிலே என்றபடி; அவ்வாறு வழங்குவதும் நம் பாக்கிய விசேஷமே என்றும் பொருள் கூறுவர் வாட்டாற்றான் — திருவாட்டாற்று எம்பெருமான்.

330. பிறவியறுத்தல் வேண்டிப் வாட்டாற்றெம்பெருமானது திருவடிகளை வணங்கி, அவனைப் பலபாடல்களாற் பாடியும் பாடியதனாற் பழவினைகளை முழுதும் போக்கியும் உலகினரோடு தொடர்பைக் களைந்தும் அவ்விறைவனைக் கிட்டப்பெற்றோம்; நெஞ்சே! நமக்கு விளைந்த இப்பேற்றைக் கேட்டேனும் அறிதியோ எ—று.

331. "நாமங்கள் பலசொல்லிக்கொண்டு நாராயணனைப் பிராபிக்கப் பெற்றோம்; அதன்மேலே அவன்தானே வந்து நிர்ஹேதுகமாக நமக்குத் திருநாட்டைத் தருகையிலே விரையாநின்றான்; நாம் 'இத்தைச் செய்' என்று சொல்லுமிதுவே தாழ்வாக இருக்கிறானத்தனை; ஆனபின்பு, இனி அவனை நண்ணினோ மல்லோமே நெஞ்சே! இங்ஙனம் இருப்பதொரு ஸம்ருத்தி நமக்கு விளையக்கடவதாக ஸ்வப்னத்திலேதான் நினைப்புண்டோ' என்கிறார்" என்பது ஆறாயிரப்படி. விதிவகையே — நாம் நியமித்த முறையே. எண்ணினவாறு ஆகா என்பது, நாமே எம்பெருமானிடஞ் சென்றும், வேண்டியும், விரைந்தும், சமயம்பார்த்தும் கொள்ள விரும்பிய காரியம், அவையொன்றுமில்லாமலே அவனே வந்து நம்மை வேண்டி விரைவில் நம்நினைவுப்படி செய்யும்படியாயிற்று என்றபடி.

[ந்து
(332) என்னெஞ்சத் துள்ளிருந்திங் கிருந்தமிழ் நூ லிவைமொழி
வன்னெஞ்சத் திரணியனை மார்விடந்த வாட்டாற்றான்
மன்னஞ்சப் பாரதத்துப் பாண்டவர்க்காப் படைதொட்
நன்னெஞ்சே நம்பெருமான் நமக்கருடான் [டான்
[செய்வானே.

(333) வானேற வழிதந்த வாட்டாற்றான் பணிவகையே
நானேறப் பெறுகின்றேன் நரகத்தை நகுநெஞ்சே
தேனேறு மலர்த்துளவந் திகழ்பாதன் செழும்பறவை
தானேறித் திரிவான தாளிணையென் தலைமேலே.

---

332. "ஸர்வேச்வரன்தான் நாம் விதித்தபடியே செய்வானாகச் சொன்ன இது ஸம்பவிக்குமோ என்னில், அவனுடைய ஆச்ருத பாரதந்தர்யத்தை அநுஸந்தித்தால் கூடாதது இல்லைகாண் என்கிறார்" (ஈடு. அவ.)

என்சிறுமை பாராதே என் நெஞ்சட் புகுந்திருந்து, என்னைக்கருவியாகக் கொண்டு திருவாய்மொழியைச் சொல்லி, விரோதிகளையும் அழித்து இவ்வாறு கருணைவள்ளலாயுள்ளவன், இனி நமக்கு அந்தமில் பேரின்பவீட்டைத் தந்தருள்வன் என்ற இது சொல்லவேண்டுமோ என்பது கருத்து. இருந்தமிழ் நூல் – திருவாய்மொழி. 'மன்னெஞ்ச' என்றும் பாடம்.

333. "அவன், பரமபதத்துக்குப் போக ஆச்ருதர்க்கு வைத்த அர்ச்சிராதிகதியாலே போகப்பெறுகின்றேன். நித்திய ஆச்ருதரைப்போலே என்னை விஷயீகரிக்கவும் பெற்றேன் என்கிறார்" (ஈடு. அவ.)

"திருநாடு பெறவேணு மென்ற அபேக்ஷையுடையார் எல்லார்க்கும் வானேறுகைக்கு ஈடான உபாயத்தைக் கொடுத்தருளினான். அவன் ப்ரஸாதத்தாலே, தேனேறு மலர்த்துளவத்தினாலே அலங்க்ருதமாயிருந்த அவனுடைய தாளிணை பெரியதிருவடிமேலே ஏறுமாபோலே, என் தலைமேலே ஏறப்பெறுகின்றேன்; இனி, அவனைப் பிரிந்திருக்கையாகிய நரகத்தை வென்றிருப்பேன் என்கிறார்" (ஆறா. வ்யாக்.). வானேற வழி – அர்ச்சிராதி மார்க்கம். நரகம் – பிரிவுத் துன்பம்; ஸம்ஸாரம் ஆகவுமாம்.

(334) தலைமேல தாளிணைகள் தாமரைக்க ணென்னம்மான்
நிலைபேரா னென்னெஞ்சத் தெப்பொழுது மெம்பெருமா
மலைமாடத் தரவணைமேல் வாட்டாற்றான் மதமிக்க [ன்
கொலையானை மருப்பொசித்தான் குரைகழல்கள் குறுகி
[னமே.

(335) குரைகழல்கள் குறுகினநாம் கோவிந்தன் குடிகொண்டா
திரைகுழுவு கடல்புடைசூழ் தென்னாட்டுத் திலதமன் [ன்
வரைகுழுவு மணிமாட வாட்டாற்றான் மலரடிமேல் [ன
விரைகுழுவு நறுந்துளவம் மெய்ந்நின்று கமழுமே.

(336) மெய்ந்நின்று கமழ்துளவ விரையேறு திருமுடியன்
கைந்நின்ற சக்கரத்தன் கருதுமிடம் பொருதுபுனல்
மைந்நின்ற வரைபோலுந் திருவுருவ வாட்டாற்றாற்
கெந்நன்றி செய்தேனோ வென்னெஞ்சில் திகழ்வதுவே.

---

334. "திருவடிகளை என்தலைமேலே வைத்தருளினான்; அழகிய திருக்கண்களாலே என்னைக் குளிரப் பார்த்தருளாநின்றான். ஒருகாலும் என் நெஞ்சில் நின்றும் நிலைபெயரான்; இங்ஙனே அவன் திருவடிகளை நாம் குறுகப் பெற்றோம் என்கிறார்." (ஆறா. வ்யாக்.). மலை மாடம் – குன்றுபோலும் இடைத்தமைந்த கோயில்; மலைபோன்ற கோயில் எனினும் ஆம்.

335. 'இப்படி நெஞ்சே! நாம் குரைகழல்கள் குறுகினம். நம் கோவிந்தன் ஸபரிக்ரஹமாக வந்து என்னுள்ளே புகுந்தருளினான்; இதுக்கு அடையாளமென் என்னில், வாட்டாற்றான் திருவடிக்கண் திருத்துழாய் என் உடம்பெல்லாம் கமழ்கிறபடி பாராய் என்கிறார்'' (ஆறா. வ்யாக்.)

'திரைகுழுவு கடல்புடைசூழ் ... வரைகுழுவு வாட்டாறு' என்றது அலைகடலுக்கும் மலைவரிசைக்கும் இடைப்பட்ட மலைநாட்டுள்ள வாட்டாறு என்றபடி. இந்நாட்டரசர் சிலரை 'அத்ரி அப்தீசர்' என்பர்.

336. அத்யந்த விலக்ஷணனானவன் திருவாட்டாற்றிலே வந்து சுலபனாய் என் இதயத்திலும் வந்து புகுந்து திகழுகைக்கு நான் என்ன நன்மை செய்தேன் என்கிறார் (அவதாரிகை).

கருதுமிடம் பொருது கைந்நின்ற சக்கரத்தன் என இயைத்து

(337) திகழ்கின்ற திருமார்பில் திருமங்கை தன்னோடும்
திகழ்கின்ற திருமாலார் சேர்விடந்தண் வாட்டாறு
புகழ்நின்ற புள்ளூர்தி போரரக்கர் குலங்கெடுத்தான்
இகழ்வின்றி யென்னெஞ்சத் தெப்பொழுதும் பிரியானே

(338) பிரியாதாட் செய்யென்று பிறப்பறுத்தா ளறக்கொண்
அரியாகி யிரணியனை யாகங்கீண் டானன்று [டான்
பெரியார்க்காட் பட்டக்கால் பெறுதபயன் பெறுமாறு
வரிவாள்வா யரவணைமேல் வாட்டாற்றான் காட்டினனே

(339) காட்டித்தன் கனைகழல்கள் கடுநரகம் புகலொழித்த
வாட்டாற்றெம் பெருமானை வளங்குருகூர்ச் சடகோபன்
பாட்டாய தமிழ்மாலை யாயிரத்து ளிப்பத்தும்
கேட்டாரார் வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே.
(கக)

---

'சினைத்தவிடத்தே சென்று போர்புரிந்து எதிரிகளை அழித்து மீண்டு திருக்கையிலே வர்த்திக்கும் திருவாழியை உடையவன்' என்று பொருள் கொள்வர். புனல்வரை போலும் திருவுருவம் – கடல்நீர்போலவும் மலைபோலவும் உள்ள திருமேனி. மைந்நின்ற வரை – அஞ்சனகிரி.

337. "அத்யந்தம் பூர்ணனான தான் இகழாதே என் நெஞ்சை ஸர்வகாலமும் விடுகின்றிலன்; ஒருவனுடைய வ்யாமோஹமே! என்று பிரீதராகிறார்" (அவ.) "சேர்விடமான வாட்டாற்றிலே இருக்கிற புகழ்நின்ற புள்ளூர்தி" என்று இயைப்பர் (அரும்பதம்). இப்பொருளாயின் 'வாட்டாற்றுப்... புள்ளூர்தி' என்று பாடம் கொள்ளவேணும்.

338. 'மஹாபுருஷர்களை அடைந்தால், எதிர்த்தலையின் சிறுமை பாராதே தம்தரத்திலே உபகரிப்பர்' என்னும் பொருளைத் திருவாட்டாற்று நாயனார் என்பக்கலிலே காட்டினார் எ–று.

339. முடிவில், இத்திருவாய்மொழியை அனுபவிக்க உரியார் நித்யஸூரிகள் என்கிறார் (ஈடு. அவ.). கடுநரகம் – 'அறிவுடையார்க்குப் பொறுக்க

(340) அருளா லடியில் எடுத்தமா லன்பால்
இருளார்ந்த தம்முடம்பை யிச்சித்—திருவிசும்பில்
இத்துடன்கொண் டேக விவரிசைவு பார்த்திருந்த
சுத்திசொல்லும் மாறன்செஞ் சொல்.

(341) மாலைமுடி நீத்து மலர்ப்பொன் னடிநோவப்
பாலைவனம் நீபுகுந்தாய் பண்டென்று—சாலவுநான்
கேட்டாற் றுயிலேன்காண் கேசவனே பாம்பணைமேல்
வாட்டாற்றுக் கண்டுயில்கொள் வாய்.

—:O:—

வொண்ணாத நரகம், ஸம்ஸாரமிறே' (ஈடு.). கேட்டு ஆரார் – கேட்டு ஒருகாலும் திருப்தராகார்.

340. ஸ்ரீ மணவாள மாமுனிகள் அருளிய திருவாய்மொழிநூற்றந்தாதிப் பாட்டு; இது, இத்திருப்பதிகத்தின் பருப்பொருளை விளக்குவதாகும்.

341. திவ்யகவி பிள்ளைப்பெருமாளையங்கார் எனவழங்கும் அழகிய மணவாளதாசர் அருளிய நூற்றெட்டுத்திருப்பதியந்தாதிச் செய்யுள்.

# திருவனந்தபுரம்*

[திருவாய்மொழி]

பண்—இந்தளம்; தாளம்—ஏழொத்து.

(342) கெடுமிடராயவெல்லாங் கேசவா வென்னநாளும்
கொடுவினை செய்யுங்கூற்றின் தமர்களுங் குறுககில்லார்
விடமுடை யரவிற்பள்ளி விரும்பினான் சுரும்பலற்றுந்
தடமுடை வயலனந்த புரநகர் புகுதுமின்றே. (க)

---

* மலைநாட்டுள்ள பழைய திருமால் திருப்பதிகளுள்ளே, திருவாட்டாற்றை அடுத்துச் சென்று வணங்கற்குரிய தலம், திருவனந்தபுரம் ஆகும். இது, கொல்லத்துக்குத் தெற்கினும் நாகர்கோயிற்கு வடமேற்கினும் 42–மைலில் உள்ளது. இத்தலத்தே கோயில்கொண்ட திருமால் 'ஸ்ரீ அனந்தபத்மநாபன்' என்ற திருநாமமுடையவர். சேஷசாயியாய்க் கிழக்கே திருமுகமண்டலமாயுள்ள இப்பெருமானது திருக்கோலம், மூன்று திருவாசல்களாலும் தரிசித்து வழிபடற்குரியது. இத்தலமானது, சேரவேந்தர் மரபினரான திருவிதாங்கூர் அரசர் இருந்தாளும் தலைமைநகரமாயும் விளங்குவதாம். இந்நகரிற் பள்ளிகொண்டருளும் பெருமான், சேரமான்களின் குலதெய்வமாகச் சங்ககாலமுதலே வழிபடப்பெற்று வருபவர் (பதிற்றுப்பத்து, 3). "ஸ்ரீபத்மநாபதாஸன்" என்ற சிறப்புப்பெயர் இந்நகரரசர்க்குப் பழைமையாகவே வழங்கிவருதலைச் சாஸனங்கள் மூலமாகவும் நாம் தெரியலாம் (Ep. Ind. Vol. iv, No. 17). நம்மாழ்வாரால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற மலைநாட்டுத் திருப்பதிகள் பன்னிரண்டனுள், இத்தலத்துக்கு அமைந்த திருவாய்மொழிப் பதிகம், இதன் இயற்கை வளங்களையும், இங்கெழுந்தருளிய பெருமானின் திருவருட்பெருமைகளையும் மிகவழகாகச் சிறப்பிப்பதாகும்.

342. "ப்ரீதியாலே திருநாமத்தைச் சொல்லத் திருவனந்தபுரம் போவார்க்குப் ப்ரதிபந்தங்களெல்லாம் கெடும்; அங்கே, போய்ப்புக வாரும் கோள் என்று அநுகூலரை அழைக்கிறார்" (ஈடு. அவ.). கேசவன் — கேசி என்ற அசுரனைக் கொன்றவன். கெடும் இடராயவெல்லாம் கேசவா என்ன—

(343) இன்றுபோய்ப் புகுதி ராகி லெழுமையு மேதஞ்சாரா
குன்றுநேர் மாடமாடே குருந்துசேர் செருந்திபுன்னை
மன்றலர் பொழிலனந்த புரநகர் மாயனுமம்
ஒன்றுமோ ராயிரமா முள்ளுவார்க் கும்பரூரே. (உ)

(344) ஊரும்புள் கொடியுமஃதே உலகெலா முண்டுமிழ்ந்தான்
சேருந்தண் ணனந்தபுரம் சிக்கெனப் புகுதிராகில்
தீருநோய் வினைகளெல்லாந் திண்ணம்நா மறியச்சொன்
பேருமோ ராயிரத்து ளொன்றுநீர் பேசுமினே. [னோம்

(345) பேசுமின் கூசமின்றிப் பெரியநீர் வேலைசூழ்ந்து
வாசமே கமழுஞ்சோலை வயலணி யனந்தபுரம்
நேசஞ்செய் துறைகின்றானை நெறிமையால்மலர்கள்தூவிப்
பூசனை செய்கின்றார்கள் புண்ணியஞ் செய்தவாறே. (ச)

---

"அவன் ஒரு விரோதியைப் போக்கினபடி சொல்ல, விரோதி என்று பேர் பெற்றவை யெல்லாம் நசிக்கும்" என்பது ஈடு. கூற்றின் தமர் — யமகிங்கரர்.

343. ப்ரதிபந்தங்கள் போகைக்குச் சொன்ன திருநாமந்தானே ஆயிரம் ப்ரகாரத்தாலே ரக்ஷகமாம் என்கிறார் (ஈடு. அவ.). 'உள்ளுவார்க்கு உம்பரூரே' — பரமபதமும் அந்நாமமே என்றபடி. மன்றலர் பொழில் — (குருந்துமுதலியன) மன்றங்களில் அலரும் சோலை; மன்றல் (மணம்) அலரும் எனினும் ஆம்; இங்கு மன்றல் அலர் என்பது திரிந்ததாம்.

344. "ப்ரதிபந்தங்கள் போகைக்குத் தேசப்ராப்தியே அமையும்; ஆயிரந் திருநாமத்திலும் ஏதேனும் ஒன்றைச் சொல்லி அநுபவியுங்கோள் என்கிறார்" (ஈடு. அவ.). புள் ஊரும் — பெரிய திருவடியை வாகனமாகக்கொண்டு நடத்தும். அஃதே — அப்புள்ளே.

345. "ஆச்ரயிப்பார்க்கு ருசிபிறக்கைக்காகத் திருவனந்தபுரத்திலே புக்கு அடிமைசெய்கிறவர்கள் என்ன பாக்கியவான்கள்! என்கிறார்; அவர்கள் பாக்கியம் பண்ணினபடியைப் பேசுங்கோள் என்றுமாம்." (ஈடு. அவ.) கூசம் — கூச்சம். பெரிய நீர்வேலை — மேலைச் சமுத்திரம். நெறிமையால் — சீலத்துடன்.

(346) புண்ணியஞ் செய்துநல்ல புனலொடு மலர்கள்தூவி
எண்ணுமி னெந்தைநாம மிப்பிறப் பறுக்குமப்பால்
திண்ணநா மறியச்சொன்னோம் செறிபொழி லனந்தபுரத்
தண்ணலார் கமலபாத மணுகுவா ரமரராவார். (௫)

(347) அமரராய்த் திரிகின்றார்கட் காதிசே ரனந்தபுரத்
தமரர்கோ னர்ச்சிக்கின் றங் ககப்பணி செய்வர்விண்ணோர்
நமர்களோ சொல்லக்கேண்மின் நாமும்போய் நணுகவே
குமரனார் தாதைதுன் பந்துடைத்தகோவிந்தனாரே.[ண்டும்

(348) துடைத்தகோ விந்தனாரே உலகுயிர் தேவுமற்றும்
படைத்தவெம் பரமமூர்த்தி பாம்பணைப் பள்ளிகொண்
மடைத்தலை வாளைபாயும் வயலணி யனந்தபுரம் [டான்
கடைத்தலை சீய்க்கப்பெற்றாற் கடுவினை களையலாமே.(௭)

---

346. "திருவனந்தபுரத்தில் ஆச்ரயிக்குமவர்கள் நித்திய சூரிகள் ஆவர்கள்; அங்கே நீங்களும் ஆச்ரயிங்கோள் என்கிறார்" (ஈடு. அவ.) அமரர்—நித்திய சூரிகள் ; நித்தியரான பரமபதவாசிகள்.

347. "திருநாட்டிலே போய் எம்பெருமானுக்கு அடிமை செய்கையன்றோ ப்ராப்யம் என்னில், அங்குள்ளாரும் திருவனந்தபுரத்திலே வந்தன்றோ அடிமை செய்கிறது ? ஆதலால், இங்கே அடிமைசெய்யும் இதுவே ப்ராப்யம் ; ஆனபின்பு நாம் இங்கே போய் அடிமை செய்யவேணும் என்கிறார்" (ஆறாயிரப்படி).

அர்ச்சிக்கின்று – அர்ச்சிக்க, அர்சசிக்குங்கால்; செயவெனெச்சப் பொருளில்வரும் இக் கின்றுவிகுதி பண்டையிலக்கியங்களினும் பயில்வது (ஆராய்ச்சித் தொகுதி, பக். 305). குமரனார் தாதை – சிவபிரான். சிவனது 'துன்பந்துடைத்த கோவிந்தனார்' என்றதனால், அத்துன்பம் வாணாசுரயுத்தத்தில் கண்ணபிரானால் நீக்கப்பட்ட செய்தியைக் குறித்தவாறும். "ருத்ராதிகளுக்கு துக்கநிவர்த்தகனாயிருக்கும்"என்பது ஈடு. கோவிந்தனாரை நணுகவேண்டும் என்க.

348. "ஸர்வேச்வரன் கண்வளர்ந்தருளுகிற திருவனந்தபுரத்திலே

(349) கடுவினை களையலாகுங் காமனைப் பயந்தகாளை
இடவகை கொண்டதென்ப ரெழிலணி யனந்தபுரம்
படமுடை யரவிற்பள்ளி பயின்றவன் பாதங்காண
நடமினோ நமர்களுள்ளீர் நாமுமக் கறியச்சொன்னோம்.

(350) நாமுமக் கறியச்சொன்ன நாள்களும் நணியவான
சேமநன் குடைத்துக்கண்டீர் செறிபொழி லனந்தபுரம்
தூமநல் விரைமலர்கள் துவளற வாய்ந்துகொண்டு
வாமன னடிக்கென்றேத்த மாய்ந்தறும் வினைகள்தாமே.

(351) மாய்ந்தறும் வினைகள்தாமே மாதவா வென்னநாளும்
ஏய்ந்தபொன் மதிலனந்த புரநக ரெந்தைக்கென்று
சாந்தொடு விளக்கந் தூபந் தாமரை மலர்கள்நல்ல
ஆய்ந்துகொண் டேத்தவல்லா ரந்தமில் புகழினாரே. (ம)

---

சென்று அடிமைசெய்யப்பெறில், ஒரு தேசவிசேஷத்தே சென்று அடிமை செய்யப்பெற்றிலோம் என்னும துக்கம்போம என்கிறார்'' (ஈடு. அவ). கடைத்தலை சீய்க்கப்பெற்றால் – திருவாசலிலே திருவலகிடும் திருப்பணி செய்யப் பெற்றால்.

349. ''திருவனந்தபுரத்திலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வேச்வரனுடைய திருவடிகளைக் காணப்போருங்கோள் என்று ஸ்ரீவைஷ்ணவர்களை அழைக்கிறார்'' (ஒன்பதினாயிரப்படி). இடவகை – ஸ்தானவிசேஷம், நமர்கள் உள்ளீர் – நம்மவர்களாக (ஸ்ரீவைஷ்ணவர்களாக) உள்ளவர்களே!

350. ''சேமம் நன்குடையதான திருவனந்தபுரத்திலே சென்று எம்பெருமானுக்கு அடிமைசெய்ய உங்களுடைய துக்கங்களெல்லாம் தாமே போம்; ஆனபின்பு, அடிமை செய்வதற்கு உபகரணமான இப்பிரகிருதி முடிவதற்கு முன்னே இப்போதே சென்று அடிமை செய்யுங்கோள்; நாம் உமக்கு அறியச் சொன்னோம்'' (ஆறாயிரப்படி). நணிய ஆன – கிட்டியவை ஆயின. சேமம் – காப்பு, ரக்ஷை. துவள் அற – வாடுதலின்றி; குற்றமற என்றுமாம்.

351. ''திருவனந்தபுரத்திலே அடிமைசெய்யுமவர்கள் பெருமை பேச நிலமன்று என்கிறார்''(ஈடு, அவ.); 'விண்ணுளாரினும் சீரியரே' என்றபடி.

(352) அந்தமில் புகழனந்த புரநக ராதிதன்னைக்
கொந்தலர் பொழிற்குருகூர் மாறன்சொ லாயிரத்துள்
ஐந்தினோ டைந்தும்வல்லா ரணைவர்போ யமருலகிற்
பைந்தொடி மடந்தையர்தம் வேய்மரு தோளிணையே.

வெண்பா

(353) கெடுமிடர்வை குந்தத்தைக் கிட்டினாற் போலத்
தடமுடைய னந்தபுரந் தன்னிற்—படவரவிற்
கண்டுயில்மாற் காட்செய்யக் காதலித்தான் மாறனுயர்
விண்டனிலுள் ளோர்வியப்ப வே.

(354) கோளார் பொறியைந்துங் குன்றியுட லம்பழுத்து
மாளாமு னெஞ்சே வணங்குதியால்—கேளார்
சினந்தபுரஞ் சுட்டான் திசைமுகத்தான் போற்றும்
அனந்தபுரஞ் சேர்ந்தா னடி.

---

352. "நிகமத்தில் (முடிவில்), இத்திருவாய்மொழி (பதிகம்) வல்லார் திருநாட்டிலுள்ளார்க்குப் போக்யராவர் என்கிறார்" (ஈடு, அவ.)‘ ‘மதிமுக மடந்தையர் ஏந்தினர் வந்தே’ என்னக் கடவதிறே’ (ஈடு.)

353. ஸ்ரீமணவாளமாமுனிகள் அருளிய திருவாய்மொழி நூற்றந்தாதிவெண்பா (92). விண்தனில் உள்ளோர் – பரமபதவாசிகளான நித்ய சூரிகள்.

354. திவ்யகவி அழகிய மணவாளதாசர் என்ற பிள்ளைப் பெருமாளையங்கார் அருளிய நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி வெண்பா (59). கேளார் – பகைவர். புரஞ்சுட்டான் – திரிபுரங்களை எரித்த சிவபிரான். அடி வணங்குதி என்க.

# திருச்செங்குன்றூர்த்
# திருச்சிற்றாறு *

[திருவாய்மொழி 8, 4]
(பண்—புறநீர்மை, தாளம்—ஒன்பதொத்து)

(355) வார்கடா வருவி யானைமா மலையின்
மருப்பிணைக் குவடிறுத் துருட்டி
ஊர்கொள்திண் பாக னுயிர்செகுத் தரங்கின்
மல்லரைக் கொன்றுசூழ் பரண்மேற்
போர்கடா வரசர் புறக்கிட மாட
மீமிசைக் கஞ்சனைத் தகர்த்த
சீர்கொள்சிற் றாயன் திருச்செங்குன் றூரில்
திருச்சிற்றா றெங்கள்செல் சார்வே. (க)

---

* இத்தலம் கொல்லத்துக்கு வடமேற்கே 25-மைலில் உள்ளது. இங்கே திருமால்கோயில் உள்ள பகுதி, திருச்செங்குன்றூர் என்ற நகரின் உட்பிரிவாகவும், சிற்றாறு என்ற நதியின் மேல்கரையில் அமைந்ததாகவும் இருத்தலால், "திருச்செங்குன்றூர்த் திருச்சிற்றாறு" என்று நம்மாழ்வாரால் மங்களாசாஸனம் செய்யப்பெற்றது. இதனை "மயிலைத் திருவல்லிக்கேணி" என்பதுபோலக் கொள்க. சிற்றாறு என்பது ஆற்றுக்கும் திருப்பதிக்கும் பெயர் (ஈடு). இத்தலத்திற் கோயில்கொண்ட எம்பெருமான், மேற்கே திருமுகமண்டலமும் நின்றதிருக்கோலமு முடையவர். இத் திருச்சிற்றாற்றை உள்ளடக்கிய திருச்செங்குன்றூரில், சிவாலயமும் பகவதிகோயிலும் உள்ளன. விறல்மிண்ட நாயனார் என்ற சிவனடியாரின் அவதாரஸ்தலமும் இதுவாம். "மூவாயிரவர் வேதியர்" இத்தலத்துப் பிரபலராயிருந்தனர் என்பது, இத்திருப் பதிகத்தால் அறியப்படும்.

எம்பெருமான், தன்பேராற்றலோடு தன்பால் அன்பரான வைதிகோத்தமர் பலரையும் ஆழ்வார்க்குக் காட்டியருள அதனால் பெருமகிழ்வினராய், அவ்வெம்பெருமானது அனந்தகல்யாண குணங்களில் ஈடுபட்டு நின்றதைக் கூறுவன இத்திருவாய்மொழிப் பாசுரங்கள்.

355. குவலயாபீடம் முதலான பிரதிகூலரை நிரஸித்த சீர்கொள்

(356) எங்கள்செல் சார்வு யாமுடை யமுதம்
இமையவ ரப்பனென் னப்பன்
பொங்குமூ வுலகும் படைத்தளித் தழிக்கும்
பொருந்துமூ வுருவனெம் மருவன்
செங்கய லுகளுந் தேம்பணை புடைசூழ்
திருச்செங்குன் றூர்த்திருச் சிற்சூ
றங்கமர் கின்ற ஆதியா னல்லால்
யாவர்மற் றென்னமர் துணையே. (௨)

(357) என்னமர் பெருமா னிமையவர் பெருமான்
இருநில மிடந்தவெம் பெருமான்
முன்னைவல் வினைகள் முழுதுடன் மாள
வென்னையாள் கின்றவெம் பெருமான்
தென்றிசைக் கணிகொள் திருச்செங்குன் றூரில்
திருச்சிற்றாற் றங்கரை மீபால்
நின்றவெம் பெருமா னடியலாற் சரணம்
நினைப்பிலும் பிறிதில்லை யெனக்கே. (௩)

---

சிற்றாறனுடைய திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு எங்களுக்கு ஸ்ரீப்பய மான புகல் என்கிறார் (ஈடு. அவ.).

வார் கடா அருவி – ஒழுகிவரும் மதவருவியுடைய. குவடு – கோட்டு முனை. உருட்டி – யானையையும் உருட்டி. ஊர் கொள் – ஊர்தலை மேற் கொண்ட, நடத்திவந்த. செகுத்தல் – அழித்தல். அரங்கு – மற்களம். பரண்– கட்டில், சிங்காதனம். போர் கடாவு – போரை நடாத்தவல்ல. புறக்கிட – பிறகிட்டுப் போம்படி. செல்சார்வு – புகலிடம்.

356. மூவுலகும் படைத்தளித் தழிப்பவனாய்த் திருச்சிற்றாற்றில் நின்றருளினவ னல்லது எனக்கு நல்ல துணையில்லை எ–று. என்னுடை அமுதம் – 'போக்யவஸ்து வேறே தேடவேண்டாதே யிருக்கை'. இமையவரப் பன் என் அப்பன் – குறைவற்றார்க்கும் அப்பனாய்க் குறைவுக்கு எல்லையான எனக்கும் அப்பனானவன். அருவன் – அந்தர்யாமியானவன். பணை – மருத நிலம், நீர்வயல்.

357. ஸ்ரீவராஹமாய் ப்ரளயங்கொண்ட பூமியை எடுத்தருளித் திருச்

(358) பிறிதில்லை யெனக்குப் பெரியமூ வுலகும்
நிறையப்பே ருருவமாய் நிமிர்ந்த
குறியமா ணெம்மான் குரைகடல் கடைந்த
கோலமா ணிக்கமென் னம்மான்
செறிகுலை வாழை கமுகுதெங் கணிசூழ்
திருச்செங்குன் றூர்த்திருச் சிற்றா
றறியமெய்ம் மையே நின்றவெம் பெருமான்
அடியிணை யல்லதோ ரரணே. (௮)

(359) அல்லதோ ரரணு மவனின்வே றில்லை
யதுபொரு ளாகிலு மவனை
அல்லதென் னாவி யமர்ந்தணை கில்லா
தாதலா லவனுறை கின்ற
நல்லநான் மறையோர் வேள்வியுண் மடுத்த
நறும்புகை விசும்பொளி மறைக்கும்
நல்லநீண் மாடத் திருச்செங்குன் றூரில்
திருச்சிற்றா றெனக்குநல் லரணே. (௯)

---

செங்குன்றூரிலே நின்றவனுடைய திருவடிகளல்லது வேறு மனோரதத்திலும் எனக்குச் சரணமில்லை என்கிறார் (ஈடு. அவ.). இமையவர் — நித்தியசூரிகள். இடந்த — கீண்டு தாங்கிய. மீபால் — மேற்குப்பக்கத்தில்.

358. "மகாபலியை வென்றும் கடலைக்கடைந்தும் ஆச்ருதர் ஆபத்தைப்போக்கித் திருச்செங்குன்றூரிலே நின்றருளினவன் திருவடிகளல்லது வேறு எனக்கு அரணில்லை என்கிறார்" (ஈடு. அவ.). குறியமாண் — வாமன ப்ரம்மசாரி. அறிய — 'ஸர்வேச்வரன் என்றறிய' (ஈடு,).

359. "மற்றுகந்தருளின நிலமுமெல்லாம் அவனதேயாய், அவ்விடங்களில் நின்றருளுகிறவனும் தானேயாகிலும், திருச் செங்குன்றூரையும் அங்கு நின்றருளுகிற எம்பெருமானையும் அல்லது என் ஹ்ருதயம் சேர்ந்தணையாது என்கிறார்" (ஒன்பதினாயிரப்படி). அல்லதோர் அரணும் — திருச்சிற்றாறல்லாத பிற அவன் திருப்பதிகளான புகலிடம்.

(360) எனக்குநல் லரணை யெனதா ருயிரை
இமையவர் தந்தைதாய் தன்னைத்
தனக்குந்தன் தன்மை யறிவரி யானைத்
தடங்கடற் பள்ளியம் மானை
மனக்கொள்சீர் மூவா யிரவர்வண் சிவனு
மயனுந்தா னும்மொப்பவர் வாழ்
கனக்கொள்திண் மாடத் திருச்செங்குன் றூரில்
திருச்சிற்று றதனுட்கண் டேனே. (௬)

(361) திருச்செங்குன் றூரில் திருச்சிற்று றதனுட்
கண்டவத் திருவடி யென்றும்
திருச்செய்ய கமலக் கண்ணுஞ்செவ் வாயுஞ்
சேவடி யுஞ்செய்ய கையுந்
திருச்செய்ய கமல வுந்தியுஞ் செய்ய
கமலைமார் வுஞ்செய்ய வுடையும்
திருச்செய்ய முடியு மாரமும் படையும்
திகழவென் சிந்தையு ளானே. (௭)

---

360. "நித்யஸூரிகளுக்கு ஸர்வவித பந்துவுமாய் ப்ரம்மாதிகளுக்கு ஆச்ரயணீயனாய்க் கொண்டு, திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற இவனை, 'தனக்கென்வருகிறதோ' என்று அஞ்சவேண்டாதபடி திருச்செங்குன்றூரிலே காணப்பெற்றேன் என்கிறார்" (ஈடு, அவ.). மனக்கொள் சீர் – நெஞ்சிலே கொள்ளப்பட்ட பகவத்குணங்களுடைய, தில்லை மூவாயிரவர் போலத் திருச்செங்குன்றூர் வேதியர் மூவாயிரவர் வைதிகோத்தமர்களாய் வாழ்ந்த செய்தி கூறியவாறு.

361. "திருச்செங்குன்றூரிலே நின்றருளின சீர்கொள் சிற்றாயன் தன்னழகோடே மறக்கவொண்ணாதபடி என் நெஞ்சிலே வந்து புகுந்தான் என்கிறார்" (ஈடு. அவ.) திருவடி – ஸ்வாமி, பெருமான். 'திருவடியை நாரணனைக் கேசவனை' என்பர் முன்னும் (திருவாய். 4-9-11). கமலை – பெரிய பிராட்டி. 'கமலமார்வும்' என்றும் பாடம்.

(362) திகழுமென் சிந்தை யுள்ளிருந் தானைச்
செழுநிலத் தேவர்நான் மறையோர்
திசைகைகூப் பியேத்தும் திருச்செங்குன் றூரில்
திருச்சிற்ருற் றங்கரை யானைப்
புகர்கொள்வா னவர்கள் புகலிடந் தன்னை
யசுரர்வன் கையர்வெங் கூற்றைப்
புகழுமா றறியேன் பொருந்து மூவுலகும்
படைப்பொடு கெடுப்புக்காப் பவனே. (அ)

(363) படைப்பொடு கெடுப்புக் காப்பவன் பிரம
பரம்பரன் சிவப்பிரா னவனே
இடைப்புக்கோ ருருவு மொழிவில்லை யவனே
புகழ்வில்லை யாவையுந் தானே
கொடைப்பெரும் புகழா ரினையர்தன் னுனர்
கூறிய விச்சையோ டொழுக்கம்
நடைப்பலி யியற்கைத் திருச்செங்குன் றூரில்
திருச்சிற்ரு றமர்ந்தநா தானே. (கூ)

---

362. "இப்படி, பூரணமாக அநுபவித்த சேர்கோன் சிற்ருயனுடைய விலக்ஷணமான குணங்களிலும் அழகிலும் அழுந்தி, அவனைப் புகழும்படி அறிகிலேன் என்கிருர்" (ஈடு. அவ.). நிலத்தேவரான நான்மறையோர். புகர்–ஒளி. வன்கையர் – கொடுந்தொழிலர். காப்பவனே (– காப்பவனை) புகழுமாறறியேன் என்க.

363. "ப்ரம்மாதி ஸகல ஜந்துக்களுடையவும் சிருஷ்டியாதிகளைப் பண்ணுவான் திருச்செங்குன்றூரிலே நின்றருளினவன என்னுமிடம் அர்த்தவாதமன்று மெய் என்கிருர்." (ஈடு. அவ.) பிரமபரம்பரன் – பிரமனுகிய, இந்திராதிகளினும் மேம்பட்ட பரன். புகழ்வில்லை – ஸ்துதிவாதம் அன்று. இனையர் – இன்னுரென்று ப்ரவித்தரானவர். 'எனையர்' என்பதும் பாடம்; பலர் என்றபடி. தன்னுனர் – தனக்குத் தானே ஒப்பு என்னும்படி ஆனவர். நடைப்பலியியற்கை– நித்தமும் நிகழும் பகவதாராதனமான பூஜைபுரிதலேயே யாத்ரை

(364) அமர்ந்த நாதனை யவரவ ராகி
யவர்க்கரு ளருளுமம் மானை
அமர்ந்ததண் பழனத் திருச்செங்குன் றூரில்
திருச்சிற்றாற் றங்கரை யானை
அமர்ந்தசீர் மூவா யிரவர்வே தியர்கள்
தம்பதி யவனிதே வர்வாழ்
வமர்ந்தமா யோனை முக்கணம் மானை
நான்முக னையமர்ந் தேனே. (௰)

(365) தேனைநன் பாலைக் கன்னலை யமுதைத்
திருந்துல குண்டவம் மானை
வானநான் முகனை மலர்ந்ததண் கொப்பூழ்
மலர்மிசைப் படைத்தமா யோனைக்
கோனைவண் குருகூர் வண்சட கோபன்
சொன்னவா யிரத்துளிப் பத்தும்
வானின்மீ தேற்றி யருள்செய்து முடிக்கும்
பிறவிமா மாயக்கூத் தினையே. (௧௧)

---

யாயிருப்பவர். ஓசைக்கேற்ப 'நாதானே' என்று பாடம் கொள்க. 'நாதானை நல்லானை நாரணனை' (நான். 64) என்றார் திருமழிசைப்பிரானும்.

364. "ஸர்வேச்வரனுய்வைத்து ஸகல ஜந்துக்களுக்கும் ஆச்ரயணீயனாகத் திருச்செங்குன்றூரிலே நின்றருளினவனை அநுபவிக்கப் பெற்றேன் என்கிறார்" (ஈடு அவ.). மூவாயிரவர் வேதியர்கள் தம்பதியில் என்க. அவனிதேவர் வாழ்வு அமர்ந்த – அவ்வேதியரின் வாழ்வை விரும்பியருளும். இத்தலத்துள்ள அந்தணர்கள், தம்மை 'அகத்தே மூவாயிரம்' என்று இன்றும் வழங்குவர்; மற்றைப் 'புறத்தே மூவாயிரம்' என்பார் தில்லைத்தலத்து மூவாயிரவர் போலும்.

வெண்பா

(366) வாராம லச்சமினி மால்தன் வலியினையும்
சீரார் பரிவருடன் சேர்த்தியையும்—பாருமெனத்
தானுகந்த மாறன்தாள் சார்நெஞ்சே சாராயேல்
மானிடவ ரைச்சார்ந்து மாய். (கஉ)

(367) வரவேண்டுங் கண்டாய் மதிகலங்கி விக்குள்
பொரவே யுயிர்மாயும் போழ்து—பரமேட்டி
செங்குன்றூர் மாலே சிறைப்பறவை மேற்கனகப்
பைங்குன்றூர் கார்போற் பறந்து. (கஙு)



---

365. "இத் திருவாய்மொழியை அப்யஸிப்பார்கு இதுதானே முதலிலே பரமபதத்தேறக் கொடுபோய்ப் பின்னை ஸம்ஸாரமாகிற மஹா நாடகத்தை அறுக்கும் என்கிறார்" (ஈடு. அவ.).

366. திருவாய்மொழி நூற்றந்தாதி, 74. அச்சம் இனி வாராமல் மாலின் வலியினையும் பரிவர்சேர்த்தியையும் பாருங்கள் என்பது இத்திரு வாய்மொழிக் கருத்து. இக்கருத்தை உகந்து வெளியிட்ட மாறன் என்க. பரிவர் — அன்பர், அடியார்.

367. நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி, 64. பறந்து உயிர்மாயும் போழ்து வரவேண்டுங்கண்டாய் என இயையும். பரமேட்டி — பெருமானே; விளி.

## திருப்புலியூர் *

[திருவாய்மொழி; 8–9.]

(பண்—தக்கேசி; தாளம்—ஏழொத்து)

(368) கருமா ணிக்கமலை மேல்மணித்
தடந்தாமரைக் காடுகள்போல்
திருமார்வு வாய்கண் கையுந்திகா
லுடையாடைகள் செய்யபிரான்
திருமாலெம் மான்செழு நீர்வயற்
குட்டநாட்டுத் திருப்புலியூர்
அருமாயன் பேரன்றிப் பேச்சிலள்
அன்னைமீரிதற் கென்செய்கேனோ. (க)

* இத்திருப்பதி திருச்செங்குன்றூர்க்குக் கிழக்கே மூன்றுமைலில் உள்ளது. 'குட்டநாட்டுத் திருப்புலியூர்' எனவரும் பாசுரத் தொடர்களால் இத்தலம் அமைந்த பிரதேசம், சேரமண்டலத்தில் குட்டநாடு என்ற பகுதியைச் சேர்ந்தது என்பது தெரியலாம். இக்குட்டநாட்டின் உரிமைபற்றியே குட்டுவன் என்ற பெயர் சேரவேந்தர்க்கு வழங்குவதாயிற்று. இந்நாட்டுத் திருப்புலியூரிற் கோயில் கொண்டுள்ள திருமால், கிழக்கே திருமுகமண்டலமும் நின்ற திருக்கோலமுங் கொண்டு எழுந்தருளியுள்ளார்.

"எம்பெருமான் நிர்ஹேதுகமாகத் தன்னழகைக் காட்டித் தம்மை வசீகரித்துக் கொண்டு தம்மோடு கலந்தருளின கலவியால் தமக்குவந்த நிர்விருத்தியைப் பேசுகிறார்" (ஆறாயிரப்படி). தோழி நற்றாய்க்கு அறத்தொடு நிற்குந் துறையில் இத்திருவாய்மொழிப் பாசுரங்கள் அமைந்துள்ளன என்பர்.

368. "திருப்புலியூரிலே எழுந்தருளியிருக்கிறவனுடைய அவயவ

(369) அன்னை மீரிதற் கென்செய்கே
னணிமேருவின் மீதுலவுந்
துன்னு சூழ்சுடர் ஞாயிறும்
அன்றியும்பல் சுடர்களும்போல்
மின்னும் நீண்முடி யாரம்பல்
கலன்றானுடை யெம்பெருமான்
புன்னை யம்பொழில் சூழ்திருப்
புலியூர் புகழுமிவளே. (உ)

(370) புகழு மிவள்நின் றிராப்பகல்
பொருநீர்க்கடல்தீப் பட்டெங்குந்
திகழு மெரியொடு செல்வதொப்பச்
செழுங்கதி ராழிமுதல்
புகழும் பொருபடை யேந்திப்போர்
புக்கசுரரைப் பொன்றுவித்தான்
திகழு மணிநெடு மாடநீடு
திருப்புலி யூர்வளமே. (ஙட)

---

சோலையிலே அகப்பட்டு, அவன் திருநாமமன்றிச் சொல்லுகின்றிலள் என்கிறார்'' (பன்னீராயிரப்படி).

369. ''அவனுடைய ஆபரணசோலையிலே அகப்பட்டாள் என்கிறார்'' (ஈடு. அவ.). மேருவின்மீது உலவும் ஞாயிறும் பலசுடர்களும்போல் முடியும் ஆரமும் பல்கலன்களும் திருமேனியில் விளங்குவன என்க.

370. ''அழகியன் ஆனால் என்? ஆண்பிள்ளைத்தன முடையனாக வேண்டாவோ என்னில், அந்த சௌர்யவீர்யாதி குணங்களையேகாண் இவள் இராப்பகல் புகழாநின்றது என்கிறாள்'' (ஆறாயிரப்படி). கடல் தீப்பட்டு அத்தீயோடு எழுந்து சென்றதுபோல, சுடராழி முதலிய போர்ப்படைகளோடு பெருமான் அசுரர்மேலெழுந்து அவர்களைப் பொன்றுவித்தான் எ—று.

[சூழ்ந்

(371) ஊர்வ ளங்கிளர் சோலையுங் கரும்பும்பெருஞ் செந்நெலுஞ்
தேர்வ ளங்கிளர் தண்பணைக் குட்டநாட்டுத் திருப்புலியூர்
சீர்வ ளங்கிளர் மூவுல குண்டுமிழ் தேவபிரான்
பேர்வளங்கிளர்ந்தன் றிப்பேச் சிலளின் றிப்புனையிழையே.

(372) புனையிழைக ளணிவு மாடை யுடையும் புதுக்கணிப்பும்
நினையு நீர்மைய தன்றிவட் கிதுநின் று நினைக்கப்புக்கால்
சுனையி னுள்தடந் தாமரை மலருந்தண் திருப்புலியூர்
முனைவன் மூவுல காளியப்பன் திருவருள் மூழ்கினளே.

(373) திருவருள் மூழ்கி வைகலுஞ் செழுநீர்நிறக் கண்ணபிரான்
திருவ ருள்களுஞ் சேர்ந்தமைக் கடையாளந் திருந்தவுள
திருவருளருளாலவன் சென்றுசேர்தண் திருப்புலியூர்
திருவ ருட்கமுகொண் பழத்தது மெல்லியல் செவ்விதழே.

---

371. "வெறும் ஆண்பிள்ளைத்தனமே போராதே; ஆபத்ஸகனுக வேணுமே என்ன, அக்குறைதான் உண்டோ இவனுக்கு என்கிருள்; புனல் தருபுணர்ச்சியன்றே இவள் வாய்புலற்றுகிறது" (ஈடு. அவ.). 'பேர்வளங் கிளர்ந்தன்றி' என்ற பாடமும் ஏற்கும்.

372. "வெறும் ஆபத்ஸகத்வமே போருமோ, இவளுக்குத்தக்க ஐச்வர்யமும் உண்டாகவேணுமே என்ன, அதுவும் உண்டென்கிருள்" (ஈடு. அவ.). புதுக்கணிப்பு – வடிவிற்பிறந்த புதுமை. முனைவன் – தலைமை யானவன். திருவருள் மூழ்கினளே – "கடல்கொண்ட வஸ்துவை எங்ஙனே மீட்கப்பார்க்கிறபடி; அருட்கடலிலே மூழ்கின இவளை மீட்கலாமோ" (ஈடு.)

373. "இவளுடைய வடிவில் வேறுபாடு லீலாவிநோதத்தாலும் இவள் பருவத்தாலும் பிறவாதோ என்னில், எம்பெருமானுடைய ஔதார்ய குணத்திலே அகப்பட்டு அவனோடே ஸம்ச்லேஷித்தமைக்கு அடையாளம் வ்யக்தமாக உண்டு என்கிருள்" (ஒன்பதினுயிரப்படி). செவ்விதழ் கமுகொண் பழத்தது என்பதனால் தலைவிக்குக் கலவியுண்மை குறிப்பிட்டபடி.

(374) மெல்லிலைச் செல்வவண் கொடிப்புல்க
வீங்கிளந் தாட்கமுகின்
மல்லிலை மடல்வாழை யீன்கனி
சூழ்ந்து மணங்கமழ்ந்து
புல்லிலைத் தெங்கி னூடுகா
லுலவுந்தண் திருப்புலியூர்
மல்லலஞ் செல்வக் கண்ணன் தா
ளடைந்தாளிம் மடவரலே. (எ)

(375) மடவர லன்னைமீர்கட் கென்சொல்லிச்
சொல்லுகேன் மல்லைச்செல்வ
வடமொழி மறைவாணர் வேள்வியுள்
நெய்யழல் வான்புகைபோய்
திடவி சும்பி லமரர்நாட்டை
மறைக்குந்தண் திருப்புலியூர்
படவர வணையான் றன்நாம
மல்லாற்பர வாளிவளே. (அ)

---

374. "கேவலம் உதாரனாகப் போராதே, ப்ரணயித்வகுணம் உண்டாகவேணுமே என்ன, அவ்வூரில் ஸ்தாவரங்களுங்கூடப் பரஸ்பரம் ஆச்ரயமாம்படியன்றோ, அவனுடைய ப்ரணயித்வகுணம் இருந்தபடி என்கிறான்" (ஈடு. அவ.).

மெல்லிலை – வெற்றிலைக் கொடி. அக்கொடிக்குக் கமுகு ஆதாரமாய் கொடிக்கும் கமுகுக்கும் வாழை வெயில்தட்டாதபடி நிழல்செய்ய, வாழைக்குத் தென்னஞ்சோலை ஆதாரமாய் இருப்பதனால், தாவரங்களும் ஒன்றுக் கொன்று இணைந்துதவும் பிரதேசம் எ–று.

375. திருப்புலியூர் எம்பெருமானுடைய ஆசாரவிசேஷத்தாலே இவள் வசிகிருதை ஆனாள் என்கிறாள். என் சொல்லிச் சொல்லுகேன் – என்ன பாசுரத்தையிட்டுச் சொல்லுவேன். மல்லை – மிக்க வளம்.

(376) பரவா ளிவள்நின் றிராப்பகல்
பனிநீர்நிறக் கண்ணபிரான்
விரவா ரிசைமறை வேதிய
ரொலிவேலையின் நின்றொலிப்பக்
கரவார் தடந்தொறும் தாமரைக்
கயந்தீவிகை நின்றலரும்
புரவார் கழனிகள் சூழ்திருப்
புலியூர்ப்புக ழன்றிமற்றே. (௩)

(377). அன்றி மற்றோ ருபாயமென்னிவ
ளந்தண் துழாய்கமழ்தல்
குன்ற மாமணி மாடமாளிகைக்
கோலக் குழாங்கள்மல்கித்
தென்றி சைத்தில தம்புரை
குட்டநாட்டுத் திருப்புலியூர்
நின்ற மாயப் பிரான்திரு
வருளாமிவள் நேர்பட்டதே. (௪)

---

376. ஆசாரமே போருமோ; தன் உயர்குடிக்குத் தக்க வேதார்த்த தத்வஞானமும் உண்டாகவேணுமே என்ன, அதற்கும் ஒரு குறையில்லை என்கிறாள். திருப்புலியூர்ப் புகழன்றி மற்று இவள் பரவாள் என இயையும். விரவு ஆர் இசை – இறைவனது குணங்களோடு கலந்து நிரம்பிய இசை. கரவு– முதலை. தீவிகை நின்று – நிலைவிளக்குப்போல நின்று.

377. "நீ சொல்வன வெல்லாம் கிடக்க, இவளை அவனுக்குக் கொடுக்கும்படி அஸாதாரண லக்ஷணம் ஏதேனும் உண்டாகில் சொல் எனச் சொல்லுகிறாள்" (ஈடு.). கமழ்தல் – கமழ்தற்கு ; கமழ்தற்கு உபாயமென் என்றும், திருவருள் இவள் நேர்பட்டதாம் என்றும் இயையும். நேர்படுதல் – பொருந்துதல், வாய்த்தல்.

(378) நேர்பட்ட நிறைமூ வுலகுக்கும்
நாயகன் தன்னடிமை
நேர்பட்ட தொண்டர்தொண்டர் தொண்டர்
தொண்டன்சட கோபன்சொல்
நேர்பட்ட தமிழ்மாலை யாயிரத்து
ளிவையு மோர்பத்தும்
நேர்பட் டாரவர் நேர்பட்டார்
நெடுமாற்கடி மைசெய்யவே.

வெண்பா

(379) கருமால் திறத்திலொரு கன்னிகையா மாறன்
ஒருமா கலவி யுரைப்பால்—திரமாக
அன்னியருக் காகா தவன்தனக்கே யாகுமுயிர்
இந்நிலையை யோர்நெடி தா.

(380) முதல்வண்ண மாமே முலைவண்ண முன்னே
விதிவண்ணம் நீங்கி விடுமே—சதுரத்
திருப்புலியூர் நின்றான் திருத்தண் டுழாயின்
மருப்புலியூர் தென்றல் வரின்.



378. முடிவில், இவை பத்துப்பாசுரங்களையும் கற்றவர் நெடுமாற்கு அடிமை செய்யப்பெற்று நீடுவாழ்வர் என்கிறார். மூவுலகுக்கும் நேர்பட்ட நாயகன் என்க.

379. திருவாய்மொழி நூற்றந்தாதி, 79. உரைப்பால் – கூறுதலால். 'தன்னிலையை' என்பதும் பாடமபோலும்.

380. நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி, 63. முலைவண்ணம் – தலைவன் பிரிவால் முலையில் அமைந்த பசலைநிறம். முதல்வண்ணம் – இயற்கை நிறம். முன்னேவிதிவண்ணம் – முன்னேவிதியால் அமைந்த பிரிவு நிலை. மருப்புலி – துழாய்மணத்தோடு கலந்து தலைவி கூற்று.

## திருவண்வண்டூர்.*

[திருவாய்மொழி 6, 1]

பண்—நட்டராகம்; தாளம்—ஏழொத்து.

(381) வைகல் பூங்கழிவாய் வந்துமேயும் குருகினங்காள்!
செய்கொள் செந்நெலுயர் திருவண்வண் டூருறையுங்
கைகொள் சக்கரத்தென் கனிவாய்ப்பெரு மானைக்கண்டு
கைகள்கூப்பிச்சொல்லீர்வினையாட்டியேன்காதன்மையே

---

* திருப்புலியூரிலிருந்து வடக்கே 3-மைலிலும் திருச்செங்குன்றூரிலிருந்து மேற்கே 5-மைலிலும் உள்ளது இத்தலம். இங்கே கோயில்கொண்டருளும் எம்பெருமான் மேற்கே திருமுகமண்டலமும் நின்றதிருக்கோலமும் உடையவர். வண்பரிசாரம், வண்புருடோத்தமம் என்பனபோல 'வண்' என்ற அடை இதன் வளப்பம்பற்றி வழங்கியதாம். திருவண்மண்டூர் திருவெண்மண்டூர் என்று சாஸனங்களிலும் திருவமுண்டூர் என வழக்கிலும் இத்தலம் பயில்கின்றது.

"எம்பெருமானை, திருவண்வண்டூரின் ஸம்ருத்தி நம்மை நினையாதபடி பண்ணுகையாலே நந்தமை அறியாமல் வாராதொழிந்தான்; அறிவிக்க வரும் என்று பார்த்து, தன் பரிஜனங்களில் அவன்பக்கல் போய்வரவல்லாரொருத்தரைக் காணாமையாலே, தன் ஆற்றாமை கைகொடுக்கக் கழிக்கரையிலே சென்று, அங்கே வர்த்திக்கின்றன சில பக்ஷிகளை அத்யாதரம் பண்ணியிருந்து, திருவண்வண்டூரில் தூதுவிடுகிறாள்" (ஒன்பதினாயிரப்படி).

381. "சில குருகுகளை நோக்கி, திருவண்வண்டூரிலே சென்று எம்பெருமானுக்கு என் தசையை அறிவியுங்கோள் என்கிறார்" (ஈடு). வைகல்-தினமும். "வந்து – வழிபறிக்கும் தேசத்திலே வந்து உதவினாற்போலே நீங்கள் ஸந்நிதிபண்ணினபடி". கைகள் கூப்புகையாவது சிறகுகளை விரிக்கை என்பர்.

(382) காதல் மென்பெடையோ டுடன்மேயும் கருநாராய்
வேத வேள்வியொலி முழங்குந்தண் திருவண்வண்டூர்
நாதன் ஞாலமெல்லா முண்டநம்பெரு மானைக்கண்டு
பாதங் கைதொழுது பணியீரடி யேன்திறமே. (உ)

(383) திறங்க ளாகியெங்குஞ் செய்களூடுழல் புள்ளினங்காள்
சிறந்த செல்வமல்கு திருவண்வண் டூருறையும்
கறங்கு சக்கரக்கைக் கனிவாய்ப் பெருமானைக்கண்
டிறங்கி நீர்தொழுது பணியீரடி யேனிடரே. (௩)

(384) இடரில் போகமூழ்கி யிணைந்தாடு மடவன்னங்காள்
விடலில் வேதவொலி முழங்குந்தண் திருவண்வண்டூர்
கடலின் மேனிப்பிரான் கண்ணனை நெடுமாலைக்கண்
டுடல நைந்தொருத்தி யுருகுமென் றுணர்த்துமினே (௪)

---

382. "பரமகாருணிகனாய், ஆச்ரித வத்ஸலனாயிருந்த திருவண்வண்டூர் நாதனைக் கண்டு பாதங்கைதொழுது பணியீர் அடியேன் திறம் என்கிறாள்" (ஆறுயிரப்படி). (பணியீர் என்ற) "பன்மை பெடையோடு கூட்டிச்சொல்லுகிறது" (பன்னீரா.)

383. "திறந்திறமாய்த் திரளுகிற புள்ளினங்களைக் கண்டு தன் காரியத்துக்குத் திரளுகிறனவாகக் கொண்டு, திருவண்வண்டூரிலே யிருக்கிற எம்பெருமானுக்கு என்னுடைய வ்யஸனத்தை அறிவியுங்கோள் என்கிறாள்", (ஒன்ப.)

திறங்களாகி – இனம் இனமாகி; திரள்திரளாக எனினுமாம். கறங்குதல் – சுழலுதல். இறங்கி – தாழ்ந்து.

384. "ஸௌந்தர்ய ஸௌலப்ய வாத்ஸல்யகல்யாண குணநிதியான அவனைக்கண்டு, 'ஐயோ! ஒருத்திபடும் பாடு இது' என்று சொல்லுங்கோள் என்று சில அன்னங்களைக் குறித்துச் சொல்லுகிறாள்" (ஆறு.)

(385) உணர்த்த லூட லுணர்ந் துடன்மேயு மடவன்னங்காள்
திணர்த்தவண்டல்கள்மேற் சங்குசேருந் திருவண்வண்டூர்
புணர்த்த பூந்தண்டுழாய் முடிநம்பெரு மானைக்கண்டு
புணர்த்த கையினரா யடியேனுக்கும் போற்றுமினே.(ரு)

(386) போற்றி யானிரந்தேன் புன்னைமேலுறை பூங்குயில்காள்
சேற்றில் வாளைதுள்ளும் திருவண்வண் டூருறையும்
ஆற்ற லாழியங்கை யமரர்பெரு மானைக்கண்டு
மாற்றங் கொண்டருளீர் மையல்தீர்வ தொருவண்ணமே.
[கிளியே)

(387) ஒருவண்ணஞ் சென்றுபுக் கெனக்கொன் றுரை யொண்
செருவொண் பூம்பொழில்சூழ் செக்கர்வேலைத் திருவண்
[வண்டூர்
கருவண்ணஞ் செய்யவாய் செய்யகண்கை செய்யகால்
செருவொண் சக்கரஞ்சங் கடையாளந் திருந்தக்கண்டே.

---

385. "வேறே சில அன்னங்களைக்குறித்து 'அத்தேசம், புக்காரை மறப்பிக்கும்; நீங்கள் புக்கால் என்னையும் வினையுங்கள் என்கிறாள்" (இருபத்.)

உணர்த்தல் — புலவியை நீக்குதல்; ஊடல் — புலத்தல்; ஊடலும் உணர்த்தலும் புணர்தலும் காமத்தைப் பயனாகக் கொண்டவை; "ஊட லுணர்தல் புணர்த லிவைமூன்றுங், காமத்தாற் பெற்ற பயன்" என்றார் வள்ளுவனாரும். திணர்த்தல் — உரத்தாற் கொழுத்தல். புணர்த்த — சேர்த்த. "புணர்த்தகையி னராய் — வழியேபிடித்துத் தொழுதுகொடு போங்கோள்". அடியேனுக்கும் போற்றுமின் — என்விஷயமாகவும் கௌரவித்துச் சொல்லுங்கள்.

386. "சில குயில்களைக்குறித்து, அவனுக்கு என் தசையை அறிவித்து அங்குநின்றும் ஒரு மறுமாற்றங் கொண்டுவந்து அருளிச் செய்யவேணும் என்கிறாள்" (ஈடு.)

387. "சில கிளிகளைக் குறித்து அவனுடையாளங்களைச் சொல்லி இவ்வடையாளப்படியே கண்டு எனக்காக ஒருவார்த்தை சொல்லுங்கோள் என்கிறாள்" (ஈடு.)

ஒருவண்ணம் — ஒருபடியாக. செரு — போர்புரிவனபோல ஒன்றையொன்று இகலிச்சிற்கும் மரங்களின் அடர்ச்சியிலே.

(388) திருந்தக் கண்டெனக்கொன்றுரையாயொண் சிறுபூவாய்
செருந்தி ஞாழல்மகிழ் புன்னைசூழ்தண் திருவண்வண்டூர்
பெருந்தண் தாமரைக்கட் பெருநீண்முடிநாற்றடந்தோட்
கருந்திண் மாமுகில்போற் றிருமேனி யடிகளையே. (அ)

(389) அடிகள் கைதொழு தலர்மேலசையும் அன்னங்காள்
விடிவை சங்கொலிக்குந் திருவண்வண் டூருறையும்
கடிய மாயன் தன்னைக் கண்ணனைநெடு மாலைக்கண்டு
கொடிய வல்வினையேன் திறங்கூறுமின் வேறுகொண்டே.

(390) வேறுகொண்டும்மையானிரந்தேன் வெறிவண்டினங்காள்
தேறுநீர்ப் பம்பை வடபாலைத் திருவண்வண்டூர்
மாறில் போரரக்கன் மதிள்நீறெழச் செற்றுகந்த
ஏறு சேவகனார்க் கென்னையுமுள ளென்மின்களே. (ய)

---

388. "ஒரு பூவையை நோக்கி, அந்தரங்கையான எனக்கு வந்து சொல்லலாம்படி கண்டு, ஒரு மறுமாற்றங் கேட்டுவந்து சொல்லாய் என்கிறாள்" (இருபத்.) அடிகள் – ஸ்வாமி, தலைவன்.

389. ஆச்ருத விஷயத்தில் அத்யந்த வ்யாமுக்தனானவனைக் குறித்து விலக்ஷணங்களான சில அன்னங்களைப் போகவிடுகிறாள்" (பன்னீ.)

விடிவை – விடியற்காலத்து. வேறுகொண்டு – ஏகாந்தத்தில் இடங் கொண்டு.

390. திருவண்வண்டூரில் உள்ள தன் பெரும்ஸம்பத்தாலே என்னை மறந்த அவனுக்கு, தன்னாற் காக்கப்பட விரும்பாள் நானுமொருத்தி உளள் என்று சொல்லவேண்டுமென்று சில வண்டுகளை வேண்டுகிறாள். வேறுகொண்டு வண்டுகளை இரத்தற்கு, வளமிக்க வண்டூர் என்ற திருநாமம் அத்தலத்துக் கமைந்ததும் ஓர் ஏது எனலாம். பம்பை – பம்பா என்ற ஆறு; இது மலை நாட்டு இன்றும் அப்பெயர்கொண்டு வழங்குவது. வடபாலை – அதன் வடகரையில் உள்ள. ஏறு சேவகனார் – மேம்படும் வீரமுடையான்; 'ஏறு திருவுடையான்' (நாச். திருமொழி) என்பதும் ஒப்பிடுக.

(391) மின்கொள் சேர்புரிநூற் குறளாயகன் ஞாலங்கொண்ட
வன்கள் வன்னடிமேற் குருகூர்ச்சடகோபன்சொன்ன
பண்கொ ளாயிரத்து ளிவைபத்துந் திருவண்வண்டூர்க்
கின்கொள் பாடல்வல்லார் மதனர்மின் னிடையவர்க்கே.

வெண்பா

(392) வைகல்திரு வண்வண்டூர் வைகு மிராமனுக்கென்
செய்கைதனைப்புள்ளினங்காள்செப்புமெனக்—கைகழிந்த
காதலுடன் தூதுவிடுங் காரிமாறன் கழலே
மேதினியீர் நீர்வணங்கு மின்.

(393) தேவு முலகு முயிருந் திரிந்துநிற்கும்
யாவும் படைத்த விறைகண்டீர்—பூவிற்
றிருவண்வண் டூருறையுந் தேவாதி தேவன்
மருவண்வண் டூர்துளவ மால்.

---

391. "இத்திருவாய்மொழி வல்லார், மின்னிடையவர்க்கு மதனர் போக்ய ராமாபோலே, ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குப் போக்யமாவர் என்கிறார்" (ஆறு.)

392. இவ்வெண்பா, ஸ்ரீ மணவாள மாமுனிகள் அருளிய திருவாய்மொழி நூற்றந்தாதியின் 51-ம் பாசுரம்.

393. இது, ஸ்ரீ அழகியமணவாளதாசர் அருளிய நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியின் 57-ம் பாசுரம். திரிந்து – வேறுபட்டு. திரிந்துநிற்கும் யாவும் – தேவும் உலகும் உயிருமாம் இயங்குதிணையும் நிலைத்திணையுமாகவுள்ள யாவும் என்றுமாம்.

## திருவல்லவாழ் *

[திருவாய்மொழி 5, 9]
(பண்—பஞ்சமம்; தாளம்—ஏழொத்து.)

(394) மானேய் நோக்குநல்லீர் வைகலும்வினை யேன்மெலிய
வானார் வண்கமுகு மதுமல்லி கைகமழும்
தேனார் சோலைகள்சூழ் திருவல்ல வாழுறையுங்
கோனாரை யடியே னடிகூடுவ தென்றுகொலோ (க)

(395) என்றுகொல் தோழிமீர்காள் எம்மைநீர்நலிந் தென்செய்
பொன்றிகழ் புன்னைமகிழ் புதுமாதவி மீதணவித் [திரோ
தென்றல் மணங்கமழுந் திருவல்ல வாழ்நகருள்
நின்றபிரா னடிநீ றடியோங்கொண்டு சூடுவதே. (உ)

---

* இத்திருப்பதி, திருவண்வண்டூர்க்கு வடக்கே நான்கு மைலில் பம்பாநதிக்கரையில் உள்ள பெரிய நகரமாகும். இங்கே கோயில்கொண்ட எம்பெருமான் கிழக்கே திருமுகமண்டலமும் நின்றதிருக்கோலமுமுடையராய் எழுந்தருளியுள்ளார். இத்திவ்யதேசம் நம்மாழ்வாராலும் திருமங்கை மன்னனாலும் மங்களாசாஸனம் செய்யப்பெற்றது. திருவல்லா என்று இக்காலத்தார் இதனை வழங்குவர்.

திருவல்லவாழ் எம்பெருமானைக் கண்டு மகிழ ஒருப்பட்டெழுந்த தலைவி, அவ்வாறு செல்லாதபடி தன்னைத் தடுத்துநின்ற தோழியரை நோக்கித் தன்னாற்றாமை தோற்ற இரங்கிக் கூறுவன, இத்திருவாய்மொழிப் பாசுரங்கள்.

394. "தோழிமாரைக் குறித்து, திருவல்லவாழிலே நின்றருளின ஸர்வேச்வரன் திருவடிகளைக் கிட்டப்பெறுவது என்றோ என்கிறாள்" (ஈடு.)

கமுகு, மல்லிகைக் கொடிக்கு அது வேண்டாதே தன்மெய்கொடுத்து உதவுதலால் வண் கமுகு என்றார்.

395. தன்னைக் கடிந்துந் தடுத்தும் பேசும் தோழிமாரை நோக்கி அவன் பாதரேணுவை நான் சூடுவது என்றோ என்கிறாள்.

(396) சூடு மலர்க்குழலீர் துயராட்டியே னைமெலியப்
பாடுநல் வேதவொலி பரவைத்திரை போன்முழங்க
மாடுயர்ந் தோமப்புகை கமழுந்தண் திருவல்லவாழ்
நீடுறை கின்றபிரான் கழல்காண் டுங்கொல் நிச்சலுமே

(397) நிச்சலுந் தோழிமீர்காளெம்மைநீர்நலிந்தென்செய்திரோ
பச்சிலை நீள்கமுகும் பலவுந்தெங்கும் வாழைகளும்
மச்சணி மாடங்கள்மீ தணவுந்தண் திருவல்லவாழ்
நச்சரவின் னணைமேல் நம்பிரானது நன்னலமே. (௪)

(398) நன்னலத் தோழிமீர்காள் நல்லவந்தணர் வேள்விப்புகை
மைந்நலங் கொண்டுயர்விண் மறைக்குந்தண் திருவல்லவா
கன்னலங் கட்டிதன்னைக் கனியையின் னமுதந்தன்னை [ழ்
என்னலங் கொள்சுடரை யென்றுகொல்கண்கள் காண்ப
[துவே (ரு)

---

பொன்திகழ் புன்னை – பொன்போலவிளங்கும் தாதுக்களையுடைய புன்னை; 'புன்னை பொன்னேய் தாதுதிர்க்கும்' (திருவாய். 5-1-6) என்ப. அடிநீறு – அடிப்பொடி. சூடுவது என்றுகொல் என்க.

396. "தோழிமாரைப் பார்த்து, நான் அவனை நித்யாநுபவம் பண்ணப்பெறும் நாள் என்று என்கிறாள்" (ஈடு.). மெலியப் பாடும் நல்வேதவொலி என்றது, நாயகனை எம்பெருமானை அடையாமல் வருந்துகிற தனக்கு, அவனைப் பற்றிப் பாடும் பிரபந்தம் நலிவுசெய்தல் குறித்தவாறு.

397. இவ்வாறெல்லாம் மனோரதங்கொள்கை தகுதியன்று என்று கடிந்துகூறும் தோழிமாரை நோக்கி, என்னுடைய நற்சீவன் அவன்பக்கல் உள்ளது; நீங்கள் நலிந்து என்ன பயன் என்கிறாள்.

நிச்சலும் – தினந்தோறும். நன்னலம் – என் வாழ்வுக்குற்ற நலம் யாவும். (என்) நன்னலம் நம்பிரானது என இயையும்.

398. என்னிலை எத்தகையதாயினும், என்னிலும் விடாய்ப்பட்ட கண்கள், என்னினைவுக் கிடாகக் கண்டு அநுபவிப்பது என்றோ என்கிறாள்.

(399) காண்பதெஞ்ஞான்றுகொலோவினையேன் கனிவாய்மடவீர்
பாண்குரல் வண்டினொடுபசுந்தென்றலுமாகியெங்கும்
சேண்சினை யோங்குமரச் செழுங்கானற் றிருவல்லவாழ்
மாண்குறட் கோலப்பிரான் மலர்த்தாமரைப் பாதங்களே

(400) பாதங்கள் மேலணிபூத் தொழக்கூடுங்கொல்பாவைநல்லீர்
ஓத நெடுந்தடத்து ளுயர்தாமரை செங்கழுநீர்
மாதர்கள் வாண்முகமுங் கண்ணுமேந்துந் திருவல்லவாழ்
நாதனிஞ் ஞாலமுண்ட நம்பிரான்றன்னை நாடொறுமே.

(401) நாடொறும்வீடின்றியேதொழக்கூடுங்கொல் நன்னுதலீர்
ஆடுறு தீங்கரும்பும் விளைசெந்நெலு மாகியெங்கும்
மாடுறு பூந்தடஞ்சேர் வயல்சூழ்தண் திருவல்லவாழ்
நீடுறை கின்றபிரான் நிலந்தாவிய நீள்கழலே. (அ)

---

மைநலம் கொண்டு — மேகத்தின் நிறத்தை மேற்கொண்டு. கன்னலங்கட்டி— வெல்லப்பாகு. 'என் நலம் கொள் என்றது, கூடியிருந்த காலத்தில் தன் உயிர் நலம் உடல்நலங்களை அவன் கொள்ளை கொண்டதனை.

399. "திருவல்லவாழிலே நின்றருளின ஸ்ரீ வாமனனுடைய போக்யமான திருவடிகளை நான் காண்பதென்றோ என்கிறாள்." பாண் — கானம். மாண் குறள் — பிரமசாரியும் வாமனனுமான.

400. "அவன் திருவடிகளிலே நித்யமாகப் பூவையணிந்து தொழ வல்லோமோ என்கிறாள்" (ஈடு). "திருவடிகளின் மேலேயணிந்த பூவையாகிலும் தொழக்கூடுமோ" எனினும் ஆம் (பன்னீ.)

401. "ஸர்வ ஸுலபனானவன் திருவடிகளிலே ஸர்வகாலமும் இடைவிடாதே அடிமைசெய்யக் கூடவற்றே என்கிறாள்." (அவ.) "நாடொறும் என்று தர்சபூர்ணமாஸாதிகளை வ்யாவர்த்திக்கிறது; வீடின்றியே என்று நித்யாக்நிஹோத்ரத்தை வ்யாவர்த்திக்கிறது; 'ஒழிவில் காலமெல்லாம்' என்கிறபடியேயிறே இவர் ப்ராா்த்திப்பது" என்பது (ஈடு.). வீடின்றியே — இடையறாதே.

(402) கழல்வளை பூரிப்ப யாங்கண்டு கைதொழக் கூடுங்கொலோ
குழலென்ன யாழுமென்னக் குளிர்சோலையுள் தேனருந்தி
மழலை வரிவண்டுக ளிசைபாடுந் திருவல்லவாழ்
சுழலின்மலி சக்கரப் பெருமானது தொல்லருளே. (க)
[காள்

(403) தொல்லருள் நல்வினையாற் சொலக்கூடுங்கொல் தோழிமீர்
தொல்லருள் மண்ணும் விண்ணுந் தொழநின்ற திருநகரம்
நல்லரு ளாயிரவர் நலனேந்துந் திருவல்லவாழ்
நல்லருள் நம்பெருமான் நாராயண னுமங்களே. (ம)

(404) நாமங்களா யிரமுடைய நம்பெரு மானடிமேற்
சேமங்கொள் தென்குருகூர்ச்சடகோபன் தெரிந்துரைத்த
நாமங்க ளாயிரத்து ளிவைபத்துந் திருவல்லவாழ்ச்
சேமங்கொள் தென்னகர்மேற் செப்புவார்சிறந் தார்பிறந்
[தே

---

402. "நம்முடைய கழலுகிற வளைகள் பூரிக்க அவனைக் கண்டு தொழும்படி அவனருள் கூடவற்றே" என்கிறாள் (ஈடு.) பூரிப்ப – பூர்ணமாம் படி. 'அவன்வரில் கைமேலே ஒருங்கு காணலாமே இவற்றை'. யாம் – 'விச்லேஷத்தில் வளைகழலுவது தனக்கேயாகிலும் காட்சி எல்லார்க்கும் ஒத்திருக்குமே' (ஈடு.) தொல்லருள் – ஸ்வாபாவிகமான அருளாலே.

403. "அவனுடைய ஸ்வாபாவிக க்ருபையாலே திருநாமங்களைச் சொல்லக் கூடவற்றே என்கிறாள்" (இருபத்.) தொல்லருள் நல்வினை – ஸ்வாபாவிகமான (இயல்பான) அருளாகிய ஸுக்ருதவிசேஷம்" (பன்னீ.) தொல்லருளான உபகாரச் செயல்களை இம்மையும் மறுமையும் ஒக்க அனுபவித்துத் தொழநின்ற திருநகரம் என்க. திருச்செங்குன்றூர் மூவாயிரவர்போலத் திருவல்லவாழில் ஆயிரவர் வேதியர் ஆழ்வார்காலத்தில் விளங்கியமை அறியத்தக்கது.

404. "இத் திருவாய்மொழியை அப்யஸிக்க வல்லார் ஸம்ஸாரத்

வெண்பா

(405) மாநலத்தால் மாறன் திருவல்ல வாழ்புகப்போய்
தானிளைத்து வீழ்ந்தவ்வூர் தன்னருகில்—மேனலங்கித்
துன்பமுற்றுச் சொன்ன சொலவுகற்பார் தங்களுக்குப்
பின்பிறக்க வேண்டா பிற.



தில் இருந்துவைத்தே பகவத் குணாநுபவத்தாலே எல்லாரினுஞ் சிறந்தவர்கள் என்கிறார்" (ஈடு, அவ). பிறந்தே சிறந்தார் – சரீர ஸம்பத்தோடே இருந்து வைத்து, பகவத் அநுபவமாகிற சிறப்பையுடையராவர்கள்; "சீதரனையே தொழுவார் விண்ணுளாரினுஞ் சீரியரே" என்றபடி.

இது, திருவாய்மொழி நூற்றந்தாதியின் 49–ம் பாசுரம். நலங்குதல் – வருந்துதல்; 'விஞ்ச நலங்கியதும்' என்ப (திருவாய்.). சொலவு – பாசுரம்.

## பெரியதிருமொழி.*

(406) தந்தைதாய் மக்களே சுற்றமென்
றுற்றவர் பற்றி நின்ற
பந்தமார் வாழ்க்கையை நொந்துநீ
பழியெனக் கருதி னாயேல்
அந்தமா யாதியா யாதிக்கு
மாதியா யாய னாய
மைந்தனார் வல்லவாழ் சொல்லுமா
வல்லையாய் மருவு நெஞ்சே. (க)

---

* திருமங்கையாழ்வாரால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற மலைநாட்டுத் திருப்பதிகள் மூன்றும். அவை திருநாவாய், திருமூழிக்களம், திருவல்லவாழ் என்பன. இம்மூன்று தலங்களும் அம்மலைநாட்டின் வடபகுதியில் உள்ளவை. இவற்றுள், திருமங்கையாரால் தனிப்பதிகமாகப் பாடப்பெற்ற மலைநாட்டுத் திருப்பதி திருவல்லவாழேயாம். நம்மாழ்வாரைப்போல அந்நாட்டுத் தென்பகுதிகளில் உள்ள திருவனந்தபுரம் திருவாட்டாறுபோன்ற பிரபல தலங்களையும் பாடியருள இவர்க்கு வாய்த்ததில்லைப் போலும். இப்பதிகம், திருமங்கையாழ்வார் பாடியருளிய பெரியதிருமொழி, ஒன்பதாம் பத்தின் ஏழாந் திருமொழியாகும்.

மேலே, விஷயாந்தரங்களின் இழிந்த தன்மையைப் பிறர்க்கு உபதேசித்து வந்த திருமங்கைமன்னன், அவ்விழிநிலையில் தாமும் சிற்றலையுணர்ந்து கவலைமிக்கவராய், 'திருவல்லவாழை வாயாலே சொல்வதாக மருவப்பார்' என்று தம் உள்ளத்தை நோக்கி உணர்த்துகிறார்.

406. ஸம்ஸாரவாழ்க்கையில் பற்றுள்ளவர்கள் பகவத்விஷயத்தைப் பற்றுவது பயனற்றதாம் என்பார். 'பந்தமார் வாழ்க்கையைப் பழியெனக் கருதினாயேல் வல்லவாழ் சொல்லுமா மருவு' என்றார். 'மக்களே' என்பதில் உள்ள ஏண்ணேகாரத்தைச் சுற்றத்துடன் கூட்டி 'தந்தை தாய்மக்கள் சுற்றமே

(407) மின்னுமா வல்லியும் வஞ்சியும்
வென்றநுண் ணிடைநுடங்கும்
அன்னமென் னடையினர் கலவியை
யருவருத் தஞ்சி னயேல்
துன்னுமா மணிமுடிப் பஞ்சவர்க்
காகிமுன் தூது சென்ற
மன்னனார் வல்லவாழ் சொல்லுமா
வல்லையா மருவு நெஞ்சே. (உ)

(408) பூணுலா மென்முலைப் பாவைமார்
பொய்யினை மெய்யி தென்று
பேணுவார் பேசுமப் பேச்சைநீ
பிழையெனக் கருதி னயேல்
நீணிலா வெண்குடை வாணனார்
வேள்வியில் மண்ணி ரந்த
மாணியார் வல்லவாழ் சொல்லுமா
வல்லையாய் மருவு நெஞ்சே. (ஙா)

---

உற்றவர் என்று' எனப்பிரித்து உரைகூறுவர். உற்றவர் என்று — ஸோபாதிக பந்துக்களை நிருபாதிக பந்துக்களாக மாறிவினைத்து. அந்தமாய் ஆதியாய் ஆதிக்கும் ஆதியாய் — "ஸர்வமும் உபஸம்ஹ்ருதமான அன்று இவற்றுக்கு லயஸ்தானமாய், ஸிருஷ்டிகாலம் வந்தவாறே உத்பத்திஸ்தானமாய், காரணவஸ்திதமான சித் அசித்துக்களுக்கு நிர்வாஹகனாய்" என்பது பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யானம்.

407. மா வல்லியும்-சிறந்த கொடியும். முடியிழந்தவரை மணிமுடிப் பஞ்சவர் என்றது, முடிக்குரியவர் அவர்களே என்றபடி.

408. பூண்-உலாம் — அணிகலங்களொடு கூடிய. பேணுவார் — ஆதரிக்கும் ஆடவர். வாணனார் — மாவலி. மாவலி மகனான பாணாசுரனுக்குரிய வாணன் என்ற பெயரைத் தந்தைக்கும் வழங்குவர் இவ்வாழ்வார்; 'பொருந்த

(409) பண்ணுலா மென்மொழிப் பாவைமார்
பணைமுலை யணைது நாமென்
றெண்ணுவா ரெண்ணம தொழித்துநீ
பிழைத்துயக் கருதி னாயேல்
விண்ணுளார் விண்ணின்மீ தியன்றவேங்
கடத்துளார் வளங்கொள் முந்நீர்
வண்ணனார் வல்லவாழ் சொல்லுமா
வல்லையாய் மருவு நெஞ்சே. (அ)

(410) மஞ்சுதோய் வெண்குடை மன்னராய்
வாரணஞ் சூழ வாழ்ந்தார்
துஞ்சினா ரென்பதோர் சொல்லைநீ
துயரெனக் கருதி னாயேல்
நஞ்சுதோய் கொங்கைமே லங்கைவாய்
வைத்தவள் நாளை யுண்ட
மஞ்சனார் வல்லவாழ் சொல்லுமா
வல்லையாய் மருவு நெஞ்சே. (கூ)

---

வாணன் மங்கலஞ்சேர் மறைவேள்வி யதனுட்புக்கு' (4-4-8) எனக் காண்க. மாணி — பிரமசாரி.

409. பண் உலாம் — இசையொடு கூடிய. விண்ணுளார் — பரம பதத்துள்ளவர். விண்ணின்மீது இயன்ற — விண்மேலே அளாவிநின்ற; "பரம பதத்தோடு ஒருபோலியான ஒக்கத்தையுடைத்தான" என்றபடி.

410. இம் மூன்றுபாட்டாலும் விஷயங்களின் தோஷத்தை அருளிச் செய்தவர், ஐச்வர்யத்தில் ஆசையுண்டாயிருக்க மருவக்கூடுமோ என்ன, அதன் நிலையின்மையாகிய துக்கத்தை உணர்ந்தாயாகில் விரைவாகவே வல்லவாழ் சொல்லுதலை மருவுக என்கிறார். மஞ்சனார் — சிறுவரான கண்ணபிரான், 'மைந்தனார்' என்றும் பாடம்.

(411) உருவினார் பிறவிசே ரூன்பொதி
நரம்புதோற் குரம்பை யுள்புக்
கருவிநோய் செய்துநின் றைவர்தாம்
வாழ்வதற் கஞ்சி னாயேல்
திருவினார் வேதநான் கைந்துதீ
வேள்வியோ டங்க மாறும்
மருவினார் வல்லவாழ் சொல்லுமா
வல்லையாய் மருவு நெஞ்சே. (சா)

(412) நோயெலாம் பெய்ததோ ராக்கையை
மெய்யெனக் கொண்டு வாளா
பேயர்தாம் பேசுமப் பேச்சைநீ
பிழையெனக் கருதி னாயேல்
தீயுலாம் வெங்கதிர்த் திங்களாய்
மங்குல்வா னாகி நின்ற
மாயனார் வல்லவாழ் சொல்லுமா
வல்லையாய் மருவு நெஞ்சே. (எ)

---

411. ஐச்வர்யத்தின் நிலையில்லாமையைச் சொல்லியவர், இந்திரியங்கள் தமக்கென்று அடைத்த விஷயங்களைத் தரும்படி நலிந்து நிற்கும் நிலையில், நாம் திவ்யதேசத்தை மருவ வழியுண்டோ என்ன, அவற்றின் நலிவுக்கு அஞ்சினாயாகிலும் வல்லவாழ் மருவத்தகும் என்கிறார்.

உருவின் ஆர் பிறவி — ஸூக்ஷ்ம சரீரத்தோடுகூடிய பிறவி. "நித்யமான ஆத்மவஸ்துவுக்கு ஜன்மமாகிறது, ஸூக்ஷ்மசரீரத்தோடேகூட ஸ்தூல சரீரத்திலே பிரவேசிக்கை" (பெரியவாச். வ்யாக்.) குரம்பை — ஸ்தூலசரீரம். அருவி — வருத்தி. ஐவர் — பஞ்சேந்திரியங்களாகிய குறும்பர். அவர் குறும்பு செய்துகொண்டு உடலுள் இருந்து வாழ்வதற்கு அஞ்சினாயேல் என்க. ஐந்து தீ — பஞ்சாக்கினி; பஞ்சப்பிராணன்களாகிற அக்னிகளில் பண்ணும் ஆகுதி என்பர். மருவினார் — மருவிய அந்தணர்.

412. இந்திரியங்களின் நலிவுக்கு அஞ்சி வல்லவாழை மருவினும் தேகத்தில் ஸ்திரத்வ புத்தியும் போக்யதாபுத்தியும் உண்டாயிருத்தலாலும்,

(413) மஞ்சுசேர் வானெரி நீர்நிலங்
காலிவை மயங்கி நின்ற
அஞ்சுசே ராக்கையை யரணமன்
றென்றுயக் கருதி னாயேல்
சந்துசேர் மென்முலைப் பொன்மலர்ப்
பாவையுந் தாமு நாளும்
வந்துசேர் வல்லவாழ் சொல்லுமா
வல்லையாய் மருவு நெஞ்சே. (அ)

(414) வெள்ளியார் பிண்டியார் போதியா
ரென்றிவ ரோது கின்ற
கள்ளநூல் தன்னையுங் கருமமன்
றென்றுயக் கருதி னாயேல்
தெள்ளியார் கைதொழுந் தேவனார்
மாமுநீ ரமுது தந்த
வள்ளலார் வல்லவாழ் சொல்லுமா
வல்லையாய் மருவு நெஞ்சே. (௯)

---

பெரும்பாலோரும் அவற்றை நம்பியொழுகலாலும் திவ்யதேசத்தை மருவுதலால் பயனென் என்ன, அது பேயரது பொய்வார்த்தை என்று எண்ணினாயாகில் மருவலாகும் என்கிறார். தீயுலாம் வெங்கதிர் – அக்னிமயமான சூரியன். மங்குல் வான் – மேகங்களையுடைய ஆகாசம்.

413. அஞ்சு சேர் ஆக்கை – வான் எரி முதலியன கூடிப் பாஞ்சபௌதிகமான சரீரத்தை. அரணம் – ரக்ஷகம்,

414. வெள்ளியார் – சுக்கிரன்; இவன் உலகாயத மதப்பிரவர்த்தகன். இனி, வெள்ளிக்குன்றமான கயிலாயத்துக்குரிய சிவபிரான் என்றும் உரைப்பர். பிண்டியார் – அருகக்கடவுள். பிண்டி – அசோகு. போதியார் – அரசின் கீழமர்ந்த சாக்கியமுனி. இவர்களின் மதங்களைக் கடைப்பிடித்த உலகாயதர், சைனர், பௌத்தர் என்பார் ஓதுங் கள்ளநூல்கள் என்க. தெள்ளியார் – ஞானத்தெளிவுள்ளார்.

(415) மறைவலார் குறைவிலா ருறையுமூர்
வல்லவா முடிக டம்மைச்
சிறைகுலாம் வண்டறை சோலைசூழ்
கோலநீ ளாலி நாடன்
கறையுலாம் வேல்வல கலியன்வா
யொலியிவை கற்று வல்லார்
இறைவரா யிருநிலங் காவல்பூண்
டின்பநன் கெய்து வாரே. (கய)

வெண்பா

(416) உகந்தார்க்கெஞ் ஞான்று முளனு யுகவா
திகந்தார்க்கெஞ் ஞான்று மிலனுய்த்—திகழ்ந்திட்
டருவல்ல வாழுருவ மல்லவென நின்றுன்
திருவல்ல வாழுறையுந் தே.

---

415. மறைவலார் – வேதியர் ஆயிரவர். கோலம் – வளத்தின் அழகு. வாய் ஒலி – வாய்மொழிகள்.

416. இவ்வெண்பா, அழகியமணவாளதாசர் அருளிய நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியின் 66–ம் பாசுரம். உகந்தார் – ஆஸ்திகரான அடியார். இகந்தார் – நாஸ்திகர். கடவுள் உண்டென்று சொல்லும் ஆஸ்திகர்க்கு அவர்வேண்டியபடியே உளன் என்று சொல்லுமாறு உருவப்பொருளாகியும், எக்காலத்தும் எவ்விடத்தும் இல்லாததொரு பொருள் வழக்கில்வருதற்கே வழியில்லையாதலால், 'கடவுளில்லை' என்று கூறும் நாஸ்திகர்க்குக் கடவுள் என்றெடுத்து அவனதின்மையைச் சாதிக்கவேண்டியிற்றலின் அப்போது அருவப்பொருளாகியும் தோன்றுவன் ஆதலால், திருமால் எப்போதும் உளனேயாவன் என்பதாம். வாழ் உருவம் – விலைத்துள்ள உருவம், அல்ல எனவருவன, இருதிணை மூவிடத்துக்கும் பொதுவாய்வரும் எதிர்மறைக் குறிப்புமுற்று ; பிற்கால வழக்கு.

# திருக்கடித்தானம்*

[திருவாய்மொழி 8, 6]

(பண்—வியந்தம்; தாளம்—ஏழொத்து.)

(417) எல்லியுங் காலையுந் தன்னை நினைந்தெழ
நல்ல வருள்கள் நமக்கேதந் தருள்செய்வான்
அல்லியந் தண்ணந் துழாய்முடி யப்பனூர்
செல்வர்கள் வாழுந் திருக்கடித் தானமே. (க)

(418) திருக்கடித் தானமு மென்னுடைச் சிந்தையும்
ஒருக்கடுத் துள்ளே யுறையும் பிரான்கண்டீர்
செருக்கடுத் தன்று திகைத்த வரக்கரை
உருக்கெட வாளி பொழிந்த ஒருவனே. (உ)

---

* இத்திருப்பதி, திருவல்லவாழிலிருந்து வடக்கே 7-மைலில் உள்ளது. இங்கே கோயில்கொண்டருளும் எம்பெருமான், கிழக்கே திருமுக மண்டலமும் நின்றதிருக்கோலமும் கொண்டவர். நம்மாழ்வாரால் மங்களா சாஸனம் செய்யப்பெற்றவர்.

"எம்பெருமான் என்னுடைய விடாயெல்லாந் தீரும்படி செய்தருளினன்" (ஆறா. அவ.)

417. "என்னுடைய ஆர்த்தி தீர்த்தருளுவான் ஸர்வேச்வரனே; அவனூர் திருக்கடித்தானம் என்கிறார்".

எல்லி – இரவு. அப்பன் நமக்கே அருள்செய்வான்; (அவன்) ஊர் செல்வர்கள் வாழுந் திருக்கடித்தானம் என இயையும். செல்வர்கள் வாழுந் திருக்கடித்தானம் அருள்செய்வானுடைய அப்பனூர் என இயைப்பினுமாம்.

418. என் பக்கல் வருகைக்குப் ப்ரதிபந்தகங்களையுந் தானேபோக்கி,

(419) ஒருவ ரிருவரோர் மூவ ரெனநின்
றுருவு கரந்துள் ளுந்தொறுந் தித்திப்பான்
திருவமர் மார்வன் திருக்கடித் தானத்தை
மருவி யுறைகின்ற மாயப் பிரானே. (ங)

(420) மாயப் பிரானென வல்வினை மாய்ந்தற
நேசத்தி னல்நெஞ்ச நாடு குடிகொண்டான்
தேசத் தமரர் திருக்கடித் தானத்தை
வாசப் பொழில்மன்னு கோயில்கொண் டானே. (ச)

(421) கோயில் கொண்டான்றன் திருக்கடித் தானத்தைக்
கோயில் கொண்டானத னோடுமென் னெஞ்சகங்
கோயில்கொள் தெய்வமெல் லாந்தொழ வைகுந்தங்
கோயில் கொண்டகுடக் கூத்தவம் மானே. (ரு)

---

*திருக்கடித்தானத்திலும் என் ஹ்ருதயத்திலும் ஒக்க அபிநிவேசித்து என்னுள்ளே வர்த்தியாநின்றான் (எம்பெருமான்) என்கிறார் (ஈடு.) ஒருங்க அடுத்து என்பது ஒருக்கடுத்து என நின்றது; ஒக்க ஆதரித்து என்றபடி. செருகடுத்து – போர்த்தினவு எடுத்து.*

419. "*பிராட்டியோடேகூடத் திருக்கடித்தானத்திலே நித்யவாஸம் பண்ணுகிற ஆச்சர்யபூதனான உபகாரகன் அநுஸந்திக்குந்தோறும் இனியனாகாநின்றான். என்கிறார்*" (ஈடு.)

420. "*திருக்கடித்தானத்தைக் கலவிருக்கையாகக் கொண்டு ஸ்நேஹாதிசயத்தாலே என் நெஞ்சை நிரந்தர வாஸஸ்தானமாகக் கொண்டான் என்கிறார்*" (இருபத்.). *கலவிருக்கை – ஓலக்கமிருக்கும் அத்தாணி. நெஞ்சநாடு – மனமாகிய திருநாடு அல்லது பரமபதம்.*

421. "*என் பக்கல் ப்ரேமாதிசயத்தாலே திருக்கடித்தானத்தோடு கூட என் ஹ்ருதயத்திலே புகுந்தருளினன் என்கிறார்*" (ஈடு.) *திருக்கடித்தானத்தைக் கோயிலாகக் கொண்டவன், அக்கோயிலோடும் என் நெஞ்சகத்தையும் தன் கோயிலாகக் கொண்டான் என்க. குடக்கூத்து – குடங்களை எடுத்து எறவிட்டுக் கண்ணபிரானாடிய கூத்துவகை.*

(422) கூத்த வம்மான்கொடி யேனிடர் முற்றவும்
மாய்த்தவம் மான்மது சூதவம் மானுறை
பூத்த பொழிற்றண் திருக்கடித் தானத்தை
ஏத்த நில்லாகுறிக் கொண்மி னிடரே. (சு)

(423) கொண்மி னிடர்கெட வுள்ளத்துக் கோவிந்தன்
மண்விண் முழுது மளந்தவொண் டாமரை
மண்ணவர் தாந்தொழ வானவர் தாம்வந்து
நண்ணு திருக்கடித் தான நகரே. (எ)

(424) தான நகர்கள் தலைச்சிறந் தெங்கெங்கும்
வானிந் நிலங்கடல் முற்றுமெம் மாயற்கே
ஆன விடத்துமென் னெஞ்சுந் திருக்கடித்
தான நகருந்தன் தாயப் பதியே. (அ)

---

422. "தம்முடைய ப்ரீதிப்ரஹர்ஷத்தாலே, திருக்கடித்தானத்தை எல்லாரும் ஆச்ரயுங்கோள் என்கிறார்" (ஈடு.) இடர் ஏத்தநில்லா; (இதனைக்) குறிக்கொண்மின் என்க.

423. "உங்கள் துக்கநிவர்த்திக்கு ஏத்தவேண்டா, திருக்கடித்தானத்தை நெஞ்சாலே நினையுங்கோள் என்கிறார்." மண்ணவர் தொழ வானவர் நண்ணும் என்றது, ஸம்ஸாரிகளுக்கு முகங்கொடுத்து நிற்கிற நீர்மையை அநுஸந்தித்து, நித்யஸூரிகளும் வந்து கிட்டுகிற தேசம் என்றபடி; "இங்குள்ளார் அங்குப் போவது மேன்மையை அநுபவிக்க; அங்குள்ளார் இங்கு வருவது சீல குணாநுபவம் பண்ணுகைக்கு" (ஈடு.)

424. "இப்படி திருக்கடித்தானத்தை அநுபவித்து, பின்னையும் தம்திறத்துச் செய்தருளின நன்மையைச் சொல்லுகிறார். உம்முடைய நெஞ்சுந் திருக்கடித்தானமும் எம்பெருமானுக்கு இருப்பிடமாகச் சொன்னீர்; வான் நிலம் கடல் முற்றும் அவனுக்கு இருப்பிடமல்லவோ என்னில், அங்ஙனேயாகிலும் என் நெஞ்சுந் திருக்கடித்தானமும் அவனுக்குப் பிறந்துடைய திருநகரியாயிருக்கும் என்கிறார்" (ஆறாயிரப்.) தாயப்பதி – தாயபாகமான ஊர்; உரிமை நகரம்.

(425) தாயப் பதிகள் தலைச்சிறந் தெங்கெங்கும்
மாயத்தி னால்மன்னி வீற்றிருந் தானுறை
தேசத் தமரர் திருக்கடித் தானத்துள்
ஆயர்க் கதிபதி யற்புதன் தானே. (கூ)

(426) அற்புதன் நாரா யணனரி வாமனன்
நிற்பது மேவி யிருப்பதென் னெஞ்சகம்
நற்புகழ் வேதியர் நான்மறை நின்றதிர்
கற்பகச் சோலைத் திருக்கடித் தானமே. (கய)

(427) சோலைத் திருக்கடித் தானத் துறைதிரு
மாலை மதிற்குரு கூர்ச்சட கோபன்சொல்
பாலோ டமுதன்ன வாயிரத் திப்பத்தும்
மேலைவை குந்தத் திருத்தும் வியந்தே. (கக)

---

425. "எல்லாம் அவனுக்குத் தாயப்பதிகள் அன்றோ என்னில் அது அப்படியேயாகிலும், திருக்கடித்தானமென்றால் அவன் திருவுள்ளம் விழுந்து கிடக்கும்படி ஆச்சர்யம் என்கிறார்" (ஆறாயிரப்.). "உகந்தருளின தேசங்கள் எல்லாவற்றிலும் விருப்பமுண்டாகிலும் என்னை லபிக்கைக்காகத் திருக்கடித்தானத்திலே தன்மேன்மையும் நீர்மையும் எல்லாம் ப்ரகாசிக்க நின்றான் என்கை (ஈடு). இதனால் ஆயர்க்கதிபதி அற்புதனாயுள்ளான் என்க.

426. "என்னைப் பெறுமளவும் திருக்கடித்தானத்திலே நின்றான்; என்னைப் பெற்றபின்பு நிற்பது மிருப்பதும் என் நெஞ்சிலே என்கிறார்" (ஈடு.) "திருக்கடித்தானத்திலே அவன் நிற்பது: மேவியிருப்பது என் நெஞ்சகம் என்னுதல்; திருக்கடித்தானத்துப் (பெருமான்) நிற்பதும் மேவியிருப்பதும் என் நெஞ்சகம் என்னுதல்." (ஈடு.)

427. "இத்திருவாய்மொழி கற்றவர்களை, இதுதானே திருநாட்டிலே கொடுபோய்விடும் என்கிறார்" (ஈடு.)

வெண்பா

(428) எல்லி பகல்நடந்த இந்தவிடாய் தீருகைக்கு
மெல்லவந்து தான்கலக்க வேண்டுமென—நல்லவர்கள்
மன்னுகடித் தானத்தே மாலிருக்க மாறன்கண்
டிந்நிலையைச் சொன்னு னிருந்து.

(429) காண விரும்புமென்கண் கையுந் தொழவிரும்பும்
பூண விரும்புமென்றன் புன்றலைதான்—வாணன்
திருக்கடித்தா னத்தான் திகிரியான் தண்டான்
திருக்கடித்தா னத்தானைச் சென்று.



428. ஸ்ரீ மணவாளமாமுனிகள் அருளிய திருவாய்மொழி நூற்றந்தாதி 76-ம் பாசுரம்.

429. ஸ்ரீ அழகியமணவாளதாசர் அருளிய நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி, 70. வாணன் திருக்கு – வாணாசுரனது முரண், வஞ்சகம். அடித்தான்– வென்றுபோக்கியவன். நத்தான் – சங்கத்தையுடையவன். திகிரி – சக்கரம். தண்டான் – தண்டாயுதந் தரித்தவன்.

# திருவாறன்விளை *

~~~~

[திருவாய்மொழி; 7–10.]

(பண்—பழம்பஞ்சுரம்; தாளம்—ஏழொத்து)

(430) இன்பம் பயக்க வெழின்மலர் மாதருந்
தானுமிவ் வேழுலகை
இன்பம் பயக்க வினிதுடன் வீற்றிருந்
தாள்கின்ற எங்கள்பிரான்
அன்புற் றமர்ந்துறை கின்ற வணிபொழில்
சூழ்திரு வாறன்விளை
அன்புற் றமர்ந்து வலஞ்செய்து கைதொழு
நாள்களு மாகுங்கொலோ. (க)

---

* இத்திருப்பதி, திருச்செங்குன்றூருக்குக் கிழக்கே 6—மைலில் உள்ளது. இங்குக் கோயில்கொண்டருளும் எம்பெருமான் வடக்கே திருமுக மண்டலமும் நின்ற திருக்கோலமும் உடையவராய் ஸ்ரீபார்த்தஸாரதியாகக் காட்சியளிக்கின்றார். இத்தலம் ஆறன்முழு, ஆறம்முளா என்று வழக்கிலும் சாஸனங்களிலும் வழங்கும்.

லோகமெல்லாம் வாழும்படி பெரிய பிராட்டியாரோடேகூடத் திருவாறன்விளையிலே இருந்தருளும் ஸர்வேச்வரனை அங்கே சென்று அடிமை செய்ய வேணும் என்று, அடிமைசெய்யும் படிகளை மனோரதிக்கிறார்.

430. "சேஷியானவன் லக்ஷ்மியோடே பரிபூர்ணனாய் எழுந்தருளியிருக்கிற திருவாறன்விளையை அநுபவித்து அடிமைசெய்யுங் காலமும் ஆமோ என்கிறார்" (பன்னீரா.) "வீற்றிருந் தேழுலகுந் தனிக்கோல்செல்ல வீவில்சீர், ஆற்றல்மிக் காளுமம்மானை" என்பர் முன்னும்.
~~~~

(431) ஆகுங்கொ லையமொன் றின்றி யகலிட
முற்றவு மீரடியே
ஆகும் பரிசு நிமிர்ந்த திருக்குற
ளப்ப னமர்ந்துறையும்
மாகந் திகழ்கொடி மாடங்கள் நீடு
மதிற்றிரு வாறன்விளை
மாகந்த நீர்கொண்டு தூவி வலஞ்செய்து
கைதொழக் கூடுங்கொலோ. (௨)

(432) கூடுங்கொல் வைகலுங் கோவிந் தனைமது
சூதனைக் கோளரியை
ஆடு பறவை மிசைக்கண்டு கைதொழு
தன்றி யவனுறையும்
பாடும் பெரும்புகழ் நான்மறை வேள்வியைந்
தாறங்கம் பன்னினர்வாழ்
நீடு பொழிற்றிரு வாறன் விளைதொழ
வாய்க்குங்கொல் நிச்சலுமே. (௩)

(433) வாய்க்குங்கொல் நிச்சலு மெப்பொழு தும்மனத்
தீங்கு நினைக்கப்பெற
வாய்க்குங் கரும்பும் பெருஞ்செந் நெலும்வயல்
சூழ்திரு வாறன்விளை

---

431. "திருவாறன்விளையிலே மிக்க பரிமளத்தையுடைத்தான நீரைக் கொண்டு திருநீர்விட்டுப் பிரதக்ஷிணம்பண்ணிக் கையாலே தொழவுங் கூடவற்றே என்கிறார்" (ஈடு.).

432. "திருவாறன்விளையி லெம்பெருமான் பெரியதிருவடிமேலே ஏறி எழுந்தருளக் கண்டாலும், அவனைத் தொழுது பின் அவனையுந் தவிர்ந்து திருவாறன்விளையைத் தொழக் கூடவற்றே என்கிறார்" (ஈடு.) ஆடு – வெற்றி. கைதொழுதன்றி – கைதொழுதலோடு எனினுமாம். நிச்சல் – நித்யமும்.

433. திருவாறன்விளையில் செல்லப்பெறேனாகில், அங்கு நின்ற

வாய்க்கும் பெரும்புகழ் மூவுல கீசன்
வடமது ரைப்பிறந்த
வாய்க்கும் மணிநிறக் கண்ண பிரான்றன்
மலரடிப் போதுகளே. (ரு)

(434) மலரடிப் போதுக ளென்னெஞ் சத்தெப்
பொழுது மிருத்திவணங்கப்
பலரடி யார்முன் பருளிய பாம்பணை
யப்ப னமர்ந்துறையும்
மலரின் மணிநெடு மாடங்க ணீடு
மதிற்றிரு வாறன்விளை
உலக மலிபுகழ் பாடநம் மேல்வினை
யொன்றுநில் லாகெடுமே. (௬)

(435) ஒன்றுநில் லாகெடு முற்றவுந் தீவினை
யுள்ளித் தொழுமின்தொண்டீர்
அன்றங் கமர்வென் றுருப்பிணி நங்கை
யணிநெடுந் தோள்புணர்ந்தான்
என்றுமெப் போதுமென் னெஞ்சந் துதிப்பவுள்
ளேயிருக் கின்றபிரான்
நின்ற வணிதிரு வாறன் விளையென்னும்
நீணக ரமதுவே. (எ)

---

ருளுகிறவனை, அவ்வூரிலே சென்றுபுக்கு அநுபவிக்கும்படியை இங்கேயிருந் தாகிலும் நிரந்தரமாக நினைக்கக் கூடவற்றே என்கிறார்" (இருபத்து.)

434. "திருவாறன்விளையிலே புக்கு அடிமை செய்கைக்கு விரோதியானவையெல்லாம் அவனுடைய மிக்கபுகழைப் பாடப் பறந்துபோம் என்கிறார்" (ஈடு.) மலரின் மணிமாடம் — மலர்மாலைகளால் அணியப்பெற்ற மணிமாடம்; தேவர்கள் பொழிந்த மலர்களால் அணியப்பெற்ற மாடமும் என்ப.

435. "எம்பெருமான் பக்கல் சாபலமுடையீர்! உங்களுடைய

(436) நீணகரமது வேமலர்ச் சோலைகள்
சூழ்திரு வாறன்விளை
நீணகரத்துறை கின்ற பிரான்நெடு
மால்கண்ணன் விண்ணவர்கோன்
வாணபுரம்புக்கு முக்கட் பிரானைத்
தொலையவெம் போர்கள்செய்து
வாணனை யாயிரந் தோடுணித் தான்சர
ணன்றிமற் றொன்றிலமே. (எ)

(437) அன்றிமற் றொன்றிலம் நின்சர ணேயென்
றகலிரும் பொய்கையின்வாய்
நின்றுதன் னீள்கழ லேத்திய வானையின்
நெஞ்சிடர் தீர்த்தபிரான்
சென்றங் கினிதுறை கின்ற செழும்பொழில்
சூழ்திரு வாறன்விளை
ஒன்றி வலஞ்செய்ய வொன்றுமோ தீவினை
யுள்ளத்தின் சார்வல்லவே. (அ)

---

ஸமஸ்த துக்கங்களும் போம்படி திருவாறன்விளையை நெஞ்சாலே நினையுங் கோள் என்கிறார்” (ஈடு.) உருப்பிணி நங்கை – ஸ்ரீருக்மிணிப் பிராட்டி.

436. “நமக்கு ப்ராப்யம் திருநாடன்றோ என்னில், திருவாறன்விளையே நமக்குப் பரம ப்ராப்யம்; அங்குத்தை எம்பெருமானே நமக்கு ப்ராபகன் என்கிறார்” (ஒன்பதி.) நீள்நகரம் அதுவே – கலங்காப் பெருநகரமான பரமபதம் திருவாறன்விளையே. வாணபுரம் – சோணிதபுரம்.

437. “திருவாறன்விளையிலே புக, நம்முடைய ஸகல துக்கங்களும் போம் என்கிறார்” (ஈடு.) உள்ளத்தின் சார்வு அல்ல – நெஞ்சினிடமாக உண்டானவை யாகா. “தீவினை உள்ளத்தின் சார்வாகாது” (ஈடு.).

(438) தீவினை யுள்ளத்தின் சார்வல்ல வாகித்
தெளிவிசும் பேறலுற்றால்
நாவினுள் ளும்முள்ளத் துள்ளு மமைந்த
தொழிலினுள் ளும்நவின்று
யாவரும் வந்து வணங்கும் பொழிற்றிரு
வாறன் விளையதனை
மேவி வலஞ்செய்து கைதொழக் கூடுங்கொல்
என்னுமென் சிந்தனையே. (௯)

(439) சிந்தைமற் றொன்றின் திறத்ததல் லாத்தன்மை
தேவபி ரானறியும்
சிந்தையி னாற்செய்வ தானறி யாதன
மாயங்க ளொன்றுமில்லை
சிந்தையி னாற்சொல்லி னாற்செய்கை யானிலத்
தேவர் குழுவணங்கும்
சிந்தை மகிழ்திரு வாறன் விளையுறை
தீர்த்தனுக் கற்றபின்னே. (௰)

(440) தீர்த்தனுக் கற்றபின் மற்றோர் சரணில்லை
யென்றெண்ணித் தீர்த்தனுக்கே
தீர்த்த மனத்தன னாகிச் செழுங்குரு
கூர்ச்சட கோபன்சொன்ன

---

438. "எனக்கு ஸ்ரீவைகுண்டமும் திருவாறன்விளையும் இரண்டும் இட்டுவதானால், ஸ்ரீவைகுண்டத்தைவிட்டுத் திருவாறன்விளையே அமையும் என்னும் என்னெஞ்சம் என்கிறார்" (ஈடு.). நவின்று – பயின்று.

439. "திருநாடு ப்ராப்யம் என்னும் ப்ரஸித்தியாலே, உம்மைத் திருநாடேறக் கொண்டருளிற் செய்வது என் என்னில்,—திருவாறன்விளையே ...ப்ராப்யம் என்றிருக்கப் பண்ணினபின்பு, 'திருவாறன்விளை' என்றால் என்னெஞ்சு தாழ்ந்துகிடக்கும்படி. அறியாரோ? ஸர்வஜ்ஞன் அல்லனோ? என்கிறார்" (ஆறாயிரப்.). நிலத்தேவர் – வைதிகோத்தமர்.

440. "திருவாறன்விளையே ப்ராப்யம் என்றிருக்கைக்கு விரோதியான என்னுடைய பாபத்தைப் போக்குகையாலே பவித்ரம், அதில் நின்ற

தீர்த்தங் களாயிரத் துள்ளிவை பத்தும்வல்
லார்களைத் தேவர்வைகல்
தீர்த்தங்க ளேயென்று பூசித்து நல்கி
யுரைப்பர்தந் தேவியர்க்கே. (கக)

வெண்பா

(441) இன்பக் கவிபாடு வித்தோனை யிந்திரையோ
டன்புற்று வாழ்திருவா றன்விளையில்—துன்பமறக்
கண்டடிமை செய்யக் கருதியமா றன்கழலே
திண்டிறலோர் யாவர்க்கும் தேவு.

(442) சென்று புனன்மூழ்கிச் செய்தவங்கள் செய்தாலும்
வென்றுபுல னைந்தடக்கி விட்டாலும்—இன்றமிழான்
மாறன் விளைத்த மறையோதார்க் கில்லையே
ஆறன் விளைத்திருமா லன்பு.



ருளின எம்பெருமான்; அதிலும் பவித்ரம், அவனை ப்ரதிபாதித்த திருவாய்மொழிகள்; இவை வல்லார் அவற்றிலும் பவித்ரபூதர் என்று, இந்திராதி தேவர்கள் ஸத்கரித்துக் கொண்டு தங்கள் ப்ரணயினிகளுக்குச் சொல்லுவர் என்கிறார்" (ஆறுயிரப்.) தீர்த்தம் – பவித்ரமானவை, பரிசுத்தமானவை. நல்கி யுரைப்பார் – விரும்பிசசொல்லுவர்.

441. ஸ்ரீ மணவாளமாமுனிகள் அருளிய திருவாய்மொழி நூற்றந்தாதி, 70.

442. ஸ்ரீ திவ்யகவி அழகிய மணவாளதாசர் அருளிய நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி, 71. அன்பு – திருவருள்.

# திருக்காட்கரை *

[திருவாய்மொழி 9, 6]

(பண்—நட்டராகம். தாளம் ஏழொத்து.)

(443) உருகுமால் நெஞ்சம் உயிரின் பரமன்றிப் [ன்
பெருகுமால் வேட்கையு மென்செய்கேன் தொண்டனே

---

* இத்திருப்பதி, சோரனூர் – எர்ணுகுளம் இருப்புப் பாதையில் உள்ள இடைப்பள்ளி ஸ்டேஷனுக்குக் கிழக்கே 2–மைலில் உள்ளது. இங்கே கோயில்கொண்டருளும் எம்பெருமான், வடக்கே திருமுகமண்டலமும் நின்ற திருக்கோலமும் உடையவர். இப்பெருமானை வாமனமூர்த்தியாகவும், இத் திருக்காட்கரையை வாமனக்ஷேத்திரமாகவுங் கொண்டு மக்கள் வழிபடுவர். அதனால் அந்த அவதாரத்துக்குரிய ஆவணிமாதத் திருவோணநாள் இத்தலத்து நிகழும் பெரிய திருவிழாவாக நடைபெறுகின்றது. இவ்வாவணி யோணம் மலையாளதேசத்து மக்களெல்லாராலும், அத் தேசத்துக்குரிய விசேடத் திரு நாளாகவும் பெரிது கொண்டாடப்படுவதாகும். ஸ்ரீதிருவேங்கடமுடையானை வாமனமூர்த்தியாகக் கொண்டு, புரட்டாசித் திருவோணத்தைப் பெரியதிரு நாளாகக் கொண்டாடுவது தமிழ்நாட்டுவழக்கு. இதுபோலவே, திருக்காட்கரை யப்பனுக்கும் அமைந்திருத்தல் ஒப்பிடத்தக்கது. திருப்பதிக்குப் புரட்டாசி யோணமும் திருக்காட்கரைக்கு ஆவணியோணமுமாக அமைந்தது, சாந்திர மான ஸௌரமான கணனப்படி என்பர். இவ்வாறு, பிரபலம் பெற்றிருந்த ஆவணியோணத்திருநாள், சங்ககாலத்திலும் தமிழ்நாட்டிற் சிறப்பாக வழங்கி வந்ததாம். இது, மாங்குடிமருதனுர் பாடிய மதுரைக்காஞ்சியால் அறியலாகும். இத்திருநாளில், 'திருக்காட்கரையப்பன்' என்று அத் தலமூர்த்தியின் திரு வுருவை மணல்முதலியவற்றுல் அமைத்தும், காலையில் நீராடிப் புத்தாடை யுடுத்தும் அலங்கரித்தும் பூசித்துவழிபட்டும் விருந்துண்டும் மலைநாட்டு மக்களெல்லாம் மகிழ்ந்து விழாக்கொண்டாடுதலை யாவருமே நன்கறிவர். மற்றும் இதன் வரலாறெல்லாம், திருவிதாங்கூர்ச் சர்வகலாசாலையின் சார்பாக யான் புரிந்த உபந்யாசத்தில் விவரிக்கப்பட்டுளது. (SOME ASPECTS OF KERALA AND TAMIL LITERATURE, PART II.)

தெருவெலாங் காவி கமழ்திருக் காட்கரை
மருவிய மாயன்றன் மாயம் நினைதொறே. (க)

(444) நினைதொறுஞ் சொல்லுந் தொறுநெஞ் சிடிந்துகும்
வினைகொள்சீர் பாடிலும் வேமென தாருயிர்
சுனைகொள்பூஞ் சோலைத்தென் காட்கரை யென்னப்பா
நினைகிலேன் நானுனக் காட்செய்யு நீர்மையே. (உ)

(445) நீர்மையால் நெஞ்சம்வஞ் சித்துப் புகுந்தென்னை
ஈர்மைசெய் தென்னுயி ராயென் னுயிருண்டான்
சீர்மல்கு சோலைத்தென் காட்கரை யென்னப்பன்
கார்முகில் வண்ணன்றன் கள்வ மறிகிலேன். (ங)

---

தானும் எம்பெருமானும் கலந்துநின்ற நிலையில் தாழநின்று பரிமா றின அப்பெருமானது வ்யாமோஹாதிசயத்தை மிகுதியும் நினைந்து, அத னால் விளைந்த மகிழ்ச்சியிலே பெரிதும் மனம் நெகிழுகிறார்.

443. திருக்காட்கரையப்பன், பண்டு என்னோடு கலந்து பரிமாறின பரிமாற்றங்களை நினைக்க நினைக்க என்னெஞ்சு அழிந்து நீராய் உருகாநின்றது, நான் என்செய்கேன் என்கிறார். 'உயிரின் பரமன்றி—ஆத்மாவுக்குப் பொறுக்க வொண்ணாதபடி (ஈடு.)

444. "எல்லாருடைய துக்கங்களையும் போக்கக்கடவதான உன்னு டைய இக்குணங்களை நினைத்தல் சொல்லுதல் பாடுதல் செய்யில் என்னெஞ் சும் இவ்வாத்மாவும் மாயாநின்றன. "நீர் இங்ஙனே ஈடுபடுகைக்கு உம்மு டைய திறத்திலே நான் செய்ததென் என்னில், 'நான் உன்னை அடிமைகொள் ளுகிறேன்' என்று வந்து நீ என்திறத்துச் செய்தருளின செயல்களை நினைக் கலாமோ என்கிறார்" (ஆறு.) இடிந்துகும் – சிதிலமாகும்.

445. உம்மை அடிமை கொள்ளுகைக்கு மேற்படச்செய்ததுண்டோ என்னில், அடிமைகொள்வாரைப்போலே என்னெஞ்சை வஞ்சித்துப் புகுந்து தன் குணங்களாலும் செயல்களாலும் என்னை மாய்த்து என்னுயிராய் என்னைப் புஜித்தருளினான்; முந்துற மெய்யரைப்போலே வந்து புகுந்தபடியும் பின்னைச்

(446) அறிகிலேன் தன்னு ளனைத்துல கும்நிற்க
நெறிமையாற் றானு மவற்றுணிற் கும்பிரான்
வெறிகமழ் சோலைத்தென் காட்கரை யென்னப்பன்
சிறியவென் னாருயி ருண்டதிரு வருளே. (௪)

(447) திருவருள் செய்பவன் போலவென் னுட்புகுந்
துருவமு மாருயி ரும்முட னேயுண்டான்
திருவளர் சோலைத்தென் காட்கரை யென்னப்பன்
கருவளர் மேனிநங் கண்ணன்கள் வங்களே. (௫)

(448) என்கண்ணன் கள்வ மெனக்குச்செம் மாய்நிற்கும்
அங்கண்ண னுண்ட வாருயிர்க் கோதிது
புன்கண்மை யெய்திப் புலம்பி யிராப்பகல்
என்கண்ண னென்றவன் காட்கரை யேத்துமே. (௬)

---

செய்தபடியும், ஒருவன் வஞ்சித்தபடி ஒன்றும் அறியகில்லேன் என்கிறார்" (ஆறு.)

446. "தான் சேஷியான முறைதப்பாமே எல்லாரோடும் கலக்கிறவன், அதிக்ஷுத்ரனான எனபக்கல் பண்ணின வ்யாமோஹம் எனக்கு அறிய நிலமன்று" என்கிறார் (ஈடு.) சேஷி – ஆண்டான்; ஸ்வாமி.

447. "திருவருள் செய்பவன்போலே என்னுள்ளே புகுந்து, என்னைப் புஜித்தருளுகையன்றியே என்னுருவமுங்கூடப் புஜித்தருளினான்; ஒருவனது அபிநிவேசம் இருக்கும்படி அது! முந்துறவந்து புகுந்தருளினபடி அது (மேற்பாட்டிற் கூறியது); பின்னை நின்று செய்தருளினபடி இது. என்கிறார்" (ஆறு.) கள்வங்களை – மாயமிருந்தவாறு என்னே எ–று.

448. "ஒருநாள் இங்ஙனே அவன்வஞ்சனையிலே அகப்பட்டால், பின்னை அதில் அகப்படாதே பரிகரிக்க ஒண்ணாதோ என்னில்,— நாள்தோறும் அவன் மெய்யே என்னை அடிமைகொள்ள வருகிறான் என்று எனக்குத் தோற்றும்படி வந்து என் ஆத்மாவை அறிவழியும்படி புஜித்துப் போம்; போனவாறே இவ்வாத்மாவானது பின்னையும் உணர்ச்சிபெற்று அவனை ஆசைப்

(449) காட்கரை யேத்து மதனுட்கண் ணுவென்னும்
வேட்கைநோய் கூர நினைந்து கரைந்துகும்
ஆட்கொள்வா னொத்தென் னுயிருண்ட மாயனாற்
கோட்குறை பட்டதென் னாருயிர் கோளுண்டே. (எ)

(450) கோளுண்டா னன்றிவந் தென்னுயிர் தானுண்டான்
நாளுநாள் வந்தென்னை முற்றவுந் தானுண்டான்
காளநீர் மேகத்தென் காட்கரை யென்னப்பற்
காளன்றே பட்டதென் னாருயிர் பட்டதே. (அ)

---

பட்டு 'என் கண்ணா, என்கண்ணா' என்றலற்றி அவனெழுந்தருளியிருந்த திருக்காட்கரையை ஏத்தாநிற்கும் என்கிறார்'' (ஆறு.)

ஆருயிர்க் கோதிது – கோதான என் ஆத்மாவாகிய இது. புன்கண்மை – துக்கம், தீனதசை; 'நங் கண்ணன் கள்வங்களே' என முன்பாட்டின் அந்தத்து வந்த தொடர், 'எங்கண்ணன் கள்வங்கள்' என்று இப்பாட்டின் ஆதியாக வந்தது பொருளிசையந்தாதி என்பர். இவ்வாறன்றி 'என் கண்ணன் கள்வங்கள்' என்று ஈரிடத்தும் பாடங்கொள்வது முண்டு. 'அதிப்ரவணரை அங்கண்ணர் என்னக்கடவதிறே' (ஈடு).

449. "அடிமைகொள்வாரைப்போலே புகுந்து என்னுயிரை நேராகப் புஜித்துப் பின்னையும் புஜியாதாரைப்போலே இருக்கும் என்கிறார்"(ஈடு).

கோளுண்டே – அவனால் அபகரிக்கப்பட்டுக் கொண்டே; கோள் குறைபட்டது – (அக்) கொள்ளுகையில் குறைபட்டது; மிஞ்சியதாயிற்று, சேஷித்தது என்றபடி. குறைபட்டது என்றது, இப்போதிருந்து தான் கிலேசப்படக் காண்கையாலே என்க.

450. "நாள்தோறும் என்னை அநுபவியாநின்றாலும் பெறாப்பேறு பெற்றாற்போலே புஜிக்கிற இவனுடைய குணத்தை பொறுக்க வொண்ணுகிறதில்லை என்கிறார்'' (ஈடு.)

'கோளுண்டா னன்றிவந்து என்னுயிர் தானுண்டான்'— (1) என் பக்கல் ஓர் உபகாரங்கொள்ளாமலே நிர்ஹேதுகமாக என் ஆத்மவஸ்துவை

(451) ஆருயிர் பட்ட தெனதுயிர் பட்டது
பேரிதழ்த் தாமரைக் கண்கனி வாயதோர்
காரெழில் மேகத்தென் காட்கரை கோயில்கொள்
சீரெழில் நாற்றடந் தோள்தெய்வ வாரிக்கே. (கூ)

(452) வாரிக்கொண் டுன்னை விழுங்குவன் காணிலென்
றார்வுற்ற வென்னை யொழியவென் னின்முன்னம்
பாரித்துத் தானென்னை முற்றப் பருகினன்
காரொக்குங் காட்கரை யப்பன் கடியனே. (ய)

---

அநுபவித்தான்; (2) இதற்கு முன்பு இப்படியிருப்பதொரு சரக்குப்பெற்று அறியானாய் என்பக்கல் அபிநிவிஷ்டனானன்; (3) என்னால் தான் கொள்ளப் படாதிருக்க, தான் என்னைக் கைக்கொண்டான் என்று மூன்றுபடியாகப் பொருள்கூறுவர் (ஈடு.) 'ஆளன்றே பட்டது – அடிமையன்றோ நான் புக்கது; ராவணாதிகளைப்போலே எதிரம்பு கோத்தேனோ? ஓர் ஆத்மவஸ்து படும்பாடே ! இது" என்னை இங்ஙனே படுத்தவேணுமோ என்றபடி.

451. "நீரேயோ இப்படிப் பட்டீர்? குணாநுபவமே யாத்ரையான நித்யஸூரிகளும் படும்பாடு இதுவன்றோ? என்ன, அவர்களும் நான்பட்டது பட்டார்களோ என்கிறார்" (ஈடு.).

ஆருயிர் – பரமபதவாஸிகளான நித்யஸூரிகள். எனதுயிர் பட்டது ஆருயிர்பட்டதோ என்க. தெய்வ வாரி – தெய்வங்கள் தோன்றுதற்கிடமான கடல். தெய்வங்களைத் தோற்றுவித்தவன் எ–று.

452. தம்மோடு கலந்த எம்பெருமானுக்குத் தம்மினும் அபிநிவேசம் மிக்கிருந்தபடியையும், அத்தாலும் தாம் நோவுபட்டபடியையும் அருளிச்செய்கிறார். நீர்தாம் அவனைப் புஜியாதே உம்மைப் புஜிக்கக் கொடுத்துக்கொண்டிருப்பானேன் என்னில்,—உன்னைக்காணில் வாரிக்கொண்டு விழுங்குவன் என்று நான் மநோரதித்துக் கொண்டிருக்க, எனக்குத் தன்னைப் புஜிக்க வொண்ணாதபடி என்னின்முன்னம் பாரித்துத் தான் என்னைமாளப் புஜித்தருளினன் எ–று.

(453) கடியனுய்க் கஞ்சனைக் கொன்ற பிரான்றன்னைக்
கொடிமதிற் றென்குரு கூர்ச்சட கோபன்சொல்
வடிவமை யாயிரத் திப்பத்தி னுற்சன்ம
முடிவெய்தி நாசங்கண் டீர்களெங் கானலே. (கக)

வெண்பா

(454) உருகுமா லென்னெஞ்ச முன்செயல்க ளெண்ணிப்
பெருகுமால் வேட்கையெனப் பேசி—மருவுகின்ற
இன்னுப் புடனவன்சே ரேய்ந்துரைத்த மாறன்சொல்
என்னுச்சொல் லாதிருப்ப தெங்கு.

(455) மாற்கமுந் தாந்தரம் வழிபடுந் தெய்வமும்
ஏற்க வுரைப்பார்சொ லெண்ணுதே - தோற்குரம்பை
நாட்கரையா முன்னமே நன்னெஞ்சே நாரணனுங்
காட்கரையாற் காளாகாய் காண்.

---

453. "இத் திருவாய்மொழி அப்யஸித்தார்க்கு ஜன்மம் முடிந்து அதுக்கடியான ஸம்ஸாரமும் நசிக்கும் என்கிறுர்" (ஈடு.). கானல் - பேய்த்தேர் போலும் ஸம்ஸாரம்.

454. இது, திருவாய்மொழி நூற்றந்தாதி, 86-ம் பாசுரம். இன்னுப்பு - மனத்துன்பம். என் நா - எனது நாவானது ; 'என்னுற்சொல் வாதிருப்பது' என்றும் பாடம்.

455 இது, நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி, 61-ம் பாசுரம். மாற்கம் - மார்க்கம், நெறி; "மாற்கமு மாகின்றுர் மாதைநாதர்" என, எதுகையில் இவ்வாறு முன்னேர் பாடியுள்ளமை காண்க (தமிழ்நாவ. சரிதை). 'தற்கச்சமணரும்' என்ற அமுதனுர் திருவாக்கும் (இராமா. நூற்.) இங்கு ஒப்பிடத்தகும். குரம்பை - குடிசை. நாள் - வகுத்த ஆயுள்.

# திருமூழிக்களம்*

[திருவாய்மொழி 9, 7]

(பண்—நட்டராகம்; தாளம்—ஏழொத்து.)

(456) எங்கானலகங்கழிவாய்
இரைதேர்ந்திங் கினிதமருஞ்
செங்கால மடநாராய்
திருமூழிக் களத்துறையும்

---

* இத்திருப்பதி, சோரனூர்—எர்ணுகுளம் ரயில்மார்க்கத்தில் உள்ள அங்கமாலே ஸ்டேஷனிலிருந்து தெற்கே 6-மைலில் உள்ளது. இங்கே கோயில்கொண்டருளும் எம்பெருமான், கிழக்கே திருமுகமண்டலமும் நின்ற திருக்கோலமும் உடையவர்.

"முனியே திருமூழிக்களத்து விளக்கே" (பெரியதிருமொழி)
"முன்னவனை மூழிக்களத்து விளக்கினை" (பெரிய திருமடல்)
"பின்னுனார் வணங்குஞ்சோதி திருமூழிக் களத்தானுய்"
(திருநெடுந்தாண்டகம்)

என்று திருமங்கைமன்னனால் 'விளக்கு' 'சோதி' என்று மங்களாசாஸனம் செய்யப்பெற்றவர், இம்மூர்த்தி. நம்மாழ்வாரும் 'திருமூழிக்களத்துறையும் ஒண்சுடர்' என்றருளியது ஒப்பிடத்தகும். முன்னுளில், கோயில் முதலிய அறப்புறங்கட்குத் திட்டங்களும், அவற்றை நேர்மையாகப் பேணும் விதிகளும், அவ்விதி பிழைப்பார்க்குரிய தண்டனைகளும் இத்திருமூழிக்களத்து மகா சபையாரால் விதிக்கப்பட்டு, அம்முறை மலைநாடெங்கும் தவருது அநுட்டிக்கப் பட்டுவந்தன என்பது சாஸனங்களால் அறியப்படுகிறது (T. A. S. Vol. V, Part I, p. 32; Vol. VI, Part I, p. 83).

இயற்கையிலே புணர்ந்து பிரிந்தாள் ஒரு பிராட்டி; எம்பெருமானது வடிவழகிலே ஈடுபட்டு அவஸந்நையாய்; 'தனக்கு நல்லராயிருப்பாரை விடமாட்டாமையாலே வாராதிருந்தானும் இத்தனை: தன் வடிவழகும் குணங்களும் இத்தகையனவாயின், அவனைப்பிரிந்தார்க்கு ஜீவித்திருக்கப் போமோ' என்று சில பக்ஷிகளைத் தூதுவிடுகிருள்.

சில நாரைகளைக் குறித்து; அவன் தன்னழகாலும் குணங்

கொங்கார்பூந் துழாய்முடியெங்
குடக்கூத்தர்க் கென்றூதாய்
நுங்கால்க ளென்றலைமேற்
கெழுமீரோ நுமரோடே. (க)

(457) நுமரோடும் பிரியாதே
நீரும்நும் சேவலுமாய்
அமர்காதற் குருகினங்காள்
அணிமூழிக் களத்துறையும்
எமராலும் பழிப்புண்டிங்
கென்தம்மா விழிப்புண்டு
தமரோடங் குறைவார்க்குத்
தக்கிலமே கேளீரே. (உ)

(458) தக்கிலமே கேளீர்கள்
தடம்புனல்வா யிரைதேருங்
கொக்கினங்காள் குருகினங்காள்
குளிர்மூழிக் களத்துறையும்

---

களாலும் தன்னைத் தோற்பித்தபடியைச் சொல்லி, என் தசையை அவனுக்கு அறிவித்துவந்து உங்கள் திருவடிகளை என் தலைமேலே வைக்கவேணும் என்கிறான்" (ஈடு.)

நாட்டுக்குரிய தலைமகளானமையின் 'எங்கானல்' என்றான். நாராய் — சாதியொருமை. குடக்கூத்து — திருமால் ஆடல்களுள் ஒன்று. கெழுமுதல்— சேர்த்தல்.

457. சில குருகினங்களைக் குறித்து, தாமும் தம் பரிஜனங்களுமாயிருந்த இருப்பைக் காண்கைக்கு நான் அநர்ஹையாய் இழந்துபோமித்தனையோ. என்று அறிவியுங்கோள் என்கிறாள். எமராலும் பழிப்புண்டு இங்கு என் — என்னோடு அநுபந்தமுடையாராலும் பழிக்கப்பட்டு இங்கிருப்பதனால் என்ன பயன் ? தக்கிலமே — தக்கவர்கள் அல்லேமோ ; கேளீரே — இதனை வினவித் தெரிவீராக எ—று.

458. சில கொக்கினங்களையும் குருகினங்களையும் நோக்கி, தன்

செக்கமலத் தலர்போலுங்
கண்கைகால் செங்கனிவாய்
அக்கமலத் திலைபோலுந்
திருமேனி யடிகளுக்கே. (ரு)

(459) திருமேனி யடிகளுக்குத்
தீவினையேன் விடுதூதாய்த்
திருமூழிக் களமென்னுஞ்
செழுநகர்வா யணிமுகில்காள்
திருமேனி யவட்கருளீ
ரென்றக்கா லும்மைத்தந்
திருமேனி யொளியகற்றித்
தெளிவிசும்பு கடியுமே. (சு)

---

அழகு காண்கைக்கு நாங்கள் யோக்யரல்லேமோ என்று கேளீர் என்கிறாள்.''

குருகு – கொய்யடிநாரை. செக்கமலம் – செங்கமலம்; "சிவந்தலர்ந்த தாமரைபோலே யிருக்கிற கண்முதலான திவ்யாவயவங்களுடையவன்; முதலில் உறவு பண்ணும், கண்; அந் நோக்குக்குத் தோற்றாரை அணைக்கும், கை; ஸ்பர்சத்துக்குத் தோற்றாரை விழச்செய்யும் திருவடிகள், திருவடிகளிலே விழுந் தாரை நல்வார்த்தை சொல்லித் தரிப்பிக்கும் முறுவல் (ஈடு).

459. அழகாலே அடிமை கொள்ளுமவர்க்கு என் தூதாய்ச் சென்று ஒருவார்த்தை சொன்னால் உங்கள் வடிவிற்புகரையும் தேசவாஸத்தையுந் தவிர்க்குமோ என்று சில மேகங்களைக் குறித்து வார்த்தை சொல்லுகிறாள் (பன்னீரா.).

திருமேனியடிகளுக்கு – வடிவழகாலே ஸர்வஸ்வாமி என்று தோற் றும்படி இருக்கிறவர்க்கு. செழுநகர்வாய் அடிகளுக்குச் செப்புமின்கள் என இயையும்; செழுநகர்வாய் இயங்கும் முகில்காள் எனினும் ஆம். தன் திரு மேனி...கடியுமே – உங்கள் வடிவின் ஒளியையும் போக்கி, நீங்கள் உலவும் தெளிந்த ஆகாசத்தினின்றும் உங்களை ஓட்டுமோ-எ-று.

(460) தெளிவிசும்பு கடிதோடித்
தீவளைத்து மின்னிலகும்
ஒளிமுகில்காள் திருமூழிக்
களத்துறையு மொண்சுடர்க்குத்
தெளிவிசும்பு திருநாடாத்
தீவினையேன் மனத்துறையுந்
துளிவருகட் குழலார்க்கென்
தூதுரைத்தல் செப்புமினே. (௫)

(461) தூதுரைத்தல் செப்புமின்கள்
தூமொழிவாய் வண்டினங்காள்
போதிரைத்து மதுநுகரும்
பொழின்மூழிக் களத்துறையும்
மாதரைத்தம் மார்பகத்தே
வைத்தார்க்கென் வாய்மாற்றம்
தூதுரைத்தல் செப்புதிரேற்
சுடர்வளையுங் கலையுமே. (௬)

---

460. "எங்கள் வார்த்தையை அவன் அங்கீகரிக்குமோ' என்று (அவை வாளா) இருந்தனவாக, பரமபதத்திற் பண்ணின ஆதரத்தை என் பக்கலிலே பண்ணினவன் அங்கீகரியாதொழியான்; ஆனபின்பு, எனக்காக ஒரு வார்த்தை விண்ணப்பஞ் செய்யவேணும் என்கிறாள்" (ஈடு).

தீவளைத்து மின்னிலகும் — கொள்ளிவட்டம்போலே மின்விளங்காநின்ற. தெளிவிசும்பு — விமலமான பரமாகாசம், பரமபதம்; அப் பரமபதம் திருநாடாயிருக்கவும் தீவினையேனது மனத்துறைகின்றான் எ—று. துளிவரு கள் குழலார் — மதுவொழுகும் பூந்துழாய்முடியுடைய பெருமான்.

461. சில வண்டுகளைக் குறித்து, உங்கள் வார்த்தை விலைச்செல்லும்படி பிராட்டிஸந்நிதியிலே சொல்லுங்கோள் என்கிறாள்" (ஈடு).

தூதுரைத்தல் — தூதமொழி. வாய்மாற்றம் தூதுரைத்தல் — 'என் பாசுரமான தூதவாக்யத்தை; மாற்றத் தூதுரைத்தல் எனற்பாலது இயல்

(462) சுடர்வளையுங் கலையுங்கொண்
டருவினையேன் தோள்துறந்த
படர்புகழான் திருமூழிக்
களத்துறையும் பங்கயக்கட்
சுடர்பவள வாயனைக்கண்
டொருநாளோர் தூய்மாற்றம்
படர்பொழில்வாய்க் குருகினங்கா
ளெனக்கொன்று பணியீரே. (எ)

(463) எனக்கொன்று பணியீர்க
ளிரும்பொழில்வா யிரைதேர்ந்து
மனக்கின்பம் படமேவும்
வண்டினங்காள் தும்பிகாள்
கனக்கொள்திண் மதில்புடைசூழ்
திருமூழிக் களத்துறையும்
புனக்கொள்கா யாமேனிப்
பூந்துழாய் முடியார்க்கே. (அ)

---

பாயிற்று. செப்புதிராகில், அதுதானே (நெகிழ்ந்த) என் சுடர்வளையையும் கலையையும் நீர திரும்ப எனக்கு அளித்ததுபோலாகும்; என்றது, அறிவிக்குமதே குறை. அவர்வரவு தப்பாது என்றபடி.

462. "படர்பொழில்வாய்க் குருகினங்காள், 'உன்னழகாலே அவளை வசீகரித்து அவளோடே கலந்து, பின்னை அவளைத் துறந்ததுவே புகழாகக் கொண்டிருக்கிற இருப்பு உனக்குப் போருமோ' என்று சொல்லிகோள் என்கிருள்" (ஆருயிரப்.). ஓர் தூய்மாற்றம் – 'முடிகிருள் ஒரு அபலையை உஜ்ஜீவிக்கச்சொல்லுகிற வார்த்தையிறே' (ஈடு.).

463. "வடிவழகையும் ஒப்பனையையும் உடையராயிருக்கிறவர்க்கு எனக்காக ஒருவார்த்தை சொல்லவேணும் என்று சில வண்டுகளையும் தும்பிகளையும் பார்த்துச் சொல்லுகிருள்" (பன்னீரா.)

புனக்கொள் காயா – முல்லைநிலத்துக்குரிய காயாவின் பூ. தும்பி –

(464) பூந்துழாய் முடியார்க்குப்
பொன்னாழிக் கையாருக்
கேந்துநீ ரிளங்குருகே
திருமூழிக் களத்தாருக்
கேந்துபூண் முலைபயந்தென்
னிணைமலர்க்கண் ணீர்ததும்பத்
தாந்தம்மைக் கொண்டகறல்
தகவன்றென் றுரையீரே. (கூ)

(465) தகவன்றென் றுரையீர்கள்
தடம்புனல்வா யிரைதேர்ந்து
மிகவின்பம் படமேவு
மென்னடைய வன்னங்காள்
மிகமேனி மெலிவெய்தி
மேகலையு மீடழிந்தென்
அகமேனி யொழியாமே
திருமூழிக் களத்தார்க்கே. (ம)

---

வண்டின் விசேடம்; "தும்பிவண்டொடு தூவழி யாழ்செய' என்றார் பிறரும் (சீவக. 854).

464. சில குருகுகளைக் குறித்து, 'அதிசய போக்பரான தாம், போம்போது தம்மைக் கொண்டுபோகை தம்முடைய தயவுக்குப் போருமோ என்று விண்ணப்பஞ்செய்மின் என்கிறாள்.

தாம் என்னையும் உடன்கொண் டகலுமதொழிய, தம்மைமட்டும் கொண்டகலக் கடவரோ எ-று. பயந்து - பசந்து, பசலைநிறம் பெற்று.

465. "சில அன்னங்களைக் குறித்து, நான் முடிவதற்குமுன்னே அவனுக்கு என்தசையை அறிவியுங்கோள் என்கிறாள்" (ஈடு.).

என் அகமேனி யொழியாமே - புறம்புள்ள மேனி மெலிந்தும் மேகலை கழன்றும் போயின; அவைபோல, அகவாயிலுள்ள உயிர் கழலுவதற்கு முன்பே; நான் இறந்துபடுதற்கு முன்பே என்றபடி.

(466) ஒழிவின்றித் திருமூழிக்
களத்துறையு மொண்சுடரை
ஒழிவில்லா வணிமழலைக்
கிளிமொழியா ளலற்றியசொல்
வழுவில்லா வண்குருகூர்ச்
சடகோபன் வாய்ந்துரைத்த
அழிவில்லா வாயிரத்திப்
பத்தும்நோ யறுக்குமே. (கக)

வெண்பா

(467) எங்காத லுக்கடிமா லேய்ந்த வடிவழகென்
றங்காது பற்ருசா வாங்கவன்பால்—எங்குமுள்ள
புள்ளினத்தைத் தூதாகப் போகவிடு மாறன்ருள்
உள்ளினர்க்குத் தீங்கையறுக் கும்.

(468) காண்கின்ற வைம்பூதங் கட்கு மிருசுடர்க்குஞ்
சேண்கலந்த விந்திரற்குந் தேவர்கட்கும்—மாண்கரிய
பாழிக் களத்தாற்கும் பங்கயத்து நான்முகற்கும்
மூழிக் களத்தான் முதல்.



466. இத் திருவாய்மொழியை அப்யஸித்தார்க்கு பிரிவுக்கடியான ஸம்ஸாரவியாதியை அறுத்துக்கொடுக்கும் என்கிருர் (ஈடு.).

"திருமூழிக்களத்துறையும் ஒண்சுடர்" என்று இவ்வாழ்வார் அருளியவாறே, 'மூழிக்களத்து விளக்கினை' 'பின்னுனர் வணங்குஞ் சோதி' என்று திருமங்கைமன்னன் அருளிச்செயல்களில் வருதலுங் காண்க.

467. திருவாய்மொழி நூற்றந்தாதி, 87. அங்காது – அங்கு அதுவே.

468. நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி, 62. மாண் கரிய பாழி களத்தான் – மிகக் கரியதாய்ப் பெருத்த கண்டத்தையுடைய சிவபிரான்.

# திருநாவாய் *

[திருவாய்மொழி 9, 8]

(பண்—கொல்லி. தாளம் இடையொத்து.)

(469) அறுக்கும்வினை யாயின வாகத் தவனை
நிறுத்தும்மனத் தொன்றிய சிந்தையி னார்க்கு
வெறித்தண்மலர்ச் சோலைகள் சூழ்திரு நாவாய்
குறுக்கும்வகை யுண்டுகொ லோகொடி யேற்கே. (க)

---

* இத் திருப்பதி, சென்னை—கோழிக்கோடு ரயில் மார்க்கத்தில் இடைக்குளம் என்ற ஸ்டேஷனுக்குத் தெற்கே 1-மைலில் பாரதப்புழை யாற்றங்கரையில் உள்ளது. மலைநாட்டுத் திருமால் திருப்பதிகளில் இதுவே வடக்கிறுதியில் அமைந்தது. இங்கே கோயில்கொண்ட எம்பெருமான், தெற்கே திருமுகமண்டலமும் வீற்றிருந்த திருக்கோலமும் உடையவர். "கோட்டியூர்க் கண்டுபோய், நம்பனைச் சென்று காண்டும் நாவாயுளே" என்று திருமங்கை மன்னனாலும் இத்தலம் போற்றப்பட்டுள்ளது. மகாமக புண்ணியகாலத்தில் இத்தலத்திற்குப் பெருந்திரளாக வந்து நீராடுவது மலைநாட்டுமக்களின் தொன்றுதொட்ட வழக்கம். சரித்திரப்பிரசித்தி பெற்றது இந்த க்ஷேத்திரம் என்பது, கேரளோற்பத்திமுதலிய வரலாற்றுநூல்களால் அறியப்படுவதாம்.

திருவடிசென்று பிராட்டியைத் திருவடிதொழுது மீண்ட அநந்தரம் பெருமாளைக் கிட்டுவதற்குமுன்பு பிராட்டிக்குப் பிறந்த மனோரதம்போலே, கீழ்விட்ட தூதர் அத்தலைப்பட்டு அவனைக் கொண்டுவருவதற்கு முன்னே "(திருநாவாயிற்) புகவல்லேனே, புகும்நாள் என்றோ, அங்கே புக்கு (எம்பெருமானைக்) கண்ணாரக் கண்டு அடிமைசெய்ய வல்லேனே" என்று இப்படி மனோரதங்களைப் பண்ணுகிறார்" (அவதா.)

469. "எனக்குத் திருநாவாய் குறுகுகைக்கு உபாயமுண்டோ என்கிறார்" (ஈடு.)

ஆகத்து – மனத்துள். சிந்தையினார்க்கு வினையாயின அறுக்கும்

(470) கொடியேரிடைக் கோகன கத்தவள் கேள்வன்
வடிவேற்றடங் கண்மடப் பின்னை மணாளன்
நெடியானுறை சோலைகள் சூழ்திரு நாவாய்
அடியேனணு கப்பெறு நாளெவை கொல்லோ. (உ)

(471) எவைகொலணு கப்பெறு நாளென்றெப் போதுங்
கவையில்மன மின்றிக்கண் ணீர்கள் கலுழ்வன்
நவையில்திரு நாரணன் சேர்திரு நாவாய்
அவையுட்புக லாவதோர் நாளறி யேனே. (ங)

---

திருநாவாய் என இயையும். வெறி – நறுமணம். குறுக்கும் வகை – குறுகப்பண்ணும்வகை; குறுகும்விரகு எனினும் ஆம். குறுகும் அணுகும் என்ற பொருளில், குறுக்கும் என்பது மலையாளமொழியில் வழங்கியதென்றும், ஒருகால் திருநாவாய்க்கு யாத்திரையாகச் சென்ற ஸ்ரீராமாநுஜமுனிவரர், வழியெதிரே வருவார் சிலரை "திருநாவாய் எத்தனைதூர முள்ளது" என்று கேட்க, 'குறுக்கும்' என்று அவர்கள் விடை கூறினராக, அதனைக்கேட்டு, "இத்தேசபாஷையால் அருளிச்செய்வதே ஆழ்வார்!" என்று அதிசயித்துரைத்தனர் என்றும் ஈட்டில் ஐதிகமொன்று கூறப்பட்டுளது.

470. "பெரிய பிராட்டியாரோடும் நப்பின்னைப்பிராட்டியாரோடுங் கூட அவன் எழுந்தருளியிருக்கிற திருநாவாயிலே போய்ப் புகுவது என்றோ என்கிறார்" (ஆறுபிரப்.).

கோகனகத்தவள் – திருமகள். நெடியான் – 'எல்லைகாணவொண்ணாதவன்' என்ப; உலகளந்த பெரியோன் எனினுமாம்.

471. என்றோ திருநாவாயை அணுகப்பெறுவது என்று எப்போதும் ததேகசித்தனாய்க் கண்ணீர் சோரவிருக்கிற நான், திருநாரணன்சேர் திருநாவாயிலே அவனுடைய திருவோலக்கத்திலே புகுநாள் என்றென்று அறிகிலேன் என்கிறார்.

(472) நாளேலறி யேனெனக் குள்ளன நானு
மீளாவடி மைப்பணி செய்யப் புகுந்தேன்
நீளார்மலர்ச் சோலைகள் சூழ்திரு நாவாய்
வாளேய்தடங் கண்மடப் பின்னை மணாளா. (௪)

(473) மணாளன்மலர் மங்கைக்கு மண்மடந் தைக்குங்
கணாளனுல கத்துயிர் தேவர்கட் கெல்லாம்
விணாளன் விரும்பி யுறையுந்திரு நாவாய்
கணாரக்களிக் கின்றதிங் கென்றுகொல் கண்டே. (௫)

(474) கண்டேகளிக் கின்றதிங் கென்றுகொல் கண்கள்
தொண்டேயுனக் காயொழிந் தேன்றுரி சின்றி
வண்டார்மலர்ச் சோலைகள் சூழ்திரு நாவாய்
கொண்டேயுறை கின்றவெங் கோவலர் கோவே. (௬)

---

472. நப்பின்னைப் பிராட்டிக்குப் போக்யனான உனக்கு மீளா அடிமைப்பணி செய்யப் புகுந்தேன்; அடிமை செய்யும் நாள் என்றென்று அறிகிலேன் என்கிறார்.

எனக்கு உள்ளன நாள் – உன்னைப் பெற்றுய்ய எனக்குக் கற்பிக்கப் பட்ட நாள்; பிரிந்திருக்கக்கடவ நாள் எனினுமாம்.

473. "திருநாவாயைக் கண்ணின்விடாய் தீரக் கண்டு உகப்பது என்றோ என்கிறார்" (இருபத்.) எதுகைகட் கேற்ப 'மணாளன்' என்று இடையொற்று மிக்கதாகவேனும், மணாளன் என்ற எதுகைக்கேற்பக் கணாளன் விணாளன், கணார என்றேனும் கொள்ளத்தகும். 'கண்ணாளன் உலகத் துயிர் தேவர்கட்கு' என்றவாறே 'கண்ணாவா னென்றும் மண்ணோர் விண்ணோர்க்கு' என்றார் முன்னும்; "சக்ஷுர் தேவாநா முதமர்த்தாநாம்" என்று கூறும் வேதமும்.

474. "ஊரையன்றிக்கே ஊரில் நின்றருளின உன்னைக்கண்டு களிப்பதென்றோ என்கிறார்." (ஈடு.) துரிசு – குற்றம். 'கொண்டே யுறை

(475) கோவா கியமா வலியைநிலங் கொண்டாய்
தேவா சுரஞ்செற் றவனேதிரு மாலே
நாவாயுறை கின்றவென் னாரண நம்பீ
ஆவாவடி யானிவ னென்றரு ளாயே. (எ)

(476) அருளாதொழி வாயருள் செய்தடி யேனைப்
பொருளாக்கியுன் பொன்னடிக் கீழ்ப்புக வைப்பாய்
மருளேயின்றி யுன்னையென் னெஞ்சத் திருத்துந்
தெருளேதரு தென்றிரு நாவாயென் தேவே. (அ)

(477) தேவர்முனி வர்க்கென்றுங் காண்டற் கரியன்
மூவர்முதல் வன்னொரு மூவுல காளி
தேவன் விரும்பி யுறையுந்திரு நாவாய்
யாவர் அணுகப் பெறுவாரினி யந்தோ. (கூ)

---

நின்ற – ஆச்ரிதரோடு அநுபவிக்கலாம் என்று திருவுள்ளத்திற் கொண்டு நித்ய வாஸம் பண்ணுகிற'' (பன்.)

475. "ஆச்ரிதார்த்தமாகத் திருநாவாயிலே நித்யவாஸம் பண்ணுகிற தேவரீர், அநந்யகதி என்று என் பக்கலிலே க்ருபைபண்ணியருள வேணும் என்கிறார்'' (ஈடு.). தேவாசுரம் – தேவர்க்கும் அசுரர்க்கும் உண்டாகிய போர்; "தேவாசுரம் பொருதாய் செற்று' என்றார் பேயாழ்வாரும். ஆவா அடியான் இவனென் றருளாயே— "ஐயோ இவனுக்கு வேறொரு புகலில்லை என்று என் பக்கலிலே க்ருபைபண்ணியருளவேணும்'' (ஈடு.)

476. "அப்போதே அபேக்ஷிதம் பெறுமையாலே, அருளவுமாம் தவிரவுமாம்; அஜ்ஞாநகந்த மில்லாதபடி உன்னை என்னெஞ்சிலே இருத்தும்படியான தெளிவைத் தரவேணும் என்கிறார்'' (ஈடு.) தரு – தா; தருவாயாக என்றபடி.

477. இப்படிச் சொன்னவிடத்திலும் ஒரு விசேஷ கடாக்ஷம் பண்ணாமையாலே, "நான் இவ்வாசையோடே முடிய நின்றேன்; இனிப் பெற இருக்கிறார் ஆரோ'' என்கிறார்.

(478) அந்தோவணு கப்பெறு நாளென்றெப் போதுஞ்
சிந்தை கலங்கித் திருமாலென் றழைப்பன்
கொந்தார்மலர்ச் சோலைகள் சூழ்திரு நாவாய்
வந்தேயுறை கின்றவெம் மாமணி வண்ணா. (ம)

(479) வண்ணம்மணி மாடநன் னாவாயுள் ளானை
திண்ணம்மதிற் றென்குரு கூர்ச்சட கோபன்
பண்ணார்தமி ழாயிரத் திப்பத்தும் வல்லார்
மண்ணாண்டும ணங்கமழ் வர்மல் லிகையே. (கக)

வெண்பா

(480) அறுக்குமிட ரென்றவன்பா லாங்குவிட்ட தூதர்
மறித்துவரப் பற்றா மனத்தால்—அறப்பதறிச்
செய்யதிரு நாவாயிற் செல்லநினைந் தான்மாறன்
மையலினாற் செய்வறியா மல்.

(481) பறந்து திரிதரினும் பாவியே னுள்ளம்
மறந்தும் பிறிதறிய மாட்டா—சிறந்த
திருநாவாய் வாழ்கின்ற தேவனையல் லாலென்
ஒருநாவாய் வாழ்த்தா துகந்து.

---

478. "உன்னைப் பெறுதொழிந்தாலும், விடமாட்டாதே மனஸ்ஸு கலங்கிக் கூப்பிடாநின்றேன் என்கிறார்" (இருபத்து.). திருமால் என்றழைப் பன் — "மாதாபிதாக்களின் பேரைச் சொல்லி ஆர்த்தனான ப்ரஜை கூப்பிடுமா போலே திருமால் என்று அழைப்பன்" (ஈடு.).

479. "இத் திருவாய்மொழி கற்றார், ஐஹிக ஆமுஷ்மிக ஸகல போகங்களையும் புஜிக்கப் பெறுவர் என்கிறார்" (ஈடு.), "மல்லிகை மணம், ஸர்வகந்தத்துக்கும் உபலக்ஷணம்."

480. திருவாய்மொழி நூற்றந்தாதிப் பாசுரம், 88.

481. நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி, 65.

# திருவஞ்சைக்களம்*

[ தேவாரம் ]

(பண்—இந்தளம்)

(482) தலைக்குத் தலைமா லையணிந்த தென்னே
சடைமேற் கங்கைவெள் ளந்தரித்த தென்னே
அலைக்கும் புலித்தோல் கொண்டசைத்த தென்னே
அதன்மேற் கதநாகக் கச்சார்த்த தென்னே

---

* இது, சுந்தரமூர்த்திநாயனார் பாடியருளியது. திருவஞ்சைக்களம் என்பது மலைநாட்டில் மகோதை என்ற கொடுங்கோளூர்க்கு அயலில் உள்ள சிவதலமாகும். அதனால் 'மகோதை யஞ்சைக்களம்' என வழங்கப்பட்டது. சேரமண்டலத்தில் தேவாரத்திருப்பதிகம் பெற்ற சிவதலம் இஃதொன்றேயாம். 'கடலங்கரைமேன் மகோதையஞ்சைக்களம்' என இத்தலத்தையும், அஞ்சைக் களத்தப்பர், அஞ்சையப்பர் என்று இங்குக் கோயில்கொண்ட சிவபிரானையும் சுந்தரமூர்த்தி நாயனார் சிறப்பித்தருளுவர். கொடுங்கோளூரின் மறுபெயரான மகோதை என்பது 'மகோதையாா பட்டணம்' என்றும் கல்வெட்டுக்களிற் பயிலும். இதற்கு மா—கோதையரின் (சேரரின்) கடற்கரைநகர் என்றேனும், மகா—உதயர் (=உதியர் – சேரர்) பட்டினமென்றேனும் உறப்புப் பொருள் கொள்ளலாகும்.

"கோதையரசர் மகோதை" (பெரியபு.)

"கோதை மகோதை" (குலோத். பிள்.)

என்ற முன்னோர் வாக்காலும் இது புலனாகின்றது. இந்நகரம், சங்ககாலத்தில் 'முசிறி' என்ற வேறு பெயர்கொண்டு வழங்கியதாகும். 'முசிறிக்கோடு' என்றும் இதனைச் சாஸனங்கூறும் (I. M. P. COCHIN, No. 3).

இனி, இத்தலத்தைப் பற்றிய தேவாரத் திருப்பதிகம், மேற்கூறிய கொடுங்கோளூரினின்று திருவஞ்சைக்களஞ் சென்று ஆங்கு ஆராப்பேரன்புடன் சிவபிரானை வணங்கிய ஆளுடைய நம்பிகள், இவ்வுலகவாழ்க்கையை அறுத்து இறைவனடிநீழலை அடையவேண்டிப் பாடியதாகும். இத் திருப்

மலைக்கு மிகரோப் பனவன் றிரைகள்
வலித்தெற் றிமுழங் கிவலம் புரிகொண்
டலைக்குங் கடலங் கரைமேல் மகோதை
யணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. (க)

(483) பிடித்தாட்டி யோர்நாகத் தைப்பூண்ட தென்னே
பிறங்குஞ் சடைமேற் பிறைசூடிற் றென்னே
பொடித்தான் கொண்டுமெய் முற்றும்பூசிற் றென்னே
புகரே றுகந்தே றல்புரிந்த தென்னே
மடித்தோட் டந்துவன் றிரையெற் றியிட
வளர்சங்க மங்காந்து முத்தஞ் சொரிய
அடித்தார் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே (உ)

---

பதிகங்கேட்டு இரங்கியருளிய சிவபிரான் திருக்கயிலையிலுள்ள வெள்ளானை யொன்றை அனுப்பி இந்நாயனாரைத் தம்பால் அழைத்துவரத் தேவர்கட்குத் திருவாணையிட்டதும், அவ்வாணையின்படி வந்த வெள்ளானையின்மீது ஆரோகித்துக் கயிலையங்கிரியை நோக்கி இந்நாயனார் செல்ல, அதனையுணர்ந்த இவர் தோழரான சேரமான்பெருமாள் பரியொன்றை மேற்கொண்டு விரைந்து சென்று நாயனாரின் முன்னிற்க, முடிவில் அவ்விருவருமே வெள்ளியங்கிரியடைந்து சிவபிரானைத் தரிசித்துப் பேரருள்பெற்றதும் ஆகிய வரலாறுகள் பிரசித்தமானவை. வெள்ளானைமீதேறி நம்பியாரூரர் கயிலைசெல்லுங்காற் பாடிய தொடித் தான்மலைத் திருப்பதிகத்தில், தாம் அவ்வாறு செல்வதனைத் திருவஞ்சைக் களத்துச் சிவபிரானுக்குத் தெரிவிக்கும்படி "ஆழிகடலரையா யஞ்சையப்பர்க் கறிவிப்பதே" என்று வருணனைவிளித்துக் கூறிய செய்தி இங்கு அறியத் தக்கது.

482. தலைமாலை – சிரங்களால் ஆகிய மாலை; "தலைமாலை தலைக் கணிந்து' என்பது சம்பந்தமூர்த்திகள் திருவாக்கு. அசைத்தது – கட்டியது. கதம் – சினம்.

483. புகர் – ஒளி; புள்ளியுமாம். மடித்து ஓட்டந்து – சுருண்டு ஓடிவந்து; ஓட்டந்து – ஓட்டந்தந்து; "ஓட்டந்தீங் கடையேன்மினே" என்ப (அப். தேவா.). அடித்து ஆர் – மோதித் தாக்கும்.

(484) சிந்தித் தெழுவார்க்கு நெல்லிக் கனியே
சிறியார் பெரியார் மனத்தேற லுற்றால்
முந்தித் தொழுவா ரிறவார் பிறவார்
முனிகள் முனியே யமரர்க் கமரா
சந்தித் தடமால் வரைபோற் றிரைகள்
தணியா திடறுங் கடலங் கரைமேல்
அந்தித் தலைச்செக்கர் வானே யொத்தியால்
அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. (௩)

(485) இழைக்கு மெழுத்துக் குயிரே யொத்தியால்
இலையே யொத்தியால் உளையே யொத்தியால்
குழைக்கும் பயிர்க்கோர் புயலே யொத்தியால்
அடியார் தமக்கோர் குடியே யொத்தியால்
மழைக்கு நிகரொப் பனவன் திரைகள்
வலித்தெற்றி முழங்கி வலம்புரிகொண்
டழைக்குங் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. (௪)

(486) வீடின் பயனென் பிறப்பின் பயனென்
விடையே றுவதென் மதயானை நிற்கக்
கூடும் மலைமங் கையொருத் தியுடன்
சடைமேற் கங்கையா ளைநீசூடிற் றென்னே

---

484. பிறவி நோய் நீக்கிச் சாவாமை பயப்பவரென்பார் 'நெல்லிக்கனியே' என்றார். பதிஞானத்தால் மனத்தெளிவுற்றவராயின் சிறியாரும் பெரியாராவர் என்க. கடலங்கரைமேல் அந்திவானம் போலும், வின்காட்சி எ-று.

485. இழைக்கும் – எழுதும்; 'இழைத்தா ரொருவருமில்லா மறைகளை' என்ப (கம்பர்.) இன்மைபோலவும் உண்மை போலவும் அமைந்தாய் என்பது கருத்து. குழைக்கும் – வாட்டமுறும்.

486. இறப்புப் பிறப்புக்களை நாங்கள் அடையச் செய்ததனால் எங்கட்குண்டாம் பயன்கள் என்ன என்பதனையும், உன்பால் முரண்பட்ட செய

பாடும் புலவர்க் கருளும் பொருளென்
நிதியம் பலசெய் தகலச் செலவில்
ஆடுங் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. (௫)

(487) இரவத் திடுகாட் டெரியாடிற் றென்னே
யிறந்தார் தலையிற் பலிகோட லென்னே
பரவித் தொழுவார் பெறுபண்ட மென்னே
பரமா பரமேட் டிபணித் தருளாய்
உரவத் தொடுசங்க மோடிப்பி முத்தங்
கொணர்ந்தெற் றிமுழங் கிவலம் புரிகொண்
டரவக் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. (௬)

(488) ஆக்கும் மழிவும் மமைவுநீ யென்பனுன்
சொல்லுவார் சொற்பொரு ளவைநீ யென்பனுன்
நாக்குஞ் செவியுங் கண்ணுநீ யென்பனுன்
நலனே யினிநா னுனைநன் குணர்ந்தேன்
நோக்கும் நிதியம் பலவெத் தனையுங்
கலத்திற் புகப்பெய்து கொண்டேற நுந்தி
ஆர்க்குங் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. (௭)

---

ல்கள் காணப்படுவதனையும், உன்னைப்பாடுவார்க்கு நீ அருளும் பயனையும் எமக்கு விளங்க உரைப்பீராக எ-று. மதயானை - ஐராவணம் என்பர். பொருள் - பயன். நிதியம் பல செய்த கலம் - நிதிகளைத் தன்னுள் ஏற்றிக் கொண்ட மரக்கலம். அவ்வாறு ஏற்றிய பின்பு அக்கலங்கள் பாய்விரித்துச் செல்லுங்கால் ஆடுங் காட்சியையுடைய கடல் என்பது கருத்து.

487. இரவத்து - இரவில்; 'மழையத்துச் சென்றான்' என்புழிப் போல அத்துச்சாரியை பெற்றது. (தொல்). இடுகாடு - சுடுகாடு. பண்டம் - பேறு. உரவம் - வலிமை; 'உரவுமுள்ளதோ ருழையின்னுரி'. என்ப (தேவா.).

488. ஆக்கு - சிருட்டி; அமைவு - திதி, காப்பு. உனை நலனன்கு உணர்ந்தேன் என இயையும்: பல எத்தனையும் - எத்தனையோ பலவும்; கலம் - மரக்கலம். நுந்துதல் - தள்ளுதல்.

(489) வெறுத்தேன் மனைவாழ்க் கையைவிட் டொழிந்தேன்
விளங்குங் குழைக்கா துடைவே தியனே
இறுத்தா யிலங்கைக் கிறையா யவனைத்
தலைபத் தொடுதோள் பலவிற் றுவிழக்
கறுத்தாய் கடனஞ் சமுதுண்டு கண்டம்
கடுகப் பிரமன் தலையைந் திலுமொன்
றறுத்தாய் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. (அ)

(490) பிடிக்குங் களிறே யொத்தியால் எம்பிரான்
பிரமற்கும் பிரான்மற் றைமாற் கும்பிரான்
நொடிக்கும் மளவிற் புரமூன் றெரியச்
சிலைதொட் டவனே யுனைநான் மறவேன்
வடிக்கின் றனபோற் சிலவன் றிரைகள்
வலித்தெற் றிமுழங் கிவலம் புரிகொண்
டடிக்குங் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனே. (கூ)

(491) எந்தம் மடிக ளிமையோர் பெருமான்
எனக்கென் றும்மளிக் கும்மணி மிடற்றன்
அந்தண் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழிலஞ் சைக்களத் தப்பனை
மந்தம் முழவுங் குழலும் மியம்பும்
வளூர்நா வலர்கோன் நம்பியூரன் சொன்ன
சந்தம் மிகுதண் டமிழ்மாலை கள்கொண்
டடிவீழ வல்லார் தடுமாற் றிலரே. (௰)

---

489. குழை – குண்டலம். தோள் பல இற்றுவிழ இறையாயவனை இறுத்தாய் எனவும், கண்டங் கறுத்தாய் எனவும் இயைக்க.

490. பிடிக்கும் – கையாற் பற்றவல்ல; இனி, பார்வதியாகிய பிடிக்கும் எனினுமாம். வடித்தல் – சாரமானது இறங்கச்செய்தல்; ஈங்கு வடித்தது வலம்புரியை என்க.

491. முழவும் குழலும் மந்தம் இயம்பும் என்க. மந்தம் – படுத்த லிசை; (சீவக. 735. உரை). நம்பியாகிய ஊரன் – சுந்தரமூர்த்தி நாயனார். தடுமாற்று – தடுமாற்றம்; பிறவியில் உழலுகை.

# 4. சேரவேந்தர் வரலாறுகள்



## சேக்கிழார் சுவாமிகள் அருளிய

## பெரிய புராணம்



### சேரமான்பெருமாள் நாயனார் புராணம் *

(492) மாவிற் றிருந்த பெருஞ்சிறப்பின்
மன்னுந் தொன்மை மலைநாட்டுப்
பாவீற் றிருந்த பல்புகழார்
பயிலு மியல்பிற் பழம்பதிதான்
சேவீற் றிருந்தார் திருவஞ்சைக்
களமும் நிலவிச் சேரர்குலக்
கோவீற் றிருந்து முறைபுரியுங்
குலக்கோ மூதூர் கொடுங்கோளூர். (க)

---

* இது கழறிற்றறிவார் புராணம் எனவும் வழங்கும். கழறிற் றறிவார் – சேரமான்பெருமாள் நாயனார்.

492. மா – திருமகள்; யானைகளுமாம். 'வேழமுடைத்து மலைநாடு' என்ப. பல்புகழ் – வீரம், நியாயம், தியாகமுதலியவற்றால் உண்டான கீர்த்தி. திருவஞ்சைக்களம் – கொடுங்கோளூர்க்கு அயலதாகிய சிவதலம்; கருவூர்த் திருவானிலை, மதுரைத் திருவாலவாய் என்பனபோல, மகோதையஞ்சைக்களம் எனவும் அஞ்சை எனவும் இத்தலம் வழங்கும். கோமூதூர் – இராசதானி.

(493) காலை யெழும்பல் கலையினொலி
களிற்றுக் கன்று வடிக்குமொலி
சோலை யெழுமென் சுரும்பினொலி
துரகச் செருக்காற் சுலவுமொலி
பாலை விபஞ்சி பயிலுமொலி
பாட லாடன் முழவினொலி
வேலை யொலியை விழுங்கியெழ
விளங்கி யோங்கும் வியப்பினதால். (உ)

(494) மிக்க செல்வ மனைகடோறும்
விளையு மின்பம் விளங்குவன
பக்க நெருங்கு சாலைதோறும்
பயில்சட் டறங்கள் பல்குவன
தக்க அன்பர் மடங்கடோறுஞ்
சைவ மெய்ம்மை சாற்றுவன
தொக்க வளங்கொ ளிடங்கடோறு
மடங்க நிதியந் துவன்றுவன. (ங)

---

493. கல்வி பெருக ஓதற்குரிய காலம் காலையேயாதலின் 'காலை யெழும் பல்கலையினொலி' என்றார். களிற்றுக்கன்று வடித்தல் – புதிதாகப் பிடிக்கப்பட்ட ஆனைக்கன்றைப் பழக்குதல்; 'புதுக்கோள்யானையும்...கதிக்குற வடிப்போர்' என்ப (மணி. 28, 60 – 61). சுலவுதல் – சூழ்தல், பரத்தல். விபஞ்சி – யாழ். பாடலாடல்களின்போது நிகழும் முழவினொலி என்க.

494. சாலை - உண்டியுறையுள்முதலிய உதவும் அறச்சாலை; சட்டறம் – சட்டர் அறம்; சட்டர் - மாணவர்; சத்ர: என்ற வடசொல் திரிந்ததாகும். சட்டர்க்கு வேதசாத்திரங்கள் ஓதுவிக்கும் அறச்சாலைகள் அரசர் முதலிய வரால் பண்டு அமைக்கப்பட்டு வந்தமை சாஸனங்களாலும் அறியப்படும்; "ஒரு சட்டனை ஒரு சட்டன் பிழைக்கப் பேசுவானாகில்" என்பது சாஸனத் தொடர் (T. A. S. Vol. I, 9) 'நெட்டறங்கள்' எனப் பாடமாற்றினரு முளர்.

(495) வேத நெறியின் முறைபிறழா
மிக்க வொழுக்கந் தலைநின்ற
சாதி நான்கும் நிலைதழைக்குந்
தன்மைத் தாகித் தடமதில்சூழ்
சூத வகுள சரளநிரை
துதைபுஞ் சோலை வளநகர்தான்
கோதை யரசர் மகோதையெனக்
குலவு பெயரு முடைத்துலகில். (௪)

(496) முருகு விரியும் மலர்ச்சோலை
மூதா ரதன்கண் முறைமரபின்
அருகி யழியுங் கலிநீக்கி
யறங்கொள் சைவத் திறந்தழைப்பத்
திருகு சினவெங் களியானைச்
சேரர் குலமு முலகுஞ்செய்
பெருகு தவத்தா லரனருளாற்
பிறந்தார் பெருமாக் கோதையார். (௫)

---

495. சூதம் - மா; வகுளம் – மகிழ்; சரளம் – தேவதாருவகை; சிமைத் தேவதாரு என்பர்; 'மாதவி சரளமெங்கும்' என்றார் நாட்டுச்சருக்கத்தும் (29). மகோதை என்பது மகோதையார் பட்டணம் எனவும் சாஸனங்களில் வழங்கும்; இது, மா கோதை (பெரிய சேரரது) பட்டினம் என்ற உறப்புப் பொருள் உடையது; இதனைக் 'கோதையரசர் மகோதை' என ஈண்டுவருவதனாலும் அறிந்துகொள்க. 'கோதை மகோதை' என்றார், கூத்தரும் (குலோத். பிள்.). கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை, பெருமாக் கோதையார என வழங்கும் சேரர்பெயர்களும் காண்க. இந் நகரை மகோதயபுரி என்பர் வடநூலார்; இதற்கு மகா உதயரின் (–உதியர், சேரரின்) நகரம் என உறப்புப்பொருள் கொள்ளத்தகும்.

496. பெருமாக்கோதையார் – சேரமான் பெருமாள் திருநாமம். வேழச் செல்வமுடையவர் என்பார், 'களியானைச் சேரர்' என்றார்.

(497) திருமா நகரந் திருவவதா
ரஞ்செய் விழவின் சிறப்பினால்
வருமா களிகூர் நெய்யாட
லெடுப்ப வான மலர்மாரி
தருமா விசும்பின் மிகநெருங்கத்
தழங்கு மொலிமங் கலந்தழைப்பப்
பெருமா நிலத்தி லெவ்வுயிரும்
பெருகு மகிழ்ச்சி பிறங்கினவால். (௬)

(498) மண்மேற் சைவ நெறிவாழ
வளர்ந்து முன்னை வழியன்பாற்
கண்மேல் விளங்கு நெற்றியினார்
கழலே பேணுங் கருத்தினராய்
உண்மே வியவன் பினராகி
உரிமை யரசர் தொழில்புரியார்
தெண்ணீர் முடியார் திருவஞ்சைக்
களத்திற் றிருத்தொண் டேபுரிவார். (எ)

(499) உலகி னியல்பு மரசியல்பும்
உறுதி யல்ல வெனவுணர்வார்
புலரி யெழுந்து புனன்மூழ்கிப்
புனித வெண்ணீற் றினுமூழ்கி

497. நெய்யாடல் – தைலம் பூசி மங்கலஸ்நானஞ் செய்தல்; 'அண்டர் மிண்டிப் புகுந்து நெய்யாடினார்' என்ப (முதலா. 1 1 5.) இவரது அவதாரம் தெய்விகமாதலின், வானம் மலர்மாரி பெய்தும் உயிர்கள் மகிழ்ச்சி பிறங்கியும் விளங்கின என்க.

498. அரசரின் உரிமைத் தொழில் – ஆட்சி.

499. திருநீறணிதலும் ஒருவகை உத்தம ஸ்நானமாதலின் 'வெண்ணீற்றினு மூழ்கி' என்றார். சாத்த – ஈசனுக்கு அணிதற்காக.

நிலவு திருநந் தனவனத்து
நீடும் பணிகள் பலசெய்து
மலரு முகையுங் கொணர்ந்துதிரு
மாலை சாத்த மகிழ்ந்தமைத்து. (அ)

(500) திருமஞ் சனமுங் கொணர்ந்துதிரு
வலகு மிட்டுத் திருமெழுக்கு
வருமன் புடனின் புறச்சாத்தி
மற்று முள்ள திருப்பணிகள்
பெருமை பிறங்கச் செய்தமைத்துப்
பேணும் விருப்பிற் றிருப்பாட்டும்
ஒருமை நெறியி னுணர்வுவர
வோதிப் பணிந்தே யொழுகுநாள். (கூ)

(501) நீரின் மலிந்த கடலகழி
நெடுமால் வரையின் கொடிமதில்சூழ்
சீரின் மலிந்த திருநகர
மதனிற் செங்கோற் பொறையனெனுங்
காரின் மலிந்த கொடைநிழன்மேற்
கவிக்குங் கொற்றக் குடைநிழற்கீழ்த்
தாரின் மலிந்த புயத்தரசன்
தரணி நீத்துத் தவஞ்சார்ந்தான். (ம)

---

500. திருமஞ்சனம் – திருமஞ்சனநீர். திருவலகிடுதல் – துடைப் பத்தாற் பெருக்குதல்; திருமெழுக்கிடுதல் – சாணநீரால் தலத்தைச் சுத்திசெய் தல்; திருப்பாட்டு – அடியார் அருளிய பாசுரங்கள்.

501. கடலுக்கும் மலைகட்கும் இடையில் அமைந்த மலைநாட்டு நகரமாதலின், "கடலகழி... வரைசூழ் நகரம்" என்றார் பொறையன் – சேரன். நிழல்மேற் கவிக்கும் – ஒளி மேலே சூழ்ந்திருக்கப்பட்ட.

(502) வந்த மரபி னரசளிப்பான்
வனஞ்சார் தவத்தின் மருவியபின்
சிந்தை மதிநூல் தேரமைச்சர்
சிலநா ளாய்ந்து தெளிந்தநெறி
முந்தை மரபின் முதல்வர்திருத்
தொண்டு முயல்வார் முதற்றாக
இந்து முடியார் திருவஞ்சைக்
களத்தி லவர்பா லெய்தினார். (கக)

(503) எய்தி யவர்தம் மெதிரிறைஞ்சி
யிருந்தண் சாரல் மலைநாட்டுச்
செய்தி முறைமை யாலுரிமைச்
செங்கோ லரசு புரிவதற்கு
மைதீர் நெறியின் முடிசூடி
யருளு மரபால் வந்ததெனப்
பொய்தீர் வாய்மை மந்திரிகள்
போற்றிப் புகன்ற பொழுதின்கண். (கஉ)

---

502. அமைச்சர் ஆய்ந்து தெளிந்த நெறியானது, திருத்தொண்டு முயல்வாரே மரபின் முதல்வர் என்பதனை முக்கியமாகக் கொண்டமையின் என்க. நெறி முதல்வர்முதற்று என இயையும்; 'ஆதிபகவன் முதற்றே யுலகு' என்புழிப்போல. இனி, முதற்றாக என்பதற்கு மரபின்முதல்வர் முதல்வராக அமைதலால் எனின், முதல்வர் என்பது முதற்று என்ற அஃறிணைமுற்று ஏற்காமை காண்க.

503. 'மலைநாட்டுச் செய்தி முறையின், முடிசூடியருளுமரபால்' என்ற தொடர்கள், மக்கட்டாயத்தின் வேறான மலைநாட்டு வழக்கினை உட்கொண்டு கூறியதுபோலும்.

(504) இன்பம் பெருகுந் திருத்தொண்டுக்
கிடையூ றாக விவர்மொழிந்தார்
அன்பு நிலைமை வழுவாமை
யரசு புரக்க வருளுண்டேல்
என்பு மரவும் புனைந்தாரை
யிடைபெற் றறிவே னெனப்புக்கு
முன்பு தொழுது விண்ணப்பஞ்
செய்தார் முதல்வ ரருளினால். (கூ)

(505) மேவு முரிமை யரசளித்தே
விரும்பு காதல் வழிபாடும்
யாவும் யாருங் கழறினவு
மறியு முணர்வு மீறில்லாத்
தாவில் விறலுந் தண்டாத
கொடையும் படைவா கனமுதலாங்
காவன் மன்னர்க் குரியனவு
மெல்லாங் கைவந் துறப்பெற்றார். (கச)

(506) ஆன வருள்கொண் டஞ்சலிசெய்
திறைஞ்சிப் புறம்போந் தரசளித்தால்
ஊன மாகுந் திருத்தொண்டுக்
கெனினு முடையா னருளாலே

---

504. இடைபெறுதல் - சமயமறிதல்; புனைந்தாரை - புனைந்தார்பால்: வேற்றுமை மயக்கம்.

505. 'கழறிற்றறிவார்' என்ற திருநாமம் சேரமான் பெருமாளுக்கு வழங்கிய காரணம் இரண்டாமடியாற் பெறப்படும்; 'அளவில் பெருமை யகிலயோனிகளுங் கழறிற் றறிந்தவற்றின, உளமன்னியமெய் யுறுதுயர மொன்று மொழியா வகையகற்றி' என்பர் பின்னும் (40).

506. மானம் - பெருமை. பணிந்து - பணிய.

மேன்மை மகுடந் தாங்குதற்கு
வேண்டு மமைச்சர்க் குடன்படலும்
மான வமைச்சர் தாள்பணிந்தவ்
வினைமேற் கொண்டு மகிழ்ந்தெழுந்தார். (கரு)

(507) உரிமை நாளி லோரைநல
னெய்த மிக்க வுபகரணம்
பெருமை சிறக்க வேண்டுவன
வெல்லாம் பிறங்க மங்கலஞ்செய்
திருமை யுலகுக் கொருமைமுடி
கவித்தா ரெல்லா வுயிருமகிழ்
தரும நிலைமை யறிந்துபுவி
தாங்குங் கழறிற் றறிவார்தாம். (கசு)

(508) தம்பி ராஞர் கோயில்வலங்
கொண்டு திருமுன் ருழ்ந்தெழுந்து
கும்ப யானை மேற்கொண்டு
கொற்றக் குடையுஞ் சாமரையும்
நம்பு முரிமை யவர்தாங்க
நலங்கொள் நகர்சூழ் வலங்கொள்வார்
மொய்ம்பி னுவரின் பொதிசுமந்தோர்
வண்ணுன் முன்னே வரக்கண்டார். (கஎ)

---

507. ஓரை நலன் — இலக்கினப் பொருத்தம். உபகரணம் — சாமக் கிரியைகள். இருமையுலகு — சேதனுசேதனங்கள்.

508. சூழ்வலம் வருவார் — வலஞ்சூழ்ந்து பவனிவருபவர். உவர்மண்

(509) மழையிற் கரைந்தங் குவரூறி
மேனி வெளுத்த வடிவினால்
உழையிற் பொலிந்த திருக்கரத்தா
ரடியார் வேட மென்றுணர்ந்தே
இழையிற் சிறந்த வோடைநுதல்
யானைக் கழுத்தி னின்றிழிந்து
விழைவிற் பெருகுங் காதலினால்
விரைந்து சென்று கைதொழுதார். (கஅ)

(510) சேரர் பெருமான் றொழக்கண்டு
சிந்தை கலங்கி முன்வணங்கி
யாரென் றடியே னைக்கொண்ட
தடியே னடிவண் ணானென்னச்
சேரர் பிரானு மடிச்சேர
னடியே னென்று திருநீற்றின்
வார வேடம் நினைப்பித்தீர்
வருந்தா தேகு மெனமொழிந்தார். (கக)

(511) மன்னர் பெருமான் திருத்தொண்டு
கண்டு மதிநீ டமைச்சரெல்லாம்
சென்னி மிசையஞ் சலிசெய்து
போற்றச் சினமால் களிறேறி
மின்னு மணிப்பூண் கொடிமாட
வீதி மூதூர் வலங்கொண்டு
பொன்னின் மணிமா ளிகைவாயில்
புக்கார் புனைமங் கலம்பொலிய. (உ0)

---

பொதி – உவர்மண் மூடை. உழை – மான். ஓடை – முகபடாம்.

510. அடிவண்ணான் – அடித்தொண்டு புரியும் வண்ணான். வாரம் – அன்பு, பத்திமை.

(512) யானை மிசைநின் றிழிந்தருளி
யிலங்கு மணிமண் டபத்தின்கண்
மேன்மை யரியா சனத்தேறி
விளங்குங் கொற்றக் குடைநிழற்றப்
பானல் விழியார் சாமரைமுன்
பணிமா றப்பன் மலர்தூவி
மான வரசர் போற்றவீற்
றிருந்தார் மன்னர் பெருமானார். (உக)

(513) உலகு புரக்குங் கொடைவளவ
ருரிமைச் செழிய ருடன்கூட
நிலவு பெருமுக் கோக்களாய்
நீதி மனுநூல் நெறிநடத்தி
அலகி லரசர் திறைகொணர
வகத்தும் புறத்தும் பகையறுத்து
மலருந் திருநீற் றொளிவளர
மறைகள் வளர மண்ணளிப்பார். (உஉ)

(514) நீடு முரிமைப் பேரரசா
ளிகழும் பயனும் நிறைதவமுந்
தேடும் பொருளும் பெருந்துணையுந்
தில்லைத் திருச்சிற் றம்பலத்துள்
ஆடுங் கழலே யெனத்தெளிந்த
வறிவா லெடுத்த திருப்பாதங்
கூடு மன்பி லருச்சனைமேற்
கொண்டார் சேரர் குலப்பெருமாள். (உங)

---

512. பானல் — கருங்குவளை. பணிமாறல் — தொண்டு புரிதல்; ஈண்டு வீசுதலாம்.

513. அகப்பகை — காமக் குரோத முதலிய அறுவகை உட்பகை.

514. எடுத்த பாதம் — குஞ்சிதமாகத் தூக்கிய திருவடி.

(515) வாசத் திருமஞ் சனம்பள்ளித்
தாமஞ் சாந்த மணித்தூபந்
தேசிற் பெருகும் செழுந்தீப
முதலா யினவுந் திருவமுதும்
ஈசர்க் கேற்ற பரிசினு
லருச்சித் தருள வெந்நாளும்
பூசைக் கமர்ந்த பெருங்கூத்தர்
பொற்பார் சிலம்பி னொலியளித்தார். (உச)

(516) நம்பர் தாளின் வழிபாட்டால்
நாளு மின்புற் றமர்கின்றார்
இம்ப ருலகி லிரவலர்க்கும்
வறியோ ரெவர்க்கு மீகையினுற்
செம்பொன் மழையா மெனப்பொழிந்து
திருந்து வென்றி யுடன்பொருந்தி
உம்பர் போற்றத் தம்பெருமாற்
குரிய வேள்வி பலசெய்தார். (உரு)

(517) இன்ன வண்ண மிவரொழுக
வெழில்கொள் பாண்டி நன்னாட்டு
மன்னு மதுரைத் திருவால
வாயி லிறைவர் வருமன்பாற்

---

515. பள்ளித் தாமம் — கோயில் மூர்த்திக்குச் சாத்தும் திருமாலை; "திருப்பள்ளித்தாமம் திருநந்தவனம்" என்ப (S. I. I. iii, 211). சிலம்பி னொலி — கூத்தில் நிகழும் பாதச் சிலம்போசை.

516. வேள்வி — யாகத்துடன் கூடிய திருவிழா; "வேள்வியும் விழாவும் நாடொறும் வகுத்து" என்ப (சிலப். 28, 232).

517. பாணனாராகிய பத்திரனார் என்க.

பன்னு மிசைப்பா டலிற்பரவும்
பாண னார்பத் திரனார்க்கு
நன்மை நீடு பெருஞ்செல்வ
நல்க வேண்டி யருள்புரிவார். (உசு)

(518) இரவு கனவி லெழுந்தருளி
யென்பா லன்பா லெப்பொழுதும்
பரவு சேரன் தனக்குனக்குப்
பைம்பொன் காணம் பட்டாடை
விரவு கதிர்செய் நவமணிப்பூண்
வேண்டிற் றெல்லாங் குறைவின்றித்
தரநம் மோலை தருகின்றோந்
தாழா தேகி வருகென்று. (உஎ)

வேறு

(519) அதிர்கழ லுதியர் வேந்தர்க் கருள்செய்த பெருமை யாலே
எதிரில்செல் வத்துக் கேற்ற விருநிதி கொடுக்க வென்று
மதிமலி புரிசை யென்னும் வாசகம் வரைந்த வாய்மைக்
கதிரொளி விரிந்த தோட்டுத் திருமுகங் கொடுத்தார்
[காண. (உஅ)

---

518. சேரன்தனக்கு ஓலை தருகின்றோம் எனவும், உனக்கு வேண்டிற்றெல்லாம் எனவும் இயையும். ஓலை – திருமுகம்.

519. "மதிமலி புரிசை" என்னும் திருமுகப் பாசுரத்தை இந் நூல் 252-ம் செய்யுளிற் காண்க (பக் 171). 'சேரவேந்தர்க்கு அருள் செய்த பெருமையாலே' – சேரமான் பெருமாள்பால் வைத்த திருவருட்சிறப்பால்; அச்சிறப்பாவது – ஏனைக் கொடையாளர்க்குத் தம் திருமுகத்தை அருளாது இவ்வேந்தர்க்கு விடுத்ததாகும்; இதுபற்றி 'வாய்மைத்.....திருமுகம்' என்றார். இனி, உதியர் வேந்தர்க்கும் என உம்மை விரித்து, அவர்க்கும் பாணனாரது வருகையைக் கனவிடைச் சிவபிரான் அருளிய சிறப்பால் என்று பொருள் கொள்ளினுமாம். இவ்வாறு கனவில் உணர்த்திய செய்தியை மதுரைத்தல புராணத்துட் காண்க. தோடு – ஓலை.

வேறு

(520) சங்கப் புலவர் திருமுகத்தைத்
தலைமேற் கொண்டு பத்திரனார்
அங்கப் பொழுதே புறப்பட்டு
மலைநா டணைய வந்தெய்தித்
துங்கப் புரிசைக் கொடுங்கோளூர்
தன்னிற் புகுந்து துன்னுகொடி
மங்குல் தொடக்கு மாளிகைமுன்
வந்து மன்னர்க் கறிவித்தார். (உக)

(521) கேட்ட பொழுதே கைதலைமேற்
கொண்டு கிளர்ந்த பேரன்பால்
நாட்டம் பொழிநீர் வழிந்திழிய
வெழுந்து நடுக்க மிகவெய்தி
ஓட்டந் தம்பொன் மாளிகையின்
புறத்தி லுருகுஞ் சிந்தையுடன்
பாட்டின் றலைமைப் பாணனார்
பாதம் பலகாற் பணிகின்றார். (கூ)

(522) அடியேன் பொருளாத் திருமுகங்கொண்
டணைந்த தென்ன வவர்தாமுங்
கொடிசேர் விடையார் திருமுகங்கைக்
கொடுத்து வணங்கக் கொற்றவனார்

---

520. சங்கப்புலவர் - இறையனார்; துங்கம் - உயரம்; மாளிகை - அரண்மனை.

521. ஓட்டந்து - ஓட்டம் தந்து; ஓடிவந்து. 'ஓட்டத்தம்பொன்' என்பது பாடமாயின், உருக்கி ஓடவிட்டெடுத்த உயர்ந்த பொன் என்க.

522. அணைந்தது என்பது எடுத்தலோசையால் ஈண்டு வியப்புக் குறித்து நின்றது.

முடிமேற் கொண்டு கூத்தாடி
மொழியுங் குழறிப் பொழிகண்ணீர்
பொடியார் மார்பிற் பரந்துவிழப்
புவிமேற் பலகால் விழ்ந்தெழுந்தார். (௩௧)

(523) பரிவிற் போற்றித் திருமுகத்தைப்
பலகாற் றொழுது படியெடுக்க
உரிய வகையா லெடுத்தோதி
யும்பர் பெருமா னருள்போற்றி
விரிபொற் சுடர்மா ளிகைபுக்கு
மேவு முரிமைச் சுற்றமெல்லாம்
பெரிது விரைவிற் கொடுபோந்து
பேணு மமைச்சர்க் கருள்செய்வார். (௩௨)

(524) நங்கள் குலமா ளிகையதனுள்
நலத்தின் மிக்க நிதிக்குவையாய்ப்
பொங்கி நிறைந்த பல்வேறு
வகையிற் பொலிந்த பண்டாரம்
அங்க ணொன்று மொழியாமே
யடையக் கொண்டு புறப்பட்டுத்
தங்கும் பொதிசெய் தாளின்மேற்
சமைய வேற்றிக் கொணருமென. (௩௩)

---

523. 'படியெடுக்க உரிய வகையால் எடுத்தோதி' என்றது, பொருள் புலப்படப் படிக்கும் மாதிரிகையைப் பிறரும் பின்பற்றுமுறையில் தாமே எடுத்தோதியதாம்; பிறர் பிரதிசெய்து சொள்ளுமுறையில் ஓதி என்றும் உரைப்பர். படி – மாதிரிகைப் பிரதி.

524. பொதி – மூடை. சமைய – தக்கவாறு.

(525) சேரர் பெருமா னருள்செய்யத்
திருந்து மதிநூன் மந்திரிகள்
சாரு மணிமா ளிகையுள்ளாற்
றலங்க ளெல்லா நிறைந்தபெருஞ்
சீர்கொள் நிதிய மெண்ணிறந்த
வெல்லாம் பொதிசெய் தாளின்மேற்
பாரி னெருங்க மிசையேற்றிக்
கொண்டு வந்து பணிந்தார்கள். (௩௪)

(526) பரந்த நிதியின் பரப்பெல்லாம்
பாண னார்பத் திரனார்க்கு
நிரந்த தனங்கள் வெவ்வேறு
நிரைத்துக் காட்டி மற்றிவையும்
உரந்தங் கியவெங் கரிபரிகண்
முதலா வுயிருள் ளனதனமும்
புரந்த வரசுங் கொள்ளுமென
மொழிந்தார் பொறையர் புரவலனார். (௩௫)

(527) பாண னார்பத் திரனாரும்
பைம்பொன் மௌலிச் சேரலனார்
காணக் கொடுத்த விவையெல்லாங்
கண்டு மகிழ்வுற் றதிசயித்துப்
பேண வெனக்கு வேண்டுவன
வடியேன் கொள்ளப் பிஞ்ஞகனார்
ஆணை யரசு மரசுறுப்புங்
கைக்கொண் டருளு மெனவிறைஞ்ச. (௩௬)

---

525. உள்ளால் - உள்ளிடத்தமைந்த.

527. கொள்ளவே பிஞ்ஞகனார் திருவாணை யுள்ளது என்க. அரசு உறுப்பு - படைகுடி கூழமைச்சு நட்பரண்களாகிய அரசாங்கங்கள்.

(528) இறைவ ராணை மறுப்பதனுக்
  கஞ்சி யிசைந்தா ரிகல்வேந்தர்
நிறையு நிதியின் பரப்பெல்லா
  நிலத்தை நெளிய வுடன்கொண்டே
உறையும் மதத்துக் களிறுபரி
  யுள்ளிட் டனவேண் டுவகொண்டோர்
பிறைவெண் கோட்டுக் களிற்றுமேற்
  கொண்டு போந்தார் பெரும்பாணர். (௩௭)

(529) பண்பு பெருகும் பெருமாளும்
  பாண னார்பத் திரனார்பின்
கண்கள் பொழிந்த காதனீர்
  வழியக் கையால் தொழுதணைய
நண்பு சிறக்கு மவர்தம்மை
  நகரின் புறத்து விடைகொண்டு
திண்பொற் புரிசைத் திருமதுரை
  புக்கார் திருந்து மிசைப்பாணர். (௩௮)

(530) வான வரம்பர் குலம்பெருக்கு
  மன்ன னாரு மறித்தேகிக்
கூன விளவெண் பிறைக்கண்ணி
  முடியா ரடிமை கொண்டருளும்

---

528. நிலத்தை நெளிய – நிலத்தை நெளிவிக்க; அத்தும் ஐயுஞ் சாரியைகள் எனினுமாம்.

530. வானவரம்பர் – சேரர்; "நின்கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்து நின், வெண்கடற் புணரிக் குடகடற் குளிக்கும் யாணர்வைப்பு" என்பராகலின் குணகுட திசைகளின் அடிவானங்களை எல்லையாகவுடைய நாடர் என்பது பொருளாம்.

பான்மை யருளின் பெருமையினை
  நினைந்து பலகாற் பணிந்தேத்தி
மேன்மை விளங்கு மாளிகைமண்
  டபத்து ளரசு வீற்றிருந்தார். (௩௯)

(531) அளவில் பெருமை யகிலயோ
  னிகளுங் கழறிற் றறிந்தவற்றின்
உளமன் னியமெய் யுறுதுயர
  மொன்று மொழியா வகையகற்றிக்
களவு கொலைகள் முதலான
  கடிந்து கழறிற் றறிவார்தாம்
வளவர் பெருமா னுடன்செழியர்
  மகிழுங் கலப்பில் வைகுநாள். (௪௰)

(532) வானக் கங்கை நதிபொதிந்த
  மல்கு சடையார் வழிபாட்டுத்
தூநற் சிறப்பி னர்ச்சனையாந்
  தொண்டு புரிவார் தமக்கொருநாள்
தேனக் கலர்ந்த கொன்றையினா
  ராடற் சிலம்பி னொலிமுன்போல்
மானப் பூசை முடிவின்கட்
  கேளா தொழிய மதிமயங்கி. (௪௧)

(533) பூசை கடிது முடித்தடியே
  னென்னோ பிழைத்த தெனப்பொருமி
ஆசை யுடம்பான் மற்றினிவே
  றடையு மின்பம் யாதென்று

---

531. மகிழுங் கலப்பு – அகமகிழ்ந்து கலக்கும் நட்பு.

532. சிவபூசை முடியுந்தோறும், தில்லைப்பெருமானுன கூத்தர் இவர்க்குப் பாதச் சிலம்பொலி காட்டிவந்த பரிசை 24-ம் பாடலிற் காண்க.

தேசின் விளங்கு முடைவாளை
யுருவித் திருமார் பினிறுட்ட
ஈசர் விரைந்து திருச்சிலம்பி
னோசை மிகவு மிசைப்பித்தார். (சஉ)

(534) ஆடற் சிலம்பி னொலிகேளா
வுடைவா ளகற்றி யங்கைமலர்
கூடத் தலைமேற் குவித்தருளிக்
கொண்டு விழுந்து தொழுதெழுந்து
நீடப் பரவி மொழிகின்றார்
நெடுமால் பிரம னருமறைமுன்
தேடற் கரியாய் திருவருள்முன்
செய்யா தொழிந்த தென்னென்றார். (சங)

(535) என்ற பொழுதி லிறைவர்தா
மெதிர்நின் றருளா தெழுமொலியால்
மன்றி னிடைநங் கூத்தாடல்
வந்து வணங்கி வன்றொண்டன்
ஒன்று முணர்வால் நமைப்போற்றி
யுரைசேர் பதிகம் பாடுதலான்
நின்று கேட்டு வரத்தாழ்த்தோ
மென்றா ரவரை நினைப்பிப்பார். (சச)

(536) என்னே யடியார்க் கிவரருளுங்
கருணை யிருந்த வாறென்று
பொன்னேர் சடையார் திருநடஞ்செய்
புலியூர்ப் பொன்னம் பலமிறைஞ்சித்

535. அவரை நினைப்பிப்பார் – தமபேரடியாரான ஆரூருடைய நம்பியை சேரமான்பெருமாளுக்கு உணர்த்த விரும்பியவர்; நினைப்பிப்பார் தாழ்த்தோம் என்றார் என்க.

536. நீர் நாடு – சோணாடு.

தன்னே ரில்லா வன்றொண்டர்
தமையுங் காண்ப னெனவிரும்பி
நன்னீர் நாட்டுச் செலநயந்தார்
நாமச் சேரர் கோமானார்.

(537) பொன்னார் மெளலிச் சேரலனார்
போற்று மமைச்சர்க் கீதியம்பி
நன்னாட் கொண்டு பெரும்பயண
மெழுக வென்று நலஞ்சாற்ற
மின்னா ரயில்வேற் குலமறவர்
வென்றி நிலவுஞ் சிலைவீரர்
அந்நாட் டுள்ளா ரடையநிரந்
தணைந்தார் வஞ்சி யகநகர்வாய். (சசு)

(538) இட்ட நன்னா ளோரையினி
லிறைவர் திருவஞ் சைக்களத்து
மட்டு விரிபூங் கொன்றையினார்
தம்மை வலங்கொண் டிறைஞ்சிப்போய்ப்
பட்ட நுதல்வெங் களியானைப்
பிடர்மேற் கொண்டு பனிமதியந்
தொட்ட கொடிமா ளிகைமூதூர்
கடந்தா ருகியர் தோன்றலார். (சஎ)

---

537. வஞ்சியகநகர் – வஞ்சிநகரின் அகமென்க. கொடுங்கோளூர்க்கு வஞ்சி யென்ற பெயர், இடைக்காலத்து வழக்கே என்பது சேக்கிழார்க்கு முன் அவ்வழக்கு இலக்கிய சாஸனங்களிற் பயிலாமையால் உணரத்தகும்.

538. கொடுங்கோளூர் வஞ்சியும், திருவஞ்சைக் களமும் வேறு வேறானவை என்பது இப்பாட்டாலும் விளக்கமாகும்.

(539) யானை யணிகள் பரந்துவழி
யெங்கு நிரந்து செல்லுவன
மான மலைநாட் டினின்மலிந்த
மலைக ளுடன்போ துவபோன்ற
சேனை வீரர் புடைபரந்து
செல்வ தங்கண் மலைசூழ்ந்த
கான மடைய வுடன்படர்வ
போலுங் காட்சி மேவினதால். (சஅ)

(540) புரவித் திரள்க ளாயோகப்
பொலிவி னசைவிற் போதுவன
அரவச் சேனைக் கடற்றரங்க
மடுத்து மேன்மே லடர்வனபோல்
விரவிப் பரந்து சென்றனவால்
மிசையு மவலு மொன்றாக
நிரவிப் படர்ந்த நெடுஞ்சேனை
நேமி நெளியச் சென்றனவால். (சக)

(541) அந்நாட் டெல்லை கடந்தணைய
வமைச்சர்க் கெல்லாம் விடையருளி
மின்னார் மணிப்பூண் மன்னவனார்
வேண்டு வாரை யுடன்கொண்டு

---

539. யானைப்படையும் காலாட்படையும் செல்லுங் காட்சி, மலை நாட்டுள்ள குன்றுகளும், அக்குன்றுகளைச் சூழ்ந்த காடுகளும் ஒருங்குசெல்வதை ஒத்தது என்றவாறு.

540. ஆயோகம் - சமுதாயம், தொகுதி; குதிரைகளின் சமுதாய சோபையாலும் அசைவாலும் கடலலைகள் அடுத்தடுத்து மேன்மேல் அடர்வன போன்றன எ-று. மிசையும் அவலும் - மேடும் பள்ளமும். நேமி - பூமி.

கொன்று ரயில்வேன் மறவர்பயில்
கொங்கர் நாடு கடந்தருளிப்
பொன்னாட் டவரு மணைந்தாடும்
பொன்னி நீர்நாட் டிடைப்போவார். (௫௰)

(542) சென்ற திசையிற் சிவனடியார்
சிறப்பி னோடு மெதிர்கொள்ளக்
குன்றுங் கானு முடைக்குறும்ப
ரிடங்க டோறுங் குறைவறுப்பத்
துன்று முரம்புங் கான்யாறுந்
துறுகற் சுரமும் பலகடந்து
வென்றி விடையா ரிடம்பலவு
மேவிப் பணிந்து செல்கின்றார். (௫௧)

(543) பொருவில் பொன்னித் திருநதியின்
கரைவந் தெய்திப் புனிதநீர்
மருவுந் தீர்த்த மகிழ்ந்தாடி
மருங்கு வடபாற் கரையேறித்
திருவிற் பொலியுந் திருப்புலியூர்ச்
செம்பொன் மன்று ணடம்போற்ற
உருகு மனத்தி னுடன்சென்றா
ரொழியா வன்பின் வழிவந்தார். (௫௨)

(544) வந்து தில்லை மூதூரி
னெல்லை வணங்கி மகிழ்ச்சியினால்
அந்த ணாளர் தொண்டர்குழா
மணைந்த போதி னெதிர்வணங்கிச்

---

542. குறும்பர் - குறும்பு செலுத்துந் தலைவர்கள். குறைவறுத்தல் - வேண்டியவர்க்கு ஒன்றுங் குறைவில்லாமல் உதவுதல்; குறையறுத்தல் என்றும் பாடம்; "சோறுந் தண்ணீருங் குறையறுத்துக்கொண்டி ருக்குமாபோலே" என்பது ஈடு (9 - 3 - 1). முரம்பு - வன்னிலம்.

சந்த விரைப்பூந் திருவீதி
யிறைஞ்சித் தலைமேற் கரமுகிழ்ப்பச்
சிந்தை மகிழ வெழுநிலைக்கோ
புரத்தை யணைந்தார் சேரலனார். (நக)

(545) நிலவும் பெருமை யெழுநிலைக்கோ
புரத்தின் முன்னர் நிலத்திறைஞ்சி
மலருங் கண்ணீர்த் துளிததும்பப்
புகுந்து மணிமா ளிகைவலங்கொண்
டுலகு விளக்குந் திருப்பேரம்
பலத்தை வணங்கி யுள்ளணைந்தார்
அலகி லண்ட மளித்தவர்நின்
றாடுந் திருச்சிற் றம்பலமுன். (நச)

(546) அளவி லின்பப் பெருங்கூத்த
ராட வெடுத்த கழல்காட்ட
உளமும் புலமு மொருவழிச்சென்
றுருகப் போற்றி யுய்கின்றார்
களனில் விடம்வைத் தளித்தவமு
தன்றி மன்றிற் கழல்வைத்து
வளருந் திருக்கூத் தமுதுலகுக்
களித்த கருணை வழுத்தினார். (நரு)

(547) ஆரா வாசை யானந்தக்
கடலுட் டிளைத்தே யமர்ந்தருளால்
சீரார் வண்ணப் பொன்வண்ணத்
திருவந் தாதி திருப்படிக்கீழ்ப்

---

545. "சிற்றம் பலமுந் திருப்பெரும்பே ரம்பலமும்" என்றார் கூத்தரும் (மூவருலா).

547. திருப்படி – திருவணுக்கன்திருவாயிற் படியின் கீழ். பொன் வண்ணத்தந்தாதியை இந்நூலின் 55—111 –ஆம் பக்கங்களுட் காண்க. கார் ஆன் நிகர்க்க அரிய – மேகமும் காமதேனுவும் ஒப்பாகாத.

பாரா தரிக்க வெடுத்தேத்திப்
பணிந்தார் பருவ மழைபொழியுங்
காரா னிகர்க்க வரியகொடைக்
கையார் கழறிற் றறிவார்தாம். (௫௬)

(548) தம்பி ரானுர்க் கெதிர்நின்று
தமிழ்ச்சொன் மாலை கேட்பிக்க
உம்பர் வாழ நடமாடு
மொருவ ரதற்குப் பரிசிலெனச்
செம்பொன் மணிமன் றினிலெடுத்த
செய்ய பாதத் திருச்சிலம்பின்
இம்பர் நீட வெழுந்தவொலி
தாமு மெதிரே கேட்பித்தார். (௫௭)

(549) ஆடற் சிலம்பி னொலிகேட்பா
ரளவி லின்ப வானந்தங்
கூடப் பெற்ற பெரும்பேற்றின்
கொள்கை வாய்ப்பக் கும்பிடுவார்
நீடப் பணியுங் காலமெல்லா
நின்று தொழுது புறம்போந்து
மாடத் திருமா ளிகைவீதி
வணங்கிப் புறத்து வைகினர். (௫௮)

---

548. திருவந்தாதிக்குப் பரிசிலாக எடுத்தபாதச் சிலம்பொலியான பேரின்பத்தை இறைவன் அளித்தார் என்பதாம்.

549. ஆனந்தங் கூடப்பெற்ற பெரும்பேறுவது, நேரில் தெரிசியாதே கேள்வியளவில் சித்தமும் தமக்கு அளித்தருளிய சிலம்பொலியை இன்று நேரிற் காணவும் கேட்கவும் பெற்ற பெரும்பேறுகும். கூடப்பெற்ற — அதிகமாக அடைந்த. கொள்கை — தன்மை. பணியுங் காலமெல்லாம் என்றது திருக்காப்புச் சாத்துமளவும் என்க.

(550) பரவுந் தில்லை வட்டத்துப்
பயில்வார் பைம்பொ னம்பலத்துள்
அரவும் புனலுஞ் சடையாட
வாடு வார்கூத் தாராமை
விரவுங் காதல் மிக்கோங்க
வேதம் படியுந் திருப்படிக்கீழ்
இரவும் பகலும் பணிந்தேத்தி
யின்பஞ் சிறக்கு மந்நாளில். (ருகூ)

(551) ஆடும் பெருமான் பாடல்கேட்
டருளித் தாழ்த்த படிதமக்குக்
கூடும் பரிசால் முன்பருளிச்
செய்த நாவ லூர்க்கோவை
நீடும் பெருங்கா தலிற்காண
நிறைந்த நினைவு நிரம்பமால்
தேடும் பாத ரருளினாற்
றிருவா ரூர்மேற் செலவெழுந்தார். (கூ0)

(552) அறிவி னெல்லை யாயதிருத்
தில்லை யெல்லை யமர்ந்திறைஞ்சிப்
பிறிவி லாத திருவடியைப்
பெருகு முள்ளத் தினிற்பெற்றுச்

---

550. தில்லை வட்டம் — தில்லைக் கோயிற் பிராகாரம்; தில்லை எல்லையுமாம்.

551. பாடல் கேட்டருளித் தாழ்த்தபடியை 44-ம் செய்யுளால் அறிக. அருளிச் செய்த — (ஆடும்பெருமானால்) முன்பருளிச்செய்யப்பட்ட.

552. அறிவினெல்லை — பரஞானம் சென்றடையும் முடிவிடம்.

செறியு ஞான போனகர்வந்
தருளும் புகலி சென்றிறைஞ்சி
மறிசேர் கரத்தார் கோயில்பல
வணங்கி மகிழ்ந்து வழிக்கொள்வார். (சுக)

(553) வழியிற் குழியிற் செழுவயலின்
மதகின் மலர்வா விகளின்மடுச்
சுழியிற் றரளந் திரைசொரியுந்
துறைநீர்ப் பொன்னி கடந்தேறி
விழியிற் றிகழுந் திருநுதலார்
விரும்பு மிடங்க ளிறைஞ்சியுகக்
கழிவிற் பெருவெள் ளமுங்கொள்ளாக்
கழனி யாரூர் கண்ணுற்றார். (சுஉ)

(554) நம்பி தாமு மந்நாட்போய்
நாகைக் காரோ ணம்பாடி
அம்பொன் மணிப்பூ ணவமணிக
ளாடை சாந்த மடற்பரிமா
பைம்பொற் சுரிகை முதலான
பெற்று மற்றும் பலபதியில்
தம்பி ரானைப் பணிந்தேத்தித்
திருவா ரூரிற் சார்ந்திருந்தார். (சுஙூ)

---

ஞானபோனகர் — ஞானப்பால் அமுதுசெய்யப்பெற்ற ஆளுடைய பிள்ளையார். புகலி — சீகாழி.

553. யுகக் கழிவு — ஊழியிறுதி. ஊழிவெள்ளங் கொள்ளாதது என்று திருவாரூரின் அழிவில்லாமை கூறியவாறு.

554. காரோணம் — காயாரோகணம். பொன்மணிப்பூண் முதலியன ஆளுடையநம்பிகள் பெற்றவாற்றை, "பத்தூர்புக்கு" என்னும் நாகைக் காரோணப் பதிகத்தால் அறிக.

(555) வந்து சேரர் பெருமானார்
மன்னுந் திருவா ரூரெய்த
அந்த ணாளர் பெருமானு
மரசர் பெருமான் வரப்பெற்றுச்
சிந்தை மகிழ வெதிர்கொண்டு
சென்று கிடைத்தார் சேரலனார்
சந்த விரைத்தார் வன்றொண்டர்
முன்பு விருப்பி னுடன்றாழ்ந்தார். (௬௪)

(556) முன்பு பணிந்த பெருமானைத்
தாமும் பணிந்து முகந்தெடுத்தே
அன்பு பெருகத் தழுவவிரைந்
தவரு மார்வத் தொடுதழுவ
இன்ப வெள்ளத் திடைநீந்தி
யேற மாட்டா தலைவார்போல்
என்பு முருக வுயிரொன்றி
யுடம்பு மொன்று மெனவிசைந்தார். (௬௫)

(557) ஆன நிலைமை கண்டதிருத்
தொண்ட ரளவில் மகிழ்வெய்த
மானச் சேரர் பெருமானார்
தாமும் வன்றொண் டருங்கலந்த

555. கிடைத்தார் - அணுகினர்.

556. பெருமாள் - சேரமான் பெருமாள்.

557. சுந்தரமூர்த்தி நாயனார்க்குத் 'தம்பிரான் தோழர்' (சிவபிரானுக்கு நண்பர் - பெரியபு, தடுத்தாட். 71) என்பதுபோலச் 'சேரமான்றோழர்' என்ற சிறப்புப் பெயரும் வழங்கிவந்தமை காண்க. முனைப்பாடி வேந்தர் - ஆளுடைய நம்பிகள்.

பான்மை நண்பாற் சேரமான்
தோழ ரென்று பார்பரவும்
மேன்மை நாமம் முனைப்பாடி
வேந்தர்க் காகி விளங்கியதால். (௬௬)

(558) ஒருவ ரொருவ ரிற்கலந்த
வுணர்வா லின்ப மொழியுரைத்து
மருவ வினியார் பாற்செய்வ
தென்ற மென்னு மகிழ்ச்சியினாற்
பருவ மழைச்செங் கைபற்றிக்
கொண்டு பரமர் தாள்பணியத்
தெருவ நீங்கிக் கோயிலினுட்
புகுந்தார் சேர மான்றோழர். (௬௭)

(559) சென்று தேவா சிரியனைமுன்
னிறைஞ்சித் திருமா ளிகைவலங்கொண்
டொன்று முள்ளத் தொடுபுகுவா
ருடைய நம்பி முன்னாக
நின்று தொழுது கண்ணருவி
வீழ நிலத்தின் மிசைவீழ்ந்தே
என்று மினிய தம்பெருமான்
பாத மிறைஞ்சி யேத்தினார். (௬௮)

---

558. "உணர்ச்சிதா னட்பாங் கிழமை தரும்" என்பவாகலின், 'ஒருவரொருவரிற் கலந்த வுணர்வால்' என்றார். மருவவினியார்க்குச் செய்யுங் கைம்மாறு, பரமர்தாள் பணிவித்தலே என்று கருதினார் என்றவாறு. தெருவம் - தெரு; 'உருவச் செங்கொடி தெருவத்துப் பரப்பி' (பெருங்கதை) என்ப.

559. தேவாசிரயன் - திருவாரூர் ஆலயத்துள்ள ஆயிரக் கால் மண்டபம். உடைய நம்பி - ஆளுடைய நம்பிகள்; 'உடைய பிள்ளை' என்பது போல.

(560) தேவர் முனிவர் வந்திறைஞ்சுந்
தெய்வப் பெருமாள் கழல்வணங்கி
மூவர் தமக்கு முதலாகு
மவரைத் திருமும் மணிக்கோவை
நாவ லூரர் தம்முன்பு
நன்மை விளங்கக் கேட்பித்தார்
தாவில் பெருமைச் சேரலனார்
தம்பி ரானார் தாங்கொண்டார். (௬௯)

(561) அங்க ணருள்பெற் றெழுவாரைக்
கொண்டு புறம்போந் தாரூரர்
நங்கை பரவை யார்திருமா
ளிகையில் நண்ண நன்னுதலார்
பொங்கு விளக்கும் நிறைகுடமும்
பூமா லைகளும் புகையகிலும்
எங்கு மடவா ரெடுத்தேந்த
வணைந்து தாமு மெதிர்கொண்டார். (௭0)

(562) சோதி மணிமா ளிகையின்கட்
சுடரும் பசும்பொற் காலமளி
மீது பெருமாள் தமையிருத்தி
நம்பி மேவி யுடனிருப்பக்

---

560. முதலாகுமவரைச் சேரலனார் நாவலூரர்தம் முன்பு மும்மணிக்கோவை கேட்பித்தார் என இயையும். திருமும்மணிக்கோவை — திருவாரூர் மும்மணிக் கோவை; இப்பிரபந்தத்தை இந்நூலின் 117-ம் பக்கமுதற் காண்க.

561. நங்கை பரவையார் — பரவை நாச்சியார். நிறை குடம் — பூர்ண கும்பம்.

562. அமளி — தவிசு, பீடம். பூசனை — வழிபாடு.

கோதில் குணத்துப் பரவையார்
 கொழுந ரூர்க்குந் தோழர்க்கும்
நீதி வழுவா வொழுக்கத்து
 நிறைபூ சனைகள் முறையளித்தார். (எக)

(563) தாண்டும் புரவிச் சேரர்குலப்
 பெருமாள் தமக்குத் திருவமுது
தூண்டுஞ் சோதி விளக்கனையா
 ரமைக்கத் துணைவர் சொல்லுதலும்
வேண்டும் பரிசு வெவ்வேறு
 விதத்துக் கறியும் போனகமும்
ஈண்டச் சமைப்பித் துடன்வந்தார்க்
 கெல்லா மியல்பின் விருந்தமைத்தார். (எஉ)

(564) அரசர்க் கமைத்த சிறப்பினுமே
 லடியார்க் கேற்கும் படியாக
விரவிப் பெருகு மன்பினுடன்
 விரும்பு மமுது சமைத்ததற்பின்
புரசைக் களிற்றுச் சேரலனூர்
 புடைசூழ்ந் தவரோ டமுதுசெயப்
பரவைப் பிறந்த திருவனைய
 பரவை யார்வந் தறிவித்தார். (எங)

563. துணைவர் — சுந்தரமூர்த்திகள். வேண்டும்பரிசு — அரசர்க் கேற்ற முறை. ஈண்ட — விரைவாக.

564. அரசரினும் மேல் அடியார்க்கு ஏற்கும்படியாக என்றது, அரசர்க்கும் அடியார்க்கும் அமைத்த அமுதமுறை வேறேயொழிய, சமைத்த பக்குவமுறை அரசரினும் அடியார்க்குக் குறைவற்றிருந்த தென்றபடி. பரவை — பாற்கடல்.

(565) சேரர் பெருமா னெழுந்தருளி
யமுது செய்யச் செய்தவத்தால்
தாரின் மலிபூங் குழன்மடவாய்
தாழா தமுது செய்வியெனப்
பாரின் மலிசீர் வன்றொண்ட
ரருளிச் செய்யப் பரிகலங்கள்
ஏரின் விளங்கத் திருத்திக்கா
லிரண்டிற் படியா வேற்றுதலும். (எசு)

(566) ஆண்ட நம்பி பெருமானை
யுடனே யமுது செய்தருள
வேண்டு மென்ன வாங்கவரும்
விரைந்து வணங்கி வெருவுறலும்
நீண்ட தடக்கை பிடித்தருளி
மீண்டு நேரே குறைகொள்ள
ஈண்ட வமுது செய்வதனுக்
கிசைந்தார் பொறையர்க் கிறையவனார். (எஎ)

(567) ஒக்க வமுது செய்தருள
உயர்ந்த தவத்துப் பரவையார்
மிக்க விருப்பா லமுதுசெய்வித்
தருளி மேவும் பரிசனங்கள்

---

565. பரிகலங்கள் - உண்கலங்கள். திருத்துதல் - சுத்தி செய்தல். கால் - பீடம். பீடமிரண்டில் இரண்டு பரிகலங்களை ஒப்ப மேலேற்றி வைத்தார் எ-று. இவ்வாறு வைத்தது தம் கொழுநர், அவர்தம் தோழர் இருவர்க்கும் என்க.

566. உடனே - தம்மோடுகூட. வெருவுறல் - அச்ச முறுதல். இவ்வச்சம் தாம் அரசவருணமும் நாயனார் அந்தணவருணமும் ஆதலால், இருவரும் உடனுண்டற்கண் சேரர்க்கு உண்டாயதாம். குறை கொள்ள - வேண்டிக் கொள்ள.

567. ஒக்க - ஒத்தபடியாக உடனிருந்து. பரிசனங்கள் - சேரமான்

தக்க வகையா லறுசுவையுந்
தாம்வேண் டியவா றினிதருந்தத்
தொக்க மகிழ்ச்சி களிசிறப்பத்
தூய விருந்தின் கடன்முடித்தார். (எசு)

(568) பனிநீர் விரவு சந்தனத்தின்
பசுங்கர்ப் பூர விரைக்கலவை
வனிதை யவர்கள் சமைத்தெடுப்பக்
கொடுத்து மகிழ்மான் மதச்சாந்தும்
புனித நறும்பூ மாலைகளும்
போற்றிக் கொடுத்துப் பொற்கொடியார்
இனிய பஞ்ச வாசமுட
னடைக்கா யமுது மேந்தினார். (எஎ)

(569) ஆய சிறப்பிற் பூசனைக
ளளித்த வெல்லா மமர்ந்தருளித்
தூய நீறு தங்கள்திரு
முடியில் வாங்கித் தொழுதணிந்து
மேய விருப்பி னுடனிருப்பக்
கழறிற் றறிவார் மெய்த்தொண்டின்
சேய நீர்மை அடைந்தாராய்
நம்பி செம்பொற் கழல்பணிந்தார். (எஅ)

---

பெருமாள் பரிவாரங்கள். மகிழ்ச்சி — உணர்ச்சி யிழந்த உவகை. களி — உணர்ச்சி யிழவாத உவகை; "உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலும், கள்ளுக்கில் காமத்திற் குண்டு" என்பதுங் காண்க.

568. வனிதையவர்கள் — தாதியர். பஞ்சவாசம் — 'தக்கோல மேலஞ் தகைசா லிலவங்கம் - கர்ப்பூரஞ் சாதியோ டைந்து' என்ப. அடைக்கா யமுது — தாம்பூலம்.

569. ஆளுடைய நம்பிகளின் அரிய நட்பு இப்போது வாய்க்கப்

(570) மலைநாட் டரசர் பெருமானார்
வணங்க வணங்கி யெதிர்தழுவிக்
கலைநாட் பெருகு மதிமுகத்துப்
பரவை யார்தங் கணவனார்
சிலைநாட் டியவெல் கொடியாரைச்
சேரத் தந்தா ரெனக்கங்கை
யலைநாட் கொன்றை முடிச்சடையா
ரருளே போற்றி யுடனமர்ந்தார். (எகூ)

(571) செல்வத் திருவா ரூர்மேவுஞ்
செம்பொற் புற்றி லினிதமர்ந்த
வில்வெற் புடையார் கழல்வணங்கி
வீதி விடங்கப் பெருமானை
மல்லற் பவனி சேவித்து
வாழ்ந்து நாளு மனமகிழ்ந்து
சொல்வித் தகர்தா மிருவர்களுந்
தொடர்ந்த காத லுடன்சிறந்தார். (அம)

---

பெற்றமையால் 'மெய்த்தொண்டின் சேய நீர்மை அடைந்தாராய்' என்றார். சேயநீர்மையடைதலாவது, மெய்த்தொண்டுக்கு விலகநின்ற நீர்மை நீங்கிக் கிட்டப்பெற்றதாகும். விலகநின்றது, ஆளுடைய நம்பிகளைக் காணாதிருந்தமை என்க. சிலைநாட்டிய வெல்கொடியார் – சேரமான் பெருமாள்.

570. சேரத் தந்தவர், சடையார் என்க. சேரத் தருதல் - நட்பால் உடன்கூடச் செய்தல்.

571. புற்று – வன்மீகம். வில் வெற்பு – மேருவாகிய வில். வீதி விடங்கர் – தியாகேசர். சொல் வித்தகர் – சொற்செறிவமைந்த பாடல்வல்லவர். பவனியிற் சேவித்து என்க.

(572) இவ்வா றெழுகு நாளின்க
ணிலங்கு மணிப்பூண் வன்றொண்டர்
மைவாழ் களத்து மறையவனார்
மருவு மிடங்கள் பலவணங்கிச்
செய்வார் கன்னித் தமிழ்நாட்டுத்
திருமா மதுரை முதலான
மொய்வார் சடையார் மூதூர்க
ளிறைஞ்ச முறைமை யாணினைந்தார். (அக)

(573) சேரர் பிரானு மாரூரர்
தம்மைப் பிரியாச் சிறப்பாலும்
ஆர்வம் பெருகத் தமக்கன்று
மதுரை யால வாயமர்ந்த
வீர ரளித்த திருமுகத்தால்
விரும்பு மன்பின் வணங்குதற்குச்
சார வெழுந்த குறிப்பாலுந்
தாமு முடனே செலத்துணிந்தார். (அ௨)

(574) இருவர் திருவுள் ளமுமிசைந்த
பொழுதி லெழுந்து திருவாரூர்
ஒருவர் மலர்த்தாள் புக்கிறைஞ்சி
யுடன்பாட் டருளாற் போந்தருளி
மருவு முரிமைப் பெருஞ்சுற்றம்
வரம்பில் பணிகள் வாகனங்கள்
பொருவில் பண்டா ரங்கொண்டு
போது வார்க ளுடன்போத. (அ௩)

---

572. மறையவனார் – சிவபிரான். செய் வார் – வயல்கள் நீடிய.

573. சிறப்பாலும் குறிப்பாலும் செல்லத் துணிந்தா ரெனவும், அளித்த திருமுகத்தால் வணங்குதற்கு எழுந்த குறிப்பாலும் எனவும் இயையும்.

574. ஒருவர் – ஒப்பற்ற கடவுள். உரிமைப் பெருஞ்சுற்றம் – அரச ரது சுற்றத்தார் பரிவாரங்கள்.

(575) சேவித் துணையும் பரிசனங்கள்
சூழத் திருவா ரூரிறைஞ்சிக்
காவிற் பயிலும் புறம்பணையைக்
கடந்து போந்து கீழ்வேளூர்
மேவிப் பரமர் கழல்வணங்கிப்
போந்து வேலைக் கழிக்கானற்
பூவிற் றிகழும் பொழில்நாகை
புகுந்து காரோ ணம்பணிந்தார். (௮௪)

(576) திருக்கா ரோணச் சிவக்கொழுந்தைச்
சென்று பணிந்து சிந்தையினை
உருக்கார் வச்செந் தமிழ்மாலை
சாத்திச் சின்னா ளுறைந்துபோய்ப்
பெருக்கா றுலவு சடைமுடியா
ரிடங்கள் பிறவும் பணிந்தேத்தி
அருட்கா ரணர்தந் திருமறைக்கா
டணைந்தார் சேர ராரூரர். (௮௫)

(577) முந்நீர் வலங்கொள் மறைக்காட்டு
முதல்வர் கோயில் சென்றிறைஞ்சிச்
செந்நீர் வாய்மைத் திருநாவுக்
கரசும் புகலிச் சிவக்கன்றும்

---

575. புறம்பணை - நகர்ப்புறம். காரோணம் - நாகைச் சிவாலயம்.

576. சேரர் ஆரூரர், உம்மைத்தொகை.

577. திருநாவுக்கரசும் புகலிச் சிவக்கன்றும் முறையே திறக்கவும் அடைக்கவும் பாடிய செய்திகளைத் தேவாரம் பெரியபுராணங்களால் உணர்க. அந்நேர் திருவாயில் - சன்னிதிக் கெதிரேயமைந்த அத்திருவாயில். நாயன்மார் - முற்கூறிய அடியார்கள்.

அந்நேர் திறக்க வடைக்கவெனப்
பாடுந் திருவா யிலையணைந்து
நன்னீர் பொழியும் விழியினராய்
நாயன் மாரை நினைந்திறைஞ்சி. (அசு)

(578) நிறைந்த மறைக ளர்ச்சித்த
நீடு மறைக்காட் டருமணியை
யிறைஞ்சி வீழ்ந்து பணிந்தெழுந்து
போற்றி யாழைப் பழித்தென்னும்
அறைந்த பதிகத் தமிழ்மாலை
நம்பி சாத்த வருட்சேரர்
சிறந்த வந்தா தியிற்சிறப்பித்
தனவே யோதித் திளைத்தெழுந்தார். (அஎ)

(579) எழுந்து பணிந்து புறத்தெய்தி
யிருவர் பெருந்தொண் டருஞ்சிலநாட்
செழுந்தண் பழனப் பதியதனு
ளமர்ந்து தென்பால் திரைக்கடல்நஞ்
சழுந்து மிடற்று ரகத்தியான்
பள்ளி யிறைஞ்சி யவிர்மதியக்
கொழுந்து வளர்செஞ் சடைக்குழகர்
கோடிக் கோயில் குறுகினர். (அஅ)

---

578. நம்பி – சுந்தரமூர்த்திகள். அந்தாதியிற் சிறப்பித்தன – பொன் வண்ணத்தந்தாதியுள் "துயருந் தொழுமழும்" (37), "கொட்டுஞ்சிலபல" (47) என்ற பாசுரங்கள்.

579. கோடிக்குழகர் கோயில், திருமறைக்காட்டின் தென்பால் உள்ளது.

(580) கோடிக் குழகர் கோயிலயற்
குடிக ளொன்றும் புறத்தெங்கும்
நாடிக் காணு துள்புக்கு
நம்பர் பாதந் தொழுதுள்ளம்
வாடிக் கடிதாய்க் கடற்காற்றென்
றெடுத்து மலர்க்கண் ணீர்வாரப்
பாடிக் காடு காள்புணர்ந்த
பரிசும் பதிகத் திடைவைத்தார். (அகூ)

(581) அங்கு வைகிப் பணிந்தருளாற்
போவா ரகன்சோ ணாட்டரனார்
தங்கு மிடங்கள் வணங்கிப்போய்ப்
பாண்டி நாடு தனைச்சார்ந்து
திங்கண் முடியார் திருப்புத்தூ
ரிறைஞ்சிப் போந்து சேண்விளங்கு
மங்குல் தவழு மணிமாட
மதுரை மூதூர் வந்தணைந்தார். (கூ0)

வேறு

(582) சேரமான் தோழரும்மச் சேரனு ரும்பணிப்பூண்
ஆரமார் பரைமதுரை யாலவா யினில்வணங்க
வாரமா வந்தணைய வழுதியார் மனக்காதல்
கூரமா நகர்கோடித் தெதிர்கொண்டு கொடுபுக்கார், (கூக)

---

580. காடுகாள் – காடுகிழாள், துர்க்கை; "கையார்வளைக் காடுகாளோடு முடனாய்க், கொய்யார் பொழிற் கோடியே கோயில் கொண்டாயே" (5) எனக் காடுகாள்புணர்ந்த பரிசு பாடப்பட்டமை காண்க.

582. மதுரையாலவாய் – மதுரையிலுள்ள சிவதலம், மகோதை அஞ்சைக்களம் என்பதுபோல. கோடித்தல் – அலங்கரித்தல்.

(583) தென்னவர்கோன் மகளாரைத் திருவேட்டு முன்னரே
தொன்மதுரை நகரின்க ணினிதிருந்த சோழனார்
அன்னவர்க ளுடன்கூட வணையவவ ருங்கூடி
மன்னுதிரு வாலவாய் மணிக்கோயில் வந்தணைந்தார். (கூஉ)

(584) திருவால வாயமர்ந்த செஞ்சடையார் கோயில்வலம்
வருவார்முன் வீழ்ந்திறைஞ்சி வன்றொண்டர் வழித்தொண்டு
தருவாரைப் போற்றிசைத்துத் தாழ்ந்தெழுந்து வாழ்ந்தமிழ்ப்
பெருவாய்மை மலர்புனைந்து பெருமகிழ்ச்சி பிறங்கினார். (கூங)

(585) படியேறு புகழ்ச்சேரர் பெருமானும் பார்மிசைவீழ்ந்
தடியேனைப் பொருளாக வளித்ததிரு முகக்கருணை
முடிவேதென் றுணர்ந்திலே னெனமொழிகள் தடுமாறக்
கடியேறு கொன்றையார் முன்பரவிக் களிகூர்ந்தார். (கூச)

(586) செம்பியனா ருடன்செழியர் தாம்பணிந்து சேரருடன்
நம்பியுமுன் புறத்தணைய நண்ணியபே ருவகையால்
உம்பர்பிரான் கோயிலினின் றுடன்கொடுபோ யிருவர்க்கும்
பைம்பொன்மணி மாளிகையிற் குறைவறுத்தார் பஞ்சவனார்.

---

583. திருவேட்டல் – திருமணம் புரிதல்.

584. வழித்தொண்டு தருவார் – பரம்பரையாகத் தம்மை ஆட்கொண்ட ஈசன். வாய்மை – சொல். வாய்மைமலர், ஆகுபெயராற் பாமாலைக் காயிற்று.

585. திருமுகமளித்த கருணைக்கு அளவில்லாமையால் ‘முடிவேதென் றுணர்ந்திலேன்’ என்றார்.

586. குறைவறுத்தல் – உபசரணைகளைக் குறைவின்றிச் செய்தல். பஞ்சவனார் – பாண்டியவரசர்.

(587) உளமகிழக் கும்பிட்டங் குறையுநா ளுதியருடன்
இளரொளிப்பூண் வன்றொண்டர் தாமிருந்த விடங்கெழுமி
வளவனார் மீனவனார் வளம்பெருக மற்றவரோ
டளவளா வியவிருப்பா னமர்ந்துகலந் தினிதிருந்தார். (௬௬)

(588) அந்நாளின் மதுரைநகர் மருங்கரனு ரமர்பதிகள்
பொன்னார மணிமார்பிற் புரவலர்மூ வரும்போதச்
செந்நாவின் முனைப்பாடித் திருநாடர் சென்றிறைஞ்சிச்
சொன்மாலை களுஞ்சாத்தித் தொழத்திருப்பூ வணத்தணைந்தார்.

(589) நீடுதிருப் பூவணத்துக் கணித்தாக நேர்செல்ல
மாடுவருந் திருத்தொண்டர் மன்னியவப் பதிகாட்டத்
தேடுமறைக் கரியாரைத் திருவுடையா ரென்றெடுத்துப்
பாடிசையிற் பூவணமீ தோவென்று பகர்ந்தணைந்தார். (௬௮)

(590) சென்றுதிருப் பூவணத்துத் தேவர்பிரான் மகிழ்கோயில்
முன்றில்வலங் கொண்டிறைவர் முன்வீழ்ந்து பணிந்தெழுந்து
நின்றுபர விப்பாடி நேர்நீங்கி யுடன்பணிந்த
வென்றிமுடி வேந்தருடன் போந்தங்கண் மேவினார். (௬௯)

(591) அப்பதியி லமர்ந்திறைஞ்சிச் சிலநாளி லாரூரர்
முப்பெருவேந் தர்களொடு முதன்மதுரை நகரெய்தி
மெய்ப்பரிவிற் றிருவால வாயுடையார் விரைமலர்த்தாள்
எப்பொழுதும் பணிந்தேத்தி யின்புற்றங் கமர்கின்றார். (௭௰)

(592) செஞ்சடையார் திருவாப்ப னூர்திருவே டகமுதலா
நஞ்சணியுங் கண்டரவர் தாநயந்த பதிநண்ணி
எஞ்சலிலாக் காதலினு லினிதிறைஞ்சி மீண்டணைந்து
மஞ்சணையு மதின்மதுரை மாநகரில் மகிழ்ந்திருந்தார். (௭௰௧)

(593) பரமர்திருப் பரங்குன்றிற் சென்றுபார்த் திபரோடும்
புரமெரித்தார் கோயில்வலங் கொண்டுபுகுந் துள்ளிறைஞ்சிச்
சிரமலிமா லைச்சடையார் திருவடிக்கீ ழாட்செய்யும்
அருமைநினைந் தஞ்சுதுமென் றூரூரர் பாடுவார். (௭௰௨)

கோத்திட்டை யென்றெடுத்துக் கோதில்திருப் பதிகவிசை
மூர்த்தியார் தமைவணங்கி முக்கோக்க ளுடன்முன்பே
ஏத்தியவண் டமிழ்மாலை யின்னிசைபா டிப்பரவிச்
சாத்தினார் சங்கரனார் தங்குதிருப் பரங்குன்றில். (௯௩)

(595) இறைவர்திருத் தொண்டுபுரி யருமையினை யிருநிலத்து
முறைபுரியு முதல்வேந்தர் மூவர்களுங் கேட்டஞ்சி
மறைமுந்நூல் மணிமார்பின் வன்றொண்டர் தமைப்பணிந்தார்
நிறைதவத்தோ ரப்பாலும் நிருத்தர்பதி தொழநினைந்தார். (௯௪)

(596) அந்நாட்டுத் திருப்பதிகள் பலவுமணைந் திறைஞ்சமலை
நன்னாட்டு வேந்தருடன் நம்பிதா மெழுந்தருள
மின்னாட்டும் பன்மணிப்பூண் வேந்திரு வருமீள்வார்
தென்னாட்டு வேண்டுவன செய்தமைப்பார் தமைவிடுத்தார்.

இருபெருவேந் தருமியல்பின் மீண்டதற்பி னெழுந்தருளும்
பொருவருசீர் வன்றொண்டர் புகழ்ச்சேர ருடன்புலிதர்
மருவியதா னம்பலவும் பணிந்துபோய் மலைச்சாரற்
குருமணிகள் வெயிலெறிக்குங் குற்றாலஞ் சென்றடைந்தார்.

(598) குற்றாலத் தினிதமர்ந்த கூத்தர்குரை கழல்வணங்கிச்
சொற்றும மலர்புனைந்து குறும்பலாத் தொழுதிப்பால்
முற்றுவெண் மதிமுடியார் பதிபணிந்து மூவெயில்கள்
செற்றார்மன் னியசெல்வத் திருநெல்வே லியையணைந்தார். (௯௭)

---

594. 'கோத்திட்டையுங் கோவலும்' என்ற திருப்பதிகத்தின் இறுதிப்பாசுரத்தில் திருப்பரங்குன்றமும் பரவப்படுதல் காண்க.

598. குறும்பலா - குறும்பலாவின்கீழ் அமர்ந்த பெருமான்.

(599) நெல்வேலி நீற்றழகர் தமைப்பணிந்து பாடிநிகழ்
பல்வேறு பதிபிறவும் பணிந்தன்பால் வந்தணைந்தார்
வில்வேட ராய்வென்றி விசயனெதிர் பன்றிப்பின்
செல்வேத முதல்வரமர் திருவிரா மேச்சரத்து. (௱௮)

(600) மன்னுமிரா மேச்சரத்து மாமணியை முன்வணங்கிப்
பன்னுதமிழ்த் தொடைசாத்திப் பயில்கின்றார் பாம்பணிந்த
சென்னியர்மா தோட்டத்துத் திருக்கேதீச் சரஞ்சார்ந்த
சொன்மலர்மா லைகள்சாத்தித் தூரத்தே தொழுதமர்ந்தார். (௱௯)

திருவிரா மேச்சரத்துச் செழும்பவளச் சுடர்க்கொழுந்தைப்
பரிவினால் தொழுதகன்று பரமர்பதி பிறபணிந்து
பெருவிமா னத்திமையோர் வணங்குபெருந் திருச்சுழியல்
மருவினார் வன்றொண்டர் மலைவேந்த ருடன்கூட. (௱௰)

திருச்சுழிய லிடங்கொண்ட செம்பொன்மலைச் சிலையாரைக்
கருச்சுழியில் வீழாமைக் காப்பாரைக் கடல்விடத்தின்
இருட்சுழியு மிடற்றாரை யிறைஞ்சியெதி ரிதழிமலர்ப்
பருச்சுழியத் துடனூறு யுயிரெனும்பா மலர்புனைந்தார்.

(603) அங்கணரைப் பணிந்துறையு மாரூரர்க் கவ்வூரிற்
கங்குலிடைக் கனவின்கட் காளையார் திருவடிவாற்
செங்கையினிற் பொற்செண்டுந் திருமுடியிற் சுழியமுடன்
எங்குமிலாத் திருவேட மென்புருக மூன்காட்டி. (௱௰௨)

---

600. மாதோட்டத்துத் திருக்கேதீச்சரம் — இலங்கைத் தீவிலுள்ள மாதோட்டநகரைச் சார்ந்த திருக்கேதீச்சரம் என்ற சிவாலயம். கடல் கடந்து செல்லக்கூடாமையின் 'தூரத்தே தொழுதமர்ந்தார்' என்றார்.

602. கருச்சுழி — பிறவியென்னும் வெள்ளத்தின் சுழி. இருள் சுழியும் — இருள்போலுங் கருநிறம் கவிந்துள்ள. இதழி — கொன்றை. பரு சுழியம் — பெரிய தலைமாலை; தலையணியுமாம். சுழியத்துடன் பாமலரும் சேர அணிந்தார் என்க.

603. பொற்செண்டு, காளையார் கையிற் கொள்வதுண்டு என்பது

(604) கானப்பேர் யாமிருப்ப தெனக்கழறிக் கங்கையெனும்
வானப்பே ராறுலவு மாமுடியார் தாமகல
ஞானப்பே ராளருணர்ந் ததிசயித்து நாகமுடன்
ஏனப்பே ரெயிறணிந்தா ரருளிருந்த பரிசென்பார். (௬௰௩)

(605) கண்டருளும் படிகழறிற் றறிவார்க்கு மொழிந்தருளிப்
புண்டரிகப் புனற்சுழியற் புனிதர்கழல் வணங்கிப்போய்
அண்டர்பிரான் திருக்கானப் பேரணைவா ராரூரர் [வார்.
தொண்டரடித் தொழலுமெனுஞ் சொற்பதிகத் தொடைபுனை

(606) காளையார் தமைக்கண்டு தொழப்பெறுவ தென்றென்று
தாளைநா ளும்பரவத் தருவார்பாற் சார்கின்றார்
ஆளைநீ ளிடைக்காண வஞ்சியநீர் நாயயலே
வாளைபாய் நுழைப்பழன முனைப்பாடி வளநாடர். (௬௰௬)

(607) மன்னுதிருக் கானப்பேர் வளம்பதியில் வந்தெய்திச்
சென்னிவளர் மதியணிந்தார் செழுங்கோயில் வலங்கொண்டு
முன்னிறைஞ்சி யுள்ளணைந்து முதல்வர்சே வடிதாழ்ந்து
பன்னுசெழுந் தமிழ்மாலை பாடினார் பரவினார். (௬௰௬)

(608) ஆராத காதலுட னப்பதியிற் பணிந்தேத்திச்
சீராருந் திருத்தொண்டர் சிலநாளங் கமர்ந்தருளிக்
காராரு மலர்ச்சோலைக் கானப்பேர் கடந்தணைந்தார்
போரானேற் றூர்கயிலைப் பொருப்பர்திருப் புனவாயில். (௬௰௭)

---

'ஒருசெண்டு சிலுப்பி' என்ற பெரியார் திருவாக்கானும் உணர்க (பெரியதிரு மொழி, 10 – 8 – 2).

604. அருளிருந்த பரிசு என்னே என வருவித்துரைக்க.

606. நாளும் பரவத் தாளைத் தருவார் என்க; என்றது சிவபிரானை. நுழை – பொந்து.

608. ஆனேறு – இடபம். ஆனேற்றூராகிய பொருப்பர் என்க,

(609) புனவாயிற் பதியமர்ந்த புனிதரா லயம்புக்கு
மனவார்வ முறச்சித்த நீங்கினையென் றெடுவென்றே
வினவான தமிழ்பாடி வீழ்ந்திறைஞ்சி யப்பதியிற்
சினவானை யுரித்தணிந்தார் திருப்பாதந் தொழுதிருந்தார். (௬௦௮)

(610) திருப்புனவா யிற்பதியி லமர்ந்தசிவ ஞர்மகிழும்
விருப்புடைய கோயில்பணிந் தருள்பெற்று மேவினர்
பொருப்பிடுைடு கானகன்று புனற்பொன்னி நாடணைந்து
பருப்பதவார் சிலையார்தம் பாம்பணிமா நகர்தன்னில். (௬௦௯)

(611) பாதாளீச் சரமிறைஞ்சி யதன்மருங்கு பலபதியும்
வேதாதி நாதர்கழல் வணங்கிமிகு விரைவினுடன்
சூதாருந் துணைமுலையார் மணிவாய்க்குத் தோற்றிரவு
சேதாம்பல் வாய்திறக்குந் திருவாரூர் வந்தணைந்தார். (௬௧௦)

(612) திருநாவ லூர்வேந்தர் சேரர்குல வேந்தருடன்
வருவாரைத் திருவாரூர் வாழ்வார்க ளெதிர்கொள்ளத்
தருகாத லுடன்வணங்கித் தம்பெருமான் கோயிலினுட்
பெருகார்வத் தொடுவிரும்பும் பெரும்பேறு பெறப்புகுந்தார்.

(613) வாசமலர்க் கொன்றையார் மகிழ்கோயில் வலங்கொண்டு
நேசமுற முன்னிறைஞ்சி நெடும்பொழுதெ லாம்பரவி
ஏசறவால் திருப்பதிக மெடுத்தேத்தி யெழுந்தருளாற்
பாசவினைத் தொடக்கறுப்பார் பயில்கோயில் பணிந்தணைவார்.

(614) பரவையார் மாளிகையிற் பரிசனங்கள் முன்னெய்த
விரவுபே ரலங்கார விழுச்செல்வ மிகப்பெருக
வரவெதிர்கொண் டடிவணங்க வன்றொண்டர் மலைநாட்டுப்
புரவலனு ரையுங்கொண்டு பொன்னணிமா ளிகைபுகுந்தார்.

---

609. வினவு ஆன – கேட்கத்தக்க.

613. ஏசறவால் – விருப்பத்துடன்.

611. பாம்பணிமாநகர் – பாதாளேச்சரம்.

(615) பரவியே பரவையார் பரிவுடனே பணிந்தேத்தி
விரவியபோ னகங்கறிகள் விதம்பலவா கச்சமைத்துப்
பரிகலமும் பாவாடை பகல்விளக்கு முடனமைத்துத்
திருவமுது செய்வித்தார் திருந்தியதேன் மொழியினார். (௬௧௫)

(616) மங்கலமாம் பூசனைகள் பரவையார் செயமகிழ்ந்து
தங்கியினி தமர்கின்றார் தம்பிரான் கோயிலினுட்
பொங்குபெருங் காலமெலாம் புக்கிறைஞ்சிப் புறத்தணைந்து
நங்கள்பிரா னருள்மறவா நல்விளையாட் டினைநயந்தார். (௬௧௬)

(617) நிலைச்செண்டும் பரிச்செண்டும் வீசிநித மகிழ்வெய்தி
விலக்கரும்போர்த் தகர்ப்பாய்ச்சல் கண்டருளி வென்றிபெற
மலைக்குநெடு முட்கணைக்கால் வாரணப்போர் மகிழ்ந்தருளி
அலைக்குமறப் பலபுள்ளி னமர்விரும்பி யமர்கின்றார். (௬௧௭)

வேறு

(618) விரவு காதல் மீக்கூர
மேவு நாள்கள் பலசெல்லக்
கரவி லீகைக் கேரளனார்
தங்கள் கடல்சூழ் மலைநாட்டுப்

---

615. பரிகலம் - உண்கலம்; அரசன்கீழ் விரிபாவாடையும் பக்கத்தே ஏற்றிவைக்கும் பகல்விளக்கும் அரசர் முதலிய பெரியோர்க்கு அமைத்து உபசரித்தல் பண்டை வழக்கு (கலிங்கத்துப் பரணி, 548).

616 'நங்கள்பிரான் தமரவர்கள்' என்றும் பாடம்,

617. செண்டு - ஒருவகை விளையாட்டுக் கருவி; பந்துபோல்வ தென்றும், குதிரைச் சம்மட்டிபோல்வ தென்றும் கூறுவர். நிலைச் செண்டு - நின்றநிலையில் வீசியெறியும் செண்டு பரிச்செண்டு - குதிரையில் ஆரோகித்த படி எறியும் செண்டு; "புரவியிற் பொருவில செண்டாடி" என்றார் கம்பரும் (கம்பரா. நகரப்). ஆட்டுக்கிடாக்களின் போர், கோழிப்போர் முதலியன அரசரும் மக்களும் விரும்பிக்காணும் காட்சிகளாகும்; "கோட்டிளந் தகர்களும்... ...... தோணிக் கோழியாதியா ......... போர் கொளீஇ" (சீவக. 73) என்றார் பிறரும், வாரணம் - கோழி.

பரவை யார்தங் கொழுநனர்
தம்மைப் பணிந்து கொண்டணைவான்
இரவும் பகலுந் தொழுதிரக்க
விசைந்தா ரவரு மெழுந்தருள. (௬௨௭)

(619) நங்கை பரவை யாருள்ளத்
திசைவால் நம்பி யெழுந்தருளத்
திங்கள் முடியார் திருவருளைப்
பரவிச் சேர மான்பெருமாள்
எங்கு முள்ள வடியாருக்
கேற்ற பூசை செய்தருளிப்
பொங்கு முயர்ச்சி யிருவரும்போய்ப்
புக்கார் புனிதர் பூங்கோயில். (௬௨௮)

(620) தம்பி ரானைத் தொழுதருளாற்
போந்து தொண்டர் சார்ந்தணைய
நம்பி யாரு ருஞ்சேரர்
நன்னாட் டரச ராய
பைம்பொன் மணிநீண் முடிக்கழறிற்
றறிவார் தாமும் பயணமுடன்
செம்பொன் நீடு மதிலாரூர்
தொழுது மேல்பாற் செல்கின்றார். (௬௨௯)

---

618. கடல்சூழ் மலைநாடு - மேலைக்கடற்கும் மலைத்தொடர்க்கும் இடைப்பட்ட கேரளநாடு; இந்நாட்டரசர் சிலரை 'அத்ரியப்திசர்' 'குன்றலைக் கோனத்ரி' என்றுகூறும் வழக்கும் ஒப்பிடுக. கொண்டணைவான் - ஆளுடைய நம்பிகளை அழைத்துக்கொண்டு மலைநாடு செல்ல.

619. வேற்றூர் புகுங்கால் அடியாரை உண்டி முதலியவற்றால் உபசரித்துப் புறப்படுவது மரபாதலின் 'அடியாருக்கேற்ற பூசை செய்தருளி' என்றார். உள்ளத்து இசைவு - ஆளுடையநம்பிகள் சேரமானுருடன் மலைநாடு செல்ல இசைந்தமை. பூங்கோயில் - கமலாலயம்.

வேறு

(621) பொன்பரப்பி மணிவரன்றிப் புனல்பரக்குங் காவேரித்
தென்கரைபோய்ச் சிவன்மகிழ்ந்த கோயில்பல சென்றிறைஞ்சி
மின்பரப்புஞ் சடையண்ணல் விரும்புதிருக் கண்டியூர்
அன்புருக்குஞ் சிந்தையுடன் பணிந்துபுறத் தணைந்தார்கள். (௬௨௰)

(622) வடகரையில் திருவையா றெதிர்தோன்ற மலர்க்கரங்கள்
உடலுருக வுள்ளுருக வுச்சியின்மேற் குவித்தருளிக்
கடல்பரந்த தெனப்பெருகுங் காவிரியைக் கடந்தேறித்
தொடர்புடைய திருவடியைத் தொழுவதற்கு நினைவுற்றார்.

வேறு

(623) ஐயா றதனைக் கண்டுதொழு
தருளா ரூரர் தமைநோக்கிச்
செய்யாள் பிரியாச் சேரமான்
பெருமா ளருளிச் செய்கின்றார்
மையார் கண்டர் மருவுதிரு
வையா றிறைஞ்ச மனமுருகி
நையா நின்ற திவ்வாறு
கடந்து பணிவோம் நாமென்ன. (௬௨௨)

(624) ஆறு பெருகி யிருகரையும்
பொருது விசும்பி லெழுவதுபோல்
வேறு நாவா யோடங்கள்
மீது செல்லா வகைமிகைப்ப
நீறு விளங்குந் திருமேனி
நிருத்தர் பாதம் பணிந்தன்பின்
ஆறு நெறியாச் செலவுரியார்
தரியா தழைத்துப் பாடுவார். (௬௨௩)

---

624. மிகைப்ப - மிகுதலால். அன்பின் ஆறு நெறியா - பத்தி யாகிய பெருக்காறு வழியாக.

(625) பரவும் பரிசென் றெடுத்தருளிப்
பாடுந் திருப்பாட் டின்முடிவில்
அரவம் புனைவார் தமையையா
றுடைய வடிக ளோவென்று
விரவும் வேட்கை யுடனழைத்து
விளங்கும் பெருமைத் திருப்பதிகம்
நிரவு மிசையில் வன்றொண்டர்
நின்று தொழுது பாடுதலும். (௱௩௰௪)

(626) மன்றில் நிறைந்து நடமாட
வல்லார் தொல்லை யையாற்றிற்
கன்று தடையுண் டெதிரழைக்கக்
கதறிக் கனைக்கும் புனிற்றுப்போல்
ஒன்று முணர்வாற் சராசரங்க
ளெல்லாங் கேட்க ஓலமென
நின்று மொழிந்தார் பொன்னிமா
நதியும் நீங்கி நெறிகாட்ட. (௱௩௰௫)

(627) விண்ணின் முட்டும் பெருக்காறு
மேல்பாற் பளிங்கு வெற்பென்ன
நண்ணி நிற்பக் கீழ்பால்நீர்
வடிந்த நடுவு நல்லவழி

---

626. கன்று அழைக்கப் புனிற்றுக் கதறிக் கனைத்தல் போலப் பெருக்காற்றின் எதிர்க்கரையில் 'ஐயாறுடைய வடிகளோ' என்று ஆளுடைய நம்பிகள் கூவிய அழைப்புக்கு, இக்கரையில் ஐயாறுடையவடிகள் ஓலம் என மொழிந்தார் என்று. ஓலம் – அபயம்; ஈண்டு 'அபயமளித்தேம்' என்ற பொருளில் வந்தது.

பண்ணுனிக் குளிர்ந்த மணல்பரப்பக்
கண்ட தொண்டர் பயில்மாரி
கண்ணிற் பொழிந்து மயிர்ப்புளகங்
கலக்கக் கையஞ் சலிகுவித்தார். (௬௨௬)

(628) நம்பி பாதம் சேரமான்
பெருமாள் பணிய நாவலூர்ச்
செம்பொன் முந்நூல் மணிமார்பர்
சேரர் பெருமா னெதிர்வணங்கி
உம்பர் நாத ருமக்களித்த
தன்றோ வென்ன வுடன்மகிழ்ந்து
தம்பி ரானைப் போற்றிசைத்துத்
தடங்கா வேரி நடுவணைந்தார். (௬௨௭)

(629) செஞ்சொற் றமிழ்நா லர்கோனுஞ்
சேரர் பிரானுந் தம்பெருமான்
எஞ்ச லில்லா நிறையாற்றி
னிடையே யளித்த மணல்வழியில்

---

627. பெருக்கெடுத்துவந்த நீர் மேல்பாற் றடைப்பட்டு எழுந்து நின்றமையால், 'பளிங்கு வெற்பென்ன நண்ணி நிற்க' என்றார். கீழ்பால் நீர்வடிதல் இயல்பாதலின், அவ்விருபகுதிக்கும் இடைப்பட்ட இடம் நல்லவழி யாயிற்றென்க.

628. பெருமானைப் பணியப் பெருங்காதல்கொண்டு முதலிற் கூறியவர் சேரமானுதலின் 'உம்பர்நாத ருமக்களித்த தன்றோ' என்றார், ஆளுடைய நம்பிகள் என்க.

629. தலைச் சென்று — (அக்கரையைக்) கூடி. பஞ்சநதி வாணர் — ஐயாறுடைய அடிகள். ஐயாறுகளாவன:— சூரிய புஷ்கரிணி, கங்கா தீர்த்தம், அமிர்த நதி, பாலாறு, நந்தி தீர்த்தம் என்பர்.

தஞ்ச முடைய பரிசனமுந்
தாமு மேறித் தலைச்சென்று
பஞ்ச நதிவா ணரைப்பணிந்து
விழுந்தா ரெழுந்தார் பரவினர். (௬௨௮)

(630) அங்க ணரனூர் கருணையினை
யாற்று தாற்றித் தொழுதிறைஞ்சித்
தங்கள் பெருமான் திருவருளாற்
றாழ்ந்து மீண்டுந் தடம்பொன்னிப்
பொங்கு நதியில் முன்வந்த
படியே நடுவு போந்தேறத்
துங்க வரைபோல் நின்றநீர்
துரந்து தொடரப் பெருகியதால். (௬௨௯)

(631) ஆய செயலி னதிசயத்தைக்
கண்டக் கரையி லையாறு
மேய பெருமா னருள்போற்றி
வீழ்ந்து தாழ்ந்து மேல்பாற்போய்த்
தூய மதிவாழ் சடையார்தம்
பதிகள் பிறவுந் தொழுதேத்திச்
சேய கொங்கர் நாடணைந்தார்
திருவா ரூரர் சேரருடன். (௬௩௰)

(632) கொங்கு நாடு கடந்துபோய்க்
குலவு மலைநாட் டெல்லையுற
நங்கள் பெருமான் றோழனார்
நம்பி தம்பி ரான்றோழர்

630. 'தொடர்ந்து தொடர' என்றும் பாடம்.

அங்க ணுடனே வணையவெழுந்
    தருளா நின்று ரெனும்விருப்பால்
எங்கு மந்நாட் டுள்ளவர்க
    ளெல்லா மெதிர்கொண் டின்புறுவார். (௬௩௧)

(633) பதிக ளெங்குந் தோரணங்கள்
    பாங்க ரெங்கும் பூவளங்கள்
வதிக ளெங்குங் குளிர்பந்தர்
    மனைக ளெங்கு மகிற்புகைக்கார்
நதிக ளெங்கு மலர்ப்பிறங்கல்
    ஞாங்க ரெங்கு மோங்குவன
நிதிக ளெங்கு முழவினொலி
    நிலங்க ளெங்கும் பொலஞ்சுடர்ப்பூ. (௬௩௨)

(634) திசைக டோறும் வரும்பெருமை
    யமைச்சர் சேனைப் பெருவெள்ளம்
குசைகொள் வாசி நிறைவெள்ளம்
    கும்ப யானை யணிவெள்ளம்
மிசைகொள் பண்ணுப் பிடிவெள்ளம்
    மேவுஞ் சோற்று வெள்ளங்கண்
டசைவி லின்பப் பெருவெள்ளத்
    தமர்ந்து கொடுங்கோ ளூரணைந்தார். (௬௩௩)

---

633. ஞாங்கர் – நதியோரங்கள். நிதிகள் – ஆற்றால் ஒதுக்குண்ட திரவியங்கள். ஓங்குவன – ஓங்குவனவாகிய. பொலஞ் சுடர்ப்பூ – சுவர்ணபுஷ்ப வர்ஷம்.

634. பண்ணுப் பிடி – அலங்கரிக்கப்பட்ட பெண்யானை; 'பணியார் பண்ணுப்பிடியூர்ந்து' என்றார் பிறரும் (சீவக. 2699). 'பண்ணும் பிடிவெள்ளம்' என்ற பாடமும் உண்டு. வெள்ளங்கள், மிகுதிகுறிப்பன.

(635) கொடுங்கோ ளூரின் மதில்வாயி
லணிகோ டித்து மறுகிலுடுத்
தொடுங்கோ புரங்கள் மாளிகைகள்
சூளி குளிர்சா லைகள்தெற்றி
நெடுங்கோ நகர்க ளாடரங்கு
நிரந்த மணித்தா மங்கமுகு
விடுங்கோ தைப்பூந் தாமங்கள்
நிரைத்து வெவ்வே றலங்கரித்து. (௱௪௪)

(636) நகர மாந்த ரெதிர்கொள்ள
நண்ணி யெண்ணி லரங்குதொறு
மகரக் குழைமா தர்கள்பாடி
யாட மணிவீ தியிலணைவார்
சிகர நெடுமா ளிகையணையார்
சென்று திருவஞ் சைக்களத்து
நிகரில் தொண்டர் தமைக்கொண்டு
புகுந்தா ருதியர் நெடுந்தகையார். (௱௪௫)

(637) இறைவர் கோயில் மணிமுன்றில்
வலங்கொண் டிறைஞ்சி யெதிர்புக்கு
நிறையுங் காத லுடன்வீழ்ந்து
பணிந்து நேர்நின் றாரூரர்
முறையில் விளம்புந் திருப்பதிகம்
முடிப்பது கங்கை என்றெடுத்துப்
பிறைகொள் முடியார் தமைப்பாடிப்
பரவிப் பெருமா ளுடன்தொழுதார். (௱௪௬)

---

635. உடுத்தொடும் - நக்ஷத்திர மண்டலத்தை அளாவிய. சூளி - நிலாமுற்றம். கோநகர்கள் - அரசிருப்பிடங்கள். கோதை - ஒழுங்கு. (பிங்).

636. (நகர) வீதியிலணையார், திருவஞ்சைக்களத்து வன்றொண்டரைக் கொண்டு சேரமானார் புகுந்தார் எ-று.

(638) தொழுது நிலைத்துப் புறம்போந்து
தோன்றப் பண்ணும் பிடிமேற்பார்
முழுது மேத்த நம்பியைமுன்
பேற்றிப் பின்பு தாமேறிப்
பழுதில் மணிச்சா மரைவீசிப்
பைம்பொன் மணிமா ளிகையில்வரும்
பொழுது மறுகி னிருபுடையு
மிடைந்தார் வாழ்த்திப் புகல்கின்றார், (௬௩௭)

(639) நல்ல தோழர் நம்பெருமாள்
தமக்கு நம்பி யிவரென்பார்
எல்லை யில்லாத் தவமுன்பென்
செய்தோ மிவரைத் தொழுவென்பார்
செல்வ மினியென் பெறுவதுநஞ்
சிலம்பு நாட்டுக் கெனவுரைப்பார்
சொல்லுந் தரமோ பெருமாள்செய்
தொழிலைப் பாரீ ரெனத்தொழுவார். (௬௩௮)

(640) பூவும் பொரியும் பொற்றுகளும்
பொழிந்து பணிவார் பொருவிலிவர்
மேவும் பொன்னித் திருநாடே
புவிக்குத் திலக மெனவியப்பார்
பாவுந் துதிக ளெம்மருங்கும்
பயில வந்து மாளிகையின்
மாவுக் களிறு நெருங்குமணி
வாயில் புகுந்து மருங்கிழிந்தார். (௬௩௯)

---

639. சிலம்பு நாடு – மலைநாடு. பெருமாள் செய்தொழில் – வன்றொண்டர்க்குச் சேரமானார் பிறகேறியிருந்து சாமரைவீசுதல்.

(641) கழறிற் றறியுந் திருவடியுங்
கலைநா வலர்தம் பெருமானும்
முழவிற் பொலியுந் திருநெடுந்தோள்
முனைவர் தம்மை யுடன்கொண்டு
விழவிற் பொலியும் மாளிகையில்
விளங்கு சிங்கா தனத்தின்மிசை
திழற்க் கொளிரும் பூணாரை
யிருத்தித் தாமும் நேர்நின்று. (௬௩௭)

(642) செம்பொற் கரக வாசநீர்
தேவி மார்க ளெடுத்தேந்த
அம்பொற் பாதந் தாம்விளக்கி
யருளப் புகலு மாரூரர்
தம்பொற் றாளை வாங்கியிது
தகாதென் றருளத் தரணியில்வீழ்ந்
தெம்பெற் றிமையாற் செய்தனவிங்
கெல்லா மிசைய வேண்டுமென. (௬௩௮)

(643) பெருமாள் வேண்ட வெதிர்மறுக்க
மாட்டா ரன்பிற் பெருந்தகையார்
திருமா நெடுந்தோ ளுதியர்பிரான்
செய்த வெல்லாங் கண்டிருந்தார்

---

641. திருவடி – சேரவேந்தர்க்கு வழங்கிய சிறப்புப்பெயர்; அய்ய னடிகள் திருவடி, இராமதிருவடி, பாற்கர னிரவிவர்மர் திருவடி (T. A. S. Vol. II, pp. 67, 81) எனச் சேரமான்கள் வழங்கப்படுதல் காண்க. இத் திருவடிகள் ஆண்டமைபற்றி, திருவடிராஜ்யமெனவும் சேரமண்டலத்தை வழங் குவர். நிழல் திக்கொளிரும் பூணார் – திக்கு முழுதும் ஒளிபரவிய அணி யுடையார். முனைவர் – தலைவர்.

642. கரகம் - நீர்க்கலசம். தாளை வாங்கி – அடிகளை உள்ளே இழுத்துக்கொண்டு. பெற்றிமை – அரசர்க்குரிய முறைமை,

643. மானம் – பெருமை, மாட்சிமை.

அருமா னங்கொள் பூசனைக
ளடைவே யெல்லா மளித்ததற்பின்
ஒருமா மதிவெண் குடைவேந்த
ருடனே யமுது செய்துவந்தார். (ா௨)

(644) சேர ருடனே திருவமுது
செய்த பின்பு கைகோட்டி
ஆரம் நறுமென் கலவைமான்
மதச்சாந் தாடை யணிமணிப்பூண்
ஈர விரைமென் மலர்ப்பணிக
ளினைய முதலா யினவருக்கஞ்
சார வெடுத்து வன்றொண்டர்ச்
சாத்தி மிக்க தமக்காக்கி. (ா௩)

(645) ஆட லாட லின்னியங்கள்
பயிறல் முதலாம் பண்ணையினில்
நீடு மினிய விநோதங்கள்
நெருங்கு காலந் தொறுநிகழ
மாடு விரைப்பூந் தருமணஞ்செய்
யாரா மங்கள் வைகுவித்துக்
கூட முனைப்பா டியர்கோவைக்
கொண்டு மகிழ்ந்தார் கோதையார். (ா௪)

வேறு

செண்டாடுந் தொழில்மகிழ்வுஞ் சிறுசோற்றுப் பெருஞ்சிறப்பும்
வண்டாடு மலர்வாவி மருவியநீர் விளையாட்டுந்
தண்டாமும் மதகும்பத் தடமலைப்போர் சலமற்போர்
கண்டாரா விருப்பெய்தக் காவலனார் காதல்செய்நாள். (ா௫)

---

645. பண்ணையினில் ... விநோதங்கள் — விளையாட்டில் நிகழும் பொழுதுபோக்கு. ஆராமங்கள் — உத்யானவனங்கள். கூடக் கொண்டு மகிழ்ந் தார் என இயைக்க.

646. செண்டாடுந் தொழில் — நிலச்செண்டு பரிச்செண்டுகள்

(647) நாவலர்தம் பெருமானுந் திருவாரூர் நகராளுந்
தேவர்பிரான் கழலொருநாள் மிகநினைந்த சிந்தையராய்
ஆவியையா ரூரானை மறக்கலுமா மேயென்னும்
மேவியசொற் றிருப்பதிகம் பாடியே வெருவுற்றார். (௩௫௬)

(648) திருவாரூர் தனைநினைந்து சென்றுதொழ வேனென்று
மருவார்வத் தொண்டருடன் வழிக்கொண்டு செல்பொழுதில்
ஒருவாநண் புள்ளுருக வுடனெழுந்து கைதொழுது
பெருவான வரம்பனார் பிரிவாற்றார் பின்செல்வார். (௩௫௭)

(649) வன்றொண்டர் முன்னெய்தி மனமழிந்த வுணர்வினராய்
இன்றுமது பிரிவாற்றே னென்செய்கேன் யானென்ன
ஒன்றுநீர் வருந்தாதே யுமதுபதி யின்கணிருந்
தன்றினார் முனைமுருக்கி யரசாளு மெனமொழிந்தார். (௩௫௮)

(650) ஆரூரர் மொழிந்தருள வதுகேட்ட வருட்சேரர்
பாரோடு விசும்பாட்சி யெனக்குமது பாதமலர்
தேரூரு நெடுவீதித் திருவாரூர்க் கெழுந்தருள
நேரூரு மனக்காதல் நீக்கவுமஞ் சுவனென்றார். (௩௫௯)

---

வீசியாடி மகிழ்தல். சிறுசோற்றுப் பெருஞ்சிறப்பு – சித்திரான்னங்களை நீர்த்துறை முதலிய இடங்களில் உண்டுகளிக்கும் கொண்டாட்டம். மலை – யானை; யானைப்போர் மற்போர்களைக்கண்டு வன்றொண்டர் ஆராவிருப்பெய்தும்படி என்க.

647. வெருவுறுதல் – சிலகாலம் பிரிந்தமைக்கு அஞ்சுதல்.

648. வானவரம்பன் – சேரமான்; ஆதித்தன் உதித்தும் மறைந்தும் போதரும் அடிவானங்களைத் தம் நாட்டின் கீழ்மேல்பால் எல்லைகளாக வுடையவன். எ-று. "நின்கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்துநின், வெண்டலைப் புணரிக் குடகடற் குளிக்கும், யாணர் வைப்பினன் னாட்டுப் பொருந, வானவரம்பனை நீயோ பெரும" என்றார் சான்றோரும் (புறநா. 2).

649. அன்றினார்– பகையரசர். முனைமுருக்கி – போர் வென்று.

(651) மன்னவனு ரதுமொழிய வன்றொண்ட ரெதிர்மொழிவார்
என்னுயிருக் கின்னுயிரா மெழிலாரூர்ப் பெருமானை
வன்னெஞ்சக் கள்வனேன் மறந்திரேன் மதியணிந்தார்
இன்னருளா லரசளிப்பீர் நீரிருப்பீ ரெனவிறைஞ்ச. (௬௫0)

(652) மற்றவரும் பணிந்திசைந்தே மந்திரிகள் தமையழைத்துப்
பொற்புநிறை தொன்னகரி லிற்றைக்கு முன்புகுந்த
நற்பெரும்பண் டாரநா னுவருக்க மானவெலாம்
பற்பலவா மாளின்மிசை யேற்றிவரப் பண்ணுமென. (௬௫௧)

(653) ஆங்கவரு மன்றுவரை யாயமா கியதனங்கள்
ஓங்கியபொன் னவமணிக ளொளிர்மணிப்பூண் துகில்வருக்கம்
ஞாங்கர்நிறை விரையுறுப்பு வருக்கமுதல் நலஞ்சிறப்பத்
தாங்குபொதி வினைஞர்மேற் றலமலியக் கொண்டணைந்தார்.

(654) மற்றவற்றின் பரப்பெல்லாம் வன்றொண்டர் பரிசனத்தின்
முற்படவே செலவிட்டு முனைப்பாடித் திருநாடர்
பொற்பதங்கள் பணிந்தவரைத் தொழுதெடுத்துப் புனையலங்கல்
வெற்புயர்தோ ளுறத்தழுவி விடையளித்தார் வன்றொண்டர்.

(655) ஆரூர ரவர்தமக்கு விடையருளி யங்ககன்று
காரூரு மலைநாடு கடந்தருளிக் கற்சுரமும்
நீரூருங் கான்யாறும் நெடுங்கானும் பலகழியச்
சீரூருந் திருமுருகன் பூண்டிவழிச் செல்கின்றார். (௬௫௨)

(656) திருமுருகன் பூண்டியயற் செல்கின்ற போழ்தின்கட்
பொருவிடையார் நம்பிக்குத் தாமேபொன் கொடுப்பதலால்
ஒருவர்கொடுப் பக்கொள்ள வொண்ணுமைக் கதுவாங்கிப்
பெருகருளாற் றுங்கொடுப்பப் பெறுவதற்கோ வதுவறியோம்.

(657) வென்றிமிகு பூதங்கள் வேடர்வடி வாய்ச்சென்று
வன்றொண்டர் பண்டாரம் கவரவருள் வைத்தருள
அன்றினர் புரமெரித்தா ரருளால்வேட் டுவப்படையாய்ச்
சென்றவர்தாம் வரும்வழியி னிருபாலுஞ் செயிர்த்தெழுந்து.

(658) வில்வாங்கி யலகம்பு விசைநாணிற் சந்தித்துக்
கொல்வோமிங் கிட்டுப்போ மெனக்கோபத் தாற்குத்தி
எல்லையில்பண் டாரமெலாங் கவர்ந்துகொள விரிந்தோடி
அல்லலுடன் பறியுண்டா ராரூரர் மருங்கணைந்தார். (௱௯௭)

(659) ஆரூரர் தம்பாலவ் வேடுவர்சென் றணையாதே
நீரூருஞ் செஞ்சடையா ரருளினல் நீங்கவவர்
சேரூராந் திருமுருகன் பூண்டியினிற் சென்றெய்திப்
போரூரு மழவிடையார் கோயிலினு டிப்புக்கார். (௱௯௮)

(660) அங்கணர்தங் கோயிலினை யஞ்சலிகூப் பித்தொழுது
மங்குலுற நீண்டதிரு வாயிலினை வந்திறைஞ்சிப்
பொங்குவிருப் புடன்புக்கு வலங்கொண்டு புனிதநதி
திங்கள்முடிக் கணிந்தவர்தந் திருமுன்பு சென்றணைந்தார்.

(661) உருகியவன் பொடுகைகள் குவித்துவிழுந் துமைபாக
மருவியதம் பெருமான்முன் வன்றொண்டர் பாடினர்
வெருவுறவே டுவர்பறிக்கும் வெஞ்சுரத்தி லெத்துக்கிங்
கருகிருந்தீ ரெனக்கொடுகு வெஞ்சிலையஞ் சொற்பதிகம்.

---

658. அலகம்பு – நுனியில் கூரிய தகடமைந்த அம்பு; 'அஞ்சம்பை யும் ஐயன்றன தலகம்பையு மனவா' என்றார் கம்பரும் (கம்பரா. கங்கை. 9). குத்தி – தாக்கி.

(662) பாடியவர் பரவுதலும் பரம்பொருளா மவரருளால்
வேடுவர்தாம் பறித்தபொரு ளவையெல்லாம் விண்ணேருங்க
நீடுதிரு வாயிலின்முன் குவித்திடலு நேரிறைஞ்சி
ஆடுமவர் திருவருளா லப்படியே கைக்கொண்டார். (௬௭௧)

(663) கைக்கொண்டு கொடுபோமக் கைவினைஞர் தமையேவி
மைக்கொண்ட மிடற்றாரை வணங்கிப்போய்க் கொங்ககன்று
மெய்க்கொண்ட காதலினால் விரைந்தேகி மென்கரும்புஞ்
செய்க்கொண்ட சாலியுஞ்சூழ் திருவாரூர் சென்றணைந்தார்.

(664) நாவலர்மன் னவரருளால் விடைகொண்ட நரபதியார்
ஆவியினொன் றாநண்பி னாரூரர் தமைநினைந்து
மாவலரு மலர்ச்சோலை மகோதையினின் மன்னிமலைப்
பூவலயம் பொதுநீக்கி யரசுரிமை புரிந்திருந்தார். (௬௭௩)

(665) இந்நிலைமை யுதியர்பிரா னெம்பிரான் வன்றொண்டர்
யொன்னிவள நாடகன்று மகோதையினின் மேற்புகுந்து
மன்னுதிருக் கயிலையினின் மதவரைமே லெழுந்தருள
முன்னர்வயப் பரியுகைக்குந் திருத்தொழில்பின் மொழிகின்றோம்.

(666) மலைமலிந்த திருநாட்டு மன்னவனார் மாகடல்போற்
சிலைமலிந்த கொடித்தானைச் சேரலனார் கழல்போற்றி
நிலைமலிந்த மணிமாட நீண்மறுகு நான்மறைசூழ்
கலைமலிந்த புகழ்க்காழிக் கணநாதர் திறமுரைப்பாம். (௬௭௫)

---

664. மலைப்பூவலயம் – மலைமண்டலம்.

665. 'வன்றொண்டர் மதவரைமேல் எழுந்தருள, உதியர்பிரான் பரியுகைக்கும்' என இயையும். மதவரை – வெள்ளானை. உகைக்கும் – செலுத்தும்.

# பெரியபுராணம்

## வெள்ளானைச் சருக்கம்

(667) மூல மான திருத்தொண்டத்
தொகைக்கு முதல்வ ராயிந்த
ஞால முய்ய வெழுந்தருளு
நம்பி தம்பி ரான்றோழர்
காலை மலர்ச்செங் கமலக்கட்
கழற்றிற் றறிவா ருடன்கூட
ஆல முண்டார் திருக்கயிலை
யணைந்த தறிந்த படியுரைப்பாம். (க)

(668) படியி னீடும் பத்திமுத
லன்பு நீரிற் பணைத்தோங்கி
வடிவு நம்பி யாரூரர்
செம்பொன் மேனி வனப்பாகக்
கடிய வெய்ய விருவினையின்
களைகட் டெழுந்து கதிர்பரப்பி
முடிவி லாத சிவபோக
முதிர்ந்து முறுகி விளைந்ததால். (உ)

---

667. திருத்தொண்டத் தொகை – "தில்லைவா ழந்தணர்தம்" என்று தொடங்கும் தேவாரத் திருப்பதிகம்.

668. பத்தி முதல் – பத்தியாகிய தாள். பத்தி முதலானது

(669) ஆர முரக மணிந்தபிரா
னன்ப ரணுக்க வன்றொண்டர்
ஈர மதுவார் மலர்ச்சோலை
யெழிலா ரூரி லிருக்குநாட்
சேரர் பெருமா டமைந்தினைந்து
தெய்வப் பெருமான் கழல்வணங்கிச்
சாரன் மலைநா டணைவதற்குத்
தவிரா விருப்பி னுடன்போந்தார். (௩)

(670) நன்னீர்ப் பொன்னித் திருநாட்டு
நாதர் மகிழுந் திருப்பதிகள்
முன்னி யிறைஞ்சி யகன்றுபோய்
முல்லைப் படப்பைக் கொல்லைமான்
துன்னி யுகைக்குங் குடகொங்கி
லணைந்து தூய மதிவானீர்
சென்னி மிசைவைத் தவர்செல்வத்
திருப்புக் கொளியூர் சென்றடைந்தார். (௪)

(671) மறையோர் வாழு மப்பதியின்
மாட வீதி மருங்கணைவார்
நிறையுஞ் செல்வத் தெதிர்மனைக
ளிரண்டி லிகழ்மங் கலவியங்கள்
அறையு மொலியொன் றினிலொன்றி
லழுகை யொலிவந் தெழுதலுமங்
குறையு மறையோர் களையிரண்டு
முடனே நிகழ்வ தென்னென்றார். (௫)

---

பணைத்தோங்கி, மேனி வனப்பாகக் கொண்டு, கலைகட்டப்பெற்று, கதிர்பரப்பி, சிவபோகமுதிர்ந்து விளைந்தது என்க.

669. தெய்வப் பெருமான் — ஸ்ரீ தியாகராசர்.

670. முல்லைப் படப்பை — முல்லைநிலப் பரப்பு.

(672) அந்த ணாளர் வணங்கியரும்
புதல்வ ரிருவ ரையாண்டு
வந்த பிராயத் தினர்குளித்த
மடுவின் முதலை யொருமகவை
முந்த விழுங்கப் பிழைத்தவனை
முந்நூ லணியுங் கலியாணம்
இந்த மனைமற் றந்தமனை
யிழந்தா ரழுகை யென்றுரைத்தார். (௬)

(673) இத்தன் மையினைக் கேட்டருளி
யிரங்குந் திருவுள் ளத்தினரா
மொய்த்த முகைத்தார் வன்றொண்டர்
தம்மை முன்னே கண்டிறைஞ்ச
வைத்த சிந்தை மறையோனும்
மனைவி தானு மகவிழந்த
சித்த சோகந் தெரியாமே
வந்து திருத்தா ளிறைஞ்சினார். (எ)

(674) துன்ப மகல முகமலர்ந்து
தொழுவார் தம்மை நோக்கியந்த
இன்ப மைந்தன் றனையிழந்தீர்
நீரோ வென்ன வெதிர்வணங்கி

---

672. முந்நூலணியுங் கலியாணம் - பூணூற் கலியாணம்;

673. கண்டிறைஞ்ச முன்னே வைத்த சிந்தை என்க.

674. முன்பு புகுந்து போனது அது - அச்செயல் முன்பு நிகழ்ந்து கழிந்தது. முன்னே வணங்க முயல்கின்றோம் - நெடுங்காலத்துக்கு முன்பே

முன்பு புகுந்து போனதது
முன்னே வணங்க முயல்கின்றோம்
அன்பு பழுதா காமலெழுந்
தருளப் பெற்றே மெனத்தொழுதார். (அ)

(675) மைந்தன் றன்னை யிழந்ததுயர்
மறந்து நான்வந் தணைந்ததற்கே
சிந்தை மகிழ்ந்தார் மறையோனும்
மனைவி தானுஞ் சிறுவனையான்
அந்த முதலை வாய்நின்று
மழைத்துக் கொடுத்தே யவிநாசி
எந்தை பெருமான் கழல்பணிவே
னென்றார் சென்றா ரிடர்களைவார். (கூ)

(676) இவ்வா றருளிச் செய்தருளி
யிவர்கள் புதல்வன் றனைக்கொடிய
லெவ்வாய் முதலை விழுங்குமடு
வெங்கே யென்று வினவிக்கேட்
டவ்வாழ் பொய்கைக் கரையிலெழுந்
தருளி யவனை யன்றுகவர்
வைவா ளெயிற்று முதலைகொடு
வருதற் கெடுத்தார் திருப்பதிகம். (ம)

---

வந்து தேவரீரைத் தொழுதற்கு முயன்றுள்ள நாங்கள்: எழுந்தருளப்பெற்றேம் என்றார்.

676. வினவிக் கேட்டு – விசாரித்தறிந்து. அவ் ஆழ் பொய்கை – அந்த ஆழமான மடு. 'எற்றான் மறக்கேன்' என்று தொடங்குவது அத்திருப் பதிகம்.

(677) உரைப்பா ருரையென் றெடுத்திருப்
பாட்டு முடியா முன்னுயர்ந்த
வரைப்பான் மையினீ டடம்புயத்து
மறலி மைந்த னுயிர்கொணர்ந்து
திரைப்பாய் புனலின் முதலைவயிற்
றுடலிற் சென்ற வாண்டுகளும்
தரைப்பால் வளர்ந்த தெனநிரம்ப
முதலை வாயிற் றருவித்தான். (௰௧)

(678) பெருவாய் முதலை கரையின்கட்
கொடுவந் துமிழ்ந்த பிள்ளைதனை
உருகா நின்ற தாயோடி
யெடுத்துக் கொடுவந் துயிரளித்த
திருவா ளன்றன் சேவடிக்கீழ்ச்
சிலை மறையோ னெடுவீழ்ந்தாள்
மருவார் தருவின் மலர்மாரி
பொழிந்தார் விசும்பின் வானோர்கள். (௰௨)

(679) மண்ணி னுள்ளா ரதிசயித்தார்
மறையோ ரெல்லா முத்தரியம்
விண்ணி வேற விட்டார்த்தார்
வேத நாத மிக்கெழுந்த

---

677. வரைப் பாண்மையின் நீள் - மலையின் தன்மைபோல நீண்ட வயிற்றுடலில் வளர்ந்ததெ தென எனவும், திருப்பாட்டு முடியாமுன் தருவித்தான் எனவும் இயையும். 'உரைப்பாருரை' என்பது, அத்திருப்பதிகத்தின் நான்காம் பாட்டு. 'முதலையைப் பிள்ளைதரச்சொல்லு காலனையே' என்று அப்பாட்டில் வேண்டினமையின், 'மறலி மைந்தனுயிர்...... தருவித்தான் என்றார்.

தண்ண லாரு மவிநாசி
யரனூர் தம்மை யருமறையோன்
கண்ணின் மணியாம் புதல்வனையுங்
கொண்டு பணிந்தார் காசினிமேல். (௰௩)

(680) பரவும் பெருமைத் திருப்பதிகம்
பாடிப் பணிந்து போந்தன்பு
விரவு மறையோன் காதலனை
வெண்ணூல் பூட்டி யண்ணலார்
முரச மியம்பக் கலியாண
முடித்து முடிச்சே ரலர்தம்பாற்
குரவ மலர்ப்பூந் தண்சோலை
குலவு மலைநா டணைகின்றார். (௰௪)

(681) சென்ற சென்ற குடபுலத்துச்
சிவனு ரடியார் பதிதொறும்
நன்று மகிழ்வுற் றின்புற்று
நலஞ்சேர் தலமுங் கானகமுந்
துன்று மணிநீர்க் கான்யாறுந்
துறுகற் சுரமுங் கடந்தருளிக்
குன்ற வளநாட் டகம்புகுந்தார்
குலவு மடியே னகம்புகுந்தார். (௰௫)

---

679. உத்தரியம் விண்ணிலேறவிட்டு ஆர்த்தல், மகிழ்ச்சிக் குறிப்பு; ஆர்த்தா ரணியாடை வீசினா' என்றா பிறரும் (அரிச்சந்.பு. சூழ்வினை. 82.; 'காசினி - தரை.

680. வெண்ணூல் பூட்டி - பூணூல் அணிந்து.

(682) முன்னுண் முதலை வாய்ப்புக்க
மைந்தன் முன்போல் வரமீட்டுத்
தென்னு ரூர ரெழுந்தருளா
நின்ற ரென்று சேரர்பிரார்க்
கந்நாட் டரசு ரடியார்கண்
முன்னே யோடி யறிவிப்பப்
பொன்னூர் கிழியு மணிப்பூணுங்
காசுந் தூசும் பொழிந்தளித்தார். (௯௬)

(683) செய்வ தொன்று மறியாது
சிந்தை மகிழ்ந்து களிகூர்ந்தென்
ஐய னணைந்தா னெனையாளு
மண்ணை லணைந்தா ஞரூரிற்
சைவ னணைந்தா னென்றுணையாந்
தலைவ னணைந்தான் தரணியெலாம்
உய்ய வணைந்தா னணைந்தானென்
றோகை முரசஞ் சாற்றுவித்தார், (௯௭)

(684) பெருகு மதிநா சமைச்சர்களை
யழைத்துப் பெரியோ ரெழுந்தருளப்
பொருவி னகர மலங்கரித்துப்
பண்ணிப் பயணம் புறப்படுவித்
தருவி மதமால் யானையினை
யணைந்து மிசைகொண் டரசர்பெருந்
தெருவு கழிய வெதிர்வந்தார்
சேரர் குலமுய்ந் திடவந்தார். (௯௮)

683. ஓகை முரசம் - மகிழ்ச்சி குறிக்க ஒலிக்கும் முரசு. பயணம் பண்ணி - பிரயாணத்துக்கு ஆயத்தம்பண்ணி.

(685). மலைநாட் டெல்லை யுட்புகுத
வந்த வன்றொண் டரைவரையிற்
சிலைநாட் டியவெல் கொடித்தானைச்
சேரர் பெருமா னெதிர்சென்று
தலைநாட் கமலப் போதனைய
சரணம் பணியத் தாவில்பல
கலைநாட் டமுத வாரூரர்
தாமுந் தொழுது கலந்தனரால். (௰௯)

(686) சிந்தை மகிழுஞ் சேரலனார்
திருவா ரூர ரெனுமிவர்கள்
தந்த மணிமே னிகள்வேறா
மெனினு மொன்றாந் தன்மையராய்
முந்த வெழுங்கா தலிற்றொழுது
முயங்கி யுதியர் முதல்வேந்தர்
எந்தை பெருமான் திருவாரூர்ச்
செல்வம் வினவி யின்புற்றார். (௨௰)

(687) ஒருவ ரொருவ ரிற்கலந்து
குறைபா டின்றி யுயர்காத
லிருவர் நண்பின் செயல்கண்ட
விரண்டு திறத்து மாந்தர்களும்

---

685. வரையில் சிலை நாட்டிய ...... சேரர் – மேருவில் தம் இலாஞ்சனையான வில்லைப் பொறித்த சேரவேந்தர். பலகலை – இயல் இசை முதலியன. சேரர்பெருமான் தம் சரணம்பணியத் தாமுந்தொழுது கலந்தனர் ஆரூரர் என்க.

687. மாந்தர் – பரிசனங்கள். பெருமாள் – சேரமானார். கைவரை – களிறு. பின் – பின்னிருந்து.

பெருகு மகிழ்ச்சி கலந்தார்த்தார்
பெருமா டமிழின் பெருமானை
வருகை வரையின் மிசையேற்றித்
தாம்பின் மதிவெண் குடைகுவித்தார். (உக)

(688) உதியர் பெருமான் பெருஞ்சேனை
யோதங் கிளர்ந்த தெனவார்ப்பக்
கதிர்வெண் டிருநீற் றன்பர்குழாங்
கங்கை கிளர்ந்த தெனவார்ப்ப
எதிர்வந் திறைஞ்சு மமைச்சர்குழா
மேறு மிவுளித் துகளார்ப்ப
மதிதங் கியமஞ் சணியிஞ்சி
வஞ்சி மணிவா யிலையணைந்தார். (உஉ)

வேறு

ஆரண மொழிகள் முழங்கிட வாடினர் குணலைக ளந்தணர்
வாரண மதமழை சிந்தின வாசிகள் கிளரொளி பொங்கின
பூரண கலச மலிந்தன பூமழை மகளிர் பொழிந்திடுந்
தோரண மறுகு புகுந்தது தோழர்க ணடவிய குஞ்சரம்.

அரிவையர் தெருவி னடம்பயி லணிகிளர் தளிரடி தங்கிய
பரிபுர வொலிகள் கிளர்ந்தன பணைமுர சொலிகள் பரந்தன
சுரிவளை நிரைகள் முரன்றன துணைவர்க ளிருவரும் வந்தணி
விரிதரு பவன நெடுங்கடை விறன்மத கரியி னிழிந்தனர்.

---

688. வஞ்சி — கொடுங்கோளூர்; இப்பெயருடனும் சேரர்க்குத் தலை நகராக இடைக்காலத்து விளங்கியது.

689. குணலை — ஆரவாரித்து நடிக்குங் கூத்து; 'அந்தணர் குணலை கொள்ள' என்றார் பின்னோரும் (திருவாலவா. பு. 4, 22).

690. சுரிவளை — சங்கம். பவன நெடுங்கடை — அரண்மனையின் நீண்ட வாயில்.

தூநறு மலர்தர ளம்பொரி தூவிமு னிருபுடை யின்கணும்
நான்மறை முனிவர்கண் மங்கல நாமநன் மொழிகள் விளம்பிட
மேனிறை நிழல்செய வெண்குடை வீசிய கவரி மருங்குற
வானவர் தலைவரு நண்பரு மாளிகை நடுவு புகுந்தனர். (உரு)

அரியணை யதனின் விளங்கிட வடன்மழ விடையென நம்பியை
வரிமல ரமளிய மர்ந்திட மலையர்க டலைவர் பணிந்துபின்
உரிமைநல் வினைகள் புரிந்தன வுரைமுடி விலவென முன்செய்து
பரிசன மனமகி ழும்படி பலபடி மணிநிதி சிந்தினர். (உசு)

வேறு

(693) இன்ன தன்மையி னுதியர்க
டலைவர்தா மிடர்கெட முனைப்பாடி
மன்னர் தம்முடன் மகிழ்ந்தினி
துறையுநாண் மலைநெடு நாட்டெங்கும்
பன்ன கம்புனை பரமர்தந்
திருப்பதி பலவுடன் பணிந்தேத்திப்
பொன்னெ டுந்தட மூதெயின்
மகோதையிற் புகுந்தனர் வன்றொண்டர். (உஎ)

---

691. மங்கல நாம நன்மொழிகள் - மங்கலம் பயத்தல்கருதி ஓதப்படும் வேதப்பகுதி; சுவஸ்திவாசனம் என்பர். வானவர் – சேரர்.

692. மலையர்கள் – மலைநாட்டார். வினை – உபசாரச் செயல்கள். புரிந்தன முடிவில என்று உலகோர் கூறும்படி என்க. பரிசனம் – நம்பி ஆரூரருடன் போந்த அடியார்குழாம்.

(694) ஆய செய்கையி னாள்பல
கழிந்தபி னரசர்கள் முதற்சேரர்
தூய மஞ்சனத் தொழிலினிற்
றொடங்கிடத் தலைவராம் வன்றொண்டர்
பாய கங்கைசூழ் நெடுஞ்சடைப்
பரமரைப் பண்டுதாம் பிரிந்தெய்துஞ்
சேய நன்னெறி குறுகிடக்
குறுகினார் திருவஞ்சைக் களந்தன்னில். (௨௮)

(695) கரிய கண்டர்தங் கோயிலை
வலங்கொண்டு காதலாற் பெருகன்பு
புரியு முள்ளத்த ருள்ளணைந்
திறைவர்தம் பூங்கழ லிணைபோற்றி
அரிய செய்கையி னவனியில்
விழுந்தெழுந் தலைப்புறு மனைவாழ்க்கை
சரிய வேதலைக் குத்தலை
மாலையென் றெடுத்தனர் தமிழ்மாலை. (௨௯)

(696) எடுத்த வத்திருப் பதிகத்தி
னுட்குறிப் பிவ்வுல கினிற்பாசம்
அடுத்த வாழ்க்கையை யறுத்திட
வேண்டுமென் றன்பரன் பினிற்பாடக்

---

694. மகோதையிற் புகுந்தவர், திருவஞ்சைக்களம் குறுகினார் என்க. இதனால் வஞ்சியாகிய மகோதையின் வேறாகவே அஞ்சைக்களம் என்ற சிவதலம் அடுத்துள்ளதென்பது அறியத்தகும். சேய நன்னெறி - சேணெடுந்தூரத்துள்ள அந்தமிலின்பத்து வீட்டுநெறி. குறுகிட - அந்நெறியை எய்துங்காலம் நெருங்க.

696. “தலைக்குத் தலைமாலை” என்னுந் திருப்பதிகத்தில் ‘வெறுத்

கடுத்த தும்பிய கண்டர்தங்
கயிலையிற் கணத்தவ ருடன்கூடத்
தடுத்த செய்கைதான் முடிந்திடத்
தங்கழற் சார்புதந் தளிக்கின்றார். (௬0)

(697) மன்ற லந்தரு மிடைந்தபூங்
கயிலையின் மலைவல்லி யுடன்கூட
வென்றி வெள்விடைப் பாகர்தாம்
வீற்றிருந் தருளிய பொழுதின்கண்
ஒன்று சிந்தைநம் மூரனை
யும்பர்வெள் ளானையி னுடனேற்றிச்
சென்று கொண்டிங்கு வாருமென்
றயன்முதற் றேவர்கட் கருள்செய்தார். (௬௧)

(698) வான நாடர்க ளரியயன்
முதலினோர் வணங்கிமுன் விடைகொண்டு
தூந லந்திகழ் சோதிவெள்
ளானையுங் கொண்டுவன் றொண்டர்க்குத்
தேன லம்புதண் சோலைசூழ்ந்
திருக்குமத் திருவஞ்சைக் களஞ்சேரக்
கானி லங்கொள வலங்கொண்டு
மேவினார் கடிமதிற் றிருவாயில். (௬௨)

---

தேன்மனை வாழ்க்கையை விட்டொழிந்தேன்' எனவருந் தொடரால், 'இவ்வுல கினிற் பாசம் அடுத்த வாழ்க்கையை அறுத்திடத்' தாம் வேண்டியதைக் குறிப் பிடலாயினர் என்க. கடு ததும்பிய – விடஞ் செறிந்த. தடுத்த செய்கையைத் தடுத்தாட்கொண்ட புராணத்துட் கண்டுகொள்க.

698. வன்றொண்டர்க்கு வெள்ளானையுங் கொண்டு எனவும், அரி யயன் முதலினோர் திருவஞ்சைக்களஞ்சேர, (அவ்வன்றொண்டர் அதுசமயம்) திருவாயில் மேவினார் எனவும் இயைக்க.

(699) தேவர் தங்குழா நெருங்கிய
வாயிலிற் றிருநாவ லூரர்தங்
காவன் மன்னரும் புறப்பட
வெதிர்கொண்டு கயிலைவீற் றிருக்கின்ற
பூவ லம்புதண் புனற்சடை
முடியவ ரருளிப்பா டெனப்போற்ற
ஏவ லென்றபின் செய்வதொன்
றிலாதவர் பணிந்தெழுந் தெதிரேற்றார். (௩௩)

(700) ஏற்ற தொண்டரை யண்டர்வெள்
ளானையி னெதிர்வலங் கொண்டேற்ற
நாற்ற டங்கடன் முழக்கென
வைவகை நாதமீ தெழுந்தார்ப்பப்
போற்றி வானவர் பூமழை
பொழிந்திடப் போதுவா ருயிரெல்லாஞ்
சாற்று மாற்றங்க ளுணர்பெருந்
துணைவரை மனத்தினிற் கொடுசார்ந்தார். (௩௪)

(701) சேரர் தம்பிரான் றம்பிரான்
றோழர்தஞ் செயலறிந் தப்போதே
சார நின்றதோர் பரியினை
மிசைக்கொண்டு திருவஞ்சைக் களஞ்சார்வார்

---

699. வாயிலின் புறப்பட - வாயிலினின்றும் வெளிச்செல்லுங்கால். தேவர்தங்குழாம் எதிர்கொண்டு 'சடைமுடியவர் அருளிப்பாடு' என்றார்கள் என்க. அருளிப்பாடு — அழைத்துவரத் திருவாணை. எதிர் ஏற்றல் - அங்கீகரித்தல்.

700. ஐவகை நாதம் - பஞ்சமாசத்தம். மாற்றங்கள் — கழறியவை; கழறிற்றறிவார் என்ற பெயர்க்கேற்ப இவ்வாறு கூறப்பட்டது. மனமும் பரியும் முன்செல என்க.

வீர வெண்களி றுகைத்துவிண்
மேற்செலு மெய்த்தொண்டர் தமைக்கண்டார்
பாரி னின்றிலர் சென்றதம்
மனத்தொடு பரியுமுன் செலவிட்டார். (௩௫)

(702) விட்ட வெம்பரிச் செவியினிற்
புவிமுதல் வேந்தர்தாம் விதியாலே
இட்ட மாஞ்சிவ மந்திர
மோதலி னிருவிசும் பெழுப்பாய்ந்து
மட்ட லர்ந்தபைந் தெரியல்வன்
றொண்டர்மேற் கொண்டமா தங்கத்தை
முட்ட வெய்திமுன் வலங்கொண்டு
சென்றது மற்றது முன்னாக. (௩௬)

(703) உதியர் மன்னவர் தம்பெருஞ்
சேனையி னுடன்சென்ற படைவீரர்
கதிகொள் வாசியிற் செல்பவர்
தம்மைத்தங் கட்புலப் படுமெல்லை
எதிர்வி சும்பினிற் கண்டுபின்
கண்டில ராதலி னெல்லாரும்
முதிரு மன்பினி லுருவிய
சுரிகையான் முறைமுறை யுடல்வீழ்த்தார். (௩௭)

---

702. புவிமுதல் — பூமிக்குத் தலைவரான. இட்டமாம் — இஷ்டசித்திகள் அமையக் கூடிய; விருப்பமான என்றுமாம். சிவமந்திரம் — பஞ்சாக்கரம். மாதங்கம் — வெள்ளானை.

(704) வீர யாக்கையை மேற்கொண்டு
சென்றுபோய் வில்லவர் பெருமானைச்
சார முன்சென்று சேவக
மேற்றனர் தனித்தொண்டர் மேற்கொண்ட
வாரு மும்மதத் தருவிவெள்
ளானைக்கு வயப்பரி முன்வைத்துச்
சேரர் வீரருஞ் சென்றனர்
மன்றலர் திருமலைத் திசைநோக்கி. (௩௮)

(705) யானை மேற்கொண்டு செல்கின்ற
பொழுதினி லிமையவர் குழாமென்னுந்
தானை முன்செலத் தானெனை
முன்படைத் தானெனுந் தமிழ்மாலை
மான வன்றொண்டர் பாடிமுன்
னணைந்தனர் மதிநதி பொதிவேணித்
தேன லம்புதண் கொன்றையார்
திருமலைத் தென்றிசைத் திருவாயில். (௩௯)

(706) மாசில் வெண்மைசேர் பேரொளி
யுலகெலாம் மலர்ந்திட வளர்மெய்ம்மை
ஆசி லன்பர்தஞ் சிந்தைபோல்
விளங்கிய வணிகிளர் மணிவாயிற்

---

704. வில்லவர் – சேரர். யானைக்குமுன் பரியும், அப் பரிக்குமுன் வீரர்களின் ஆவிகளும் செல்லலாயின என்பது குறிப்பு. யானைக்கு முன் குதிரைவைத்தல் என்ற வழக்கின்கருத்தை இந்நூல் 185 –ஆம் பக்கத்துக் கீழ்க்குறிப்பிற் காண்க.

705. 'தானெனை முன்படைத்தான்' என்ற தமிழ்மாலை, நொடித் தான்மலைத் திருப்பதிகமாம். தாம் ஈசனருளிய யானைமேல் ஏறிச்செல்வதனை இப்பதிகமுழுதும் ஆளுடையநம்பிகள் கூறுதல் காண்க.

706. திருமலைத் தென்றிசைவாயிலை அடைந்தவர்கள், தத்தம் வாக

றேசு தங்கிய யானையும்
புரவியு மிழிந்துசே ணிடைச்செல்வார்
ஈசர் வெள்ளிமால் வரைத்தடம்
பலகடந் தெய்தினர் மணிவாயில். (சய)

(707) அங்க ணெய்திய திருவணுக்
கன் றிரு வாயிலி னடற்சேரர்
தங்கள் காவலர் தடையுண்டு
நின் றனர் தம்பிரா னருளாலே
பொங்கு மாமதம் பொழிந்தவெள்
ளானையி னும்பர்போற் றிடப்போந்த
நங்கள் காவலர் நாவலர்
காவலர் நண்ணினர் திருமுன்பு. (சக)

(708) சென் று கண்ணுத றிருமுன்பு
தாழ்ந்துவீழ்ந் தெழுந்துசே ணிடையிட்ட
கன் று கோவினைக் கண்டணைந்
ததுவெனக் காதலின் விரைந்தெய்தி

---

னங்களினின்று இழிந்து நெடுந்தூரம் நடந்து முடிவில் சிவபிரானது திருக்கோயிலின் மணிவாயிலை எய்தினர் என்க. திருமலை அடிவாரவாயில், திருக்கோயிலின் வாயில் ஆகிய இரண்டுங் கூறப்பட்டவாறு.

707. திருவணுக்கன் திருவாயில் – திருக்கோயில் உட்சந்நிதியை அடுத்த மணிவாசல். அடியாரும் கவிஞருமான தம்போல்வாரை உய்வித்தல் பற்றி 'நங்கள்காவலர் நாவலர்காவலர்' என்றார்.

708. ஊரன் – திருவாரூரினன்; ஆளுடைய நம்பிகள் இவ்வாறு தம்மை வழங்குவர்,

நின்று போற்றிய தனிப்பெருந்
தொண்டரை நேரிழை வலப்பாகத்
தொன்று மேனிய வூரனே
வந்தனை யென்றன குலகுய்ய. (சஉ)

(709) அடிய னேன்பிழை பொறுத்தெனை
யாண்டுகொண் டத்தொடக் கினைநீக்கி
முடிவி லாநெறி தரும்பெருங்
கருணையென் றரத்ததோ வெனமுன்னர்ப்
படியு நெஞ்சொடும் பன்முறை
பணிந்தெழும் பரம்பரை யானந்த
வடிவு நின்றது போன்றின்ப
வெள்ளத்து மலர்ந்தனர் வன்றொண்டர். (சங)

(710) நின்ற வன்றொண்டர் நீரணி
வேணியர் நிறைமலர்க் கழல்சாரச்
சென்று சேரலன் றிருமணி
வாயிலின் புறத்தன னெனச்செப்பக்
குன்ற வில்லியார் பெரியதே
வரைச்சென்று கொணர்கென வவரெய்தி
வென்றி வானவர்க் கருளிப்பா
டெனவவர் கழறொழ விரைந்தெய்தி. (சச)

---

709. அத்தொடக்கு – முன்செய்த தவற்றால் நேர்ந்த பாசபந்தம். என்தரத்ததோ – என் தகுதிக்கு ஏற்றதோ; மிக்கது என்றபடி.

710. பெரிய தேவர் – நந்தி தேவர். அருளிப்பாடு – திருவாணை, கட்டளை; ஈண்டு 'அழைப்புக் கட்டளை' என்க, "ஆயதீ திராகவ னருளிப்பா டென, வாயில்காப் பாளரு மகிழ்ந்து கூறலும்" (இராமா. உத்தர. 157), "அரு ளிப்பாடிட்டால் …… வரக்கடவர்கள்" (புதுக்கோட்டைச் சாஸனத்தொகுதி, பக். 563) என்ற இடங்கள் காண்க. வானவர் – சேரமான்பெருமாள்.

(711) மங்கை பாகர்தந் திருமுன்பு
   சேய்த்தாக வந்தித்து மகிழ்வெய்திப்
பொங்கு மன்பினிற் சேரலர்
   போற்றிடப் புதுமதி யலைகின்ற
கங்கை வார்சடைக் கயிலைநா
   யகர்திரு முறுவலின் கதிர்காட்டி
இங்கு நாமழை யாமைநீ
   யெய்திய தென்னென வருள்செய்தார். (சக)

(712) அரச ரஞ்சலி கூப்பிநின்
   றடியனே னூரர் கழல்போற்றிப்
புரசை யானைமுன் சேவித்து
   வந்தனன் பொழியுநின் கருணைத்தெண்
டிரைசெய் வெள்ளமுன் கொடுவந்து
   புகுத்தலிற் றிருமுன்பு வரப்பெற்றேன்
விரைசெய் கொன்றைசேர் வேணியா
   யினியொரு விண்ணப்ப முளதென்று. (சஉ)

(713) பெருகு வேதமு முனிவருந்
   துதிப்பரும் பெருமையா யுனைப்போற்றித்
திருவு லாப்புறம் பாடினேன்
   திருச்செவி சாத்திடப் பெறவேண்டும்

---

713. திருவுலாப்புறம் என்ற தொடர், பொதுவாகக் கோயில் மூர்த்திகளின் புறப்பாடு, பவனி என்ற பொருள் பயப்பதாம். "திருக்காப்பு, திருவெழுச்சி, திருவுலாப்புறம் ......... திருநாள்கள்" என்ற சிலாசாஸனத் தொடருங் காண்க (புதுக்கோட்டைச் சாஸனத்தொகுதி பக். 432). 'திருவுலாப்புறஞ் செய்தல்' என்றும் கல்லெழுத்துக்களில் இது பயிலும் (S. I. I., Vol. viii, p. 203). ஈண்டு இத்தொடர், மூர்த்திகளின் புவனிச் சிறப்பைக்

மருவு பாசத்தை யகன்றிட
  வன்றொண்டர் கூட்டம்வைத் தாயென்ன
அருளு மீசருஞ் சொல்லுக
  வென்றன ரன்பருங் கேட்பித்தார் (சஎ)

(714) சேரர் காவலர் பரிவுடன்
  கேட்பித்த திருவுலாப் புறங்கொண்டு
நாரி பாகரு நலமிகு
  திருவரு ணயப்புட னருள்செய்வார்
ஊர னாகிய வாலால
  சுந்தர னுடனிருந் திருவீரும்
சார நங்கண நாதராந்
  தலைமையிற் றங்குமென் றருள்செய்தார். (சஅ)

(715) அன்ன தன்மையி லிருவரும்
  பணிந்தெழுந் தருடலை மேற்கொண்டு
மன்னு வன்றொண்ட ராலால
  சுந்தர ராகித்தம் வழுவாத
முன்னை நல்வினைத் தொழிற்றலை
  நின்றனர் முதற்சேரர் பெருமானும்
நன்மை சேர்கண நாதரா
  யவர்செயு நயப்புறு தொழில்பூண்டார். (சகூ)

---

கூறும் உலாப்பிரபந்தமாம் என்க. "திருவுலாப்புறத்துள்ளும் 'வாமான வீசன் வரும்' என முடியும்" என்று நச்சினார்க்கினியர் கூறுதலுங் காண்க. (இந் நூல், பக். 144). திரு என்ற அடையின்றி, உலாப்புறம் என்றும் அரசா முதலிய தலைமக்கள்மேற் பாடப்படும் உலாப்பிரபந்தங்கள் வழங்குவன. திருச் செவிசாத்தல் – கேட்டருளுதல். அன்பர் – சேரமான்பெருமாள். கேட் பித்தல் – கேட்கும்படி அரங்கேற்றுதல்.

714. ஆலாலசுந்தரர் – சுந்தரமூர்த்திகள் பண்டு கயிலையிற் பெற்றிருந்த திருநாமம். நயப்பு – இனிமை; வியப்பு என்றும் உரைப்பர்.

(716) தலத்து வந்துமுன் னுதயஞ்செய்
பரவையார் சங்கிலி யாரென்னும்
நலத்தின் மிக்கவர் வல்வினைத்
தொடக்கற நாயகி யருளாலே
அலத்த மெல்லடிக் கமலினி
யாருட னனிந்திதை யாராகி
மலைத்த னிப்பெரு மான்மகள்
கோயிலிற் றந்தொழில் வழிநின்றார். (௫௰)

(717) வாழி மாதவ ராலால
சுந்தரர் வழியிடை யருள்செய்த
ஏழி சைத்திருப் பதிகமிவ்
வுலகினி லேற்றிட வெறிமுந்நீ
ராழி வேந்தனும் வருணனுக்
களித்திட வருணனு மருள்சூடி
ஊழி யிற்றனி யொருவர்தந்
திருவஞ்சைக் களத்திலுய்த் துணர்வித்தான், (௫௧)

(718) சேரர் காவலர் விண்ணப்பஞ்
செய்தவத் திருவுலாப் புறமன்று
சாரல் வெள்ளியங் கயிலையிற்
கேட்டமா சாத்தனார் தரித்திந்தப்

---

716. அலத்தம் – செம்பஞ்சு. கமலினி அனிந்திதை என்பன பரவையாரும் சங்கிலியாரும் முறையே கயிலையிற் பண்டு பெற்றிருந்த திருநாமங்கள்.

717. ஏழிசைத் திருப்பதிகம் என்றது, 39-ம் பாட்டிற் கூறிய தனை; வருணனைக் கொண்டு அப்பதிக முணர்த்தியவாற்றை 'ஆழிகடலரையா அஞ்சையப்பர்க் கறிவிப்பதே' என்ற அதனிறுதித் தொடரால் அறிக.

பாரில் வேதியர் திருப்பிட
  வூர்தனில் வெளிப்படப் பகர்ந்தெங்கும்
நார வேலைசூ ழுலகினில்
  விளங்கிட நாட்டினர் நலத்தாலே. (ருஉ)

(719) என்று மின்பம் பெருகு மியல்பினா
லொன்று காதலித் துள்ளமு மோங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கு நிலவி யுலகெலாம். (ருந)

718. வேதியர் திருப்பிடவூர் – அந்தணர் வாழும் திருப்பிடவூர், இவ்வூர் சோணாட்டுள்ள சிவதலமாகும். மாசாத்தனார் – மஹாசாஸ்தா, ஐயனார்.

719. "உலகெலாம்" என்று நான்முதலில் தொடங்கிய திருத்தொண்டர் புராணத்தை இறுதியினும் 'உலகெலாம்' என்று மங்கலவாழ்த்துடன் சேக்கிழார்சுவாமிகள் முடித்துள்ளவாறு கண்டுகொள்க.

ஸ்ரீ

# ஸ்ரீ குலசேகர ஆழ்வார் வைபவம்



கீழைச் சடகோபதாசர் அருளிய

## அரிசமய தீபம்



### [குலசேகரச் சருக்கம்]

(720) பார ளந்தகல் விசும்பளந் தருள்திருப் பதத்தின்
சீர ளந்தறி தற்கரி தாம்நெடுந் திருமால்
பேர ளந்தறி வுறினுநாம் பேசரும் பெருமைக்
கேர ளந்தனி நாடுநான் கெண்ணறங் கெழுமும். (க)

(721) தாழை மாவருக் கைக்குலம் பூகதந் தாமலம்
வாழை வஞ்சுள மரவமே யாம்பிரம் வகுளம்
நீழை யார்மலர் மணத்தையெண் டிசைநிலை மதமாப்
பூழை யங்கடாத் தளிக்கருள் வளத்தபல் பொருப்பே.

---

720. திருமாலின் திருநாமங்கள் ஆயிரமென்று ஒருவாறு அளந்து அளவிடப்படுதல்போல, கேரளதேசத்தின் 'பெருமை அளவிடற்கரியது எ—று. சீரானது அளத்தற்கரியதாக உள்ள என்க. அளத்தற்கரிய சீருடைய திருமால் என்றபடி. நான்கு எண்ணறம் - முப்பத்திரண்டறங்கள்.

721. பூகதம் - கமுகு. தமாலம் - பச்சிலைமரம். வஞ்சுளம் - வஞ்சி மரம்; ஆற்றுப்பாலை; வஞ்சிக்கொடியுமாம். மரவம் - வெண்கடம்பு; குங்கும

வேறு

(722) நரந்தநன் முருகுயிர்த் துதித்த நற்கனி
நிரந்தரம் வரையர மகளிர் நீண்மலர்க்
கரந்தனிற் பிழைத்தபொற் கழங்கு கந்துகம்
பரந்தபோ லருவியிற் பரப்பும் பாங்கெலாம். (௩)

(723) தடந்தொறுங் கயலெழச் செய்ய தாமரை
அடர்ந்தசெம் முகையுடைந் தலரப் புட்குலம்
படர்ந்தது கனலென வெருவிப் பார்ப்பினந்
தொடர்ந்துபின் னரற்றிடச் சோலை சேருமே. (௪)

(724) இனையதோர் கேரள நாட்டில் யாரினும்
புனைவருந் தகையொடும் பொலியு மோர்பதி
நனைவரி யளியினம் நரன்ற ருந்துபூஞ்
சினைகெழு பொழில்பயில் திருவஞ்சிக் களம். (௫)

---

மரம். ஆம்பிரம் - புளி. வகுளம் - மகிழ். இம்மரங்களின் மலர்கள் திகந்தம் வரை மணங்கமழ்வன என்றபடி. நீழை - ஒளி. பூழை - துவாரம். பொருப்பு, மலரின் மணத்தை திக்கியானைகளின் மதநீரை நுகரும் அளிகட்கு அளிக்கும் வளத்தன என்க.

722. நரந்தம் - நாரத்தை. நிரந்தரம் - எப்போதும். கந்துகம் - பந்து. நரந்தக் கனிகள், விளையாட்டில் அரமகளிரின் கையினின்று தப்பிய கழற்சிபந்துகளைப் போலப் பரந்தன எ-று.

723. "அள்ளற் பழனத் தரக்காம்பல் வாய்நெகிழ, வெள்ளந்தீப் பட்ட தெனவெரீஇப் — புள்ளினந்தங், கைச்சிறகாற் பார்ப்பொடுக்குங் கவ்வை யுடைத்தரோ, நச்சிலைவேற் கோக்கோதை நாடு" (இந்நூல், 312) என்ற முன்னோர்வாக்கு இங்கு ஒப்பிடத்தகும்.

724. தகை - பெருமை. நனை - மொட்டு. நரன்று - ஒலித்து. திருவஞ்சிக்களம் - சேரர்தலைநகரான வஞ்சிமாநகர்.

வேறு

(725) வளங்கொள் மேருமால் வரையின்மீ தலகிலா வடிவாய்
விளங்கு செங்கதிர் வியப்பநூல் விதிவழா மேடைத்
தளங்கள் பொற்றகட் டிடையிடை செம்மணி தயங்க
உளங்க வர்ந்துவா னுலகுளோர் வியந்திட வோங்கும்.

(726) அலகில் பைத்தலை யுரகர்மா நகரள வாழ்ந்து
நிலமி சைப்பனிங் கெனத்திக ழகழிநீர் நிறைந்த
பலவி தழ்ச்செழுந் தாமரை மலர்க ளப்பணியின்
இலகு பைத்தலைப் பதுமரா கச்சுவ டெனலாம். (எ)

(727) உயர்ந்த பொன்முடிக் கதிர்மணிக் கூவிரத் துருவிச்
சயந்த னத்துடன் கரிபரி முதலிய தானை
இயங்கு பன்மணி வீதியு மாடத்தி னெழிலும்
வியந்து விண்ணுளோர் விரும்பவம் மாநகர் விளங்கும்.

(728) நவில ருந்தகை யினையமா நகர்க்கிறை நனியார்
புவிநி கழ்த்துயர் பொறையினன் புனைமணிப் புயத்தான்
அவிர்செ ழுங்கதிர்த் திகிரிமா தவனணி மலர்த்தாட்
கவினி னைந்துவாழ் சுந்தரன் கலைக்கடல் கடந்தோன்.

---

725. நூல்விதி – சிற்பநூலிலக்கணம். மேடைத்தளங்கள் – மேன் மாடங்கள். வியப்ப – உவமவுருபு.

726. பைத்தலை – படத்தொடு கூடிய சிரம்.

727. உயர்ந்த பொன்னாற்செய்த முடியையும் பிரகாசமுடைய மணி மயமான தலையலங்காரத்தையும் உருளையுமுடைய தேருடன், யானை குதிரை முதலியசேனைகள் சஞ்சரிக்கும் பல மணிமயமான வீதியும், மாடங்களின் அழகும் தேவலோகவாசிகளும் வியப்படைந்து விரும்புமாறு அந்தப் பெரிய திருவஞ்சைக்கள நகரம் விளங்கிக் கொண்டிருக்கும். எ-று. கூவிரம் – கொடி யுமாம். சயந்தனம் – தேர்.

728. புவிநிகழ்த்து – உலகினர் புகழ்ந்துரைக்கும்; பூமியை உவமை யாக நிகழ்த்தும் எனினுமாம்.

(729) தாரு வைந்துடன் நவநிதி கேட்டவை தரவேழ்
பாரு மொய்ம்பினிற் றங்கியோர் குடைநிழல் பரப்பி
நேரு மன்னவ ருயிர்கவர் வேலினு னிருபர்
மேரு வெண்மதிக் குலத்தவ தரித்தருள் வேந்தன். (ய)

(730) புரந்த ரன்புல வோர்குழாம் புரவலர் தவத்தோர்
நிரந்த ரம்புகழ் நீதியான் மனுவினை நிகர்வோன்
கரந்த தண்ணளி நிறைவடி வாகிய தோன்றல்
சரந்த ருஞ்சிலைக் கொடியினன் பெண்ணையந் தாமன்.

(731) பஞ்சின் மெல்லடிப் பரிபுரப் பாவையர் பார்வை
நஞ்சி னுக்கமிர் தாயதோர் வனப்பினன் ஞாயில்
இஞ்சி கோபுரம் பலதழீஇ யிமையவர் புரிநேர்
வஞ்சி மாநகர் மன்னவ னெவரினும் வலியோன், (யஉ)

வேறு

(732) பொறையுடன் தருமமும் புகழும் வாய்மையும்
நிறையுமைம் பொறிகளா நிகம மேபுகல்
குறையிலா ஞானமெய் யாகக் கோல்மனு
முறைதவா மகிதல முழுதுங் காப்பவன். (யங)

---

729. நேரும் – எதிர்த்த. நிருபர் மேரு – அரசர்களில் மேருப் போல உயர்ந்தவன். சேரருள் சந்திரகுலத்தவரும் சூரியகுலத்தவரும் சந்திராத்திய குலத்தவருமான வேந்தர் பலருளர். இவ்வாழ்வார் சந்திரகுலத்தவர் என்பது இந்நூலாசிரியர் கொள்கை.

730. சிலைக்கொடி – விற்கொடி. பெண்ணையந்தாமன் – பனம் பூமாலை உடையவன்.

731. பார்வை நஞ்சினுக்கு அமிர்து – பார்வையாகிய விடத்தின் கொடுமையைத் தணிக்கும் அமிர்தம்.

732. பொறுமையுடன் தருமமும் கீர்த்தியும் உண்மையும் நிறையும் ஐம்பொறிகளாகவும், வேதம் கூறும் குறைவில்லாத ஞானமானது சரீரமாகவுங்

(733) கலியிருள் துரந்துதண் கலைநி றைந்துசீர்
பொலிதரு புகழ்நிலா விரிக்கும் பொற்பினால்
வலிகெழு திரள்புய மன்னர் மன்னவன்
ஒலிகடற் புவியுடு பதியு மொத்தனன். (மச)

(734) பொருந்திற லெழுபரி பூட்டி வையமீ
திருந்தலம் வருகதி ரிருளை நீக்கலன்
அருந்திறல் மடங்கலா தனத்தி னல்கியே
திருந்தியம் புவிப்பகை யிருளைத் தீர்த்தனன். (மரு)

(735) இசைதரு மகமெலா மியற்றி யெட்டெனுந்
திசைதொறுந் திகிரியைச் செலுத்தித் திண்டிறல்
வசையிறன் புகழ்நிலை நிறுத்தி மாண்புற
அசைவில்பொற் றம்பநட் டவனி தாங்கினான். (மசா)

(736) துங்கவெண் மதிக்குலந் தொல்லை மாநிலம்
சங்கரன் றருதமிழ் சால்புற் றோங்கிட
அங்கவன் மனைவித னகட்டு ளாதிமால்
செங்கவுத் துவமணி கருவிற் சேர்ந்ததால். (மஎ)

---

கொண்டு செங்கோலாலே மனுமுறைகெடாது உலகமுழுதும் காப்பவன் என்க. பொறைமுதலியன பொறிகளாக, ஞானம் சரீரமாகக் காப்பவன் என்றது திடவிருதன் என்ற அவன் நாமம்பற்றி.

733. உடுபதி – சந்திரன்.

734. இருளை நீக்கலன் – உலகிருளை மீண்டும் வாராமல் நீக்கும் வலியிலன் என்க.

735. தம்பம் நட்டு – ஜயஸ்தம்பம் நிறுவி.

736. 'சங்கரன் தரு தமிழ்' என்பதனுடன் "தழற்புரை சுடர்க் கடவுள் தந்த தமிழ்" என்ற கம்பர் வாக்கு ஒப்பிடத்தகும். அகடு – வயிறு. திருமாலின் கவுத்துவாம்சமாக அவதரித்தவர் ஆழ்வார் என்க.

(737) நெருங்குபூண் முலைமுகங் கறுத்து நேர்ந்தநூல்
மருங்குலுந் தடித்தணை விகந்து வாய்விளர்த்
திருங்கயல் விழிகுழிந் திரவி போலொளி
தருங்குழை வனிதையுங் கருப்பந் தாங்கினாள். (மஅ)

(738) அணிதிகழ் மகப்புனர் பூசத் தந்தணன்
திணிசுடர்ப் பிரசுர னிராசி சேர்வுறப்
பணியுமிழ் மணியெனப் பரவைத் தோன்றிய
மணியிளங் கதிரென மகவை யீன்றனள். (மகூ)

(739) சேடிய ரொருவர்முன் னொருவர் செம்மணிக்
கோடிக மதுமலர்க் கூந்தல் தாழ்தர
வாடிய கொடியிடை வருந்த வெண்ணலர்
ஓடின ரரசனுக் கோகை கூறவே. (உம)

(740) கேட்டலும் நிருபனுங் கிளர்பொற் குன்றெனத்
தோட்டடங் கிளர்தரத் துலங்கு பொற்பணி
ஈட்டமுத் தணிவட மின்ன வெண்ணில
வேட்டவை முகிற்கணம் வீழ நல்கினான். (உக)

(741) பொருநைமா நதிப்புனல் படிந்து பூசுரர்க்
கருமறை முறைவழா தலகில் தானங்கள்
மருவிய கருணையோ டளித்து மைந்தனை
உருகுகா தலினனி யுவந்து நோக்கினான். (உஉ)

---

738. அழகு விளங்கும் மாசிமாதத்துப் புனர்பூச நக்ஷத்திரத்தில் பிருகஸ்பதியும், ஒளிமிகுதியையுடைய சுக்கிரனும் இராசியிற் சேர்ந்திருக்க அக்காலத்தில், பாம்பு உமிழ்ந்த மணிபோலவும், சமுத்திரத்திற் றோன்றிய அழகிய இளஞ்சூரியன் போலவும் ஒரு குழந்தையைப் பெற்றனள். எ-று.

739. கோடிகம் - துகில். துகிலும் கூந்தலும் தாழ்தர என்க. ஓகை - சந்தோஷச் செய்தி.

740. நிருபன் - அரசனை நிடவிருதன்.

741. புதல்வன் பிறந்தவுடன் அவன்முகத்தைத் தந்தை கண்டு

(742) முழுத்தநா ளிராசியோ டோரை மூதலர்
விழுத்தகை முனிவனேர் வேள்வி யந்தணர்
பழுத்தபே ரன்பினுற் பழுதி லாமைதேர்ந்
தெழுத்தினிற் சாதக மியற்றி னரரோ. (உங)

(743) பன்னிரு நாளிறந் ததற்பின் பார்புகழ்
மன்னிளங் குமரனை மறைவ லாளர்முன்
சென்னிநா முறக்குல சேக ரப்பெயர்
மின்னிலை வேலினுன் விருப்பிற் சாத்தினுன். (உச)

(744) சந்தநான் மறைமுறை சவுள மாயபின்
நந்தலில் விதியுப நயன மாற்றியே
விந்தமே புயமென விரும்ப விந்தைசேர்
மைந்தனும் வளரிள மதியின் மன்னினுன். (உரு)

(745) சுருதியின் கரைகடந் தலகில் தொன்மைநூல்
கருதிய பொருளெலாந் தெரிந்து காமர்சீர்
தருதிரு வடிவினுற் சலதி மீதெழும்
பருதியி னவனியோர் பரவ மேவினுன். (உசா)

---

மகிழ்தல் தருமநூல்விதி. இதனைப் 'புத்ரமுகதரிசனம்' என்பர் (சாஸனம்). "மாமுனி தன்னொடு மன்னர் மன்னவன், ஏமுறப் புனல்படீஇ வித்தொ டின்பொருள், தாமுற வழங்கிவெண் சங்க மார்ப்புறக், கோமகார் திருமுகங் குறுகி நோக்கினுன்" என்றுர் கம்பரும் (இராம. திருவவதார. 112).

742. பழமையான தாமரை மலரிலிருக்கும் பெருஞ்சிறப்புடைய பிரமதேவனுக்குச் சமானமான யாகம் செய்யும் பிராமணர்கள், ஆழ்வார் அவதரித்த நன்மைநிறைந்த நாள், இராசி, சமயம் இவற்றில் தோடமில்லாமையை யறிந்து முதிர்ந்த பேரன்புடன் ஜாதகமெழுதினர் எ-று.

743. சென்னி நாம் உற — பகைவனுன சோழன் அச்சமுற; நாமம் — (அச்சம்) என்பது நாமெனத் திரிந்தது.

744. சவுளம் — முடியெடுக்கும் சடங்கு.

(746) சயந்தருங் கொய்யுளை தாழ்க டாசலம்
வயந்தரும் வாளயில் வரிவில் நூன்முறை
நயந்தரு மேழிசை நலத்தில் விஞ்சையர்
வியந்தடும் புகழ்திசை விளங்கத் தோன்றினன். (உஎ)

(747) ஆதிநூல் முறைதவா வருளும் ஞானமும்
நீதியுந் தருமமு நிறைந்த கல்வியும்
ஏதிவார் சிலைபயி லிவற்றின் சீலமும்
பேதியா வாய்மையும் பீடும் வீரமும். (உஅ)

(748) பிறங்கிய குமரனை நோக்கிப் பேணலார்
திறங்கிளா ராதிவன் செலுத்துங் கோலெனா
அறங்கிளர் தவந்தனக் காக்க அன்பினால்
மறங்கிளர் வேலினன் மகுடஞ் சூட்டினன். (உகூ)

(749) மாதிரக் கிரிவட மேரு மால்வரை
ஆதியிற் சேடனு மதிச யித்திட
மேதினிப் பொறையுள வனைத்தும் வேய்ந்திடும்
போதினிற் புதல்வனும் புயத்திற் றாங்கினன். (௩௰)

(750) பகலவன் றனக்கிரு ளுடைந்த பான்மைபோல்
இகலவர் திசைதொறு மிரியல் போயிடப்
புகலரு மாதிநூல் தருமம் பூசுரர்
அகமகிழ் தரவுல களிக்குங் காலையில். (௩௧)

---

746. கொய்யுளை - குதிரை. கடாசலம் - யானை; குதிரை யானை யேற்றங்கள் என்க. வாள், அயில் (வேல்) இவற்றின் வன்மையிலும் ஏழிசையிலும் விஞ்சையர் (- புலவர், வித்யாதரர்) வியந்திடும் புகழ் திசைவிளங்க. எ-று.

747. ஏதி - ஆயுதம். பயில் - பயிற்சி.

748. பேணலார் திறம் கிளராது - பகைவரின் வலிமை மேலோங்காமல். வேலினன், தந்தை.

750. இகலவர் - பகைவர். இரியல் போதல் - ஓடிப்போதல். ஆதி நூல் - வேதம்.

(751) அறைகழல் மீனவ னருளு மாதினை
மறைபுகல் முறைவழா வதுவை செய்தபின்
இறைகுல சேகர னீரெட் டாண்டின்மால்
நறைமல ரடிதொழு ஞான மேயினான். (௩௨)

(752) அம்பரீ டன்றுள வலங்கல் வீடணன்
உம்பர்தாழ் சவுனக னுருக்கு மாங்கதன்
நம்பருள் வீடுமன் நயந்து போற்றவே
இம்பரி னிராகவ னிடத்தன் பாயினான். (௩௩)

(753) நாட்டநீர் பொழியமெய் புளக நண்ணுற
வாட்டமில் வரிசிலை மாலி ராகவன்
தோட்டடம் புகழுருந் தூய மாக்கதை
கேட்டன னனுதினங் கேடில் சீர்த்தியான். (௩௪)

(754) அரங்கமால் வேங்கட மாதி யாம்பதிப்
பரம்பர னிணைமலர்ப் பாதம் போற்றியே
புரந்தருள் பரமபா கவதர்ப் பூசைசெய்
துரம்பயி லவர்கிழ லுறழ வைகுநாள். (௩௫)

வேறு

(755) தனிநுதற் றிருமண் சுண்ணந் தரித்துளோர் சங்க மாழி
புனிதநூல் புண்ட ரீக மணிதுழாய் பொலிபொற் றோளார்
பனிநிலா வனைய வெண்பட் டுத்தரி யத்தர் பாச
முனிதரும் பரம பாக வதரவன் முன்னர்ச் சார்ந்தார்.

---

755. சுண்ணம் - ஸ்ரீசூர்ணம். சங்கம் ஆழிகள், ஆசாரியரால் தோள்களிற் பொறிக்கப்படுவன. புண்டரிகமணி - தாமரை மணிமாலை. பரம பாகவதர் - திருமாலின் பேரடியார்; "பாகவதர் நாராயணசமயத்தோர்" என்ப. (திவா).

(756) காண்டலுங் கடிது வேந்த னெழுந்தவர் கமல பாதம்
நீண்டபே ருவகை பொங்கப் பணிந்தெழுந் தயலி னில்லா
ஆண்டணை யிருத்திப் போதா லருச்சியா அடிக ளென்பால்
ஈண்டணு குறயான் முன்னொ ளெத்தவ மிழைத்தே னென்றான்.

(757) தாயினும் பரிந்து பாக வதரவன் றன்னை நோக்கிக்
கோயினம் பெருமாள் நேயம் பெறுகெனக் கூறி வாழ்த்தித்
தூயிருந் திருமண் குல்லைத் தொடைதரத் தூசி னேற்றான்
நீயிருந் தருள்கென் றேவ விருந்தனன் நிருபர் கோவும். (நடு)

(758) நாளுமிப் பரிசு பாக வதர்வரு நலத்தை நாடி
ஆளுமிப் புவியி னீர்மை யாய்கிலா தரசன் வைகக்
கோளுறுத் தமைச்சர் வேந்தன் குலமுதற் குரவர் கூடிக்
கேளுமித் தகைமை யென்று வயிர்த்திவை கிளத்த லுற்றார்

(759) நீணிலம் புரக்கு நீர்மை நீத்துமா லடியார் நேயம்
பேணின னிராம காதைப் பெருங்கடல் மூழ்கி னானல்
வாணிலை யனிகம் தேர்மா மதகரி வகைமை யோரான்
ஏணிலை யயில்வேல் வேந்த னென்செய்கே மிதற்கின் றென்று.

---

756. அணையிருத்தி – ஆசனத்தில் அமர்த்தி. அடிகள் – சுவாமி காள்; விளி.

757. கோயில் நம் பெருமாள் – திருவரங்கமுடைய எம்பெருமான். நேயம் – பக்தி. குல்லைத் தொடை – துளவமாலை. பாகவதர் அளித்த திருமண் திருத்துழாய்களைத் தம் ஆடையால் ஏற்றல் மரபு.

758. கோளுறுத்து – குற்றமிழைக்கவல்லு; இடித்துக்கூறவல்ல எனினுமாம்.

759. வாள் நிலை அனிகம் – வாளாயுதத்தை நிலையாகக் கொண்ட சேனை. ஏண் – வலிமை. வகைமை யோர்தல் – அணிவகுத்து நோக்குதல்.

(760) வாயில்கா வலரைக் கூவி வந்தபா கவதர் மன்னன்
கோயிலுட் புகாத வண்ணந் தடுமினென் றுரைப்பக் கொண்ட
வேயின்மத் திகையர் செங்கை வேத்திர மிலேச்சர் வெங்கட்
டீயின ரன்று தொட்டுச் சிறந்துளோர்ச் செயிர்ப்ப தானார்.

(761) தக்கபா கவதர் சின்னாட் டன்மருங் கணுகக் காணான்
மிக்கபே ரன்பு தன்னாற் றாதரை வினவ லோடும்
அக்கணம் பணிந்து போற்றி ஐயகே ளென்றார் வாயில்
புக்கனர் தடுப்பக் கோயிற் புறத்திறுத் தனர்க ளென்றார்.

(762) உரைத்தலும் ராம ராம எனவுரைத் துருகிக் கண்ணீர்
நிரைத்தெழுந் தெனது பாவம் நினைப்பவுங் கொடிய தென்று
வரைத்தடம் புயத்தன் வாயில் வந்தவர் மலர்த்தாண் மீதே
தரைத்தட மவுலி தோயத் தாழ்ந்தனன் தரிக்க கில்லான்.

(763) கருதருங் கொடுமை நாயே
னிழைப்பினுங் கருத்துட் காணு
தருடவா தளித்துக் கோட
லடிகளுக் கழகென் றேத்தாத்
திருவடித் துணைகள் சென்னி
விழிகளிற் சேர்த்திப் பின்னர்
உருமணி வாயில் காக்கு
மிலேச்சரை யுருத்து நோக்கா. (சச)

---

760. வேயின் மத்திகை – பிரம்பினாலான குதிரைச்சம்மட்டி. மிலேச்சர் – யவனர்; 'வெங்கணேக்கிற் குப்பாய மிலேச்சனை' என்றார் பிறரும் (சீவக). செயிர்த்தல் – சினந்து தடுத்தல்.

762. வாயில் வந்து – வாயிற்குத் தானே வந்து; வாயிலிடம் வந்தவரான பாகவதர் என்று உரைப்பினுமாம். தரைத்தடம் (–தரையிடமாக) தாழ்ந்தனன் என்க. தனையில், தடம் (–பெரிய) மவுலிதோய எனக் கூட்டினுமாம்.

763. அருள் தவாது – கிருபை தவறாமல். அடிகளுக்கு – பாகவதரான நுங்கட்கு. உரு – நிறம்.

(764) இன்றுதொட் டெனையாள் பாக
 வதர்வரி னிறைஞ்சிப் போற்றிக்
குன்றுறழ் கோயில் நம்பால்
 விடுகலி ரென்னிற் கொற்றந்
துன்றுவாட் கிரையாச் சுற்றத்
 தொடுமுமைத் துமிப்ப லென்னுத்
தன்றுணை விழிநீ ரோடு
 மவரொடுங் கோயில் சார்ந்தான். (சரு)

(765) அருக்கிய முதல யாவும்
 அருண்முறை யாற்றி யம்பொன்
தருக்கிய பீடத் தன்னூர்
 தமையினி திருத்தித் தானும்
இருக்குதி யெனவத் தக்கோ
 ரேவலா னிருந்தி ராமன்
திருக்கதை யெனுந்தே னுக்குச்
 செவியுளஞ் சுரும்பு செய்தான். (சசு)

வேறு

(766) ஒருதி னத்தினிற் காடுறைந்
 திடுமிரா கவனொடு கரனுதி
நிருதர் போர்செய வருதலுந்
 தனியொரு வில்லொடு நெடியானும்
பொருதி டற்கெனப் போயின
 னென்பது கேட்டலும் புவியாள்வோன்
வருதிர் நம்படை வயவருஞ்
 சேனையு மெனப்பரி மாவேறி. (சஎ)

---

765. இராமாயணத் தேனுக்குத் தன் செவி உள்ளங்களை வண்டு போலாக்கிப் பருகும்படி செய்தான். எ-று.

766. காடு – தண்டகாரணியம். வயவர் – வீரர்.

(767) செல்லுந் தன்மையோர்ந் துரைசெயா
சிரியனுந் தீயவர் தமையோட்டி
வில்லி யெய்திட வெதிர்சென்று
சனகனுர் விமலையுந் தழீஇக்கொண்டு
புல்லி யேயிளைப் பிணைத்தவிர்த்
திட்டன னென்பது புகலக்கேட்
டெல்லை யில்லதோர் களிப்பொடு
மீண்டன னிணையெனல் தனக்கில்லான். (சஅ)

வேறு

(768) பரமபா கவத ரன்றி
யயலொரு பொருளும் பாரான்
சிரமழை முகினேர் வண்ணன்
திருவடி யலது சேரான்
பிரமனு தியர்கோன் நாம
மலதுநா வியலிற் பேசான்
உரமமர் கமலை நாதன்
பதமலா துளத்தி னோரான். (சக)

(769) அனுதின மிராம காதை
யரிகதை யலது கேளான்
தனுவொடு விபவம் போகஞ்
சகதலம் புரக்குந் தன்மை

---

767. செல்லும் – அவ்வாரணியஞ் செல்லத்தொடங்கிய மாவேறிச் செல்லுந்தன்மை ஓர்ந்து எனக் குளகமுடிபு கொள்க. வில்லி – வல்வில்லி ராமபிரான்.

768. சிரம் – மேலிடம், உச்சி.

769. தனு – சரீரம். விபவம் – ராஜவைபவங்கள். கழுவிலும் தீயிலும் இருத்தல்போலும் என்க.

எனுமிவை கழுவிற் றீயி
விருத்தலே யெனத்தேர்ந் தெள்ளி
மனுவினு முயர்ந்த நீதி
மன்னவன் வைக லுற்றான். (௫0)

(770) செயிரில்பா கவத ரோடிவ்
வாறமர் தருசெய் யோனை
உயிர்தவா வமுதுண் பாரை
விடமினி துண்கென் போரிற்
பயிரினீர் களர்க்கே பெய்கென்
றிழிமதி பகரு வோரின்
வயிரவான் மணிப்பொற் றிண்டோள்
மதியின்மந் திரிக ளோக்கா. (௫க)

(771) கொற்றவா ணிருப காதிற்
கினிமையாக் கூறுங் காதை
கற்றவா ரியரோ டுற்றாற்
காசினி புரந்த தாமே
முற்றவார் கலிசூழ் ஞால
முறைமையிற் பொலிய முன்னார்ச்
செற்றவா வுடனே காக்குந்
திறமைநுஞ் சீல மென்றார். (௫உ)

---

770. உயிர்தவா – உயிரைப் போக்காத. பெய்க – விடுக.

771. கொற்றவாள் – வெற்றிதரும் வீரவாள். ஆமே – ஆகுமோ. முன்னார் – பகைவர். செற்று அவாவுடனே காக்கும் என்க. சீலம் – நும் போலும் அரசரொழுக்கம்.

(772) நவமணி மகுடஞ் சற்றே
துளக்கின னகைத்து வேந்தும்
அவர்முக மரிதி னோக்கி
யரும்பொரு ளவனி யாவுந்
தவறில்பா கவதர் தந்தை
யிராகவன் சனகி யெம்மோய்
இவணிவை நவிலல் போமி
னெனவவ ரேகி னரால். (௫௫)

(773) அணையசீ ரரசன் றேவி
அணிவயிற் றமரர் யாரும்
நினைவரு நெடியோன் றேவி
நீளைவந் துதிப்ப நேயம்
புனைதனி மனுவை நோக்கி
இளையெனப் புதல்வி நாமந்
தனைவிதித் திடநா ளுளுந்
தளிரியல் வளர்ந்தா ளன்றே. (௫௬)

(774) எழுவகைக் காண்டந் தன்னால்
இராகவ னிருதோள் வென்றி
தழுவுமுத் தமவான் மீகத்
தவமுனி சாற்றுந் தொன்னூல்

---

772. பாகவதரே அவனி பொருள் யாவும். மோய் — தாய். நவிலல் — அல் எதிர்மறை வியங்கோள்விகுதி; என — அரசன் கூற.

773. நீளை — நீளாதேவி; திருமாலின் பிராட்டிமாருள் ஒருவர். மனு — சாத்திரம். தளிரியல் — அப்பெண்.

வழுவறக் கேட்டி ராமன்
மலரடி மனத்துட் கொள்ளா
முழுவதெப் பொருளுங் காதை
மொழிதரு முனிவர்க் கீந்தான். (௬௪)

(775) இம்மர பிராம காதை
யியலுநா ளிலங்கு பல்பூண்
செம்மணி நீக்கித் தானே
திருந்துபொற் றவிசிற் சேர்த்தி
மும்மலங் கழுவு வானின்
முழுமுறை முடிநெய் நீவி
மம்மர்தீர்ந் துயர்ந்த கோமான்
மஞ்சன மாடச் சென்றான். (௬௫)

(776) மனமழன் றமைச்சர் நாளும்
வயிணவர் வஞ்சி வேந்தைத்
தினமருங் கனுகா வண்ணஞ்
செகுப்பதோர் வினையந் தேர்வார்
இனமணிப் பொலம்பூண் யாவுங்
கரந்தன ரிறையோன் தேடி
வினவுறிற் பரம பாக
வதர்மிசை விளம்பற் கென்று. (௬௭)

---

774. முனிவர் – இராமாயணசரிதங் கூறும் பாகவதர்.

775. பல்பூண் – தானணிந்திருந்த பல ஆபரணங்களையும். மும்மலம் – காமம் வெகுளி மயக்கங்களான முக்குற்றம். கழுவுவானின் – கழுபவரைப் போல. முழுமுறை நெய் நீவி – உடன்முழுதும் தைலந் தடவி; பின் மஞ்சனமாடச் சென்றான் என்க.

776. செகுத்தல் – ஒறுத்தல். வினயம் – சூழ்ச்சி. விளம்பற்கு– பழி சுமத்தற்கு.

(777) மஞ்சன மரபி னாடி
மணிநுதற் றிருமண் சாத்திக்
கஞ்சவா ணயனத் தீசன்
கழலிணை கருதிப் போற்றி
அஞ்சனக் கயற்கண் மாத
ரமைத்தபா லடிசில் மாந்திப்
பஞ்சணைத் துயின்றா னுள்ளப்
பங்கயப் பரம னேபோல். (ருஅ)

(778) துயிலவ ணீத்துப் பைம்பொன்
றுதைமணித் தூணச் சோதி
வெயிலமர் மண்ட பத்துள்
விண்ணவர் வேந்தன் போலக்
கயிலணி கனகப் பல்பூட்
காவலர் கணங்கள் சூழ
அயிலணி வேலான் சிங்கா
தனத்துவீற் றிருந்தா னன்றே. (ருகூ)

(779) அறையினி லுறைவோர்க் கூவி
யணியெலா மகிலங் காக்கு
முறைதவா நிருபன் கேட்ப
மொய்ம்மணிப் பணிகள் வேந்தர்

---

777. தம் உள்ளத் தாமரையில் பரமன் தங்குமாறுபோலப் பஞ்சணையின்மேவித் துயின்றான் என்று.

778. கயில் – பூண்கடைப்புணர்வு (திவா.).

779. அணியெலாம் – தான் முன்பு பூண்டு கழற்றிவைத்த ஆபரணங்கள். சிலதர் – பணியாளர்.

இறைதரு மரசே யெம்பா
லளித்திலர் சிலத ரென்ன
நறைகமழ் புயத்தான் தேர்க
வெனவவர் நாடிக் காணூர். (சுய)

(780) தங்கவான் மணிப்பொற் கோயில்
தவிசுநீர் சாருந் தானம்
எங்கணுந் தேடி னேங்கண்
டிலமணி யிழைக ளென்றூர்
அங்கவர் புகறல் கேளா
விழிசிவந் தலங்கற் றிண்டோட்
சிங்கவே றனையான் சாலச்
சினந்திவை செப்பு கின்றுன். (சுக)

(781) கலையினூர் கலிசூழ் ஞாலம்
புரக்குநங் காவல் கண்டும்
விலையிலா மணிப்பூ ணூரங்
கவர்ந்துளோர் வேந்த ரேனு
மலையிலார்ந் துயர்பொற் றிண்டோட்
டசமுகன் வலிமை மாய்த்த
சிலையிரா கவன்ற னூணை
வாளினூற் சிதைப்ப னென்றுன். (சுஉ)

(782) கடலர வணைவா ரீச
னடியர்மேற் களவு சாற்றற்
கிடனிதென் றமைச்சர் தம்மி
னெண்ணியவ் விறைபாங் கெய்திப்

780. தங்கம் – பொன். கோயிலும், தவிசும், தானமும் ஆகிய எங் கணும் என்க.

781. கலையின் – ஆடைபோல. தசமுகன் – இராவணன்.

பூட்டியாள் நிருப கேட்டி
புகலுமெம் புன்சொ லென்றுத்
தடமலர்த் துணைத்தாண் மீது
பணிந்திவை சாற்ற லுற்றார். (௬௫)

(783) மண்ணை வாமனமா யோர்தாண்
மறைத்தொரு மலர்த்தா ணீட்டி
விண்ணையு மறைத்தாய்ப் பாடி
வெண்ணெயும் விதர்ப்பர் கோமான்
பெண்ணையுங் களவிற் கொண்டோர்
தரணியைப் பெரும்பார் வேந்தன்
கண்ணையுங் காணு வண்ணங்
கரந்தருள் கரிய மாயோன். (௬௬)

(784) அடியரா யினரே யின்றோர்
அரும்பொருள் கடவு ளாவிப்
படியய லொன்றின் றென்னுப்
பகருநின் பாங்க ரன்னார்

---

783. மண்ணை ஓர்தாள் மறைத்து என இயைக்க. விதர்ப்பர் கோமான் பெண் – உருக்குமிணி தேவி. இவரைக் கண்ணபிரான் கவர்ந்து சென்ற சரிதம் பிரசித்தம். தரணியையும் என உம்மைவிரிக்க. உலக மூண்டமைபற்றித் 'தரணியைக் கரந்தருள்' என்றார். பெரும்பார் வேந்தன் – திருதராட்டிரன், அவன்மகன் துரியோதனன் கண்ணபிரானைத் தன் சபைக்கு அழைத்துப் பொய்யாதனமிட் டமர்த்தியபோது அஃதறிந்த பெருமான் சினந்து தன் விசுவரூபத்தைக் காட்ட, அப்போது திருதராட்டிரன் கண்ணனருளால் தன் கண்கள் பெற்று அவ்விசுவரூபத்தை கண்டு களித்து, பின்பு 'இப் பரஞ்சோதியை கண்டுகளித்த கண்கள் பிறவற்றைக் காணுதொழிக' என்று அப் பெருமானை வேண்டி முன்போலவே பார்வையற்றவனுனன் என்பது வரலாறு.

784. ஈன்றோரும் அரும்பொருளும் கடவுளும் அடியார்களே பிறரில்லை என்று கூறும் நின்பக்கம் என்க, அன்னார் – அப்பாகவதர், நோனார் – பகைவர்.

நொடியள விகவா ரம்ம
வயலினர்ப் பொருந்தாய் நோனர்க்
கிடியனுய் களவி யைந்தோர்ந்
தியாவர்மீ திசைப்ப தென்றூர். (கூ௫)

(785) ஆங்குரைத் தவர்சொற் கேளா
வுடல்பதைத் தழுங்கி யாவி
தாங்குதற் கரிதாந் துன்பந்
தலைக்கொளாச் சால மாழ்கி
வீங்குயிர்ப் பினனுய்க் கண்ணீர்
வீழ்த்திரு செவிகள் பொத்தி
வாங்குவி லிராம ராம
வென்றனன் மறுக்க மில்லான். (கூகூ)

(786) நிவந்திரு புருரஞ் செவ்வாய்
துடித்தழல் நிகரக் கண்கள்
சிவந்துடல் வியர்த்துச் சற்றே
நகைத்திரு செங்கை கொட்டி
இவர்ந்தது சினமெங் கோனும்
பொறுக்கலா னெழுந்து நோக்கி
அவம்புகன் மதிமை சான்ற
வமைச்சருக் கறைவ தானுன். (கூஎ)

(787) எமக்குமெங் குலத்து ளோர்க்கு
மிதுதெரிந் தெமக்குக் கூறும்
நுமக்குமீங் கிவைகேட் டோர்க்கும்
நுவலிரு சுடர்கள் சேடன்

786. புருரம் – புருவம் (திவா.). நிவப்பவும் ( – மேலெழவும்) துடிப்பவும், சிவப்பவும், வியர்ப்பவும், நகைப்பவும் சினம் இவர்ந்தது (பொங்கியது) என்க.

787. புடவியில் இருசுடர்கள் ஓவில் (நீங்காத) காலமும் என

சுமக்குநீள் புடவி யோவில்
காலமுந் தொலைவி லாத
தமக்குவை நரக மின்றே
சமைத்தநீர் சான்றி ரந்தோ. (௬௮)

(788) வருணநீர் மையினை நீங்கல்
பகைமைகொள் வகைமை காண்டல்
பொருணயந் தயலி னோர்பாற்
கவருதல் கொலைமை புந்தி
மருணணு குதல்பொய் மாசு
தவத்தினை வழுவல் மாறுக்
கருணையை விடுத்த லென்றுங்
கனவினுங் கருதல் செய்யார். (௬௯)

(789) ஏதமில் பரம பாக வதர்களென் றிவணி யானே
தீதற யாருங் காணத் தெளிக்குவன் தெளிக்கி லேனேல்
ஆதவன் மரபி ராம னடியருக் கடிய னல்லேன்
காதழ லெயிற்ற ராவைக் கொணருதிர் கடிதி னென்றான். (௭௰)

---

இயையும். தமக் குவை — இருட் கூட்டம். சான்றிர் — அறிவால் சிரம்பினீர் என்றது எதிர்மறையிலக்கணை.

788. இப்பாட்டுக்குப் பரமபாகவதர் என்பது எழுவாயாதல் அடுத்த கவியால் அறிக.

789. தெளித்தல் — தெளியச் செய்தல்; 'தெளித்தசொல் தேறியார்க்கு' என்பர் (குறள். 1154). 'தெளிக்கிலேனேல் ......... அடியனல்லேன்' என்றது, அடியனுந்தன்மை என்பால் இல்லை என்று அறியத்தகுமே யன்றி, தெளிவியாமைபற்றிப் பரமபாகவதர் பழிக்கப்படார் எ-று. "பின்னும் வாழ் வுகப்பனென்னின், அன்னவற் கடியனல்லே னென்றன னறிவின் மிக்கான்" எனப் பிரகலாதன்கூற்றில்வைத்துக் கம்பர் பாடியதும் இக்கருத்தை பற்றியுரைத்தது (கம்பரா. இரணியன்வதை.). காதுதல் — கொல்லுதல்.

வேறு

(790) அறைகழற் குரிசிலுக் கஞ்சி யேவலோர்
இறையவட் டரித்திலர் விரைவி னேகியே
பிறையெயிற் றடுவிடம் பில்கி மல்குபைக்
கறைமிடற் றரவினைக் கடிதிற் றந்தனர். (எக)

(791) கொடியகார்க் கோடனைத் தகையுங் கோளுடை
நெடியகா ழரவினை நிதியின் கன்னலுட்
படியவே யரிதினில் விடுத்துப் பன்மணி
முடியுடை நிருபர்கோன் முன்னர் வைத்தனர். (எஉ)

(792) மன்னனும் புரவல ரமைச்சர் மாதவர்
இந்நகர் வயினுளோ ரெவருங் காண்மினென்
றுன்னரு முவகையா னுரகன் மேற்றுயில்
தென்னரங் கேசனை யுளத்திற் சிந்தியா. (எங)

(793) சுருக்கவிழ் கமலநாண் முகையுட் டோய்ந்திடும்
அருக்கன திளங்கதிர் மருள வானபுள்
எருத்தமா லடியர்மேல் நிந்தை யீதெனுச்
செருக்கரா விடங்கருட் செங்கை யிட்டனன். (எச)

---

790. இறை - சிறிதும். தநதனர் - கொணர்ந்தனர்.

791. தகையும் - ஒத்த. காழ் - முதிர்வு. நிதியின்கன்னல் - பொற் கரகம் (நிதி - பொன்).

792. அருக்கன திளங்கதிர் மருளச் செங்கையிட்டனன எனக. குடத்துக்குத் தாமரைமுகையும், ஆழ்வார் கரத்துக்கு அருக்கன திளங்கதிரும் உவமைகளாகும். புள் - பெரியதிருவடி. ஈது - அமைச்சரிட்ட இப்பழி. இடங்கர் - குடம் (திவா).

(794) படவரப் பள்ளியான் பதங்க ளேத்தியே
குடமதிற் றிருக்கர மிட்ட கொற்றவன்
விடமிகு பாம்பினோ டிட்ட வில்லுமிழ்
தடமணி யாழியை யெடுத்துத் தந்தனன். (எ௫)

(795) நடுங்கினர் புரவல ரமைச்சர் நாணமுற்
றொடுங்கினர் தவத்துடன் தரும மோங்கின
விடுங்கதி ரதிர்கழல் வேந்தர் வேந்தனும்
அடுங்கிள ரயில்குறித் தவரை நோக்கினன். (எ௬)

(796) கனைகழ லொளிர்தரு கமல பாதமும்
வனைதரு பட்டிகை மருங்கு மாமணி
புனைதரு சுரிகையும் பொலங்கொ ளுந்தியும்
நினைதொறுங் களிதரு நீல மேனியும். (எஎ)

(797) ஒளிர்கதிர் புரைமணி யுதர பந்தமும்
குளிர்நில வனையநூல் குலவு மார்பமும்
நளிசுடர் நவமணி நலங்கொ ளாரமும்
அளிதிகழ் மதுமல ரலங்கற் றோள்களும். (எஅ)

---

794. சூளுறவில், பாம்புக்குடம் நெய்க்குடங்களிற் கையிடுவோர் அவற்றுள் இட்ட மோதிரத்தையும் எடுத்துக்காட்டுதல் மரபாதலின், 'பாம்பினோடிட்ட ... ஆழி' என்றார்.

795. அயில் – வேல். அயில் குறித்து அமைச்சரை நோக்கியது ஒறுத்தற் குறிப்பு.

796. பட்டிகை – அரைநாண். சுரிகை – உடைவாள்; கவசமுமாம்.

797. உதரபந்தம் – அரைப்பட்டிகை. நளி – செறிவு.

(798) அங்கச வரதனத் தணிகொ ளங்கதங்
கங்கணம் பிறழ்தருங் கமலக் கைகளுஞ்
சங்கன கிரீவமுந் தரள மூரலும்
திங்கள்வான் வதனமும் திலக நெற்றியும். (எகூ)

(799) கருணையா லிகள்பொழி கமலக் கண்களும்
புருவமு மகரகுண் டலத்தின் பொற்சுடர்
தருமணிக் கபோலமுந் தயங்கு பட்டமுங்
குருமணி நாசியு மிதழின் கோலமும். (அ0)

(800) கோடிபா னுவின்மணி குயிற்றிப் பொற்புறச்
சூடிய மகுடமுந் துளவ மாலையுந்
தேடிய சுருதிநேர் சிலையுஞ் சீற்றமே
நீடிய கணையெலாம் நிறைந்த தூணியும். (அக)

(801) திசையிரு ளிரிதர விளங்கு திண்சிலை
விசையவா னிலக்குவன் மிதிலை மாமயில்
நசையுடன் மருங்குற அரங்க நாயகன்
இசையிரா கவன்வடி வோடு மெய்தினன். (அஉ)

(802) கண்டன னிருவிழி கமலங் கால்தரப்
புண்டரீ கக்கரங் குவித்துப் போற்றுறு
அண்டர்நா யகசிலை யதனைப் பெண்ணுருப்
பண்டளித் தருள்பதப் பங்க யத்தினய். (அங)

---

798. அங்கசம் – திருமேனியிற் பிறந்தது (போன்ற). அங்கதம் – தோளணி. சங்கு அன்ன கிரீவம – சங்கை ஒத்த கழுத்து.

799. கபோலம் – கன்னம். பட்டம் – நெற்றிப்பட்டம்.

802. கமலம் கால்தர – ஆனந்தக் கண்ணீர் ஒழுக. கமலம் – நீர். இருவிழிகள் கால்தர (– ஒழுக) கண்டனன் என்க.

(380) வாரண மூலமென் றழைப்ப மாசுணப்
பாரண வுவணன்மேற் பரிவிற் சார்ந்தனை
நாரண னெனப்புகல் சிறுவ னண்பினால்
ஆரண மதலையொன் றதனுட் டோன்றினாய். (அ௩)

(804) மீனமே முதலிய வடிவ மேதினி
தானவை யகன்றிடத் தரித்த நேமியாய்
வானமு மவனியு மற்று முற்றுநீ
ஆனவா றெம்மனோர்க் கறியற் பாலதோ. (அ௫)

(805) தாரகப் பிரமமாந் தகைமை கூர்ந்தருட்
காரணத் தடியவர் கருத்துள் வைகுநீ
வாரணித் திருமுலை மடந்தை தன்னொடும்
வீரவிற் கணையொடும் வெளியிற் போந்ததென். (அ௬)

(806) அடர்ந்தசி ரவனிவா னனிலம் யாவையுங்
கடந்ததா ளெளிதினிற் காண நோற்றுளார்
இடந்தவா னிலங்கொலோ வென்முன் னோர்கொலோ
தடந்துழாய் மார்பினாய் தமிய னேகொலோ. (அ௭)

(807) என்றினை யனகவின் றிருக ணீர்தரப்
பொன்றிகழ் புயத்தின்மெய்ப் புளகம் பொங்குறத்
தன்றிருக் கரங்குவித் துகளுந் தன்மையான்
சென்றிரு திருவடி சென்னி சேர்த்தினான். (அ௮)

---

803. மாசுணப் பாரண உவணன் — பாம்புகளை உணவாகக் கொள்ளும் கருடனை. சிறுவன் — பிரகலாதன். ஆரண மதலை — வேதவுருவாய் நின்ற கம்பம்.

804. மேதினிதான் நவை (குற்றம்) அகன்றிட என்க. தான், அசை.

805. வார் அணி — கச்சாகிய அணியுடைய. மடந்தை - சீதாபிராட்டி.

806. உலகளந்த திருவடிகளை முன்பு விண்ணிலுள்ளோரும் என் முன்னோரும் கண்டவாறு யானும் காணும்பேறு பெற்றேன் எ—று.

(808) பருகுகா தலினடி பணிந்த பார்புகழ்
நிருபர்கோ மகனையந் நீல மேனியான்
பெருகுமா தரவருள் பிறங்க நோக்கித்தன்
இருகையா லெடுத்துமார் பிறுகப் புல்லினான். (அகூ)

(809) எமர்கள்பா கவதரை யெம்மி னேக்கிமாண்
பமர்தர வொருபக லருச்சித் தேத்தினோர்
தமவடி யரனயன் சதம காதியர்
பமரமார் மலர்கடுய்ப் பணிய வாழ்குவார். (கூ0)

(810) அத்தகைப் பரமபா கவத ராயுயர்
முத்தர்கள் தம்மக மகிழ மூரிநீர்
இத்தலத் தலகினுள் வழிபட் டேத்தினை
உத்தம வுனதுசீ ருணர்தற் பாலதோ. (கூக)

(811) அளக்கர்சூழ் மகிதலத் தின்னு மாங்கவர்
உளக்கரு ணையின்முறை வழிபட் டோருருள்
வளக்கடுந் திகிரியோர் வரைவில் கோடிபோல்
விளக்கமார்ந் துயர்பத மேவு கென்றனன். (கூஉ)

(812) இருளிரி யச்சுட ரெனவெ டுத்துமெய்ப்
பொருளுப நிடதமே புணர்த்துப் பொற்புய
நிருபனு மவணிரா கவனை நேரிலா
ஒருவனைப் புகழ்ந்துபாட் டொருப தோதினான். (கூங)

---

809. சதமக ஆதியா - இந்திரன் முதலிய தேவர்கள். பமரம் - வண்டு. 'எமது பாகவதரை' 'தமது தாள்' என்பன பிரதிபேதங்கள்.

811. உருள் திகிரி, வளமும் கடுமையுடைய திகிரி என்க. கடுமை - வேகம். திகிரி - ஒற்றையாழியந் தேர். திகிரியோர் - சூரியர். வரைவில் கோடி - கணக்கற்ற பல்கோடி.

812. 'இருளிரிய' என்பது பெருமாள்திருமொழியின் முதற்திருப் பதிகம்.

(813) அகமகிழ்ந் தரங்கநா யகனு மாடகச்
சிகரிநே ரிலக்குவன் சீதை பாங்குறத்
தகைமைசேர் தனுமலர்த் தடக்கை தாங்கிய
நிகரிலா வடிவினைக் கரந்து நீக்கியே. (கூச)

(814) மான்மதச் சிந்துர வனப்பி னெற்றியும்
பான்மதி முகமுமின் பவள மூரலுங்
கான்மலி துளவமுங் கருணைக் கண்களும்
நீன்மலி மேனியு நேமி சங்கமும். (கூரு)

(815) சிலைகதை வாண்மலர் திகழுஞ் செங்கையும்
மலைபொரு வியபுய வனப்பு மார்புநீள்
அலைகட றருகவுத் துவமு மாரமும்
நிலைபெறு கதிர்மணி நிறைபொன் னுடையும். (கூசு)

(816) அவணதி யிவணழைத் தளித்த பாதமும்
உவணன திருகுவ டுறழும் பொற்புயஞ்
சிவணநான் முகன்முதற் றேவர் சூழ்தரச்
சுவணமால் வரைமழை முகிலிற் றோன்றினன். (கூஎ)

(817) சனகனு தியருளந் தழைத்த நாதனைப்
பனகமா சயனனைப் பதும வாரணன்
அனகமா தவர்பர வரங்கத் தீசனைக்
கனகவாண் மணிமுடி நிருபன் கண்டனன். (கூஅ)

---

813. ஆடகச் சிகரி - பொன்மலை.

814. மான்மதம் - கத்தூரி நாமம். கான் - மணம். நீல் - நீலநிறம்.

815. மலர் திகழும் - மலர்தல் விளங்கும்.

816. அவண் நதி - உம்பர்நதி, ஆகாயகங்கை. உவணன் - பெரிய திருவடி; கருடாழ்வார். பொற்புயம் சிவண - திருத்தோளில் விளங்கும்படி.

817. பன்னகம் - ஆதிசேடன். ஆரணனும் (பிரமனும்), மாதவரும் பரவும்.

(818) விழிவழிப் புனல்தரப் புளக மெய்தர
மொழிவழித் துதிதர முடியுந் தாழ்தரக்
கழிதரு பரிவுடன் கருணைக் கங்கைநீர்
வழிதரு மலரடி வணங்கி வாழ்த்தினான். (௯௯)

(819) ஆதியே பிரமனு மரனும் போற்றிய
சோதியே நறைகமழ் துளவ மார்பனே
வேதியே புரிதரு வேள்வி நாதவென்
றோதியே பரவினா னுருகு முள்ளத்தான். (௱)

(820) தேடரும் பொருண்மைமுற் புகன்ற சீர்தர
ஆடர வணைத்துயி லரங்கத் தீசனை
வீடருண் முதல்வனை விரிஞ்சன் தாதையைப்
பாடன்முப் பஃதினாற் பரிந்து போற்றினான். (௱௧)

(821) புள்ளர சிருபுயம் பொலியப் பொன்னுடை
வள்ளலும் நிருபனை மகிழ்ந்து நோக்கியே
உள்ளமுந் தெமக்கரு ளுனக்கி யாமிவண்
எள்ளருந் தகைவரந் தருவ தேதென்றான். (௱௨)

---

818. சருணையுள்ள கங்கைநீர் வழியும் மலரடி என்க; கருணை மலரடி எனினுமாம்.

819. வேதி - ஓமகுண்டம். வேள்விநாதன் - யாகபலங்களை ஏற்கும் கடவுள்.

820. மூன் புகன்ற பொருண்மை சீர்தர - முன்பு சொல்லப் பட்ட உபநிடதப் பொருள்கள் சிறக்கும்படி. பெருமாள் திருமொழியில் முதன்மூன்று திருப்பதிகங்கள் திருவரங்கத்தெம்பெருமானைப் பற்றியன வாதல் காண்க.

821. பொன்னுடை - பீதாம்பரம்; திருமகளையுடைய எனினுமாம். உள்ளத்தை யூர்ந்த அளித்த உனக்கு என்க.

(822) இறைஞ்சினன் பரமபா கவத ரின்னருள்
நிறைந்திட வெனக்கவர்க் கடிமை நேயநான்
குறைந்திடா தயர்தரக் கருணை கூர்கென
மறைந்திடா தயர்புகழ் மன்னன் வேண்டினான். (௱௩)

(823) அவ்வரம் அருள்புரிந் தரங்கத் தெம்பிரான்
செவ்வையி னிருபநீ பயந்த செந்தமிழ்
எவ்வமில் கருங்குழல் இளையை யீதியேல்
உவ்வயின் வதுவைசெய் குதுமென் றோதினான். (௱௪)

(824) இந்திரை மகிணனீ திசைப்ப வேதமில்
சந்திர வெழிற்குலத் தரணி வேந்தனும்
முந்திய வுவகையங் கடலுண் மூழ்கினான்
சிந்தினன் பவமெனச் செருக்குஞ் சிந்தையான். (௱௫)

(825) திருமல ரடிமுதற் சென்னி காறுநீ
டுருமணி யணிகளா னொப்பித் தோதியின்
மருமலர்ச் சிகழிகை வனைந்து மான்மதம்
பெருமணக் கலவைமெய் பிறங்கக் கோட்டியே. (௱௬)

(826) விடுசுடர் மணிமுடி விபுதர் மாதவர்
தொடுகழ லரசர்கண் முன்னர்த் தொன்முறை
வடுவகன் மதிநுதன் மயிலை மங்கலத்
தொடுமலர் நிகர்கரத் துதகத் தீந்தனன். (௱௭)

---

823. இளை - ஆழ்வாரின் திருமகள்; பத்மாவதி என்று கூறுப. நீ பாடியளித்த செந்தமிழ் போன்ற மறுவற்ற இளை எ-று. உவ்வயின் - இவ்விடத்திலே.

824. இந்திரை - இலக்குமி.

825. சிகழிகை - மலர்மாலை.

826. விபுதர் - தேவர்.

(827) பொன்னணி வனமுலைப் பொருவில் பூமகள்
அன்னவ டனையணி யரங்கத் தெம்பிரான்
மன்னழ கியமண வாள னும்பெயர்
தன்னழ கதனினற் சமுகங் காணவே. (௯அ)

(828) இன்னிய முழங்கமா தவத்த ரேத்திடப்
பன்னிய நான்மறை பணில மார்த்தெழக்
கன்னியர் பலாண்டிசை கழறக் கால்கதிர்
வன்னியை வலஞ்செயா வதுவை செய்தனன். (௯௯)

(829) பரியக மங்கதம் பதக்கங் கங்கணம்
தெரியணி நித்திலந் திகழு மேகலை
விரியணி மணிமுடி விளங்கு குண்டலம்
உரியன வரசர்கோ னுதவக் கைக்கொளா. (௱)

(830) விளைவரு கருணையான் விடையு மீந்துவால்
வளைசிலை திகிரிவாள் கதைவ யங்குற
அளைநுகர் கரியமா லரங்க மாநகர்
இளையெனு மயிலொடு மினிதி னேகினன். (௱௧)

(831) இன்னறீர் கதியரு ளீச னேகிய
பின்னரப் பாகவ தருடன் பீடமேல்
மன்னனு மகிழ்வுடன் வைகுங் காலையில்
அன்னவ னடிமருங் கமைச்ச ரீண்டியே. (௱௨)

---

827. அழகிய மணவாளன் என்பது திருவரங்கநாதன் திருநாமம். சமுகம் – தேவர் இருடியர் கூட்டம்.

828. காலும் ஒளியையுடைய வன்னி (அக்கினி) என்க.

829. பரியகம் – காலணிவகை. அங்கதம் - தோளணி.

830. வளை – [illegible]ங்கம். அளை - வெண்ணெய்.

(832) பிழைத்தியாம் புரிந்தவிப் பெற்றி மாதவந்
தழைத்தநீ பொறுத்தியென் றிறைஞ்சிச் சாற்றலும்
அழைத்தன னமைச்சரை யருளி னோக்கிநீர்
இழைத்தது தீமையன் றென்று கூறுவான். (௩௰௩)

(833) வேள்விக ளயர்ந்துமா தவத்தின் மேவியும்
கேள்விநூல் சதுமறை கெழும வோதியும்
ஆள்வினை புரிந்துநல் லறங்க ளாற்றியும்
தாள்வினை வலங்கொடு தலத்து லாவியும். (௩௰௪)

(834) சுரநதி முதலிய படிந்துந் தோமில்சீர்
வரனதி கந்தரும் வரையின் வைகியும்
உரனது தெளிந்துட னியோகத் தொல்கியும்
பரனடி காண்கிலார் பவமுந் தீர்கிலார். (௩௰௫)

(835) விண்ணக முனிவரர் விபுதர் வேலைசூழ்
மண்ணகந் தனிலுளோர் வசையி னீவிர்யான்
எண்ணரும் பரகதி யெளிதி னெய்துறக்
கண்ணனை யெனதுளங் களிப்பக் காட்டினிர். (௩௰௬)

(836) ஆதலா னும்மினு மதிகர் யாவரே
காதலார் குரவருங் கருத்துங் கண்களும்
ஓதலா ஞானமு முணர்வு முண்மையும்
ஈதலாந் தவமுநீ ரெனக்கென் றேத்தினன். (௩௰௭)

---

832. பெற்றி – குற்றத்தன்மை.

833. ஆள்வினை – முயற்சி. தாள்வினை வலம் – கால்களால் நடத்தல்வன்மை.

834. சுரநதி – கங்கை. வரன் அதிகம் தரும் – வரங்களை மிகுதியாக அளிக்கும். உரன் – ஞானம்; அது, பகுதிப்பொருள் விகுதி.

835. விபுதர் – தேவர். நீவிரும் யானும் எனக.

836. ஓதல் ஆம் – ஓதற்குரிய. ஈதல் ஆம் – வேண்டியவற்றைத் தரவல்ல.

(837) ஈன்றரங் கேசனுக் கீந்த பாவைமுற்
றீன்றலாய் விளங்குதன் சுதனைத் தொன்முறை
சான்றவ ரொடுபுவி புரக்கச் சாற்றியே
மான்றநீர் மதியினான் மகுடஞ் சூட்டினான். (௱௰௮)

(838) மைந்தனுந் தந்தைசொன் மரபின் மாண்பமைந்
திந்தமா நிலம்புரந் தினிதின் வைகினான்
பந்தமில் லவனுமா லடியர் பாங்குறச்
சிந்தனை யிராமகா தையினிற் சேர்த்தினான். (௱௰௯)

(839) ஞானமெய்ப் பரமபா கவதர் நண்புறத்
தானகத் தமைத்தவர் சரணம் போற்றியே
மானவ னிராகவன் மாசில் காதைகேட்
டூனமில் நிருபர்கோ னுறையுங் காலையில். (௱௨௰)

வேறு

(840) ஓதநீ ருவரி யாவு மொருகணைக் குணவு செய்தோன்
காதைநா ளுளுங் கூறுங் கலைமுனி கலைமா ரீசன்
பேதையை மருட்டிக் கூறத் தசமுகச் சிதடன் பெட்பாற்
சீதையைக் கவர்ந்த தன்னான் பரிவினாற் றெரியக் கூறுன்.

(841) ஆயவே தியன்றன் காதற் சுதனஃ தறியா னோர்நாள்
நேயமார் நிருபன் கேட்ப நிகழ்த்துவோன் நிருபர் கோமான்
மாயமேற் கொடுபைங் கூந்தற் சனகியை வலிதின் வவ்விப்
போயவா றழல்போ லன்னான் சிவியினுட் புகுதச் சொற்றான்.

---

837. ஈன்று ஈந்[illegible] (தான்பெற்று அளித்த. பாவை — இளை. மான்றல் — மயக்கம்.

839. தான் அகத்து நண்பு உற அமைத்து — தான், உள்ளத்தே நட்பினை மிகவும் கொண்டு. மானவன் — புருஷோத்தமன.